உரிமைப் பதிப்பு

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | 2004 |
| இரண்டாம் பதிப்பு | : | 2005 |
| மூன்றாம் பதிப்பு | : | 2006 |
| நான்காம் பதிப்பு | : | 2006 |
| ஐந்தாம் பதிப்பு | : | 2007 |
| ஆறாம் பதிப்பு | : | 2007 |
| ஏழாம் பதிப்பு | : | 2008 |
| எட்டாம் பதிப்பு | : | 2009 |
| ஒன்பதாம் பதிப்பு | : | 2010 |
| பத்தாம் பதிப்பு | : | 2011 |
| பதினொன்றாம் பதிப்பு | : | 2011 |
| பனிரெண்டாம் பதிப்பு | : | 2013 |
| பதிமூன்றாம் பதிப்பு | : | 2017 |



மொத்த பக்கங்கள் (xvi + 536) = 552

விலை ரூ. **600.00**

அல்லயன்ஸ்
**கம்பெனி**

ப.எண். 244, பு. எண். 64,
ராமகிருஷ்ணா மடம் சாலை,
தபாற் பெட்டி எண் 617,
மயிலாப்பூர், சென்னை - 600 004.
தொலைபேசி : 2464 1314
இணைய தளம் : books@alliancebook.com
மின்னஞ்சல் : www.alliancebook.com

| | | |
|---|---|---|
| Cover Design | : | Siddarth, chennai - 17 |
| Typesetting | : | Print Point Graphics, Chennai - 20 |
| Printed at | : | Sree Durga Printers, Chennai - 117 |
| Negative Processed | : | Sathya Process, Chennai - 5 |
| Binder | : | Sri Durga Binding Works, Chennai - 5 |

# முன்னுரை

1961 ஆம் ஆண்டு முதல் டைரி எழுதும் பழக்கம் எனக்கு உண்டு. நாட்குறிப்பு என்ற கட்டத்தைத் தாண்டி, அபூர்வ நிகழ்வுகள், அரசியல் நிகழ்வுகள், மகிழ்வித்த கணங்கள், மன்னிப்பு கேட்க வைத்த மனச்சாட்சியின் தீர்ப்புக்கள், மனப்போராட்டங்கள், தெளிந்த முடிவுகள் என்று 44 ஆண்டுகளாகப் பல விஷயங்களைச் சொல்கிறது டைரி.

நான் எழுத்தாளனில்லை. கல்லூரியில் இலக்கியம் படிக்க வேண்டிய வயதில் ஓவியம் பயிலச் சென்று விட்டேன். எனவே எனது இளமைப் பருவத்தில் எந்த எழுத்தாளரின் எழுத்துக்களையும் நான் ஊன்றிப் படித்த தில்லை. அவர்களின் பாதிப்பும் என்னிடம் ஏற்படவில்லை.

மூத்த கதாநாயகர்களின் புகழ்க்கொடி உச்சத்தில் பறந்தபோது நான் திரையுலகப் பிரவேசம் செய்தேன். சிங்கத்தின் பங்கு போக, மீதியை மற்ற மிருகங்கள் பங்கு போட்டுக் கொள்வதுபோல் படத்தில் கதாநாயகர், நாயகிக்குக் கொடுக்கப்படும் அதிமுக்கியத்துவம் போக, மீதியில் ஏதோ கொசுறு, என் போன்ற வளரும் கலைஞர்களுக்கு அன்று கிடைக்கும்.

திமிங்கலங்கள், சுறா மீன்கள் போன்றவற்றிற்கு இரையாகாமல் தப்பித்துப் பிழைக்கும் சிறு கடல் ஜீவராசிகள் போல, திரையுலகில் உயிர் வாழ்வதே போராட்டமாகி விட்ட காலம்.

எட்டு ஆண்டுகள் எல்லாக் கதாநாயகர்களோடும், எல்லா இயக்குநர்களோடும் பணியாற்றிய பின்பே கதா நாயகன் என்ற அந்தஸ்தைப் பெற முடிந்தது.

கிடைத்த இடத்தைத் தக்க வைத்துக் கொள்ள மேலும் எட்டு ஆண்டுகள் கடினமாக உழைக்க வேண்டியிருந்தது.

ஒரு வழியாக 1980–களின் துவக்கத்தில்தான் எழுத்துப் பக்கம் பார்வையைத் திருப்பினேன். புகழ்மிக்க எழுத்தாளர்

களின் முத்திரை பதித்த நாவல்களை, சிறுகதைத் தொகுப்பு களையெல்லாம் வாங்கி நூலகம் அமைத்தேன்.

ராஜாஜி, கல்கி, காண்டேகர், லா.ச.ரா., கு.ப.ரா., ராகுலசாங்கிருத்யாயன், தி.ஜானகிராமன், அகிலன், நா.பா., ஜெயகாந்தன், சுஜாதா, ராஜம்கிருஷ்ணன், இந்திரா பார்த்த சாரதி - என முந்தைய தலைமுறை எழுத்தாளர்கள், இன்றைய தலைமுறை எழுத்தாளர்கள் புத்தகங்கள், 'சோ'வின் ராமாயணம் - மகாபாரதம், கண்ணதாசனின் கவிதைத் தொகுப்புகள் - வாலியின் படைப்புகள் அனைத்தையும் நேரம் கிடைக்கும் போதெல்லாம் படித்து வருகிறேன்.

1986 இல் விகடன் ஆசிரியர், 'நான்கு இதழ்களுக்கு வருகிறாற்போல சிவகுமாரிடம் கட்டுரை ஒன்று வாங்கி வா' என்று நண்பர் சுதாங்கனை அனுப்பி வைத்தார். மூன்று மணி நேரம், பல விஷயங்கள் பற்றிச் சுதாங்கனுடன் பேசினேன். அவர் தீவிர வாசகர் - ஆயிரம் பக்கம் உள்ள ஆங்கில நாவலை, விடிவதற்குள் படித்து - சுருக்கமாக அதைச் சொல்லும் ஆற்றலுள்ளவர். எழுத்து அவருக்கு வெகு சரளமாக வரும்.

பேட்டி எடுத்த விஷயத்தை எழுதிப் படித்துக் காட்டினார். சொல்ல நினைத்த விஷயம், நான் நினைத்த அளவு, அழுத்தமாக இல்லை என்று தோன்றியது.

நானே எழுதிப் பார்க்கிறேன் என்று அவரிடம் சொல்லிவிட்டு, ஒருநாள் அதிகாலையில், பதினெட்டுப் பக்கங்கள் ஒரே மூச்சாக எழுதி அவரிடம் படித்துக்காட்டி னேன்...'விகடன்' - ஆசிரியர் படித்துவிட்டு 'சிவகுமாரை ஒரு தொடர் எழுதச் சொல்லிக் கேள்' - என்றார்.

அப்படி 'ஜூனியர் விகடனி'ல் 10 மாதங்கள் வெளியானதுதான் 'இது ராஜபாட்டை அல்ல' தொடர். தமிழ்ப் புத்தகாலயம் கண்ணன் முதல் இரண்டு பதிப்புகளை வெளியிட்டார்.

இலயோலா கல்லூரியில் துணைப்பாடமாக 1991-92 களில் இப் புத்தகம் வைக்கப்பட்டது.

மூன்றாவது பதிப்பு வெளியிட கண்ணனுக்குச் சில பிரச்சினைகள் இருந்தன. அல்லயன்ஸ் சீனிவாசனை

அணுகினேன். சந்தோஷமாகச் சம்மதமளித்தவர், புத்தகத்தைப் படித்துவிட்டு 'நீங்கள் சொல்ல வேண்டியது இன்னும் நிறைய இருக்கிறதே. இன்னும் ஒரு 250 பக்கங்கள் எழுதிக் கொடுங்கள், 2 பாகங்களையும் சேர்த்து வெளியிடலாம்' என்றார்.

விளையாட்டுப்போல எழுத ஆரம்பித்தேன். முந்தைய புத்தகத்தில் எழுதாமல் விட்ட திரையுலக மேதைகள், என் சமகாலக் கலைஞர்கள், என் இளமைக்காலம், கிராமிய மணம், பிரம்மச்சர்ய வாழ்க்கை, குடும்ப வாழ்க்கை - இப்படி அகம், புறம் என்று நிறைய சொல்ல முடிந்தது. சம்பவங்கள் நிகழ்ந்த காலத்தைக் கணக்கிட்டு முதல் பாகம் - இரண்டாம் பாகம் கட்டுரைகள் - வரிசைப்படுத்தப்பட்டுள்ளன. அடுத்த தலைமுறைக் கலைஞர்கள் பற்றி வருங்காலத்தில் எழுதுவேன்...

ஜூனியர் விகடனில் 'இது ராஜபாட்டை அல்ல' - எழுதத் தூண்டுதலாக இருந்த விகடன் ஆசிரியர் பாலசுப்ரமணியன் அவர்களுக்கும், எனக்குள் இருந்த அனுபவத்தைத் தோண்டி எடுக்க உந்து சக்தியாக இருந்த நண்பர் சுதாங்கனுக்கும் பாகம் இரண்டு எழுதக் காரணமான அல்லயன்ஸ் சீனிவாசன் அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

'இது ராஜபாட்டை அல்ல' - தொடரைப் புத்தகமாக இரண்டு பதிப்பு வெளியிட்ட கண்ணன் அவர்களுக்கும், படித்துப் பாராட்டுக் கடிதங்கள் எழுதிய பெரியவர்களுக்கும் நன்றி.

'HINDU', ஆனந்த விகடன், கல்கி, குமுதம், குங்குமம், முரசொலி, நியூபிலிமாலயா பத்திரிகைகளில் வெளியான சிறந்த கட்டுரைகளும் இதில் இடம் பெற்றுள்ளன. அவர்களுக்கும் நன்றியை உரித்தாக்குகிறேன்.

எனது 40 ஆண்டுகாலத் திரையுலக அனுபவம், ஓவியக்கலை பற்றிய அனுபவம், தனி மனித வாழ்க்கையில் நான் கற்ற பாடம் - இவற்றை நூல்களாகக் கொண்டுவர வேண்டும் என்று வற்புறுத்தும் என் மூத்த மகன் சூர்யாவுக்கும் நன்றி...

இந்நூலில் இடம்பெற்றுள்ள அத்தனைப் புகைப் படங்களையும் ஓவியங்களையும் அழகுறத் தொகுத்துக்

கொடுத்த என் இளைய மகன் கார்த்திக், பிழை திருத்தம் செய்ய உதவிய தமிழாசிரியர் திரு. பூ. ஜெயராமன், நண்பர் அமுதவன், அட்டைப்பட புகைப்படம் எடுத்த வெங்கட் ராம், டிசைன் செய்து கொடுத்த சித்தார்த் ஆகியோருக்கும் என் நன்றி.

அழகாக டைப்செட்டிங் செய்து, புகைப் படங்களைத் தெளிவாக அச்சிட்டுக் கொடுத்த பிரிண்ட் பாய்ண்ட் கிராபிக்ஸ் – குமார், பாபு அவர்களுக்கும் நன்றி.

கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு! என் வயதில், இமாலய சாதனை புரிந்த மேதைகள் நிறைய இருக்கிறார்கள்... இப்படித்தான் வாழ வேண்டும் என்று ஒரு நியதி வகுத்துக் கொண்டு, நடிப்புலகில் 40 ஆண்டுகள் வாழ்ந்த நான், இந்தத் துறையிலும், ஓவியக் கலையிலும் பெற்ற அனுபவங்களை என்னிடமுள்ள சொற்பச் சொற் களைக் கொண்டு, நூலாக வடித்திருக்கிறேன். வளரும் கலைஞர்களுக்கு இது ஒரு வழித்தடமாக உணரப்பட்டால் இந்த நூலை எழுதியதன் பயனை அடைந்ததாகப் பெருமைப்படுவேன்.

– சிவகுமார்

## பதிப்புரை

அல்லயன்ஸ் பதிப்பகம், மகாத்மா காந்தியின் வாழ்த்துக்களுடன், நூறு ஆண்டுகளுக்கு முன்னர் துவக்கப் பட்டு, அந்நாளைய பிரபல எழுத்தாளர்கள் ராஜாஜி, தாகூர், சரத்சந்திரர், பங்கிம் சந்திரர், காண்டேகர், கு.ப.ரா. தி.ஜ.ர போன்றோர் படைப்புக்களிலிருந்து இன்றைய எழுத்தாளர்கள் ரா.கி. ரங்கராஜன், பரசுராமன், சிவன் வரை எல்லோருடைய படைப்புக்களையும் நேசித்து, பதிப்பித்து வருகின்றது.

பத்து ஆண்டுகளுக்கு முன்பு, காண்டேகரின் 'யயாதி' – புத்தகம் திடீரென்று ஒரு வார இடைவெளியில், இருபது முப்பது புத்தகங்கள் வேகமாக விற்பனை ஆயின. எங்களுக்குக் காரணம் புரியவில்லை.

அடுத்த வாரம், தமிழாசிரியர் ஒருவர் 'யயாதி' – கேட்டுவந்தார். அவர் மூலம்தான், நடிகர் சிவகுமார் 'யயாதி' – நாவல்பற்றி ஒரு வார இதழில் பேட்டி கொடுத்திருக்கிறார். அதைப் படித்துவிட்டுத்தான் – அந்த அற்புத நாவலை நாம் படிக்காமல் விட்டுவிட்டோமே என்று பலர் வந்து, வாங்கிச் சென்ற விவரம் புரிந்தது.

திடீரென்று ஒருநாள், சிவகுமாரே வந்து, அல்லயன்ஸ் பதிப்பகத்திலுள்ள புகழ்பெற்ற நாவல்கள் அத்தனையிலும் ஒரு செட் வாங்கிச் சென்றார்.

ஆண்டுதோறும் ஜனவரியில், பொங்கல் விடுமுறை சம்யம், சென்னையில் நடைபெறும், புத்தகக் கண்காட்சிக்கு, ஒரு தரம் எங்கள் அழைப்பை ஏற்று வந்து, 'தமிழ் சினிமாவில் தமிழ்' – என்ற தலைப்பில், 50 ஆண்டுகால சினிமாவில், தமிழ் எப்படிக் களிநடனம் புரிந்தது என்று 90 நிமிடங்கள் விரிவாகப் பேசி, வந்திருந்த ஒட்டுமொத்த வாசகர்களின் இதயத்திலும் இடம்பிடித்து விட்டார்.

சென்ற ஆண்டு, ஒரு நாள் தன்னுடைய 'இது ராஜபாட்டை அல்ல' – நூலை மூன்றாவது பதிப்பாக வெளியிட வேண்டும் என்று கேட்டார். முதல் இரு பதிப்புக்களையும் வெளியிட்ட,

தமிழ் புத்தகாலயம் கண்ணனுடன் பேசினேன். அவர் சந்தோஷ மாக அனுமதி அளித்தார்.

புத்தகத்தைப் படித்தேன். இன்னும் இவர் சொல்ல வேண்டிய விஷயம் நிறைய இருக்கிறது என்று தெரிந்தது. 'சார்! இன்னும் ஒரு 250 பக்கங்கள் எழுதிக் கொடுங்கள். முழுமை யான புத்தகமாக வெளியிடலாம்' என்று சொன்னேன்.

இரண்டு மாதங்களில் மளமளவென்று எழுதிக்கொடுத்து விட்டார்.

இந்த நூலில் பயன்படுத்தியுள்ள 200-க்கும் மேற்பட்ட புகைப்படங்கள், ஓவியங்கள் அனைத்தும் சிவகுமார் நூலகத் திலிருந்து எடுத்தவை!

அவரது இளைய மகன் கார்த்திக் – இரவு பகலாக, புகைப் படங்களைத் தேர்வு செய்து – பழைய புகைப்படங்களை கம்ப்யூட்டரில் அழகுபடுத்தி, 'ஸ்கேன்' செய்து கொடுத்து எங்கள் பணியைக் குறைத்துவிட்டார்.

அல்லயன்ஸ் பல மேதைகளின் படைப்புக்களை வெளியிட்டிருக்கிறது. ஓவியக்கலையிலும், திரையுலகிலும், ஒரு கலைஞன், வேரும் வேரடி மண்ணுமாக பெற்ற அனுபவத்தை, புத்தக வடிவில் இப்போதுதான் வெளியிடுகிறது.

அந்த வாய்ப்பினை அளித்த சிவகுமார் அவர்களுக்குப் பதிப்பகத்தின் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தினந்தோறும் நாளிதழ் – வார இதழ் – மாத இதழ்களில் திரையுலகச் செய்திகளை நாம் எவ்வளவு படித்தாலும் – இந்தப் புத்தகத்தைப் படிக்கும்போது பெறுகின்ற அனுபவத்தை, அவை நிச்சயம் கொடுக்க முடியாது என்று துணிந்து சொல்வேன்.

படித்துப் பாருங்கள் புரியும்.

அல்லயன்ஸ் **ஸ்ரீநிவாசன்**

அல்லயன்ஸ்

## நூற்றாண்டைக் கடந்து

''தமிழில் நல்ல நூல்களை வெளியிட்டு வரும் அல்லயன்ஸ் ஸ்தாபகர் ஸ்ரீ வி. குப்புசாமி ஐயரை நான் பாராட்டுகின்றேன்.''

- மகாத்மா காந்தி

''நீதிகளைக் கற்பிக்கும் சிறு கதைகளையும், புதிய நாடகங்களையும், பல மொழிபெயர்ப்புகளையும், இன்னும் பல விஷயங்களையும் எளிய அழகிய நடையில் வெளியிட்டு வரும் அல்லயன்ஸாரை நான் பாராட்டுகின்றேன்.''

- மகாமகோபாத்தியாய டாக்டர் உ.வே. சுவாமிநாத ஐயர்

''தமிழில் பல அழகிய புத்தகங்களை வெளியிட்டு வரும் அல்லயன்ஸாருக்கு நன்றி செலுத்தி அவர்களைத் தமிழ் மக்கள் ஆதரிக்க வேண்டுகின்றேன்.'' - ராஜாஜி

''மயிலை அல்லயன்ஸ் கம்பெனியாரின் வெளியீட்டுத் திறத்தை ஈண்டு விரித்துக் கூற வேண்டியதில்லை. அதை நாடறியும். அவர்களால் வெளியிடப் பெற்ற நூல்கள் தமிழ்நாட்டுக்குப் பல வகைகளிலும் பயன் விளைத்து வருவது கண்கூடு. நாட்டு நலங்கருதி ஒழுங்கு முறையில் உழைக்கும் அவர்களுக்கு நாடு கடமைப்படுவதாக. - திரு.வி.க.

''இந்தப் புத்தக வெளியீட்டின் மூலம் அல்லயன்ஸ் கம்பெனியார் தமிழுக்குப் பெருந்தொண்டு செய்து வருகிறார்கள்.'' - கி.வா.ஜ.

It gives us pleasure to congratulate the publishers The Alliance Co., Mylapore, on the uniform standard of excellence they have been able to maintain and the wide variety and range of useful subjects dealt. **- The Hindu**

The Alliance Co., that enterprising publishers of Madras deserves the thanks of all lovers of Tamil for the service to the language...

**- Sunday Times**

No library of modern literature will be complete, it can be safely affirmed, without the excellent books of The Alliance Company. **- The Free Press**

All books are good, most of them exquisite and some profound. The books printed by The Alliance Company are neat and remarkably well got up

**- Indian Express**

உண்மையில் இந்தப் புத்தக வெளியீட்டை ஒரு வியாபார விஷயமாகச் சொல்வதற்கே இல்லை. அல்லயன்ஸார் தமிழ்நா



அல்லயன்ஸ்

டுக்குச் செய்து கொண்டிருக்கும் ஒரு அரும் பெரும் தொண்டு என்றுதான் சொல்ல வேண் டும். தமிழ்நாட்டில் மறுமலர்ச்சி இயக்கம் புத்தக பைண்டுத் தொழிலுக்குக்கூட ஏற்பட் டிருக்கிறதென்பதற்கு அல்லயன்ஸ் புத்த கங்கள் அத்தாட்சி. - கல்கி

மெவகு அழகான புத்தகங்களை அல்லயன்ஸார் தயாரிப்பதன் மூலம் தமிழ்நாட்டுக்கே பெருமையும் மதிப்பும் வாங்கிக் கொடுத் திருக்கிறார்கள். - ஆனந்த விகடன்

## நூற்றாண்டு விழாவில்

**சுதாங்கன்:** வியாபாரத்திற்காக ஸ்தாபனங்கள் துவங்கப்படுவது இயற்கை. ஆனால், தேச விமோசனத்துக்காகத் துவங்கப்பட்டது தான் அல்லயன்ஸ் நிறுவனம்.... குப்புஸ்வாமி ஐயர் ஏற்றி வைத்த ஞான ஜோதி எந்தச் சூறாவளிக் காற்றினாலும் அணைந்துவிடக் கூடாது என்று மிகுந்த போராட்டத்துடன் நூற்றாண்டுக்குக் கொண்டு வந்திருக்கிறார் அவரது பேரன் ஸ்ரீநிவாஸன்.

**திலகவதி:** இந்த விழாவிலே கலந்து கொள்வது, சம்பிரதாயமான முறையில் சொல்லவில்லை, உண்மையிலேயே ஒரு பெருமைக் குரிய விஷயம் என்று நான் கருதுகிறேன். என்னுடைய படிப்புப் பழக்கம் அப்படிங்கறத நினைச்சுப் பாக்கற போது, ஒரு வேளை முதன் முதல்ல நான் படிக்கத் தொடங்கிய புத்தகம் அல்லயன்ஸ் நிறுவனத்தின் புத்தகமாகத்தான் இருக்கும், இருந்திருக்கும் அப்ப டின்னு நான் நினைத்துப் பார்ப்பதுண்டு. என்னுடைய தனி அனுப வத்தில், என்னுடைய சொந்த வாழ்க்கையோடு தொடர்புள்ள ஒரு நிறுவனத்தினுடைய முக்கியமான ஒரு நிகழ்வில் கலந்து கொள் கின்ற ஒரு நிறைவு, ஒரு மகிழ்ச்சி எனக்குள் இருக்கிறது.... ஸ்ரீநிவாஸனுடைய உழைப்பும் அவருடைய முயற்சியும், அவர் யாருடைய புத்தகங்களை வெளியிட வேண்டும் என்று செய்து கொண்டிருக்கின்ற தேர்ச்சியும், இதெல்லாம் வந்து It must have comes in Jenes என்று நினைக்கிறேன்.

**சோ:** நூறாண்டுகளாகத் தொடர்ந்து நல்ல புஸ்தகங்களையே, உயர்ந்த ரக புஸ்தகங்களையே பிரசுரித்துத் தொடர்ந்து வெற்றி ஈட்டிக் கொண்டு வருகிறது என்றால், அதனுடைய நிர்வாகிகளின் மனோ தைரியமும், சத்தியமும்தான் அவர்களுக்குத் துணையாக நிற்கின்றன... கீழ்த்தரமான ரஸனைகள் அதிகமாக இருக்கிற

காலத்திலும், இப்படி ஆச்சாரமாக ஒரு புத்தக நிறுவனம் நடக்கிறது என்பது அசாத்தியமான விஷயம். ஸ்ரீநிவாஸனுடைய உழைப்பை நான் நேரில் பார்த்திருக்கிறேன்... இந்த நிறு வனம் மேலும் மேலும் பல ஆண்டுகள் நன் றாக நடக்கும் என்பதில் எனக்குச் சற்றும் சந்தேகம் கிடையாது. பேரப் பாருங்களேன் 'அல்லயன்ஸ்'. சாதாரணமா அல்லயன்ஸ்னாக்கா ஒரு எலக்ஷன் வரைக்கும்கூட தாங்காது. நூறு ஆண்டுகள் தாங்கின அல்லயன்ஸ் இந்தியாவிலேயே இது ஒண்ணுதான் இருக்கும்.



**லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி:** தமிழ் வெளியீட்டுத் துறையிலேயே இது ஒரு வரலாறு காணாத ஒரு சம்பவம். நூறு ஆண்டுகள் ஒரு நிறு வனம், தமிழ் நூல்களை வெளியிட்டு வருகிறது என்றால், என்னால நம்பவே... முடியல. ஆனால், ஒவ்வொரு தமிழனும் தன் நெஞ்ச நிமிர்த்தி, இந்த உலகின் முன்பே எப்படிப்பட்ட நூல்கள், இந்தச் சுதந்திரப் போராட்டத்தின் வரலாறு போலவே இருக்கின்ற பட்டி யலை வாசித்துப் பார்த்தால் அந்தச் சுதந்திரப் போராட்ட வரலாற்றைப் படித்தது போல இருக்கிறது. அவ்வளவு அருமையான நூல்கள்...

**கவிஞர் வாலி:** ஸ்ரீநிவாஸன் கிட்ட ஒரு பிரமாதமான குணம் என்னன்னா, அவர் ஒரு கவர்ச்சிப் புயல். பார்த்தவர் யாரையும் ஈர்த் திடுவார் அவர். அவர் நல்ல பண்பாளர். நயத்தகு நாகரிகம் மிக்க மனிதர். உங்களுக்கு அல்லயன்ஸ் பத்தி தெரிஞ்சிக்கணுன்னா தமிழ்த் தென்றல் திரு.வி.க., தமிழ்த் தாத்தா உ.வே.சா., ஆதில்ல காந்தி. So காந்தி அதில்லேந்து ஆதரிச்சிருக்கார். இப்ப இத ஆதரிச்சது சோ... என்ன பாருங்க இந்த அல்லயன்ஸ் விழா ஒரு அற்புதமான விழா...

**இரா. முத்துக்குமாரசாமி:** ஒரு பதிப்பகம் தொடங்கி நூறு ஆண்டுகள் நடத்துவது என்பது சாதாரணமான செயல் அல்ல... குறிப்பாக நண்பர் ஸ்ரீநிவாஸன் வந்து இந்தப் பதிப்புத் துறைக்குன்னு எந்தவித பயிற்சியும் எடுத்துக் கொண்டு வரவில்லை. இருந்தாலும் இந்தப் பாரம்பரியத்தில் உள்ள குணம், அவரை இன்று ஒரு சிறந்த பதிப்பாளராக இங்கே நாம் அவரைக் காணுகிறோம். அது மட்டு மல்ல. BAPASI-ல் அவர் செய்கிற பணியெல்லாம், பதிப்பகத்தார் அனைவருக்குமே பயன்படுகிற வகையிலே மிக அருமையாகப் பணியாற்றி வருகிறார்கள்.

**எம். கோபாலகிருஷ்ணன்:** என்னுடைய இளைய சகோதரனைப் போன்றவர் ஸ்ரீநிவாஸன். திரு. ஸ்ரீநிவாஸன் அவர்களாலே இன்று



நாம் தெரிந்து கொள்ள வேண்டியது எல்லாம், பல இளைஞர்கள் இன்றைக்கு முன்னோடி கள் இல்லாமல் தவிக்கின்றார்கள். அவர் களுக்கெல்லாம் திரு. ஸ்ரீநிவாஸன் ஒரு பெரும் முன்னோடி என்றுதான் சொல்ல வேண்டும். உழைப்பு, உண்மை, தரம், மனித நேயம், பணிவு இவை அத்தனையும் ஒருங்கே கொண்டு, நேர்மை இவைகளுக்கெல்லாம் ஒரு இலக்கணம் வகுக்க வேண்டுமென்றால் திரு. ஸ்ரீநிவாஸன் அவர்களைச் சொல்லலாம்... இந்தத் தமிழ்ச் சமுதாயத் திற்கு, இலக்கிய உலகத்திற்குப் பெரிய பணியை ஆற்றிக் கொண்டிருக்கிறார்கள்.

**ஸ்ரீநிவாஸராகவன்:** சிறந்த செயல்பாடுடைய ஒரு நிறுவனம் ஆண் டாண்டு காலமாக - நூறாண்டு காலமாக வாழ்ந்தது என்பது இப் போது சரித்திரம். இனி வாழப் போகிறது என்பது நிகழ்வு. அதற்கு இன்று அலையாகத் திரண்டு வந்திருக்கின்ற அனைவரும் இறைவ னிடம் வேண்ட வேண்டும் என்பது நம்முடைய அவா. சிறப்பு அஞ்சல் உறையை வெளியிட்டு, இந்த நூறாண்டு காலம் வாழ்ந் தீர்கள், இந்த உறை - இந்தச் செய்தியை உலகுக்கெல்லாம் சொல்லும் என்று சொல்லக் கூடிய ஒரே ஒரு செய்திதான் - அதைத்தான் நாங்கள் செய்திருக்கிறோம். அல்லயன்ஸ் கம்பெனியைப் போற்றுவதன் மூலம் இந்திய அஞ்சல் துறை சிறப்படைகிறது; இந்திய அஞ்சல் துறை யின் மூலமாக இந்தச் சிறப்பு அஞ்சல் உறையை வெளியிடுவதன் மூலம் அல்லயன்ஸூம் பெருமை அடைகிறது.

**நடிகர் சிவகுமார்:** தீரர் சத்தியமூர்த்தியின் மகள், சற்று நேரத்திற்கு முன்பு நினைவுச் சின்னங்களைக் கொடுத்து ஆசீர்வாதம் செய்தார். அவருக்கு அல்லயன்ஸ் சார்பிலே நான் முதலில் நன்றி தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றேன். இந்த அல்லயன்ஸ் நிறு வனத்துக்கும் எனக்கும் ஏற்பட்ட தொடர்பு கொஞ்சம் சுவையானது. திலகவதி அவர்கள் சொன்னது போல, எனக்கும் காண்டேகர்தான் காரணமானவர். ஒரு பத்து ஆண்டுகளிலே இதைப் போன்ற புத்த கங்களை நான் படித்ததில்லை. அதன் பிறகு நானே நேரடியாக அல்லயன்ஸூக்கு வந்தேன். அங்க வந்து பார்த்தா பிரமிச்சுப் போய் விட்டேன்!... பெரிய பெரிய கொட்டைப் போட்ட எழுத்தாளர்கள், மணிக்கொடி காலத்து எழுத்தாளர்கள்... எக்கச்சக்கமான புஸ்தகங்கள் இருக்கு... எல்லாம் அருமையான புஸ்தகங்கள்... இந்த அல்லயன்ஸ் பல நூற்றாண்டுகளைக் காண வேண்டும் என்று வாழ்த்தி வேண்டு கின்றேன்.

# பொருளடக்கம்

# காணிக்கை



பிறவி கொடுத்த
அம்மாவுக்கும்



பெருமை சேர்த்த
மாமாவுக்கும்

1



# வணக்கம்

சென்னை - கோவை செல்லும் விமானம், கடந்த சில ஆண்டுகளுக்குமுன் சூலூர் விமான தளத்தில் இறங்கியது. கோவை நகரம் செல்ல வேண்டிய பயணிகளுக்கு இருபது கிலோ மீட்டர் தொலைவில் விமான நிலையம் இருக்கிறதே என்ற அலுப்பு ஏற்பட்டது. ஆனால், சூலூரில் அமைந்துள்ள அந்த விமானதளத்தில் இறங்கியதால் அளவு கடந்த சந்தோஷப்பட்ட ஒரே நபர் நான்தான்.

அந்த விமானம் இருந்த இடத்தில்தான் பால பருவத்தில் நானும் என் நண்பர்களும் ஓடி விளையாடினோம். எங்கள் ஊரிலிருந்து சரியாக ஒரு கிலோ மீட்டர் தொலைவில் அந்த ஓடுதளம் துவங்குகிறது!

46 ஆண்டுகளுக்குமுன் என்னைத் தாலாட்டிச் சீராட்டி வளர்த்த சிற்றூர், சூலூர் அருகிலுள்ள காசிகவுண்டன் புதூர். ஊரின் முதல் எஸ்.எஸ்.எல்.சி.யாக என்னை உருவாக்கி, என் படிப்புக்கு உறுதுணையாக இருந்த எனது பூமி, தன் கடமையைச் செய்துவிட்ட திருப்தியில் இப்போது காய்ந்து, உலர்ந்து தென்படுவதாக எனக்குப் படுகிறது! பழைய நண்பர்களை இப்போது சந்திக்கிறேன். அன்று எனக்குக் குமுதம், ஆனந்த விகடன், கல்கண்டு புத்தகங்களைப் பக்கத்து ஊரிலிருந்து வாங்கி வந்து படிக்கக் கொடுத்த பொங்கியண்ண கவுண்டர், மில்லிலிருந்து ரிடையர் ஆகிவிட்டார். பல மில்களில் 'பார்ட் டைம்' வேலை செய்கிறார்.

உருப்பட்டே ஆகவேண்டும் என்ற வெறியில் அன்று ஊரை விட்டுக் கிளம்பிய என்னை, 'மது, மாது, சூது' - தொடமாட்டேன் என்று காந்தி செய்து கொடுத்த சத்தியத்தைச் செய்யச் சொன்ன என் நண்பர், ஆசிரியர் குமாரசாமி தலைமை ஆசிரியராகி இன்று ரிடையர் ஆகிவிட்டார்.

எனக்குப் பத்து வயது இருக்கும்போதே பட்டணத்துக்குத் தயிர், மோர் விற்கக் கூடை தூக்கிச் சுமந்த பெண்மணி, ஆண்டுகள் பல கடந்து, வயோதிகம் அடைந்தும் தன் தொழிலை விடவில்லை. பஸ்ஸில் மோர் கூடையை வைத்துத் தொழிலைத் தொடர்கிறார்.

ஊருக்கெல்லாம் நல்லது சொல்லி, உயர்வடையும் காலத்தைக் குறித்துக் கொடுக்கும் ஜோதிடர், இன்று விழுமோ, நாளை விழுமோ என்ற நிலையில் இருக்கும் ஓட்டுச்சாளையில் உற்சாகமாக வறுமையை நேசிக்கப் பழகிவிட்டார்.

எட்டாவது வகுப்புடன் படிப்பை நிறுத்திவிட்ட என் வகுப்புத் தோழன் ராமசாமி தோட்டத்துக்கு அவனைக் காணச் செல்கிறேன். விருந்தினரை உபசரிக்க இளநீர் வெட்டித் தருகிறான். ஒரு லிட்டர் தண்ணீரை ஒரே மூச்சில் குடித்துவிடத் திணறிவிட்டேன்.

ஆனால், அவனோ அதே அளவு இரண்டு இளநீரை அநாயாசமாகக் குடித்துவிட்டு, கம்பீரச் சிரிப்புச் சிரிக்கிறான்.

''பட்டணம் போயி கிராமத்துச் சுகத்தையும், ஆரோக்கியத்தையும் இழந்திட்டேன்'' என்கிறேன்.

''அட போப்பா! என்ன கிராமம்... என்ன வாழ்க்கை! நீ செத்தா இந்த நாட்டுக்கே தெரியும். நான் செத்தா இந்த மண்ணே மதிக்காதே'' என்கிறான்.

கலப்படமில்லாத கிராமத்துச் சிறுவனாக இருந்த நான், எஸ்.எஸ்.எல்.சி. வரை, சிம்னி விளக்கின் உதவியில் படிப்பைத் தொடர்ந்த நான், கோவை நகருக்கு ஆண்டில் இரண்டு முறை போனால் பெரிய விஷயம்...! சினிமாப் படம் பார்க்க தீபாவளி, பொங்கல் நாள்களில் வீட்டில் அனுமதி பெறுவதே பெரும் கஷ்டம் என்ற நிலையில் இருந்த நான், சென்னை வந்து இந்த நிலையை அடைய நீண்ட தூரம் பயணம் செய்திருக்கிறேனோ?

என்னய்யா பெரிய வளர்ச்சி அடைந்துவிட்டான்? 20 ஆண்டு சினிமாத்துறை என்பது எவ்வளவு பெரிய வாய்ப்பு. இதில் என்ன சாதித்து விட்டான்? ஆண்டுக்கு ஆறு படம் நடித்தால் ஒரு படம் 'ஹிட்'டாகிறது. சாண் ஏறினால் முழம் இறங்கும் நிலை... அவனவன் சினிமாவில் நுழைந்ததும் மடமடவென்று வளருகிறான். ரசிகர் மன்றங்கள் அமைத்து, தியேட்டர் முன்பு தோரணங்கள், மாலைகள் போட்டு 'தூள்' பரத்துகிறான். போஸ்டர் அடித்து ஒட்டுகிறான். மடமடவென்று வருகின்ற வாய்ப்பைப் பயன்படுத்தி லட்சங்களைச் சேர்த்து, வீடோ, நிலமோ, படத்தயாரிப்பு, விநியோகம் என்றோ ஏதாவது ஒன்றைப் பரபரப்பாகச் செய்கிறான். மக்களிடம் செல்வாக்கைப் பெருக்கிக்கொள்ள ஏதாவது ஒரு கட்சியோடு தன்னை இணைத்துக் கொள்கிறான்... என்றெல்லாம் ஏதேதோ எண்ணங்கள்...

உண்மையில் கொடைக்கானல் மேகத்துக்கும், சினிமாப் புகழுக்கும் வேறுபாடே இல்லை. நம்மைக் கேட்டுக்கொண்டு அது வருவதும் இல்லை. நம் அனுமதி பெற்றுப் போவதுமில்லை.

உச்சகட்டப் புகழ் ஒரு நடிகனை அடையும்போது அவன் நிலை என்ன? இந்தப் புகழைத் தக்க வைத்துக்கொள்ள முடியுமா என்று தூங்க முடியாத இரவுகளை அவன் சந்திக்கிறான்.

நன்றாகப் படம் ஓடுகிறது. நாடே 'இனி நீ தான்' என்கிறது – இந்த மகிழ்ச்சியைக் கொண்டாட மதுவில் மூழ்கி, புகையில் திணறுகிறான்.

வீட்டிலே பணமாக வைத்துக்கொள்ள முடியாமல், தங்க பிஸ்கட் ஆக்கி, கட்டிலுக்கடியில் பதுக்கி, விடியும்வரை கண் விழித்தும், வெளியூர் போனால் அது என்ன ஆயிற்றோ என்ற தவிப்புக்கும் ஆளாகிறான்.

கணக்கில் வராத பணத்தைச் செலவழித்தே தீரவேண்டிய கட்டாயத்தில் ஓட்டல்கள், நண்பர்கள், உல்லாசம், கும்மாளம்...!

விடிய விடியக் கண் விழித்து வேலை செய்வதால், கால் மூட்டுக்களில் வலி. வலியை மறக்க மீண்டும் சோமபானம்.

சம்பாதித்த பணத்தில் பினாமியாகச் சொத்து வாங்குகிறான். பட விநியோகம் செய்கிறான். தயாரிப்பில் ஈடுபடுகிறான். எல்லா வகையிலும் சொத்து குவிந்து கொண்டேயிருக்கிறது.

என்ன செய்வது இந்தப் பணத்தை என்று தவிக்கும்போது, இருக்கவே இருக்கிறது சின்ன வீடு.

அடுத்து, சொத்துக்களைப் பாதுகாக்க அரசியல் ஈடுபாடு என்ற பாவனை.

ஆமாம்... இந்த வாழ்வு எத்தனை நாளைக்கு? மனித வாழ்க்கையே நீர்க்குமிழி போன்றதுதானே... அப்படியென்றால் இந்தச் சினிமா வாழ்க்கை எவ்வளவு நாள்...? எவ்வளவு நேரம்?

ஒரே நாள் வருமானவரி வேட்டையில், அத்தனை வண்டவாளங்களும் வெளியே வந்து விடுகின்றன. எந்த மந்திரி காலைப் பிடித்தாலும், அபராதத்திலிருந்து தப்ப முடியாது.

பத்து லட்சம் அபராதம் என்று வரி போட்டுவிட்டால், சம்பாதித்து அதை அடைக்கவே முடியாது. ஏனென்றால் வரியைக் கட்ட சம்பாதிக்க வேண்டும். அதற்குத் தனியாக வரி செலுத்த வேண்டும். வரிக்கு வரி என்று போட்டு, சொத்தை ஏலத்துக்குக் கொண்டு வருவார்கள்.

இதைத் தாங்கிக்கொள்ள வலுவான இதயம் வேண்டும். இல்லாவிடில் அப்போலோ, விஜயா ஆஸ்பத்திரியில்தான் சரண் அடைய வேண்டும்.

நேரம் மாறும்போது, கை தட்டிய கூட்டமும் திசைமாறிப் போகும். 'முன்னைவிட நல்லாத்தானே நடிக்கிறேன். நல்ல கதைதானே இது. டைரக்டரும் அழகாத்தானே படம் எடுத்திருக்கிறார். ஏன் படம் ஓடமாட்டேன் என்கிறது?

இந்த ரசிகர்கள் காட்டு மிராண்டிகள்! ரசனையே இல்லாதவர்கள்...!

எந்த ரசிகன், உன்னை இமயத்தின் உச்சியில் கொண்டுபோய் உட்கார வைத்தானோ, எந்த ரசிகனை 'என் உதிரத் துளிகள், என் உயிர் மூச்சுக்கள்' என்றாயோ, இந்த வாழ்வே எந்த ரசிகன் போட்ட பிச்சை என்று சொன்னாயோ, அவனை இப்போது காட்டுமிராண்டி என்கிறாய்! தினமும், நம்மைச் சுற்றி வந்த காக்கைக் கூட்டம், வேறு இடத்துக்குப் பறந்து போய்விடுகிறது.

வீட்டிலுள்ளோரிடம் நம் பிரச்சினையை விவாதிக்க முடியாது. வெளியில் சென்றால், 'என்ன சார்! இப்போல்லாம் உங்க படம் வர்றதில்லை. அல்லது வந்தாலும் எடுபடறதில்லை?' என்று கேள்விகள்.

தனிமைப் பயம் ஆட்கொள்கிறது. உன்னை நீ மறக்க வேண்டும். இந்தப் பிரச்சினைகளிலிருந்து விடுபட வழி வேண்டும். என்ன வழி, என்ன வழி? ஒரே ஒரு வழி – குடி! குடித்து உன்னைத் தற்காலிகமாக மற. சுய நினைவு வந்தால் மீண்டும் குடி...

இதுதானே பெரும்பாலான புகழ்பெற்ற திரையுலகக் கலைஞனின் வாழ்க்கை வட்டம். இந்த வட்டத்தைச் சீக்கிரம் போட்டு வாழ்வை முடித்துவிட வேண்டுமா?

இதுதான் ஒரு கலைஞனின் முழுமையான வாழ்க்கை என்றால், அப்படி ஒரு வாழ்க்கை எனக்கு வேண்டாம்! நான் என் வழியில் வாழ்ந்துவிட்டுப் போகிறேன்.

எனக்கு வரும் எந்தப் புகழும், பணமும் என் இயல்பை மாற்றிவிடக் கூடாது. என் நிம்மதியைக் குலைத்துவிடக் கூடாது... இதயத்தின் ஓரத்தில் ஒட்டிக்கொண்டிருக்கும் அடிப்படை மனிதப் பண்புகளைத் தகர்த்து விடக்கூடாது.

படம் ஓடினால் நீ பெரிய மனிதன்... ஓடாவிட்டால் சின்ன மனிதன் என்றால் கலைஞனின் நிலை என்ன?

படங்களின் வெற்றி தோல்விதான் ஒரு கலைஞனின் வாழ்வை, யோக்கியதாம்சத்தை, மனிதப்பண்பை எடை போடவல்லதா?

அப்படியென்றால் கலைஞன் தோன்றி மறைந்துபோக வேண்டியவன்தானா?

அல்ல, அவன் விட்டுச் செல்ல, நல்ல படங்கள் மட்டுமல்ல, நற்பண்புகள் மூலம் ஆற்ற வேண்டிய நற்செயல்களும் பல உள்ளன. வாழ்வின் முடிவில் நிம்மதியும், சந்தோஷமும் வேண்டுமென்றால் 'நாம் யாருக்கும் கெடுதல் செய்யவில்லை... ஓரளவு நல்லவன் என்ற பெயரோடு வாழ்ந்திருக்கிறோம்' என்ற திருப்தி வேண்டும்.

கெட்ட பெயரை ஒரு விநாடியில் பெற்றுவிட முடியும். நல்ல பெயர் பெற 40 ஆண்டுகள் கூடப் போதாது...

எங்கள் கிராமத்துக்கு, அந்த நாள்களில் விடுமுறைக்குச் செல்லும் போது, வயதாகி வாழ்வின் கடைசிக் கட்டத்திலிருக்கும் கிழவர்களை, கிழவிகளை மாடலாக உட்கார வைத்து 'ஸ்கெட்ச்' செய்து வைத்திருக்கிறேன்.

இப்போது அவகாசமின்மையால், அதேபோன்ற பெரியவர்களைக் காமிராவில் புகைப்படம் எடுத்து வருகிறேன்.

ஒருமுறை ஊருக்கு ஒதுக்குப்புறமாக, குடிசை ஒன்றில் துறவறம் பூண்டு வாழ்ந்த பெரியவரைப் புகைப்படமெடுக்கச் சென்றேன்.

தலையில் முடி எண்ணெய், சீப்பு போடாமல் காடாக வளர்ந்து சிக்குப் பிடித்து ஜடா முடியாகிவிட்டிருந்தது.

ஆறடி உயரம்! ஆஜானுபாகுவான தோற்றம்! சிவந்த கண்கள்! உடையை மிஞ்சும் காவிப் பற்கள்.

''வாப்பா, நல்லா இருக்கியா? மெட்ராஸிலெல்லாம் மழை எப்படி...? விவசாயம் எப்படி?''

பேச்சு கடவுள் பக்கம் திரும்பியது. ''சினிமாக்காரர்கள் கடவுளின் புனிதத்தைக் கெடுத்துவிட்டார்கள். கோயிலையும் விக்ரஹத்தையும் சினிமா எடுத்துக்காட்டி மலிவாக்கிவிட்டார்கள். கூத்தாடிகளுக்குக் காசுதான் நோக்கம். அதற்காக எதையெல்லாம் காசாக்குவது என்ற விவஸ்தை கிடையாதா?'' என்று நீண்ட பிரசங்கம் செய்தார்.

பொறுமையாக இருந்த நான், ''ஒரேயடியாகக் கடவுளை இழிவு படுத்தும் செயலைச் சினிமாக்காரர்கள் செய்கிறார்கள் என்பதை ஒப்புக் கொள்ள முடியாது.

''விநாயகனுக்குத் தந்தை யார்? சரஸ்வதிக்குக் கணவர் யார்? மகாவிஷ்ணுவின் பத்து அவதாரங்கள் என்ன? அவற்றை ஏன் எடுத்தார்? மனிதனுக்குக் கடவுள் பக்தி என்பது எப்படி ஒரு 'மாரல் சப்போர்ட்' – என்பதையெல்லாம் திருவிளையாடல், திருமால் பெருமை, கந்தன் கருணை போன்ற படங்களின் மூலம் பாமர மக்களுக்குப் போதித்த ஏ.பி. நாகராஜன் போன்றோரும் சினிமாக்காரர்கள்தான்.

''நாத்திகர்கள் என்று சொல்லப்படுபவர்கள் நாட்டை ஆண்ட கால கட்டத்தில் திருச்செந்தூர் கோயிலைச் சுற்றி, பல லட்சங்களைச் செலவழித்து விதானம் அமைத்துக் கொடுத்து, தமிழகத்தில் எந்த மூலையில் முருகன் கோயில் நாசமடைந்திருப்பதாகத் தெரிவித்தாலும் அதைப் புதுப்பிக்க ஆயிரக்கணக்கில் அள்ளிக்கொடுத்து ஆறுபடை வீட்டோடு, முருகனுக்கு ஏழாவது படை வீடாக மருதமலையை மாற்றிக் காட்டுகிறேன் என்று தம் சம்பாத்தியத்தில் பெரும் பகுதியைக் கோயிலுக்குச் செலவழித்த சின்னப்பதேவரும் சினிமாக்காரர்தான்'' என்றேன்.

''விபச்சாரம் செய்த பணத்தைப் புண்ணியம் பெறச் செலவழிப்பது போன்றதுதான், சினிமாக்காரன் செய்யும் இந்தத் தர்மகாரியங்கள்'' என்றார் சாமியார்.

ரொம்பவும் அடக்கி வைத்திருந்த எனது உணர்வுகள் பிய்த்துக் கொண்டு வந்தன.

''ஐயா! இவ்வளவு தூரம் ஒட்டுமொத்தமாகச் சினிமாக்காரனை நீங்கள் கேவலப்படுத்திய பிறகு ஒன்றைச் சொல்வதற்காக நீங்கள் என்னை மன்னிக்க வேண்டும்...

''துறவியாக வாழும் உங்களைவிட நான் மேலானவன். குடும்பஸ்த னாக வாழ்ந்து, சிற்றின்ப சுகங்கள் அனைத்தையும் அனுபவித்து ஓய்ந்து, முடியாத வயதில்தான் நீங்கள் துறவியாகியுள்ளீர்கள்! பிள்ளைகள் பெற்றிருக்கிறீர்கள். பேரக் குழந்தைகள் உள்ளனர்.

''ஊரைவிட்டு ஒதுங்கி, ஆசிரமம் போட்டு அமர்ந்து, சலனங் களுக்கும் அவலங்களுக்கும் இடம் கொடாத சூழ்நிலையில் வாழ்கிறீர்கள்.

''இந்த வயதில், இந்தச் சூழ்நிலையில் துறவறத்தைக் கடைப் பிடிப்பது அவ்வளவு பெரிய காரியமாகப் படவில்லை.

''நான் சினிமாக்காரன்...! கூத்தாடிதான். எதையும் அனுபவிக்க ஆசைப்படும் வயது, வசதி, வனப்பு எனக்கு இருக்கிறது...! 25 வயதாக இருந்தபோதும் 15 வயது பெண் கதாநாயகி, 40 வயதாகும்போதும் 15 வயசுப் புதுப்பெண் கதாநாயகி...! பொழுது கிளம்பி விழும்வரை, விதவிதமான பெண்களோடு, விரும்பாவிட்டாலும் நான் நடித்தாக வேண்டும். கட்டிப் பிடிக்க வேண்டும்! உருள வேண்டும்.

''மனிதன் அனுபவிக்க ஆசைப்படும் அனைத்து இன்பங்களும், போகங்களும் என்னைச் சுற்றி நர்த்தனம் புரிகின்றன.

''நான் ஸ்ரீராமபிரானுமல்ல, புத்தனுமல்ல. ஒரு சராசரி மனிதன். 'சினிமா எனக்குத் தொழில். என்னைச் சுற்றி இருப்பவை எல்லாம் காட்சிப் பொருட்கள். அவை அனுபவிக்க அல்ல' என்ற மனப்போக்கை வளர்த்துக்கொண்டு போர்க்களத்தின் நடுவே புத்த பிட்சுவாக வாழ்ந்து கொண்டுவரும் நான், உங்களைவிட மேலானவன்தான். என்னை மன்னித்துக்கொள்ளுங்கள்'' என்று கூறிவிட்டு வேகமாக வந்து விட்டேன்.

'திரைப்பட உலகில் இவற்றையெல்லாம் துறந்தவர்கள் இருக்கிறார்களா?' என்ற கேள்வியைக் கேட்கலாம். அதைப்பற்றி எனக்குக் கவலை இல்லை. இவற்றையெல்லாம் ஒதுக்கியதால் என் சகோதரக் கலைஞர்களைவிட நான் மேலானவன் என்று மார்தட்டிக் கொள்ளவும் நான் விரும்பவில்லை.

சினிமா உலகில் புகழின் உச்சியினை சிவகுமார் இன்னும் எட்டவில்லை என்கிறார்கள். அது நூற்றுக்குநூறு உண்மை. எட்டவே மாட்டான் என்று யாரும் சொல்லவில்லையே! அது பெரிய ஆறுதல்!

இது ஒரு மராத்தன் ஓட்டம். பாதி ஓட்டம் நிகழும்போது முன்னால் ஓடுபவனை வெற்றி பெற்றவனாகக் கருத முடியாது. இன்னும் மீதி ஓட்டமிருக்கிறது.

இமயமலை உச்சியில் கொடி நாட்ட எனக்கும் விருப்பமுண்டுதான். அதை இப்போதே நாட்ட நான் விரும்பவில்லை. படத்தின் முடிவில்

க்ளைமாக்ஸ் வருவதுபோல, வாழ்வின் இறுதிப் பகுதிகளில் உச்சப் புகழ் பெற வேண்டுமென்பது என் அவா.

புகழின் உச்சி மட்டுமல்ல... இமயமலையின் உச்சியும்கூட கூரானது. பாதுகாப்பற்றது. கொடி நாட்ட முடியுமே தவிர, அங்குக் குடியிருக்க முடியாது. கொடியேற்றும்போது என் உருவம் சிதைந்து, குணம் அழிந்து, ஆரோக்கியம் மறைந்த நிலையில் நான் காட்சியளிக்கக் கூடாது.

'இன்றைய நம்பர் ஒன் ஸ்டார் அவர். நம்பர் டூ நடிகர் இவர்' என்று எழுதுகிறார்கள்.

இந்த நம்பர் ஒன், நம்பர் டூ என்பதை எதை வைத்து எடை போடுகிறார்கள்? பத்து வருடமாகத் தொடர்ந்து ஒரு நடிகன் 100 நாள் படமாகக் கொடுத்துக் கொண்டிருக்கிறான்.

திடீரென்று வேறொரு நடிகன் படம் 200 நாட்களைத் தாண்டி ஓடி விடுகிறது. அப்படியென்றால் புது நடிகன் இப்போது 'நம்பர் ஒன்' ஆகிவிட்டானா?

இவன் நம்பர் ஒன் ஸ்தானத்தை இனிக் காப்பாற்ற பத்து ஆண்டுகள் தொடர்ந்து 200 நாள் வெற்றிப் படங்கள் தருவானா? தர முடியுமா?

கல்லூரியில் விரிவுரையாளராகச் சேருபவர், படிப்படியாக உயர்ந்து பேராசிரியர், துணை முதல்வர், முதல்வர் பதவிகளை அடைகிறார். வயதாகி ரிடையர் ஆனால்கூட அவருடைய உரிமைகள் போகின்றதே தவிர, மரியாதை குறைவதில்லை.

ஆனால், இங்கு ஒரு புது நடிகன் படம் சூப்பர் ஹிட் ஆகிவிட்டால், இவ்வளவு நாள் கொடி பிடித்த கலைஞனைப் பாப்பர் ஆக மதிக்கிறார்கள்.

எம்.ஜி.ஆர். சொல்லுவார், ''என்மேல் உள்ள விசுவாசத்தில், பிரியத்தில் மக்கள் டிக்கெட் வாங்கிட்டு தியேட்டருக்குள்ளே வர்றாங்க. அவங்களை இரண்டரை மணி நேரம் முறையா பொழுதுபோக்க வைக்க வேண்டியது நமது கடமை. மோசமான கதையசம்சமுள்ள படத்தில் ஏனோதானோவென்று நான் நடித்துவிட்டு அதை மக்கள் பார்த்தே ஆக வேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது'' என்று.

நித்தியகண்டம், பூர்ண ஆயுசு உள்ள இந்தத் துறையில், எந்தக் கதை சிறந்தது, எந்தப் படம் நிச்சயம் வெற்றி பெறும் என்று எவருமே கணித்துச் சொல்ல முடியாத இந்தத் துறையில், எனக்கு ஏற்பட்ட அனுபவங்களையும் நான் சந்தித்த மனிதர்களின் குணநலன்களையும், என் அகவாழ்க்கையையும் இங்கே கூற ஆசைப்படுகிறேன்.

---

# 2



பழனியம்மாள்

## அம்மா

அம்மா! இந்த வார்த்தையை உச்சரிக்கும்போதே உடம்பில் ரத்தம் 'சிலி'ரெனப் பாய்ந்து ஒரு விநாடி உடம்பையே குலுக்குகிறது...!

கடவுளை நாம் நேரில் பார்த்ததில்லை. கருணையே வடிவான அம்மாதான் முழு முதற் கடவுள்...!

ஒன்றரை வயதாகும் முன்பே, தாய்ப்பாலை நான் ஒதுக்கி விட்டேனாம். அதனால் உச்சி மோர்ந்து அவர் எனக்குப் பாலூட்டியது நினைவில் இல்லை.

நினைவு தெரிந்த நாளிலிருந்து வெள்ளைச் சேலையில் – வியர்வையும் விசனமுமாய்த்தான் – அவர் முகம் மனத்தில் பதிந்துள்ளது...

பாவம்! அவர் என்ன செய்வார்...? அல்பாயுசில் 33 வயதிலேயே கணவன் இறந்துவிட்டான்...! அடுத்த நாலு வருடத்தில், ஆளான பெரிய மகனும் ஒரே நாளில் பிளேக் நோயில் விடைபெற்றுக் கொண்டான்...!

நண்டும் சிண்டுமாக நானும் என் அக்காவும்...

மழை பொய்த்து விட்டது.. பூமி காய்ந்து விட்டது.. மாடு கன்னுக்குப் போட தீவனம் கிடைக்கவில்லை. அதனால் அதுகளையும் விற்றாகி விட்டது...

உணவு தானியத்தில் மிகவும் மலிவானது கேழ்வரகு! அந்த ராகி மாவைக் கொண்டு களி கிளறி, ஏழை பாழைகள் வயிறு கழுவுவார்கள்...! அதுகூட விளைவதில்லை...!

புஞ்சைத் தானியம் கம்பு, சாமை, சோளம், தினை, வரகு எதுவும் அக்கம் பக்கத்தில் விளையவில்லை. பூமி வெங்காஞ்சு கிடக்கிறது...!

குடிதண்ணீருக்கு எப்போதுமே தட்டுப்பாடு. மூன்று மைல் சைக்கிளில் சென்று காரியரில் ரெண்டுகுடம் கொண்டு வந்து, அதிலேதான் சமையல் செய்ய வேண்டும்.

ஊருக்குள்ளிருக்கும் நீர் கசப்பு நீர்...! கை கால் முகம் மட்டும் கழுவிக் கொள்ளலாம். சாப்பிட்டு அந்த நீரில் வாய் கொப்பளித்தால், தின்றது வெளியேறி விடும். அப்படி ஒரு கசப்பு...! வாரம் ஒரு நாள் மக்கள் குளித்தாலே பெரிய விஷயம்...!

ஒட்டகப் பால்பவுடர் ரேஷனில் தருவார்கள். வாங்கி வந்து தண்ணீரைக் கொதிக்கவைத்து, அந்தப் பவுடர் 2 ஸ்பூன் போட்டு, கரும்புச் சக்கரை கொஞ்சம் கலந்து கொடுப்பார்கள்...

அதுவும் கிடைக்காதவர்கள், ஆற்றோரம் கற்றாழை வரிசையாக முளைத்திருக்கும்...! பட்டாக்கத்திபோல பச்சையாக நீண்டு இருக்கும். அந்த இலைகளை வெட்டிவிட்டு, அடியில் இருக்கும் மரத்தின் நடுவில், கடப்பாறையை விட்டுத் தோண்டுவார்கள்...! வெள்ளையாகக் கிழங்கு கிடைக்கும்..

அதைக் கொண்டுவந்து, நாற்பது ஐம்பது லிட்டர் தண்ணீர் கொள்ளளவுள்ள 'குதிர்' என்கிற பெரிய மண்பானைக்குள், ஒரே சைஸாக

வெட்டிப் போட்டு, பாதி அளவு தண்ணீர் விட்டு, கருப்பட்டி ஐந்தாறு வட்டு தட்டிப் போட்டு, கொட்டை எடுத்து, நார் நீக்கிய புளியை, இரண்டு கை அளவு அள்ளிப் போட்டு, 24 மணி நேரம் இடைவிடாது விறகு அடுப்பில் வேக வைக்க வேண்டும்.

அப்போதுதான் புளியின் சத்தும், கருப்பட்டியின் இனிப்பும் அந்தக் கிழங்குடன் சேர்ந்து இரண்டறக் கலந்து, திருநெல்வேலி அல்வாபோலக் காட்சி தரும்...

வாயில் ஒரு துண்டு எடுத்துப் போட்டால், அவ்வளவு ருசியாக இருக்கும்...! சாப்பிட்ட இரண்டு மணி நேரத்தில், தண்ணீராய் வயிற்றுப் போக்கு ஏற்படும்...!

1946 ஆம் வருஷ பஞ்சத்தில் மக்கள் இப்படித் தத்தளித்துக் கொண்டிருந்தனர்... அப்போது எனக்கு 5 வயது துவக்கம்... நாடே இப்படி நாதியத்துக் கிடக்கும் சூழ்நிலையில், ராகி, சோளத்துக்கே மக்கள் அல்லாடும் வேளையில், 'பொங்கச் சோறு போட முடியாம என்னை ஏன் பெத்தே?' என்று ஒரு நாள் அம்மாவைப் பார்த்துக் கேட்டேன். பொங்கலுக்குப் பயன்படுத்தும் அரிசியைக் கொண்டு சமைப்பது பொங்கச் சோறு. அதாவது அரிசிச் சோறு...!

அம்மா உணர்ச்சி வசப்படவில்லை. கொஞ்சம் மனசு கலைந்தாலும் ஊரைச் சுற்றி முளைத்திருந்த எருக்கஞ் செடியும், அரளிக் கொட்டையும் எங்கள் குடும்பத்தின் கதையை முடித்திருக்கும்...!

எருக்கம் பாலுக்கும் அரளி விதைக்கும் அவ்வளவு வீரியம்.. அம்மாவோடு சண்டைபோட்டு, கோபத்தில் ஒரு பெண், அரளி விதையை அரைத்துக் குடித்து விட்டாள்...! அரை மணியில் பரலோகம் போக இருந்த அந்தப் பெண்ணைக் காப்பாற்ற ஒரே வழிதான்...

தெரு நாயின் மலத்தைச் சட்டியில் போட்டுக் கரைத்து, புனலை அப்பெண்ணின் வாயில் செருகி, வயிற்றுக்குள் அதை ஊற்றி விட்டார்கள்...

அந்த நாற்றமும், குமட்டலும் வயிற்றுக்குள்ளிருக்கும் விஷத்தை வாந்தியாக வெளியேற்றி விட்டது?

பஞ்ச காலம் என்பதற்காக, பகவான் கொடுத்த குழந்தைகளைக் கொல்வது பாவம் என்று படிக்காத எங்கள் தாயாருக்குத் தோன்றியிருக்க வேண்டும்...! அதனால் நாங்கள் தப்பித்தோம்...

கேள்வி கேட்ட நாளிலிருந்து எனது பள்ளிப் படிப்பு முடியும் வரையிலும், ஏறக்குறைய 11 வருஷம் – எப்படியோ காசு மிச்சம் பிடித்து,

கொஞ்சம் அரிசி வாங்கி – தினமும் ஒரு கைப்பிடி அரிசி எடுத்து, சாதம் செய்து பள்ளிக்கு மட்டும் கொடுத்தனுப்பினார்.

அரிசியும் பருப்பும் சாதம் கொங்கு நாட்டில் பிரசித்தம். எலுமிச்சை சாதம்போல தோற்றமளிக்கும். ஆனால் அதன் ருசி சாப்பிட்டு அனுபவித்தவர்களுக்குத்தான் தெரியும்.

என்னைவிட மூன்று வயது பெரியவள் என் சகோதரி சுப்புலட்சுமி. அவள்தான் தினமும் அந்தச் சாதம் செய்து தூக்குப் போசியில் போட்டுக் கொடுப்பாள்...!

ஒரு நாள், சட்டியின் ஓரத்தில் கொஞ்சம் சாதம் ஒட்டியிருப்பதைப் பார்த்து அவளிடம் கேட்டேன்...!

''அது வந்து கண்ணு, முழுசா சட்டியைச் சொரண்டினா தரித்திரம் புடிச்சுக்கும். அதான் கொஞ்சம் ஓரத்தில விட்டிருக்கேன்'' என்றார்.

பாவம்! அரிசி சாதத்தை ருசி பார்க்க அவளுக்கு மட்டும் ஆசை இருக்காதா என்ன...?

நான் பள்ளிக்குச் சென்றபின், சட்டியைச் சுரண்டி, ஒரு கை அளவே ஆகும் அந்தச் சாதத்தைச் சாப்பிட்டு, ஆசையைத் தணித்துக் கொள்வார்...

காலை நேரத்தில் எப்போதும் பழையதுதான். சோளச் சோறும் கெட்டித்தயிரும்! அதன் ருசியே தனி. இரவு சோள தோசை, ராகி தோசை, ராகி உப்புமா அல்லது பச்சைப் பயறு, தட்டைப் பயறு, கொள்ளுச் சுண்டல்.

''இத பாருப்பா – தீபாவளி, பொங்கல், ஆடிப் பண்டிகைன்னு – வருஷத்துக்கு நாலைந்து பண்டிகை வரும். அதெல்லாம் பணக் காரங்களுக்கு. எல்லாப் பண்டிகைக்கும் அவங்களோட போட்டி போட்டு நாம புதுத்துணி எடுக்க முடியாது...!

''உனக்கு ரெண்டு ஜோடி சட்டை, டிராயர் இருக்கு. அதையே மாத்தி மாத்திப் போடு! எது கிழிஞ்சாலும் அன்னிக்கே கடைக்குக் கூட்டிக்கிட்டுப் போயி – புதுசா தெச்சுத் தர்றேன். கிழிஞ்ச துணியைப் போடறது கேவலம்'' என்றார் அம்மா...! அது நியாயமாகப்பட்டது...!

சினிமா...! எவ்வளவு கவர்ச்சியான வார்த்தை! உள்ளூரில் பொன்னுசாமிக் கவுண்டர் வீட்டுப் பரணில் ஒட்டி வைத்திருந்த 'ராமராஜ்யம்', 'மாயக்குதிரை', 'சந்திரஹாரம்', அசோக்குமார் – படப் போஸ்டர்களை, மல்லாந்து திண்ணையில் படுத்து வேடிக்கை பார்ப்பதோடு சரி...!

கொஞ்சம் விவரம் தெரிந்து தொல்லை செய்யவே, தீபாவளி – பொங்கல் – இரண்டு தினங்களில் மட்டும், 2 மைல் தொலைவிலுள்ள சூலூரில் காலைக் காட்சி மட்டும் பார்க்க அனுமதி கிடைத்தது...!

'வேதாள உலகம்', 'மனோகரா', 'கணவனே கண்கண்ட தெய்வம்', 'தூக்குத் தூக்கி', 'என் வீடு' படங்கள், அப்படி வருஷம் இரண்டாகப் பார்த்த படங்கள்.

'ஒயிட் லகான்' – என்கிற வகைக் கோழி அப்போதுதான் இனவிருத்தி செய்யப்பட்டு, கிராமங்களுக்குள் வந்தது...! தும்பைப் பூவைப்போல வெள்ளை வெளேரென்று இருக்கும். தலையில் பூ மட்டும் ரத்தச் சிவப்பாக, நடக்கும்போது குலுங்கும்.

இரண்டு கோழியும் ஒரு சேவலும் அம்மாவிடம் சொல்லி வாங்கித் தரச் சொன்னேன். இந்தக் கோழிகள் தினமும் முட்டை வைத்துக் கொண்டே இருக்கும், அடைகாத்துக் குஞ்சு பொறிக்காது என்றார்கள். ஆச்சர்யமாக இருந்தது!

நாட்டுக் கோழிகள் இருபது, முப்பது முட்டைகள் வைத்தவுடனே 'கிர்'ரென்று சிலிர்த்துக்கொண்டு, முட்டைகளை அடைகாக்கத் தயாராகி விடும். வாப்பாடு உடைந்த மண் சட்டிக்குள் மணலைப் பரப்பி, முட்டைகளை இடைவெளிவிட்டு அதில் பதித்து, கோழியை அதன் மேலே உட்கார்த்தி வைத்து விடுவோம்..

கோழியின் உஷ்ணத்தில், இருபத்திரெண்டு நாள்களில் முட்டைக்குள் இருந்து குஞ்சுகள் எட்டிப் பார்க்கும்...! ஓட்டுக்குள்ளிருந்து குஞ்சுகள் வெளியேறும் காட்சி கண் கொள்ளாக் காட்சி...!

கருப்பும், பழுப்பும், செம்பட்டையுமாக முட்டை வடிவிலேயே குஞ்சுகள்...! கோழி அவற்றை அழைத்து வந்து குப்பை மேட்டில் மேயக் கற்றுக் கொடுப்பதே அழகு!

இந்தக் கோழி, குஞ்சு பொறித்திருக்கும் விஷயம், ஆகாயத்தில் எங்கேயோ பறந்து கொண்டிருக்கும் கழுகுக்குத் தெரிந்து விடும்...! குப்பை மேட்டில், கழுகின் நிழலைப் பார்த்தவுடனே, **'கொகேக்'... 'கொகேக்'** என்று கோழி எச்சரிக்கைக் குரல் கொடுக்கும். அந்தக் குரல் கேட்டு அத்தனை குஞ்சுகளும் பதறியடித்துக்கொண்டு ஓடிவந்து கோழியின் இறகுகளுக்குள் புகுந்து கொள்ளும்.

தனித்து மேயும் விபரம் புரியாத குஞ்சுக்கு,கோழி ஏன் அப்படிக் கத்தியது என்று புரியாது. தலையைத் தூக்கி, தாயை எட்டிப் பார்ப்பதற்குள், சரேலென்று, கண் இமைக்கும் நேரத்தில் கழுகு வந்து, அந்தக் குஞ்சைக் கொத்திக்கொண்டு போய்விடும்.

கழுகின் பிடியில் சிக்கிய குஞ்சு பரிதாபமாகக் கத்திக்கொண்டு மேலே செல்ல, 'பறந்து சண்டை போட்டு, குஞ்சைக் காப்பாற்ற முடியவில்லையே' என்ற கோபத்திலும், ஏக்கத்திலும், தாய்க் கோழி போடும் கூப்பாடு அடங்க வெகுநேரமாகும்...!

ஒயிட் லகான் கோழிக்குத் தன் முட்டைகளை அடைகாக்கத் தெரியாது. நாட்டுக் கோழி முட்டைகளுக்கிடையில் இவற்றை வைத்துத் தான் குஞ்சு பொறிக்கச் செய்ய வேண்டும்.

தினந்தோறும் வெள்ளைக் கோழிகள் இடும் முட்டைகளைச் சேர்த்து வைத்து, வாரத்தில் ஒரு நாள் சூலூர் 'பாய்' பிரியாணிக் கடைக்கு மஞ்சள் துணிப்பையில், முட்டைகளை மணலில் பதித்து எடுத்துச்சென்று ஒரு முட்டை 4 அணா வீதம் விற்று, சினிமாவுக்குப் போக, தனியாகக் காசு, சேர்த்து வைத்துக் கொள்வேன்.

வயசு கூடக்கூட, வருஷம் 4 படமாவது பார்த்தே ஆகவேண்டும் என்று பிடிவாதம் பிடித்தேன்...! அம்மா மனசைக் கரைப்பதற்காகச் சனி, ஞாயிறு லீவு நாள்களில் மாடுகளைத் தோட்டத்துப் பொழிக்காலில் மேய்க்க ஓட்டிச் செல்வேன்.

ஏறு வெயிலில் ஒரு கையில் புத்தகமும், மறு கையில் மாட்டுக் கயிறுமாக உச்சி நேரம்வரை மேய்ப்பேன்.

அறுகம்புல்லை 'முஸ் முஸ்' என்று மூச்சுவிட்டவாறு மாடுகள் பல்லில் கடித்து இழுக்கும் ஓசையும், மூக்கின் மேலே உள்ள கரும் பகுதியில் வியர்வை முத்து முத்தாய்க் கோர்த்து நிற்பதும், 'தெனாசு' என்கிற மாட்டு ஈ தொல்லை கொடுக்க, மாடுகள் அவற்றை வாலால் விரட்டி அடிப்பதும், இன்னமும் கண்ணுக்குள்ளே நிற்கின்றன.

கிராமப்புறங்களில் நாலு கறவை மாடு வைத்திருந்தால், ஒரு குடும்பத்திற்கு வேறு வருமானமே தேவையில்லை.

பக்கத்து டவுன் காபிக் கடைகளுக்கு, கிராமப்புறத்திலிருந்துதான் 'கேன்' களில் பால் போகும்.

வருஷ ஈத்து வெள்ளைமாடு ஒன்றை, பன்னிரண்டு வருஷம் அம்மா வைத்திருந்தார். ஆறு மாதம் விடாமல் பால் கறக்கும். பிறகு சினை ஆகி ஒன்பது மாதத்தில் கன்று ஈனும். திரும்பவும் ஆறு மாதம் பால் கறக்கும்.

ஒரு பருவ மழை இரவு! இடைவிடாத மழையில் ஊருக்குள்ளே வெள்ளம்போல தண்ணீர் ஓடிக் கொண்டிருந்தது. யாரும் வெளியே தலை காட்ட முடியவில்லை. மழை நீரில் ஊறி, மாட்டுத் தொழுவத்தின் மேலுள்ள மூங்கில் கீற்றுப் பந்தல் கீழே சரிந்தது.

உள்ளே கட்டியிருந்த மாடு ஓயாமல் கத்திற்று. மழைவிட்ட பாடில்லை. லாந்தர் விளக்கைக் கொளுத்தி எடுத்துக்கொண்டு, சாக்குப் பையில் 'கொங்காடை' செய்து தலைமேல் போட்டுக்கொண்டு தொழுவத்துக்குள் அம்மா போனார். அரைத் தூக்கத்தில் நானும் அம்மா பின்னால் போனேன்.

கட்டுத் தரையில், அங்குமிங்குமாக நிலைகொள்ளாமல் நடந்த மாட்டின் பின்பகுதியில், ஏதோ ஒன்று வெளியே எட்டிப் பார்த்தது. மாட்டுக்கோ வலி தாள முடியவில்லை. கண்களில் நீர் வடிந்தது. திடும் என்று கீழே படுத்து, ஒரு முக்கு முக்கியது.

அடுத்த கணம், 'பொளேர்' என்று 'பாலிதீன்' போன்ற ஒரு பைக்குள்ளிருந்து ஒரு உருவம் தரையில் விழுந்தது. விழுந்த வேகத்தில் அந்தப் பை கிழிய உள்ளிருந்த நீர் வெளியேறியது.

கன்னங்கரேலென்று ஒரு கண்ணுக்குட்டி! கண்கள் விளக்கொளியில் பளபளத்தன...! கொழகொழவென்ற ஈரத்திலிருந்து விடுபட அது தலையை உதறியது. படிப்படியாக அசைந்து எழுந்து நிற்க முயன்று விழுந்தது. அதற்குள் மாடு, கன்றுக்குட்டியைத் தன் நாக்கால் நக்கிச் சுத்தப் படுத்தியது.

சில நொடிகளில், மஞ்சளும் பழுப்பும் கலந்த கால்குளம்பை, முதன்முதலாகத் தரையில் ஊன்றி, மெதுவாக எழுந்த கன்றுக்குட்டி, தள்ளாடித் தள்ளாடித் தாய்ப்பசுவிடம் சென்றது.

பிறந்த கன்றுக்கு என்ன தெரியும்? மாட்டின் முகத்திலிருந்து மோந்து பார்த்துக்கொண்டே தாடையருகே சென்று, முன்னங்கால்களைக் கடந்து, வயிற்றுப் பகுதி அடியில் தலை நீட்டி, மாட்டின் மடியருகில் சென்று, மடிக்காம்பை வாயில் பற்றிப் பால் சப்ப ஆரம்பித்தது.

மண்ணில் விழுந்த புத்தம் புதிய ஜீவன்! முதல் பிரசவம்... முதல் பரவசம்...! இயற்கையின் அதிசயம் பிரம்மிப்பூட்டியது.

சீம்பால்! நினைத்தாலே நாக்கில் நீர் ஊறுகிறது. மாடு கன்று போட்டதும் கறக்கும் பால், கெட்டியாக மஞ்சள் நிறத்தில் இருக்கும். கட்டியாக அதைக் காய்ச்சி, சர்க்கரை கலந்து சாப்பிட்டால் தேவாமிருதமாக இருக்கும்.

வளரும் கண்ணுக்குட்டி ரொம்பவும் குறும்பு செய்யும்! ஒரு இடத்தில் நிற்காது. குதித்துக்கொண்டே இருக்கும். தரையில் குனிந்து மண் தின்னும். அதனால் வயிற்றுப்போக்கு ஏற்படும்.

வாயில் மூடிபோன்ற வாக்கூடையை மாட்டி விட்டுவிடுவார்கள். கடிவாளம்போல, அதை மாட்டி விட்டவுடனே, கண்ணுக்குட்டிக்கு

கோபம் வந்துவிடும். அதைக் கழட்டச் சொல்லி, அப்படியும் இப்படியும் தலையை ஆட்டிக் குதிக்கும். வாக்கூடை வழியே, 'முகக் முகக்' கென்று சத்தம் செய்து போராடிப் பார்த்து அடங்கிவிடும்.

ஆண் கன்றாக இருந்தால், திமில் பெரிதாக வளர வேண்டும் என்பதற்காக ஒரு ரூபாய் நாணயம் திமில் மீது வைத்துப்பிடித்து விடுவார்கள்.

★ ★ ★

கிராமப் புறத்தில் கில்லி தாண்டு – 'சேபி' என்கிற கோலிக்குண்டு விளையாட்டு, தெள்ளு ஆடுதல் – சடுகுடு, பம்பரம் விடுதல்... இளைய தலைமுறையின் விளையாட்டுக்கள். கருவேலம் முட்டியில் ஆசாரியிடம் சொல்லி நாங்களே பம்பரம் செய்துகொள்வோம்.

அடுத்தவன் பம்பரத்தை, விளையாட்டில், நம் பம்பரத்தால் பிளப்பதுதான் ஹீரோயிஸம். சிறு பிராயந்தொட்டே எனக்கு இடது கைப்பழக்கம். 7 வயது முடியும்வரை ஒராட்டங்கை அல்லது சொண்ணாங்கை – என்று சொல்லப்படும், இடது கையில்தான் சாப்பிட்டு வந்தேன். ஊரிலிருந்து வந்த மாமா ஒருவருடன் அமர்ந்து, அவர் இலையில் ஒன்றாகச் சாப்பிட்டபோது, இடது கையை இலையில் வைக்க, அவர் மிரட்டிய மிரட்டில்தான் கைமாற்றி, வலது கையால் சாப்பிட ஆரம்பித்தேன்.

இடது கையால் பம்பரத்தில் கயிற்றைச் சுற்றி, ஆகாயத்தில் பம்பரத்தை வீசி, அப்படியே உள்ளங்கையில் ஆட விடுவேன். ஒரு நாள், மாமா பையன் லட்சுமணன், பல்லடத்திலிருந்து வந்திருந்தான். எங்கள் வீட்டுக் காம்பவுண்டை ஒட்டிய வெளித் திண்ணைகள், மூன்றடிக்கு மூன்றடி சதுரமாக இருக்கும்.

ஒரு திண்ணையில் நான் பம்பரம் விட, லட்சுமணன் அடுத்த திண்ணையில் பம்பரத்தை ஆட விட்டுக் கொண்டிருந்தான். என் அத்தையின் பேத்தி, ஐந்து வயது வாண்டு. ரெட்டைவால். யார் என்ன சொன்னாலும் கேட்காது. ''பம்பரம் கண்ணில் பட்டு விடும். வீட்டுக்குப் போ'' என்று சொல்லிப் பார்த்தேன். அதட்டிப் பார்த்தேன். அடித்தேன், கையைப் பிடித்துக் கடித்துவிட்டது. 'சனியன் நின்று விட்டுப் போகிறது' என்று நாங்கள் விளையாடிக் கொண்டிருந்தோம்.

எதிர்பாராமல், லட்சுமணன் விட்ட பம்பரம், சிமெண்ட் திண்ணையில் பட்டு எகிறியது! அந்த வாண்டுவின் கண்ணுக்குக் கீழ் காயம். ரத்தம் கொட்டியது. வாயைத் திறந்து அவள் போட்ட கூச்சலில் ஊரே கூடிவிட்டது.

அம்மா ஓடி வந்தாள். லட்சுமணன் பரிதாபமாக முழித்தான். ஒரு நொடியில் நடந்தவற்றை ஊகித்தவர், தரதரவென்று என் கையைப் பிடித்து, பொடக்காளிக்கு (புறக்கடை) இழுத்துப்போய், உரித்துப் போட்டிருந்த கற்றாழை நாரை எடுத்து என்னை நாலு வாங்கு வாங்கினார். அடித்த வேகத்தில், தொடையில் தோல் உரிந்து, உள்ளேயிருந்து, அடிப்பட்ட இடங்களில் ரத்தம் கசிந்தது. கற்றாழை நாரின் எரிச்சல், அடியினால் ஏற்பட்ட வலி இவற்றோடு - ''அம்மா! அம்மா! சொன்னாக் கேளும்மா...! எம் பம்பரம் குத்தலம்மா. லட்சுமணன் விட்ட பம்பரந்தான் அவனைக் காயப்படுத்திட்டுது. சொன்னாக் கேளும்மா...'' கதறினேன். அம்மா கேட்கவில்லை.

ஆக்ரோஷம் திரும்வரை அம்மா அடித்து ஓய்ந்தார். அவருக்கு மூச்சு இரைத்தது. என் ரத்தம் சூடேறிவிட்டது...!

'தவறு நான் செய்யவில்லை. அப்புறம் எனக்கு ஏன் தண்டனை? அதுவும் ஊரே கூடியிருக்க, இப்படிப் போட்டுச் சாத்தி விட்டாரே!' அவமானம் தாங்க முடியவில்லை. ரோஷம் பொத்துக்கொண்டு வந்தது. 'இனி உயிரோடு இருப்பதில் பயனில்லை' - தீர்மானித்தேன்.

தாவி ஏறி, தற்கொலை செய்துகொள்ள, பரணில் கயிற்றைத் தேடினேன். கதவின்மேல் நான் பாய்ந்து ஏறிய வேகத்தைப் பார்த்து 'ஏதோ செய்து கொள்ளப் போகிறான்' என்று ஊகித்த என் பெரியம்மாவும், அம்மாவும் ஓடி வந்து, ஆளுக்கு ஒரு காலாகப் பிடித்து, என்னைத் தங்கள் பலம் கொண்ட மட்டும் கீழே இழுத்தார்கள்..

''இனி நான் உயிரோடு இருக்க மாட்டேன். விடுங்கள்'' என்று கூச்சலிட்டேன்.

''கண்ணு சொன்னாக் கேளு! கீழே எறங்கு கண்ணு'' என்று பெரியம்மா, கெஞ்சினார். ஐந்து நிமிடப் போராட்டத்துக்குப்பின், எப்படியோ என்னை இழுத்துக் கீழே போட்டார்கள்...!

உலகமே ஸ்தம்பித்தது போன்ற பிரமை. என்ன நடந்தது? ஏன் இது நடந்தது? வியர்வை உடம்பை நனைத்து ஆறாக ஓடியது. இப்படி ஒரு பத்து நிமிடம் கடந்தது.

எல்லாம் இப்போது கட்டுக்குள் வந்துவிட்டது. பெரியம்மா மடியில் படுத்திருந்தேன். அவர் ஒரு அற்புதமான அன்னை...! அக்கா, தங்கைகளின் குழந்தைகள் அத்தனை பேரையும் தன் குழந்தைகளாகப் பாவித்து அரவணைத்துக் கொள்ளும் விசால மனம் படைத்தவர்.

நான் என்றால் அவருக்கு உயிர். அமாவாசை முடிந்து, மூன்றாம் பிறை வானத்தில் தென்பட்டால், அதைப் பார்த்ததும், தன் கண்களை

மூடிக்கொண்டு, ''சின்னப் பொன்னா! ஓடி வாடா... சீக்கிரம் வாடா'' என்று குரல் கொடுத்து, என்னைக் கூப்பிட்டு, தன் இரு கைகளால் என் முகத்தை இறுகப்பிடித்து, அருகே கொண்டுவந்து மெதுவாகக் கண்களைத் திறந்து என் முகத்தைப் பார்ப்பார்.

''மூணாம் பொறையைப் பாத்துட்டு, உன் முகத்தில் முழிச்சா, அந்த மாசம் பூரா சந்தோசமா இருக்கும் கண்ணு'' – என்பார்.

அப்படிப் பாசத்தைப் பொழியும் பெரியம்மா மடியில் படுத்திருந்தேன்.

அவரது விரல்கள் மெதுவாக என் தலையைக் கோதிவிட்டன...! மனம் லேசாகிக் காற்றிலே மிதப்பதுபோல இருந்தது...!

''ஏஞ்சாமி! நம்ம சொந்த பந்தத்தில் உன்னை மாதிரி பையனே இல்லேன்னு பெருமைப் பட்டிட்டிருந்தேனே! ஊருக்குப் புத்தி சொல்ற நீயே இப்படி ஒரு காரியம் பண்ண நினைக்கலாமா?''

அவர் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் என்னை அம்பாகக் குத்தித் துளைத்தது.

பலநாள் பிரமை பிடித்தவன் போல யாருடனும் பேசாமலிருந்தேன். நான் செய்த காரியம் என்னைக் கூனிக்குறுகச் செய்தது!

அதுதான் முதலும் கடைசியுமாக அம்மா என்னை அடித்தது.

★ ★ ★

பதினைந்து வயது முடிந்துவிட்டது. சூலூர் போர்டு உயர்நிலைப் பள்ளியில் எஸ்.எஸ்.எல்.சி. சர்டிபிகேட் வாங்கிய கையோடு சென்னைக்கு ஓவியக்கலை படிக்கச் செல்வது என்று முடிவான கட்டத்தில், சில மாதங்கள் ஊரிலிருந்தேன். அந்த இடைவெளியில் சில சினிமாக்கள் பார்த்தேன்.

சூலூர் ஷண்முக தேவி தியேட்டரில் வாரா வாரம், வெள்ளிக்கிழமை புதுப்படம் போடுவார்கள். ''மெட்ராசுக்குப் போறதுக்குள்ளயாவது நாலு நல்ல படம் பார்த்துக்கறேன்...! போயிட்டு வான்னு சொல்லும்மா!'' என்று கெஞ்சினேன். சாமி பூக்கொடுப்பதுபோல மௌனமாயிருந்தவர், ஒரு வழியாய்த் தலையை ஆட்டினார்.

அனுமதி கிடைத்ததும், 'ஒற்றையடிப் பாதையில் போனால், சீக்கிரம் போய்விடலாம்' என்று சிட்டாய்ப் பறந்தேன். கொட்டகை ஒரு பர்லாங் தூரத்தில் இருக்கும்போது ஸ்பீக்கர் பாட்டு நின்றுவிட்டது. பாட்டு நின்றால் அடுத்த வினாடி படம் போட்டுவிடுவார்கள்...!

மிச்சம் மீதியிருந்த சக்தியை எல்லாம் திரட்டி, தியேட்டரை நோக்கிப் பாய்ந்து சென்றேன். டிக்கெட் கவுண்டரில் கையை விட்டு டிக்கட் வாங்கிக்கொண்டு வெளியே இழுத்தால் கை வரவில்லை. அதற்குள், மூன்று நான்கு கைகள் டிக்கெட் கேட்டு உள்ளே நுழைந்துவிட்டன. கையை விரித்து இழுத்தால் வந்துவிடும். ஆனால் டிக்கெட் நழுவி விடும்...! ஒரு வழியாக அசைத்து இழுத்து, சிராய்ப்புகளுடன் தியேட்டரினுள் ஓடினேன்.

ஐந்நூறு பேர் அமரும் தரை டிக்கெட்டில், ஆயிரத்துக்கும் மேல் இருந்தார்கள். யோசிக்கும் வேளையில், அடுத்தவன் நுழைந்து விடுவான். இரண்டு தலைகளை நகர்த்தி, அவர்களின் நடுவே என்னைச்சொருகிக் கொண்டேன்.

தமிழ்நாட்டில் தயாராகும் குயில் பீடி, நரி பீடி, மல்லிச்சேரி பீடி, சொக்கலால் ராம்சேட் பீடி, மணி பீடி என்று அத்தனை வகை பீடி நாற்றமும் ஒன்றாய்க் கலந்து, நுரையீரலை நிரப்பியது. அதெல்லாம் பெரிதாகத் தோன்றவில்லை! படம் பார்க்கும் அந்த இரண்டரை மணி நேரமும் சொர்க்கத்துக்குள் நுழைந்த சந்தோஷம்...!

முந்தைய நாள் வியாழன் இரவு, 'முதல் தேதி'– பார்த்தாயிற்று! மறு நாள் வெள்ளிக்கிழமை, வேறு படம் – 'அலிபாபாவும் 40 திருடர்களும்'! நண்பன் கிருஷ்ணசாமி நச்சரித்தான்...! ''முத முதல்ல தமிழ்ல எடுத்த கலர்ப்படம். எம்.ஜி.ஆர். நடிச்சது. இப்பத்தான் நம்ம ஊருக்கு வருது'' என்றான். 'எப்படியும் இந்தப் படத்தைப் பார்த்தே ஆக வேண்டும்' என்ற அடக்கமுடியாத ஆவலுடன் அம்மாவைத் தேடினேன்.

மஞ்சள் வெய்யில் படர்ந்த மாலை நேரம். தோட்டத்தில் வேலை நடந்து கொண்டிருந்தது. பருத்தி விளைச்சல் முடிந்து 'பருத்தி மார்' பிடுங்கும் வேலை. பருத்திச் செடி காய்ந்து விட்டால் பருத்தி மார் என்று சொல்வார்கள்.

கூலிக்கு நாலு பெண்களை ஏற்பாடு செய்து, அவர்களோடு ஒருவராக, தன் சொந்த நிலத்தில் அம்மாவும் பருத்திமார் பிடுங்கிக் கொண்டிருந்தார். செம்மண் நிலத்தில் விளையும் கருங்கண்ணி பருத்திச் செடியை அவ்வளவு எளிதாகப் பிடுங்கிவிட முடியாது.

வெள்ளைப் புடவையின் முந்தானையைத் தலையில் முக்காடிட்டு, சாயிபாபா தலைக்கட்டுப்போல கட்டியிருந்தார். புடவையெல்லாம் செம்புழுதி! வியர்வையில் தெப்பலாக நனைந்து சோர்ந்திருந்தார்.

அருகே சென்று தயங்கித் தயங்கி ''அம்மா, சினிமாவுக்குப் போகட்டுமா. இன்னிக்குப் புதுப்படம்... கலர்ப்படம்! எம்.ஜி.ஆர். நடித்தது. கிட்டுச்சாமியும் துணைக்கு வர்றேங்கறான்...'' என்றேன்.



15 வயதில் நான் வரைந்த ஓவியம்

அம்மா பதில் ஏதும் சொல்லவில்லை. சற்று நேரம் மௌனமாக என்னை உற்றுப் பார்த்தார். பின்னர் உள்ளங்கையில் 'டேப்' போல சுற்றியிருந்த வெள்ளைத் துணியைப் பிரிக்க ஆரம்பித்தார். மூன்றாவது சுற்று பிரிக்கும்போது லேசாக ரத்தத் திட்டு, அதில் தெரிய ஆரம்பித்தது. முழுசாகப் பிரித்து எடுத்தபோது, உள்ளங் கையிலும், கை விரல்களின் இடுக்கிலும் நீர்க்கொப்புளங்கள்...! சில கொப்புளங்கள் உரிந்து நீர்

வெளியேறி, அந்தப் புண்ணின் அடிப்பாகத்திலிருந்து ரத்தம் எட்டிப் பார்த்தது...

''இப்படி உயிரை விட்டு வேலை செய்யறேன் நான்...! தினத்துக்கும் உனக்குச் சினிமா கேக்குது...! போ போ...! யார் சொல்லிக் கேக்கப் போறே போ...! 'முண்டச்சி பெத்தது மூணு காசுக்காகாம போச்சு'ன்னு ஊர் பேசட்டும் போ...''

அரை நிர்வாணமாக்கி, ஆயிரம் சவுக்கடிகள் கொடுத்ததுபோல உணர்ந்தேன். குனிந்த தலை நிமிராமல் வீடு வந்து தலையணைக்குள் முகம் புதைத்துத் துடித்தேன்...

★ ★ ★

சென்னை புறப்படும் நாள்! பொள்ளாச்சி மாமாவும் அவர் மகன் ரத்தினமும் என்னோடு புறப்படுகிறார்கள். அம்மாவிடம் சொல்லிக் கொள்ள அருகில் சென்றேன். வழக்கம்போல் முகம் கொடுத்துப் பேசாமல், அடுப்படியில் வேலை செய்துகொண்டே, ''ஏதோ உன் தலையில் அந்த ஆண்டவன் எழுதிட்டான், பரதேசம் போய் பொழைக்கணும்னு...! போ, சந்தோஷமா போ...! ஆனா, அங்க போயிட்டு, மெட்ராஸ் நல்லா இருக்குது. நீயும் வந்திரும்மான்னு கூப்பிடலாம்னு மட்டும் மனசில நெனைச்சிடாதே.

''நான் பொறந்து வளர்ந்தது இந்த மண்ணிலே. உசுரே போனாலும் இந்த ஊரை விட்டு நா எங்கயும் வரமாட்டேன். நீ மகராசனா போ...! எங்கயாவது போயி நல்லா பொழை!''

விவாதமெல்லாம் அம்மாவோடு செய்ய முடியாது. முடிவு எடுத்தால் எடுத்ததுதான். அம்மா, தன் கையால் தூக்கி வளர்த்த தன்னுடைய அக்காள் மகன், என் அண்ணன் பிளேக் நோயில் இறந்தபோது, துக்கம் விசாரிக்க வரவில்லை என்பதற்காக, அந்தக் குடும்பத்தோடு 25 வருஷம் உறவை முறித்துக் கொண்டவர்...! அப்படி ஒரு வைராக்கியம், பிடிவாதம்...!

பிறந்ததிலிருந்து 15 வருடம் அம்மாவோடு வாழ்ந்தேன். அவரை விட்டு முதன்முதலில் பிரிந்து தொலைதூரம் செல்கிறேன். எதிர்காலம் எப்படி இருக்கும் என்று தெரியாது. கண்களில் நீர் முட்டியது. தொண்டை அடைத்தது.

பேசத் தெரிந்த நாள் முதல், நினைவு தெரிந்த நாள் முதல், அம்மா தான் எனக்குச் 'சூப்பர் வுமன்'...! அப்பா இறக்கும் போது எனக்கு ஒரு வயதுகூட பூர்த்தியாகவில்லை. அப்பா, புகைப்படம் எடுக்க மறுத்து விட்டார். அதனால் அவர் எப்படி இருப்பார் – கருப்பா, சிவப்பா என்று

கூட எனக்குத் தெரியாது. அவ்வளவு ஏன்! அப்பா என்ற பெயரை நான் முழுசாக உச்சரித்துக்கூடப் பார்த்ததில்லை. எல்லாமே அம்மாதான்... அம்மாவால் முடியாதது எதுவுமில்லை.

★ ★ ★

48 நாள் விரதமிருந்து அம்மன் கோயிலில் தீ மிதிப்பார். அடங்காமல் திமிறி ஓடும், பலம் மிக்க காளைக் கன்றைக் கழுத்திலே கயிறு போட்டு, ஒரே இழுப்பாய் இழுத்துவந்து கட்டுத் தரையில் கட்டுவார்.

விடுகளுக்குள், பானை இடுக்குகளில், சுவரில் ஓட்டைபோட்டுக் குடியிருக்கும் எலிகளைச் சாப்பிட, கட்டுவிரியன் பாம்பு எப்படியோ நுழைந்திருக்கும். சிறிதும் பதற்றம் படாமல் உலக்கையை எடுத்து, பாம்பின் தலையை ஒரே அமுக்காக அமுக்கி நசுக்குவார். உயிரை விடும் பாம்பு, தன் வாலால் சுழட்டி சுழட்டி அடிக்கும்...! குச்சியில் துணி சுற்றி, அதன் மீது சீமை எண்ணெயை ஊற்றிக் கொளுத்தி – அந்தப் பாம்பை அந்த இடத்திலேயே எரித்து எடுத்து வெளியே வீசி எறிவார்.

கழுதைகள் செத்துப் போனால், அதன் துர்நாற்றம் தாங்க முடியாது. மலங்கழுகுகள் எப்படியோ மோப்பம் பிடித்து, குட்டி விமானம் இறங்குவதுபோல நீண்ட இறக்கைகளை விரித்து, தரையில் இறங்கி, செத்த கழுதையைத் தின்ன வரும்.

வலிமை மிக்க கால்கள், கோடாரியை விடக் கூர்மையான மூக்கு, மிரட்டும் கண்களுடன் வெடுக் வெடுக்கென்று சதையைப் பிய்த்துத் தின்னும்...! கொஞ்சம் ஏமாந்தால் குழந்தைகளையே தூக்கிச் சென்று விடும்.

அம்மா கொஞ்சமும் பயமில்லாமல், தடியை எடுத்துச் சென்று, அந்தக் கழுகுகளை அடித்து விரட்டுவார்.

புருஷனோடு கோபித்துக்கொண்டு, குழந்தையோடு கிணற்றில் குதித்துத் தற்கொலை செய்துகொண்ட பெண்ணின் பிணம், ரெண்டாம் நாள் உப்பி, தண்ணீருக்கு மேலே மிதக்கும்.

நைந்து போன அந்த உடம்பைக் கட்டிக் கொண்டே குழந்தையும் இறந்திருக்கும்.

துணிச்சலாக, ஒரு ஆளைக் கிணற்றுக்கு உள்ளே இறக்கி, தலைப் பக்கம், கால் பக்கம் கயிறு கட்டச் செய்து பிணத்தை மேலே எடுக்கச் செய்வார்.

ஊர்ப் பெரியவர்களோடு பேசி, போலீசுக்குச் செய்தி எட்டுவதற்குள், அந்தப் பிணத்தை எரிக்கச் செய்வார்...!

பாம்புக்கடி, தேள் கடிக்கு அம்மாவிடம் மருந்து உண்டு. மூட்டை தூக்கி, மூச்சுப் பிடித்துக்கொண்டு, நிமிர முடியாமல் கஷ்டப்படுபவருக்கு, பூண்டு, மிளகு, நாலு பச்சிலை இவற்றை வாயில் போட்டு மென்று, அந்த மனிதரின் ஒரு காதை விரல் வைத்து அடைக்கச் சொல்லி விட்டு, அம்மாவே, அவர் வாயைத் திறக்க முடியாதபடி துணி வைத்து அமுக்கிப் பிடித்துக்கொண்டு, மறு காதில் காற்றை உடம்புக்குள் ஊதுவாள்.

பூண்டு, மிளகு, பச்சிலைக் கலவையிலான காற்று மூன்று நாளில் மூச்சுப் பிடிப்பை நீக்கி விடும்.

கடைசியாக அம்மா முகத்தைப் பார்த்தபோது இத்தனை சம்பவங்களும் படமாய் ஓடிற்று...

ஊர் எல்லையிலிருக்கும் பரமசிவன் கோயில், தெருமுனையில் இருந்த முட்டுக்கல், பாதையோரம் முளைத்திருந்த தும்பைச் செடி, பிறந்த மேனியாய் மண்ணில் விளையாடிய பச்சைக் குழந்தைகள்... கண்ணில் பட்ட அனைத்திடமும் கண்ணில் நீர் கட்ட விடைபெற்றுக் கொண்டேன்.

★ ★ ★

சென்னையில் தங்கி நான் ஓவியக்கலை பயின்ற அந்த ஆறுவருட காலமும், விடிந்தால் காட்டில் வேலை! பொழுது விழுந்தால், இருப்பதைத் தின்று விட்டு இருட்டில் சுருண்டு விடுவார் அம்மா.

வானம் பார்த்த பூமியில் வருஷம் பூராவும் பாடுபட்டு, கிடைத்த வருமானத்தில் – கேழ்வரகு மூட்டை நாலு வாங்கித் தனக்குப் போட்டுக் கொண்டு – மிச்சப் பணத்தை அப்படியே பொள்ளாச்சி எடுத்துச் சென்று, நான் படிக்க மாமா கொடுக்கும் கடனை அவ்வப்போது அடைத்துக் கொண்டே வந்தார்.

ஓவியக்கல்லூரி இறுதி ஆண்டு படிக்கும்போதே திரைப்பட வாய்ப்பு வந்தது.

பொள்ளாச்சி மாமா மகன் ரத்தினம், சொந்தமாகப் படம் துவக்கி அதில் எனக்கு முக்கிய வேடம் தந்தார். அந்தப் படம் முடிவதற்குள் ஏ.வி.எம் நிறுவனத்தின் 'காக்கும் கரங்கள்' மூலம் நான் திரையுலகில் அறிமுகமானேன்.

1967 இல் 'கந்தன் கருணை' – பொங்கல் தினம் வெளி வந்தது.

கிராமத்துக்குச் சென்று அம்மா, பெரியம்மா, சின்னம்மாக்களை வாடகைக்கு ஒரு கார் பிடித்து, கோயமுத்தூர் ராயல் தியேட்டரில் படம் பார்க்கச் செய்தேன்... பொங்கல் விடுமுறை கழிந்து சென்னை புறப்படும் நாள்...

அம்மா என்னிடம் வந்தார்.

''ஏஞ்சாமி! என்னையும் மெட்ராசுக்குக் கூட்டிட்டு போறியா?''

அதிர்ச்சி! இன்ப அதிர்ச்சி...! அம்மாவா இப்படிக் கேட்கிறார்...? அவர் முகத்தையே உற்றுப் பார்த்தேன்.

''மண்ணோட மல்லாடி இந்த ஒன்பது வருஷத்தில் ஒஞ்சு போயிட்டேன்... இனி முடியாது...!

''எனக்காக நீ ஒண்ணும் சிரமப்படவேண்டாம்.

''பத்தடிக்குப் பத்தடி ரூம்லதானே நீ படுப்பே...! கட்டில் மேல நீ படுத்துக்க, நான் கட்டிலுக்கு அடியில் படுத்துக்கிறேன். தனியா எனக்குன்னு ரூமெல்லாம் வேண்டாம்.

''ஹோட்டல்ல சாப்பிட ஆகிற காசை எங்கிட்ட குடுத்திடு.

''அதில உனக்குச் சமைச்சுப் போட்டுட்டு, மிச்சமிருந்தா நான் சாப்பிட்டுக்கிறேன். இரண்டு வெள்ளைப் புடவை இருக்கு. இப்பத்திக்கு புதுசா வாங்க வேண்டியதில்லை.''

தன்னால் மகனுக்கு நகக்கண் அளவுகூட சிரமம் இருக்கக் கூடாது, தன்னைப் பாரமா அவன் நினைக்கக்கூடாது என்று பல நாள்கள் யோசித்து இந்த முடிவுக்கு வந்திருப்பார்.

''அம்மா...! அம்மா...! நீ எங்கூட இருக்கறதை விட சந்தோஷம் இந்த உலகத்தில் எதிலயுமே இல்ல! வா போகலாம்.'' சென்னைக்கு அழைத்து வந்தேன்.

அந்த நாள்களில் அதிகமாகப் புராணப் படங்களில், நடிக்க வாய்ப்பு வந்து கொண்டிருந்தது. 'கந்தன் கருணை' படத்தில் வள்ளி, தெய்வானை என இரண்டு பெண்டாட்டி! கிருஷ்ண லீலாவில் பாமா, ருக்மணி ரெண்டு சம்சாரம்! பிருந்தாவனக் காட்சி என்றால், கணக்கற்ற கோபிகாஸ்திரிகள்!

ஏ.வி.எம் ஸ்டுடியோவில் 'திருமலை தெய்வம்' ப்ரீவியூ! ஒரு பக்கம் நடிகை. லட்சுமியும் மறு பக்கம் ஸ்ரீ வித்யாவுமாக என்னருகே உட்கார்ந்திருந்தார்கள்! அம்மா, நேரே எனக்குப் பின் வரிசையில் அமர்ந்து படம் பார்த்தார்.

''சீக்கிரம் பையனுக்கு ஒரு கால் கட்டைப் போட்டுடம்மா...! பொட்டைப் புள்ளைகள் ரவுசு தாங்க முடியலே''... உடன் படம் பார்த்த ஒரு பெரியவர் சொன்னார்.

''மெட்ராசுக்கு அவன் புறப்படும்போதே சாமிக்கு நேந்து விட்டுட்டேன். எல்லாம் அந்த முருகன் பாத்துக்குவான்.''

இரண்டே வரியில் தெளிவான பதில்...!

அம்மாவைச் சீண்டுவதற்காக யாரோ ஒருவர் போனில் பேசியிருக்கிறார். ''ஷூட்டிங் முடிஞ்சவுடனே தம்பி யாரோ ஒரு பொண்ணை, கார்ல ஏத்திட்டுப்போச்சு...! வீடு வந்திடுச்சா... இன்னும் வரலியா...?''

''யார்டா நீயி...! எண்டா, நீ மட்டும்தான் ஆம்பிளையா... அவன் ஆம்பளை இல்லையா...? பொத்திக்கிட்டுப் போ...! அவனைப் பத்தி எனக்குத் தெரியும்...''

முகத்தில் அறைந்தாற்போல பதில். அவ்வளவு நம்பிக்கை மகன் மீது...!

படப்பிடிப்பு இல்லாத நேரங்களில், எதிர் வீட்டுப் பெண்ணோடு அவ்வப்போது போனில் பேசிக் கொண்டிருந்தேன். அம்மா தலை கண்ணில் தெரிந்தால் பேச்சை மாற்றிக் கொள்வேன். அம்மா உள்ளே போய்விட்டால் சகஜமாகப் பேசுவேன்.

குடும்ப நண்பர் டாக்டர். வீரண்ணன் ஒரு நாள் வீட்டுக்கு வந்தார். அவரும் கோயமுத்தூர்க்காரர். அவரிடம் பேச்சை ஆரம்பித்தார் அம்மா.

''ஏம்பா! வாசப்படிக்கு இந்தப் பக்கம் நான் வந்தா ஒரு பாஷை... ஆபிஸ் பக்கம் தலையைக் காட்டினா ஒரு பாஷைன்னு ஏதாவது இருக்கா?'' நண்பருக்குத் தலையும் புரியவில்லை, வாலும் புரியவில்லை. திருதிருவென்று முழித்திருக்கிறார்.

''அடேய் ! இந்த முட்டாப்பய, எதித்த வீட்டு அம்மணிகூட அப்பப்போ போன்ல பேசறான்...! ஆபிஸ்ல என் மூஞ்சியைப் பாத்தா – 'வாடா, போடா'ன்னு பேச்சை மாத்திப் பேசறான்...! ஊட்டுக்குள்ளே நான் வந்திட்டா, 'என்னடி இவளே, எப்படி இருக்கே'ன்னு – கொஞ்சறான்.

''படாத பாடுபட்டு மெட்ராசுக்கு வந்து, ஊர் ஊரா, கோயில் கோயிலா, வட நாடு கட்டி படம் வரஞ்சு, துன்பப்பட்டு, இப்படி நடிகனானதுக்கப்புறமும் நல்ல பையன்னு பேர் வாங்கியிருக்கிறான்!

''அட, திடீர்னு ஒரு நாளைக்கு, அந்த அம்மணி எவங்கூடயோ படுத்து, வயித்த பிதுக்கிக்கிட்டு இங்கே ஓடி வந்து, 'அத்தை! என்னைக் காப்பாத்துங்க'ன்னு காலப்பிடிச்சானா, யாரோட மானம் போகும்? நீயே யோசனை பண்ணிப்பாரு!

''டேய்! என்னை, ஒண்ணுந்தெரியாத கொசத்தின்னு இவன் நெனைச்சுக்கிட்டிருக்கான்...! நான் படிக்காதவதான். இல்லேங்கில. ஆனா, இவனைப் பெத்தவ இல்லையா...? அதனால, கொஞ்சூண்டு அறிவாவது எனக்கும் இருக்குமில்லையா...?

''நாமல்லாம் புத்தி சொல்ற வயசில்லை! அதெல்லாம் அவங்க தாண்டியாச்சு! மனசு கேக்கலே! அதான் உங்கிட்ட புலம்பிட்டிருக்கேன்!''

நண்பருக்கு வேர்த்து விட்டது. மௌனமாகக் கேட்டவர், ஒரு நாள் கடற்கரைக்கு அழைத்துப்போய் நடந்ததைச் சொன்னார்.

எல்லாவற்றையும் கூர்ந்து கவனித்துக்கொண்டு எதுவுமே தெரியாதவர்போல பாசாங்கு செய்துவிட்டு, இப்படித் திடீரென்று கிடுக்கிப்பிடி போட்ட அம்மாவின் சாமார்த்தியம் பார்த்து வாயடைத்துப் போய் விட்டேன்!

★ ★ ★

சினிமா நடிகனுக்குச் சமூகம் அவ்வளவு எளிதில் பெண் கொடுக்க முன்வரவில்லை. அவர்களைச் சொல்லியும் குற்றமில்லை. பல ஹீரோக்களுக்கு ரெண்டு மனைவிகள்! ''எல்லாருமே, சினிமாவுல நிறைய சம்பாதிச்சப்பறந்தான் இரண்டாவது பொண்டாட்டி கட்டிகிட்டிருக்காங்க...! உங்க ஆளு, இரண்டாவது பொண்டாட்டி கட்ட மாட்டான்னு எதை வச்சு சொல்றீங்க...'' என்ற பிரதான கேள்வியைக் கேட்டு விரட்டி அடித்தார்கள்.

கடைசியாக, பாவம்! இந்த லட்சுமி என் மனைவியாக வந்து மாட்டிக் கொண்டாள்.

'இந்த மனுஷன் என்னைப் புடிச்சுக் கல்யாணம் பண்ணினானா, பிடிக்காமல் கல்யாணம் பண்ணினானா' என்ற குழப்பத்திலேயே 14 வருடங்கள் ஓடி விட்டன.

இந்த லட்சணத்தில் மூன்று குழந்தைகள் வேறு பிறந்து விட்டன.

அம்மா படிக்காதவர்தான். ஆனாலும் மாமியார் மருமகள் பிரச்சினை வெளியே தெரியாதபடி, நேருக்கு நேர் மோதல் ஏதும் நிகழாதபடி நிலைமையைப் பக்குவமாகக் கையாளுவார்.

கல்யாணமான புதிதில் 10 ஆண்டுகள் 'பிசியோ பிசி'.... காலை 6 மணிக்கு எழுந்தால் போருக்குப் புறப்படுபவன்போல, படுசீரியஸாக அன்று எடுக்கப் போகும் காட்சிகள் – வசனங்களை அசைபோட்டுக் கொண்டே போவேன். 9 மணி முதல் 6 மணிவரை படப்பிடிப்பு – அங்கிருந்து நேரே நாடகக் கொட்டகை.

மாதம் முப்பது நாளும் நாடகம். சனி, ஞாயிறுகளில் 4 நாடகங்கள் கூட நடிக்க வேண்டிவரும். பத்துமணிக்கு நாடகம் முடிந்து, கிளிசரின் போட்டு, எரிச்சலடைந்து சிவந்துபோன கண்களோடு, சோர்ந்து வீடு வந்து விழுவேன்.

உள்ளே நுழைந்த அரை மணி நேரம் வீடே அப்படி நிசப்தமாக இருக்கும். சாப்பிட்டு, உடல் உஷ்ணம் அடங்கி, குழந்தைகளை அழைத்து மடியில் இருத்தி, கொஞ்சும்போது அம்மா லேசாக ஆரம்பிப்பார்.

''ஒஞ்சு போயி வந்திருக்கறவங்கிட்ட, ஒண்ணும் சொல்லக் கூடாதுன்னுதான் நெனைச்சேன்...! ஆனா, சொல்லாமயும் இருக்க முடியல...! இத பாரு சாமி! இப்ப நான் சொல்றதைக் கேட்டு, உன் பொண்டாட்டிகூட சண்டைக்குப் போகமாட்டேன்னு எங்கிட்ட சத்தியம் பண்ணு...''

அம்மாவை நிமிர்ந்து பார்த்தேன்.

''சத்தியம் பண்ணுய்யா... அப்புறம் சொல்றேன்'' – சத்தியம் செய்தேன்.

''அவனவன் கொழந்தை பாக்கியமில்லையேன்னு கோயில் கோயிலா சுத்தறான். பொண்டாட்டியும் புருஷனும், பார்க்காத டாக்டரெல்லாம் பாத்து, என்னென்னவோ டெஸ்ட் பண்ணிக்கிறான்.

''ராமேஸ்வரம் வரைக்கும் போயி, நாக படம் செஞ்சு வச்சு புள்ளை வரம் கேட்டு சாமி கும்பிட்டு வர்றான்!

''யார் செஞ்ச புண்ணியமோ, மூக்கும் முழியுமா, நமக்குக் கொழந்தைங்க பொறந்திருக்கு!

''தப்பு பண்ணினா, அடிக்க வேண்டியதுதான். பெத்தவளுக்கு இல்லாத உரிமையா...?

''புள்ளை ஏதோ பண்ணிடுச்சுன்னு, ஸ்பூனைத் தூக்கி மூஞ்சில வீசி அடிக்கறா! கண்ணுல கிண்ணுல பட்டு, பார்வை போயிட்டா அப்புறம் எங்கே போயி முட்டிக்கறது! யாரு கிட்டச் சொல்லி அழுகறது? இதெல்லாம் சும்மா மனசுல போட்டு வச்சுக்க...! அவகிட்டல்லாம் கேக்க வேணாம்.''

நான் வாயே திறக்கமாட்டேன்...! புருஷனைவிட, குழந்தைகள் மீது ஆயிரம் மடங்கு பாசம் வைத்திருப்பவள், குழந்தைகளுக்காக உயிரையே கொடுப்பவள் என் மனைவி என்பது எனக்கு நன்றாகத் தெரியுமே...!

எனக்குக் கல்யாணமாகி, கிட்டத்தட்ட 15 வருடங்கள் அம்மா எங்களோடுதானிருந்தார். மாமியாருக்கும் மருமகளுக்கும் சொல்லிக் கொள்கிறாற்போல பிரச்சினைகள் பெரிதாக எழுந்ததில்லை.

எப்போதாவது அம்மா மீது மனைவிக்குக் கோபம் வந்தால், ''இத பாரு புள்ளே! நீ ஆசைப்பட்டதை வாங்கிச் சாப்பிடலாம். கலர் கலரா புடவைகள் கட்டிக்கலாம். இருக்கற காசுக்குத் தகுந்தாப்பல கம்மலோ,



சூர்யா – கார்த்திக்

செயினோ புதுசா வாங்கிக்கலாம். பாவம்! அவங்க... முப்பத்திரண்டு வயசிலயே மூளியாயிட்டாங்க. சாப்பிட ஆசைப்பட்டப்போ வசதி இல்லை. வசதி இருக்கறப்போ அவங்களால சாப்பிட முடியலே...! பேசிட்டுப் போகட்டும் விடு'' என்று சமாதானம் சொல்வேன்.

மனைவி மீது அம்மாவுக்கு வருத்தம் ஏற்பட்டால், ''அட வுடும்மா! நீ பெத்துக்குடுக்காட்டி,. அவ எப்படி இந்த வீட்டு மருமகளா வந்திருப்பா...? நீ பட்ட கஷ்டமெல்லாம் அவளால நெனைச்சுப் பார்க்க முடியுமா...? சின்னஞ்சிறுசு! வாழ்க்கையைப் பத்தி அவளுக்கு என்ன தெரியும்...? போறா விடு!'' இப்படிப் பேசி அவரைச் சரிக்கட்டுவேன்.

நிலைமை எக்கச்சக்கமாகப் போய், இருவருமே முறுக்கிக் கொண்டிருந்தால், ''நாளைக்கு மௌனவிரதம் – உண்ணாவிரதம்! யாரும் கிட்ட வரக்கூடாது!'' என்று உத்தரவு போட்டுவிட்டு, காலை எழுந்ததும் ஒரு பாட்டில் தண்ணீரோடு அறைக்குள் நுழைந்து, தாழ் போட்டுக்கொண்டு, மாலை 6 மணிவரை ஏதாவது புத்தகம் படித்துக் கொண்டு மௌனவிரதம் இருப்பேன்.

ரெண்டு பேரும் அதிர்ந்துபோய், பாவம்! அவர்களும் எதுவும் சாப்பிடாமல் ''நான் ஒண்ணும் தப்பு பண்ணலையே! ஏம்மா! நீ ஏதாவது

அவங்கிட்ட சொன்னியா?'' என்று பேசி, சாயங்காலத்துக்குள் இருவரும் சமரசமாகிவிடுவார்கள்.

ஆறு மணிக்குக் குளித்துக் பூஜை முடித்து, கீழே இறங்கி வந்தால் டைனிங் டேபிளில் ராஜ உபச்சாரம்தான்...! மாறி மாறிப் பரிமாறுவார்கள். பட்டினி கிடக்கும் அவர்களையும் சாப்பிடச் சொல்வேன்.

அதன்பிறகு ஒரு வருஷத்துக்குப் பிரச்சினையே எழாது!

★ ★ ★

கல்யாணத்துக்கு முன்னால் நானும் அம்மாவைப் பாடாய் படுத்தியிருக்கிறேன். பையன் ஸ்டுடியோவுக்கு வெறும் வயிறாய்ப் போகக்கூடாதுன்னு அதிகாலை 4 மணிக்கெல்லாம் எழுந்து, சட்னி, சாம்பார் தயார் செய்து விடுவார். மாடியில் நானிருப்பேன்.

''ஏம்பா! ரெடியா! இட்லி ஊத்தி அடுப்பில வக்கலாமா?'' – என்று குரல் கொடுப்பார். ''ம் ம்..வை'' – என்பேன்.

அதன்பிறகு நிதானமாக ஷேவிங் முடித்து, குளித்து உடையணிந்து கீழே வருவேன்.

அம்மா பரிமாறுவார். இட்லி ஆறிப்போயிருக்கும். ''சாப்பிடறது ரெண்டு இட்லி. இப்படிக் காஞ்சு முள்ளா, மொளச்சுப்போயிருக்கு, மனுஷன் சாப்பிடுவானா?'' – பிளேட்டைத் தள்ளிவிட்டு எழுந்து – சம்பாதிக்கிறோம் என்ற திமிறில் – கம்பெனி காரில் புறப்பட்டுப் போய் விடுவேன்.

பாவம், அம்மா! 'இத்தனை பாடுபட்டு, விடியவிடிய கண்ணு முழிச்சு செஞ்சும், புள்ளை சாப்பிடாம போகுதே' என்று அந்தத் தாயுள்ளம் எப்படித் தவித்திருக்கும்!

மறு நாள், எச்சரிக்கையாக, எல்லாவற்றையும் சூடாகத் தர திட்டமிட்டிருப்பார். மாடியிலிருந்து கீழே இறங்கி வரும்போது, மற்ற நடிகர்களை ஏற்றி வந்திருக்கும் கம்பெனி கார் டிரைவர் 'ஹாரன்' கொடுப்பார்.

படபடப்புடன் தட்டின் முன்னால் உட்காருவேன். சுடச்சுட ஆவி பறக்க அம்மா தட்டில் இட்லி வைப்பார். இட்லி மீது கை வைத்தால் 'சுரீர்' என்று சுட்டுவிடும். ''வாசல்ல அவங்க காத்துக்கிட்டிருக்காங்க. இவ்வளவு சூடா இட்லி வச்சிருக்கியே! நான் சாப்பிடறதா வேண்டாமா? அது ஆறற வரைக்கும் காத்திருக்க முடியாது?'' வேகமாக எழுந்திருப்பேன்.

அம்மாவுக்கு ஒரு கோபம் வரும் பாருங்கள்...

''போடா ராஸ்கோல்...! ஒம்பது வருஷம் ஓட்டல்ல பொறுக்கித் தின்னவனுக்கு, பாவம்! பையன், வாய்க்கு ருசியா சாப்பிடட்டுமேன்னு கண்ணுல வெளக்கெண்ணெயை விட்டுட்டு செஞ்சு வச்சா, நங்கு பேசறியா நங்கு...? போடா! போயி தெருவுல விக்கறவங்கிட்ட வாங்கித் தின்னு போ...!''

எரிமலை வெடிக்கும். அப்புறம் என்ன... ''சரி சரி! கோவிச்சுக்காதே'' – என்று கட்டிப்பிடித்து, சமாதானம் செய்து ரெண்டு இட்லி அதிகமாகவே சாப்பிட்டுவிட்டுப் புறப்படுவேன்.

அம்மா சென்னை வந்த சமயம் சொந்த நாடகக் கம்பெனி வைத்திருந்தேன். இரவு நாடகம் முடிந்து, பஸ் கிடைக்காமல் சமயத்தில் பத்து, பன்னிரண்டு பேர் என் வீட்டில் இரவு படுத்துக் கொள்வார்கள்.

அவர்களுக்கெல்லாம் நூற்றுக்கணக்கில், அம்மாவே மாவு பிசைந்து சப்பாத்தி சுட்டு, குருமா செய்து, பேத்தியின் துணையோடு அவர்களுக்கு வயிறாறப் பரிமாறுவார்...

திருமணத்திற்குப்பிறகு சமையலுக்கு ஒரு ஆள் வைத்தேன். ஏதோ தன்னுடைய ராஜ பரிபாலனம் பறிபோய்விட்டதுபோல, அம்மாவுக்கு அப்படி ஒரு வருத்தம்!

''கண்ட கண்ட நாயிங்கல்லாம் ஊட்டுக்குள்ளே வந்து சமைக்கப் போகுது. நாம செஞ்சு போட்டு இவங்களுக்கு மேவாது...! என்னவோ செஞ்சிட்டுப் போங்க'' என்று கோபித்துக் கொண்டவர், அதன் பிறகு அடுப்படிப் பக்கம் போகவே இல்லை.

சமையற்காரன் அவருக்குப் பரிமாறக்கூடாது. யார் தனக்குப் பரிமாறுவதும் அவருக்குப் பிடிக்காது. தானே சமையல் அறைக்குச் சென்று தனக்குப் பிடித்ததை அவரே தட்டில் போட்டு, சொம்பு நிறைய தண்ணீர் எடுத்துக்கொண்டு, தன் அறைக்குள் சென்று லேசாக கதவைச் சாத்தி விட்டு நிதானமாகச் சாப்பிடுவார்.

என்றைக்குமே அவர் எங்களோடு அமர்ந்து சாப்பிட்டதில்லை. அவ்வளவு ஏன்? அவர் சாப்பிடுவதை, சிறுவயது முதல் நான் முழுசாகப் பார்த்ததே இல்லை.

பிறர் முன் சாப்பிடுவது அவருக்குப் பிடிக்காது...! பொழுது கிளம்பும் போது படுக்கையில் இருப்பதும் அவருக்குப் பிடிக்காது.

பஸ்கள் இல்லாத காலத்தில், உறவுக்காரர் வீட்டில் யாராவது இறந்துவிட்டால், அதிகாலை வெள்ளி நட்சத்திரம் உதிப்பதைப் பார்த்து, பொடி நடையாகக் கிளம்பி 20 கி.மீ. சென்று, துக்கம் விசாரித்துவிட்டு,

பொழுது சாய அந்த ஊரில் புறப்பட்டு இரவு 8 மணிக்கெல்லாம் நடந்தே வந்துவிடுவார்..

சூலூர் சந்தையிலிருந்து 50, 60 கிலோ அரிசியைத் தலையில் சுமந்து கொண்டு, சர்வ சாதாரணமாக 3 கி.மீ. தொலைவிலுள்ள எங்கள் ஊர் நடந்து வருவார்.

★ ★ ★

இப்போது எண்பது வயதைத் தாண்டியாயிற்று. உடல் நிலை முன்போல் ஆரோக்கியமாக இல்லை.

ஒரு நாள் என்னை அருகில் அழைத்து, கட்டிலில் உட்கார வைத்தார்.



பிருந்தா

''எஞ்சாமி! இப்படிப் பத்து நாள், இருபது நாள் ஊட்டி, கொடைக்கானல்னு சூட்டிங் போயிடறியே...! திடீர்னு என் உசுரு போயிட்டா என்ன பண்ணுவே'' என்று உருக்கமாகக் கேட்டார்.

''அப்படியெல்லாம் நீ சாகமாட்டே! பாதில ஷூட்டிங்க நிறுத்தி, புரொட்யூசர்களுக்கு நஷ்டம் வர்றமாதிரி, நீ சாகமாட்டே...! தைரியமா இரு'' என்றேன்.

1989 ஆம் வருடம் அக்டோபர் மாதம்! 'பகலில் பவுர்ணமி' படப்பிடிப்பு, கொச்சியில். குடும்பத்தோடு 20 நாள் புறப்படுமுன், அம்மாவைப் பிறந்த ஊருக்கு அனுப்பி வைத்தேன்.

90, 95 வயதைத் தாண்டிய மூதாட்டிகள், அம்மாவின் இளமைக்கால அக்காள்கள் – எல்லோரையும் அழைத்து வயிறாறச் சோறுபோட்டு, இரவு நேரங்களில் பழைய நினைவுகளில் மூழ்கித் திளைத்தார்.

சென்னை புறப்படுவதற்கு முந்தைய நாள், திடீரென்று அவர் உடல் நிலை மோசமடைந்தது. சிரசு கழுத்தில் நிற்கவில்லை. தலை சுற்றியது. எந்த விநாடியும் முடிவு ஏற்பட்டு விடலாம் என்ற நிலை.

பிடிவாதமாக 'சென்னைக்குப் போயே தீருவேன்' என்று சகோதரியிடம் வாதாடியிருக்கிறார். ''மெட்ராஸ்தான் என் ஊரு. என் மகன், பேரன், பேத்திகளைப் பாத்து நாளாயிடுச்சு. நான் போயே ஆகணும்'' என்று கார் ஏற்பாடு செய்து ரயில் நிலையம் வந்திருக்கிறார். பிளாட்பாரப் படிக்கட்டுகளில் ஏற முடியவில்லை. லிப்டில் மேலே போய் நீலகிரி எக்ஸ்பிரசில் பயணமாகியிருக்கிறார்.

ஈரோடு வரும்போதே லேசான மாரடைப்பு. உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு சென்னை வந்து எங்களையெல்லாம் பார்த்துவிட்டு, குழந்தைகளைக் கொஞ்சி பள்ளிக்கு அனுப்பி விட்டு படுக்கையில் சாய்ந்தார்.

உடம்பில் சர்க்கரை அளவைப் பரிசோதிக்க டாக்டர்கள் பெருமாள் நிர்மலா வந்தார்கள். அவர் கையால் காபி வாங்கிக் குடித்துவிட்டு லேசாகக் கண்ணை மூடினார்.

காலை 11.30 மணி இருக்கும்...!

''டேய் தம்பீ! யாரோ ஈட்டில குத்திட்டாங்கடா. வலி பொறுக்க முடியலேடா'' என்று நெஞ்சைப் பிடித்தவாறு ஓங்கிக் குரலெடுத்து கூச்சலிட்டார். அரை மயக்கத்திலிருந்தவரை அக்கா மகன் தங்கவேலு காரில் தூக்கிப் படுக்க வைத்து, டாக்டர் வீட்டுக்கு அழைத்துப் போனான். ஒரு கையில் ஸ்டீரிங் பிடித்துக்கொண்டு, மறு கையால் அம்மா கையைக் கெட்டியாகப் பிடித்திருந்தான்.

ஜெமினி மேம்பாலம் அருகே கார் சென்றபோது, அம்மாவின் கைப்பிடி தளர்ந்தது. வீட்டு வாசலில் காத்துக் கொண்டிருந்தார் டாக்டர்.

கார் கதவைத் திறந்து அம்மாவின் நாடி பிடித்துப் பார்த்தார். கண்ணைத் திறந்து பார்த்தார்.

''I am sorryங்க அம்மா போயிட்டாங்க'' - என்றார் டாக்டர் ராஜேந்திரன்.

இரும்புக் குண்டு ஒன்று, தொண்டைக்குள் அடைத்துக் கொண்டது போல மூச்சு எனக்கு அடைத்துக் கொண்டது. வண்டியை வீட்டுக்குத் திருப்பச் சொன்னேன்.

மனைவி வாசலில் நின்றிருந்தாள்! 'அம்மா போயிட்டாம்மா' வெடித்து அழுதேன்! ஒரு நிமிடத்தில் நிதானமாகி ''அழக்கூடாது, யாரும் அழக்கூடாது. நிறைஞ்ச வாழ்க்கை வாழ்ந்துட்டுப் போயிருக்காங்க அம்மா. யாரும் அழக்கூடாது'' என்று சமாதானப்படுத்தினேன்.

ஊரில் உயிர் போயிருந்தால் உறவு, நட்பு என்று ஒரு இருநூறு பேர் கூடியிருப்பார்கள்.

உயிரைப் பிடித்துக்கொண்டு, மராத்தான் வீராங்கனைபோல சென்னைக்கு வந்து சேர்ந்ததால், அன்றைய முதல்வர் கலைஞர், அவரது குடும்பத்தினர், அமைச்சர்கள், பாராளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்கள், அ.தி.மு.க முன்னாள் அமைச்சர்கள், கலையுலகில் நடிகர் திலகம், நம்பியார், கன்னட நடிகர் ராஜ்குமாரிலிருந்து அத்தனை நடிகர்களும் மரியாதை செலுத்த வந்திருந்தனர்.

இயக்குநர்கள், தயாரிப்பாளர்கள், ஊரிலிருந்து உறவினர்கள், சென்னையிலுள்ள நண்பர்கள் - என எல்லாப் பிரிவினரும் வந்து அந்த 'சூப்பர் வுமனுக்கு' மரியாதை செலுத்தினார்கள்.

ஓராண்டு ஓடியதே தெரியவில்லை. முதலாம் ஆண்டு நிறைவு நாள். கண்ணம்மா பேட்டையில் அவருக்கு, நண்பர் ஜெம் கிரானைட் வீரமணி, கருப்பு கிரானைட்டில் இலவசமாகச் சமாதி கட்டித் தந்தார்.

**அம்மா! உயிராய் - உடலாய் - உதிரமாய் -**
**என்னுள்ளே நீ இருக்க - பிரிவென்பதேது**

**- சிவகுமார்**

என்று அந்தக் கல்லில் செதுக்கினேன்.

ஆமாம்! அப்படித்தான் அவர் இன்னும் என்னுள்ளே வாழ்ந்து கொண்டிருக்கிறார்.

---

3



பரமசிவன் திருக்கோயில்

# எங்கள் கிராமம்

**கோ**யமுத்தூர் ஜில்லாவில், திருச்சி ரோட்டிலே சூலூர் இருக்கு. அதிலிருந்து தெக்கே மூன்று கிலோ மீட்டர் உள்ள போனால் காசிக்கவுண்டன் புதூர் வரும்.

காசிக்கவுண்டன் புதூர் 'கஞ்சிக்குச் செத்த ஊர்'ன்னு ஒரு சாபம் இருக்கும்பாங்க. அது தாங்க நம்ம ஊரு!

கிராமம்னா, பெரும்பாலும் சினிமாவில், பனை ஓலை வேய்ந்த அல்லது வைக்கோல் போட்ட குடிசையே இருக்கும். ஒரு ஆலமரம் இருக்கும். நரிக நிலம் கொஞ்சம் இருக்கும்.

அறுவடை வயல்களைக் காட்டுவாங்க. பெரிய பெரிய வரப்புகள் இருக்கும். செங்கல்லில் கட்டின அகண்ட பெரிய கிணறுகள் இருக்கும்.

ஆனா எங்க கிராமம் அப்படிப்பட்டதில்லை.

எங்க கிராமத்தில் இரண்டடி தோண்டினாலே உடனே பாறை வந்துடும். அஸ்திவாரம் அதுக்குக் கீழே எடுக்க முடியாது. ஊமைத்துரைக் கோட்டை மாதிரி இரண்டடி அஸ்திவாரம் எடுத்து, கல் கட்டடம் கட்டினா அவ்வளவு ஸ்ட்ராங்கா இருக்கும். வீடு அசையாம ஆடாம நிற்கும்.

சூலூரில ஒரு குளம் இருக்கு. அதை ஒட்டி ஒரு நாற்பது ஏக்கருக்கு 'ஒயாஸிஸ்' மாதிரி கரிசல் மண், தென்னந்தோப்பு, வயல்வெளி எல்லாம் இருக்கு.

அதை விட்டுட்டு, சுற்றுப்புறத்த டோட்டலாய் பார்த்தா, செம்மண் – காய்ஞ்சுபோன பூமிதான். அதுவும் வானம் பார்த்த பூமி. வாட்டர் சோர்ஸுக்கு வாய்ப்பே இல்லை.

நான் குழந்தையா இருந்தபோதே 'ஆடிப்பட்டம் தேடி விதை'ம்பாங்க, 'ஐப்பசி மாதம் அடைமழை வரும்'பாங்க! கனவுகளும் நம்பிக்கையுமா வாழ்க்கை ஓடும்.

எங்க ஊர்ல குறிப்பிட முக்கியமான ஒரு விசயம் இதுதான்! மேற்குத் தொடர்ச்சி மலையில பாலக்காட்டு கணவாய்ங்கிற ஒரு பகுதி இருக்கு.

அந்தக் கணவாயில இரண்டு மலைக்கு இடையில் ஓபன் ப்ளேஸ் இருப்பதால், அரபிக்கடல் காத்து நேரடியாக அந்த வழியாப் புகுந்து சற்றேறக் குறையப் பத்து கிலோ மீட்டர் அகலத்திற்கு, நாற்பது கிலோ மீட்டர் நீளத்திற்கு டோட்டலா மேகங்களைத் தங்க விடாம அடிச்சிட்டுப் போயிடும்.

எப்பப் பார்த்தாலும் சூறைக்காற்று மாதிரி காற்று ஆவேசங்காட்டும்.

தென்மேற்குப் பருவக் காற்றில் வேட்டி கட்டிக்கிட்டே யாரும் போகமுடியாது. பிச்சிக்கிட்டுப் போயிடும். அது மாதிரி சூறாவளிக் காற்று வீசும், புழுதி பறக்கும்.

கோயமுத்தூரிலிருந்து கிணத்துக்கடவு வரைக்கும் இருக்கும் இடைப்பட்ட பகுதி ஊர்களில் ஜனங்க ஜன்னலே வைக்கமாட்டாங்க.

எவ்வளவு தூரம் தாழ்வாரம் இறக்கி வச்சாலும், சின்ன சந்து எதிர்ப்பட்டாலும் காத்து புகுந்துடும். ஜன்னல் தனியே வைக்க வேண்டிய அவசியமே இல்லை. புழுக்கங்கிறதே எங்க கிராமத்துல கிடையாது.

நான் ரொம்ப சின்ன வயசா இருந்தபோது பூமி இவ்வளவு உஷ்ணமா இருந்ததில்லை.

வீடுகளைப் பொறுத்தவரைக்கும் ஓட்டு வீடுதான். மேங்களூர் டைல்ஸ் ஓடு. குடிசை வீடு என்பதே கிடையாது. '1899 – கள்ளிக் கோட்டை' ன்னெல்லாம் ஓடுகளில் போட்டிருக்கும்.

செங்கல்லும், கருங்கல்லும் இல்லாமல், செம்மண்ணைப் போட்டுத் தண்ணி விட்டு, கால்களில் மிதிச்சி, செங்கல்லுக்குப் பதில் அதை வைச்சு சுவர் எழுப்புவாங்க. கொஞ்சம் காஞ்சவுடன் அடுத்த லேயரைக் கட்ட ஆரம்பிப்பாங்க. ஆறடி, ஏழடி வரைக்கும் சுவர் எழுப்புவாங்க.

எங்க ஊர்ல ஒரு புராதனமான பிள்ளையார் கோயில் இருக்கு. அம்மன் கோயில் இருக்கு. சிவன் கோயிலும் இருக்கு.

சிவன் கோயில், எங்க வீட்டிலேர்ந்து மூணாவதா இருக்கும். இந்தச் சிவன் கோயிலில் லிங்கமோ, உருவமோ வச்சு வணங்காமல், வேல்களை வைத்துக் கும்பிடற பழக்கம்தான் இருக்கு.

எங்க ஊர் உருவானபோது கிராமத்தின் நுழைவாயில் கிழக்குப் பக்கமா இருந்திருக்கு. அதனால, கோயிலைத் தலைவர்சலா வச்சிருக்காங்க. அப்ப, அதிகமாப் போனா பத்து வீடுதான் இருந்திருக்கு.

அதுக்கப்புறம் கிராம விரிவாக்கம் மேற்கு நோக்கிப் போயிருக்கு. இப்போ சூலூரிலிருந்து ஊருக்கு வர்றபோது, ஊரின் பின்பக்கமா வர்ற மாதிரி ஊரின் என்ட்ரன்ஸ் அமைஞ்சிடுச்சி.

ஆக, எங்கக் கணக்குப்படி பார்த்தா, கோயில்தான் தலைவாசல்.

எங்க ஊர் சுற்றி பெரும் பகுதி, கம்மா நாயுடுகளோட சொந்த நிலம்தான்.

விவசாயிகள் அவங்ககிட்டேயிருந்து நிலத்த குத்தகைக்கு எடுத்துப் பார்த்துக்கிட்டாங்க.

அவங்க சொந்த நிலம் இருக்கிற ஊர்ங்கிறதால, மரியாதை காரணமாக, எங்க பக்கத்து ஊர் பெரியதனக்காரர், பிள்ளையார் கோயிலைப் புதுசாக் கட்டிக் கொடுத்தார்.

அதோடு அம்மன் கோயிலை ஊர் மக்களே புதுப்பிச்சிக்கிட்டாங்க. 'பக்கத்து ஊர்க்காரர் பார்த்து, உணர்ந்து, நம் ஊர்க்கோயிலைப்

புதுப்பிச்சிக் கொடுத்திருக்காரே, நாம நம்மப் பொறுப்பை மறக்கலாமா'ங்கற எண்ணத்தில, என் தலைமையில் சிவன் கோயிலைப் புதுப்பிச்சுக் கட்டினோம்.

நானும் சூர்யாவும் ஒரு பங்கு பணம் போட்டு, ஊர் மக்களும் சேர்ந்து பத்து லட்ச ரூபாயில் கோயிலைப் புதுப்பிச்சிருக்கோம்.

இந்தக் கோயிலுக்கும் எனக்கும் ஒரு சென்டிமென்டல் அட்டாச்மென்ட் உண்டு.

காசிக்கவுண்டன் புதூர் கேரளா பார்டரில் இருந்ததால் செண்டை, நஹறி, ஊது கொம்புன்னு வாத்தியங்களைக் கோயில்ல வச்சிருந்தாங்க. அதை வாசிக்க ஆள் கிடையாது. நாங்களே சுயமுயற்சியால வாசிப்போம். செண்டை அடிக்கிற வேலையை நான்தான் பண்ணுவேன்.

திங்கட்கிழமை, திங்கட்கிழமை சாமியாடுவாங்க. எனக்கு அதில் இன்ட்ரஸ்ட் கிடையாது. பூஜைக்குமுன் ஒரு மணி நேரம் செண்டை அடிக்கிறது என் வேலை. வெறும் மார்போட வியர்வை பொங்க அடிச்சி முடிச்சி நிமிர்வேன்.

தீப்பந்தம் பிடிச்சிருப்பாங்க. அதில் வியர்வையால் உடம்பு மின்னுவது தெரியும். பூஜை முடிஞ்சவுடனே வந்திடுவேன். இது மாதிரி ஒரு பத்து வருஷம் பண்ணியிருக்கேன்.

நான் மெட்ராஸ் போகணும்னு ஆசைப்பட்டபோது, பசங்க கெட்டுப் போவாங்கன்னு வீட்டுல பெரியவங்க தடை போட்டாங்க. இந்தக் கோயில்ல போயி 'சாமி உனக்கு எவ்வளவு வருஷம் செண்டை அடிச்சிருக்கேன்! ஆனா, இப்படி ஊருக்குப் போகவிடாம செய்றியே'ன்னு சொல்லி 'கெட்ட வார்த்தையிலயே' சாமிய திட்டினேன்.

செண்டை அடித்த எனக்குச் சண்டை பிடிக்க உரிமையில்லையா?

அப்புறம் மெட்ராஸ் வந்து, வளர்ந்து இவ்வளவு தூரம் வந்தாச்சி! நன்றி தெரிவிக்கணும்னு தோணிச்சி. அதான் கோயில் திருப்பணியில் 'உபயம்னு என் பேரைப் போடாதீங்க'ன்னு சொல்லி, கோயிலைப் புதுப்பிச்சேன்.

எங்கக் குடும்பப் பின்னணி என்னன்னா, அப்பா – ராக்கியக் கவுண்டர் சுய முயற்சியில் படிச்ச ஒரு ஆசிரியர்.

கிராமப்புறங்களில் விவசாயக் குடும்பக் குழந்தைகளுக்குக் கரண்ட் இல்லாத காலகட்டத்தில், அரிக்கன் லைட் வச்சி இலவசமாகப் பாடம் சொல்லிக் கொடுப்பார்.

அதுக்குப் பணம்னு அவங்க வற்புறுத்திக் கொடுத்த ஒரு ரூபா, எட்டணாவை மட்டும் ஏத்துப்பார். இல்லைன்னா தோட்டத்திலேர்ந்து காய்கறிகளைக் கொண்டு வந்து தருவாங்க.

'ஆங்கில போதகன்' என்ற புத்தகத்தை 1940 க்கு முன்னாடியே, தானே வாங்கிப் படிச்சி, அறிவை விருத்தி பண்ணியிருக்கிறார். அதோட அஸ்ட்ராலஜியில் அபாரமான ஒரு ஆற்றலோட இருந்திருக்கிறார். ஜாதகம் கணிச்சி அக்கியூரேட்டா சொல்லுவார்.

அவர் சொன்னா சொன்னபடி நடக்கும். அப்படி ஜாதகம் பார்த்து ஒரு ரூபா, இரண்டு ரூபா சம்பாதனையில் தன் கடைசி காலத்தில் செம்மண் பூமி, வானம் பார்த்த பூமியா, ஊரை ஒட்டி எட்டு ஏக்கரும், கிராமத்துக்குக் கொஞ்சம் உள்ளார தள்ளி ஏரோடிரோம் ஒண்ணு இருந்தது, அதை ஒட்டி ஆறு ஏக்கரா கரிசல் பூமியும் வாங்கினார்.

இதெல்லாம் அவரது 33 வயசுக்குள் நடந்து முடிஞ்ச விஷயங்கள். வீட்டிற்கு நான் ஐந்தாவது குழந்தை. நான் பிறக்கும்போது அப்பாவுக்கு 32 வயசு. 'இந்தப் பையன் ஒரு வயசு ஆகறதுக்குள்ள நான் இறந்துடுவேன்'னு கணிச்சிச் சொல்லியிருக்கிறார். 'வயசு முப்பத்து ரெண்டுதான் ஆகுது. கல்குண்டாட்டமா இருக்க! உனக்கு என்னப்பா'ன்னு உறவுக்காரங்க சொல்லியிருக்காங்க.

அதுக்கு அவர், 'என் கணக்கு தப்பாது'ன்னு சொல்லியிருக்கிறார். அதே மாதிரி என்னோட பத்தாவது மாசத்தில், கிருத்திகைக்குப் பழனி போய், திருப்புகழ் மொத்தத்தையும் சொல்லி முடிச்சபோது, அவருக்கு நாக்கு விழுந்து போச்சு. வீட்டிற்கு வந்து பத்து நாளில் இறந்துட்டார்.

அப்பாவோட பால்ய சினேகிதர் ஒருத்தர் ஊர்ல இருக்கார். அவரு மேலே எனக்கு ரொம்ப மரியாதை. ஏனென்றால் 'எங்கப்பா இருந்தா அவரு வயசுதானே இருக்கும்'னு! அவர்கிட்ட அப்பாவைப் பத்திப் பேசி, விஷயங்கள் தெரிஞ்சிப்பேன்...

கிராமம் என்பது தாயின் மடி மாதிரி.

அம்மா எலும்பும் தோலுமா இருக்கலாம். கை, கால்ல சுருக்கம் இருக்கலாம். குளிக்காம வேர்வை நாத்தம் வீசலாம். எவ்வளவு இருந் தாலும் தாயின் மடியில படுக்கிற சுகம், கருப்பைக்குள் படுக்கிற சுகம் மாதிரிதான்.

அதுக்கு அடுத்தது கிராமப்புறத்தில் தங்கற சுகம்தான்.

எங்க கிராமம் காஞ்சுபோன பூமிதான். மரம், மட்டை பெரிசா இருக்காது. தண்ணி வசதி இல்லாத இடம். வெறும் காத்துதான் அடிக்கும். அப்படியிருந்தாக்கூட மழைக்காலம்ங்கிறது ஒரு அற்புதமான காலம்.

எங்க ஊரின் வடக்குப் பகுதியில் மேடு தெரியும்! அதை 'அவினாசி மேடு'ன்னு சொல்லுவோம். அது கண்ணுக்கு எட்டும் தூரத்தில் சின்னச் சின்ன மரங்களாய் முடியும். அதன் படுதா பின்னணியில் நீலகிரி மலைத் தொடர் மங்கலாய்த் தெரியும்.

மழை ஆரம்பிச்சவுடன், மேகங்கள் நல்லா திரண்டு, மேல் விளிம்பில் வெளிர்நிறமும் மற்றெல்லாம் கருமேகமாய் வடிவெடுத்து, வானுக்கும் பூமிக்கும் இடையில், ஜாண், இடைவெளி கட்டித் தென்படும். மனசை விட்டு அகலாத கண்கொள்ளாக் காட்சி அது!

திரண்ட கருமேகத்தின் அடி வயிற்றில், அணையிலிருந்து தண்ணி எப்படிப் பொத்துக்கிட்டு வருமோ அதுமாதிரி ஒரு சாரல் 'ப்ஹௌ'ன்னு இறங்கும். அதுதான் மழை. அந்த மழை, அந்த ஊருக்கு மட்டும்தான் முதலில் பெய்யும்.

அப்ப, மத்தப் பகுதியில் வானம் வெண்மையாய் இருக்கும். நம் ஊரிலிருந்து ஆறேழு மைல் தூரத்தில் மழை பெய்யும். அங்கிருந்து ஈரம் கலந்த மழைத்துளியோட காற்றடிக்கும்போது அந்தக் காற்றை, இயற்கை அன்னையின் வெளிமூச்சை சுவாசிக்கும் சுகமிருக்கே, அந்த உணர்வினைச் சொல்ல நமக்கு மொழியேயில்லை.



என் தந்தையின் நெருங்கிய நண்பர் சின்னத்தம்பி கவுண்டர். இவர் சொல்லித்தான் என் தந்தையின் அருமை பெருமைகளை நான் அறிந்து கொண்டேன்...

மழை வர்றதுக்கு முன்னாடி, தட்டாம்பூச்சி சிறகடிக்க ஆரம்பிக்கும்.

காஞ்சுபோன பூமியில் 'டப் டப்'ன்னு மழைத்துளிகள் விழ ஆரம்பிச்சதும் நமக்குள் ஒரு வைப்ரேஷன் ஏற்படும்.

பத்து, இருபது நிமிஷத்தில் இப்படித் துளிகள் பெரிசு பெரிசா விழுந்து, வாசலில் காஞ்சுபோன பகுதி ஈரமாகி, பிறகு மழை தரையை நனைச்சு விட்டு, விடாத போர்வீரர்கள் மாதிரி அடுக்கடுக்கா வானத்திலிருந்து குதிச்சு, நனைஞ்ச பூமியில் நிறைஞ்சு, வாசலில் நாலு இஞ்ச் அளவுக்குத் தண்ணிய ரொப்பிடும்.

தண்ணி அப்படி நிறைஞ்சு ஓடும்போது அதன்மேலே மழைத்

துளி பாராசூட் மாதிரி பட்டுச் தெறி, தெறித்து இறங்கும் அழகுக்கு ஈடு எது? இணை எது?

இதில் 'ஆலங்கட்டி மழை'ன்னு ஒண்ணு இருக்கும். இதை 'கல்லுமாரி'ன்னு கிராமத்தில் சொல்வாங்க.



96 வயதுவரை வாழ்ந்த என் அத்தை

வெய்யில் காலங்களில், மாடுகள் சில சமயம் தண்ணி குடிக்க முடியாம ஒரு வியாதி வரும். மாட்டுக்கு 'செல' புடிச்சிருச்சுன்னு சொல்லுவாங்க.

கவனிச்சுப்பாத்தா, நாக்கோட அடிப்பக்கம் நீல நரம்பு திரண்டிருக்கும். அதைக் கிழிச்சுவிட்டு இந்த ஆலங்கட்டிகளை அங்க வைச்சாங்கன்னா உடனே குணமாயிடும். எந்த மாடும் எழுந்து தண்ணீர் குடிக்க ஆரம்பிச்சிடும்.

அதே மாதிரி மனுஷனுக்குத் தேள் கடிச்சா, அந்த இடத்திலே ஆலங்கட்டியை எடுத்து வைச்சா அது விஷத்தை முறிச்சிடும்.

மழை தணிஞ்சு, புதுத்தண்ணி ஊருக்குள்ள பாயும்போது, நான் ஓடிப்போய் வரப்பெல்லாம் கட்டித் தேக்கி வைப்பேன்.

நாங்க அதுல சின்னச் சின்ன பேப்பர் படகெல்லாம் விட்டு விளையாடுவோம்.

முதல் மழை ஓஞ்சு, கொஞ்ச நேரம் கழிச்சு மறுபடி பேய்மழை பெய்ய ஆரம்பிக்கும்.

கூரையில எல்லாம் பழைய காலத்து மேங்களூர் டைல்ஸ் ஓடுங்கிறதாலே, அதன் இடைவெளியில் மழைத்தண்ணி ஒழுக ஆரம்பிக்கும். 'எல்' ஷேப்பில் நீண்ட தகரத்தைத் தாழ்வாரத்தில் பொருத்தி, அந்தத் தண்ணியை அண்டாக்களில் பிடிச்சு வைப்போம்.

வீட்டிலே வகை வகையா... வட்டல், போசின்னு வெண்கலப் பாத்திரம் பல இருக்கும். அலுமினியம் எல்லாம் அப்ப அவ்வளவா வரலை. வீட்டுக்குள்ளே எங்கெங்கு ஒழுகுதோ அங்கெல்லாம் பாத்திரம் வச்சிருவோம். மழைத்துளி ஒவ்வொரு பாத்திரத்திலும் விழறப்ப ஒவ்வொரு விதமா சத்தம் கேட்கும்.

ஒண்ணு 'டிங்..டிங்'ன்னு, இன்னொன்று 'டும்க்,டும்க்'ன்னு சவுண்ட் கொடுக்கும். கேட்கவே ரொம்ப வேடிக்கையா இருக்கும்.

மாலையில் மழை பெய்து முடிச்ச பிறகு, ஒ போர் நடந்து முடிஞ்ச மாதிரி உலகமே அமைதியாகவும், கூலாகவும் இருக்கும். உலகம் தோன்றி முதன்முதலில் புதுசா பிறந்த புது மனிதன்போல உணர்வோம்.

திடீரென்று பார்த்தால் ஆயிரம் வெரைட்டியில தவளைகள் விதவிதமாக் கத்த ஆரம்பிக்கும்.

நான் அம்மாகிட்ட, 'எங்கேர்ந்து இதெல்லாம் வருது?'ன்னு கேட்பேன். 'ஆகாயத்திலேர்ந்து சாமி போட்டுச்சு'ன்னு பதில் சொல்வாங்க.

பயங்கரமா இடிஇடிக்கும்போது, வீட்டு மேல இடி விழுந்திரு முன்னு, 'அர்ச்சுனன் தேரோட்டிப் போறான். அதனால, 'புங்கப்பத்தி, புளியப்பத்தி, ஆத்தைப்பத்தி, அரசப்பத்தி, அர்ச்சுனா அர்ச்சுனா'ன்னு சொல்லு'ம் பாங்க. நானும் சொல்லியிருக்கேன்.

ஆனா அதோட பொருள் என்னான்னு யோசிச்சுப் பார்த்தா, 'இடியே! புங்கமரத்திலே போய்விழு! புளிய மரத்திலே போய் விழு! ஆற்றிலே போய் விழு! அரசமரத்தில் போய் விழு! என் வீட்டு மேலே விழாதே'ங்கறதுதான்.

நைட் பூரா தவளைச் சத்தம் அப்படி வித்தியாசமா இருக்கும். காலையில் பார்த்தா, ஏதோ மேஜிக் பண்ண மாதிரி, அப்படியே காஞ்சு போயி, வெளிறிப்போன புல்லெல்லாம், மழைத்துளி பட்டதும் பசுமை தட்ட ஆரம்பிச்சிடும்.

அப்ப பொன்வண்டு பறக்கும். மரவட்டை போகும். 'மொட்டைப் பாப்பாத்தி'ன்னு ஒரு பூச்சி இருக்கும், வெல்வெட் கலர்ல! அதைக் கைமேலே தூக்கி வைச்சா, வெயிட்டும் தெரியாது. அது ஊர்றதும் தெரியாது. அவ்வளவு சாஃப்டா இருக்கும்.

பொன்வண்டைத் தீப்பெட்டிக்குள்ள போட்டு வைச்சி நாங்க விளையாடுவோம்.

உழுது பயிரிட்டிருக்கும் போதோ, ஏத்தம் பூட்டித் தண்ணி இறைக்கும் போதோ, காலையில் ஏழரை மணிக்கு வீட்டிலேர்ந்து சாதம் கொண்டு வருவாங்க.

பழைய, முந்தின நாள் சோளச்சோறு இருக்கும். அதில் கட்டித் தயிர் போட்டுப் பிசைஞ்சு... ஆஹா! அவ்வளவு ருசியா இருக்கும்; அந்த ஏழு - ஏழரை மணியை 'பழைய சோத்து நேரம்'பாங்க.

இயற்கையோட இணைஞ்சுதான் தினங்கள். நட்சத்திரத்தைப் பார்த்துத்தான் காலத்தைக் கணிப்பாங்க. ஒரு ஊரிலிருந்து இன்னோர் ஊருக்கு நடந்துதான் போவோம். பஸ்ஸெல்லாம் கிடையாது.

நாங்க படிச்ச காலத்தில் செருப்புப் போடற கலாச்சாரம் கிடையாது.

நான்தான் எங்க கிராமத்திலே முதன்முதலா அதிகாரபூர்வமா அரசுப் பள்ளியில் எஸ்.எஸ்.எல்.சி படிச்சு சர்டிபிகேட் வாங்கின ஆளு. படிக்கும் போது மூணு கிலோ மீட்டர் வெறும் காலில் நடந்து போய்தான் படிச்சேன்.

எஸ்.எஸ்.எல்.சி. படித்தபோது பெரிய தகராறு பண்ணி அடம் பிடிச்சு, ஒரு சைக்கிள் வாங்கினேன். பெயிண்ட் போன, துருப்பிடிச்ச அந்தச் சைக்கிளை 95 ரூபாய்க்கு அம்மா வாங்கிக் கொடுத்தாங்க.

அப்புறம், சாணிதான் எங்க கிராமத்து ஆண்டிபயாடிக்! ஃப்ரெஷ்ஷா போட்ட மாட்டுச் சாணியில் கறுகறுன்னு புகைவரும். அதை அப்படியே துணியால் எடுத்துப் பிழிஞ்சி அந்த ஜூஸை அடிபட்ட காயத்துமேல பத்து மாதிரி போடுவாங்க.

விசேஷத்திற்கு விடெல்லாம் சாணம் போட்டு வழிப்பாங்க. ஈ, கொசுவெல்லாம் உட்காராது. எனக்குத் தெரிந்து சின்ன வயசில நான் டாக்டர்கிட்டயே போனதில்லை.

லீவு நாள்களில் மாடுகளை எங்க ஊரில் உள்ள ஏரோடிரோமில் மேய்ப்போம். அங்க ஏகமா அறுகம்புல் இருக்கும்.

பிளேன் நிறுத்தறதுக்கு 'ப' வடிவில் பக்கத்திலிருந்து மண்ணெடுத்து, பத்தடி உயரத்துக்கு பெரிய பெரிய ஏரியை உண்டுபண்ணியிருப்பார்கள்.



90 வயதைக் கடந்த ஒரு பாட்டி

அதில் குள்ளநரி, வங்க நரியெல்லாம் ஒட்டை போட்டுக் குடியிருக்கும். ஒரு பொந்து தெரிஞ்சா, நரி இருக்குன்னு கண்டுபிடிச்சிடுவோம். உள்ள போற ஒரு வழி இருந்தா, அது வெளியில் போறதுக்கு இன்னொரு வழி இருக்கும். அதனால் ஒரு வழியில் காய்ஞ்ச வரட்டியை, வைக்கோலைப் போட்டுப் புகைபோட ஆரம்பிப்போம்.

வேட்டை ஆடற பசங்க இருப்பாங்க. அவங்ககிட்ட நரி பிடிக்கிற வலை இருக்கும். அதை வாங்கி வெளியில் வர்ற வழியில் விரிச்சு வைப்போம். புகை ஊத, ஊத மூச்சு முட்டி நரி வெளியே ஓடி வரும். கப்புன்னு புடிச்சிருவோம். அதைப் பசங்க எடுத்துப் போயி விற்பாங்க. நரி ரத்தம் ஆஸ்துமாவிற்கு ரொம்ப நல்லதுன்னு பச்சை ரத்தத்தைக் குடிக்கச் சொல்லுவாங்க!

நரி காலையில் வெய்யில் ஏர்றவரை சோளக்காட்டுல படுத்துத் தூங்கிக்கிட்டு இருக்கும்.

நாம திடீரென்று பக்கத்தில் போயிட்டோம்னா பிச்சிக்கிட்டு ஓட ஆரம்பிக்கும். நம்ம நாய் அதைத் துரத்த ஆரம்பிக்கும். ஓடி ஓடி ஒரு லிமிட்டுக்கு மேலே ஓட முடியலன்னா, அது 'கேஸ்'ஸை ('கார்பன்டை ஆக்ஸைடை') தன் உடலிலிருந்து வெளியேற்றிவிடும். அந்த ஹாரிபிளான ஸ்மெல்லை தாங்க முடியாத நம்ப வேட்டை நாய்ங்க திரும்பி, பின்னங்கால் பிடரியில் பட ஓடியே வந்திடும்.

பெண்களைப் பொறுத்தவரை, அழகா ட்ரெஸ் பண்ண வாய்ப்பே இருக்காது. வேலைக்குக் காடு கரைக்குப் போயிடுவாங்க.

அந்தப் பெண்ணுங்க சுமாரா உடை உடுத்தறதே, ஆடி நோம்புக்கும் பொங்கல், தீபாவளிக்கும்தான். சீட்டித்துணியில் பிரிண்டட் மெட்டீரியல் போடுவாங்க.'பூப்பறிக்கறதுன்னு' ஒரு நோம்பு கொண்டாடுவாங்க.

எங்க நாலு ஊருக்கும் பொதுவா ஒரு ராயர் கோயில்ன்னு இருக்கு. அங்க போய் சாமி கும்பிடுவாங்க.

கேளிக்கைக்கு ராட்டினம், குதிரை தூளி, கேம்ஸ் எல்லாம் இருக்கும். கொண்டுபோன பொரிகடலை, ஸ்வீட் எல்லாம் சாப்பிட்டுவிட்டு விளையாடிட்டு வருவோம்.

'பூப்பறிக்கறதுன்னு' அதுக்கு ஏன் பேரு வச்சாங்கன்னா? ஒரு பொண்ணைப் பார்த்து, கல்யாணத்துக்கு செலக்ட் பண்றதுக்கான வாய்ப்பு அந்த இடத்தில் கிடைக்கிறதாலதாங்கறது என் அனுமானம்.

ஏன்னா, அப்ப 'உங்க வீட்டிலே பொண்ணு இருக்குங்களா? பார்க்க முடியுங்களா?'ன்னு பிச்சு எடுத்துடுவாங்க. சம்பிரதாயமா பொண்ணு பார்க்கறது எங்க ஊர்ல கிடையாது.

பசங்க, 'அதுதான் நம்மாளுன்'னு ஜாடைமாடையா பேசிக்குவாங்க. அதையும் 15, 20 அடி தூரத்தில இருந்துதான் பார்க்கணும். இமைக்கற துக்குள்ள அவங்க ஓடிடுவாங்க. மூஞ்சியைச் சுத்தமா, கலர் புல்லா பார்க்கறதே அந்த விசேஷ நாளில்தான்.

மாட்டுப் பொங்கலன்னிக்கு நடக்கிற இந்த விழாவில்தான் பொண்ணுங்களும் ஜாடை மாடையா, 'அந்த வீட்டுப் பையனா'ன்னு பார்த்து வைச்சிருப்பாங்க. பார்த்து வைச்சிருக்கலாமே தவிர வீட்டிலே போயி 'அந்தப் பையனைப் பிடிச்சிருக்கு'ன்னு அப்பா, அம்மாகிட்ட சொல்ல முடியாது.

இப்ப 'பிரெஸன்ட் வில்லேஜ்'ல பார்த்தீங்களா ஹிடாச்சி டி.வி., சோனி டி.வி. எல்லாம் வந்திருச்சு. சோம்பலும், நகரமும் கலக்க ஆரம்பிச்சுடிச்சி.

கிராமத்திலேர்ந்து வந்தபோது, எனக்கு என்ன பலம்ன்னு பார்த்தா பலமே கிடையாது. செல்வமோ, பேமிலி பேக் கிரவுண்டோ, நா பெரிய படிப்பாளியோ கிடையாது. 'என்கிட்ட பலகீனமே கிடையாது'ங்கற ஒரே தகுதி மட்டும்தான் எனக்குப் பலமா இருந்திச்சி.

நா 1958 இல் அந்தப் புழுதி படிந்த கிராமத்திலிருந்து வரும்போது 'டீ, காபி, மது, மங்கை, சூதாட்டம் – இவைகளைத் தொடமாட்டேன்'னு உறுதியா முடிவெடுத்து வந்தேன்.

எதுவும் மலிவாய், சுலபமாய்க் கிடைக்கிற இந்தத் துறையில் இது வரை ஒழுங்கா வாழ்க்கையை வாழ்வது தான் நான் செய்த சாதனைன்னு சொல்றதை மனதிற்கு இதமான விஷயம்னு நினைக் கிறேன்.

ஏனென்றால், சாதனை என்பது, எப்போதுமே முறியடிக்கக் கூடியது.

என்னுடைய கிராமிய வாழ்க்கை பதினைந்து வயசோடு முடிஞ்சிப் போயிடுச்சி.

கிராமத்தில் வாழக் குடுத்து வைச்சிருக் கணும். சென்னை வந்து 46 வருஷம் ஆனா லும் திரும்ப யோசிக்கும்போது கிராமத் தின் நினைவுகள் எனக்கு அற்புதப் பசுமையாகவே இருக்கு!



கூலிக்கு விறகு வெட்டி, சம்பாதித்த பணத்தில், 40 ஆண்டுகளாக நான் நடித்த அத்தனை படங்களையும் பார்த்த பள்ளித்தோழன் ராமன்...

சிவகுமார் ❑

4



# முதல் மரணம்

"அம்மா, அம்மா! சாமி ஊட்டு மொகட்டு வளையிலேருந்து இத்தாப் பெரிய எலி செத்து கீழே உழுந்திருக்கு. ஓடியாம்மா... வந்து பாரு...'' நாலு வயது சிறுவனான நான் கூச்சலிடுகிறேன்.

அம்மா வந்தாள்.. செத்து விழுந்தது பெருச்சாளி என்பதைத் தெரிந்து கொண்டாள். மூக்கைப் பிடித்துக்கொண்டு, ஒரு முறத்தில் பெருச்சாளியை

அள்ளி எடுத்து, பொடக்காளிக்குக் கொண்டுபோய், சீமை எண்ணெயை அது மேல ஊத்தி எரித்தாள்.

அடுத்த அரைமணி நேரத்தில், எங்கள் வீட்டைக் காலி பண்ணி, தென்புறத்து வீட்டில் குடியேறினோம். பெருச்சாளி செத்த வீட்டில் குடி இருக்கக் கூடாதாம். பிளேக் நோய் நம்மையும் தாக்கிவிடுமாம்!

என் அண்ணன்! பதினாறு வயது இளைஞன்! பொள்ளாச்சியில் மாமா வீட்டில் தங்கிப் படித்தவன். லீவில் கிராமத்துக்கு வந்திருந்தான்.

செக்கச் செவேல் என்று இருப்பான். தலையில் அடங்காத சுருட்டை முடி. அம்மாவைப்போல சற்றே தூக்கினாற்போல மூக்கு. நீளமான கழுத்து. சரிந்த தோள்கள். சாட்டை வார் மாதிரி நீண்ட கை, கால்கள்...!

வெள்ளை வெளேர் என்று அரை டிராயர், முண்டா பனியன் போட்டுக்கொண்டு, என்னை அவன் இடுப்பிலே கட்டிக்கொண்டு 6 அடி விட்டமுள்ள சேந்து கிணற்றைத் தாண்டினான்.

பஞ்ச காலத்தில், பிரியமாக அம்மா செய்துகொடுத்த அரிசிச் சாதத்தில் பாதியைச் சாப்பிட்டுவிட்டு மீதியைக் கீழே கொட்டினான். 'அரிசிச் சாதத்தைக் கீழே கொட்டறது பாவம்பா' என்றார் தட்டான் வாத்தியார்.

மங்கலாக என் அடி மனதில் இந்தக் காட்சிகள் பதிவாகியுள்ளன. காலை வெய்யில் சுளீர் என்று அடிக்கிறது. அம்மச்சி பழைய சோறு தயிர் விட்டுக் கரைத்துக் கொண்டிருக்கிறாள். அண்ணன் ஒரு டம்ளர் வாங்கிக் குடிக்கிறான்.

வீதியில், சந்தைக்கு வண்டியில் மூட்டைகளை ஏற்றிக் கொண்டிருக் கிறார்கள். இவனும் ஒரு கை கொடுத்து நாலு மூட்டையைத் தூக்கி விடுகிறான்.

அத்தை வீட்டுக்குப் போகிறான். ராகிக் களி கிளறிக் கொத்தமல்லி சுண்டாங்கி அரைத்துக் கொண்டிருக்கிறாள் அத்தை. அவரிடம் ஒரு சின்ன உருண்டை களி வாங்கி, சுண்டாங்கியில் துவட்டி ஒரே முழுங்காக முழுங்கி, ரெண்டு கண்ணையும் விரித்துத் தலையை ஆட்டி அதன் ருசியைப் புலப்படுத்துகிறான்...!

அப்படி இப்படி ஊரைச் சுற்றியதில் உச்சிப் பொழுதாகிவிட்டது. வீட்டுக்கு வரும்போது உடம்பு லேசாகச் சுடுகிறது.

''வெயில்ல அலைஞ்சுட்டு வந்தீல்ல. அதான் லேசா ஒடம்பு சுடுது. சித்த நேரம் படுத்தா செரியாப்போயிடும்'' – என்கிறாள் அம்மா...!

ஒரு மணி நேரம் பாயில் படுக்கிறான். அம்மா வந்து மீண்டும் உடம்பைத் தொட்டுப் பார்க்கிறாள். அனல் சூடு பறக்கிறது.

ரெண்டு தொடை இடுக்கிலும், நெறி கட்டினாற்போல – எலுமிச்சம் பழம் அளவில் வீக்கம்.

தொடை வாழை – என்கிற வியாதி... பிளேக்கின் அறிகுறி!

வேப்பிலைக் கொழுந்தை அரைத்துத் தொடை இடுக்கில் பத்துப் போடுகிறாள் அம்மா.

அண்ணன் ஜுரம் தாங்காமல் முனகுகிறான். மேற்கொண்டு அதற்கு என்ன வைத்தியம் செய்வது என்று யாருக்கும் புரியவில்லை.

பொழுது மறையப் போகிறது! நூற்றுக் கணக்கில் சிட்டுக்குருவிகள் 'க்ரீச்... க்ரீச்' என்று கத்திக்கொண்டு கொல்லைப்புறத்து மரங்களிலுள்ள கூடுகளில் அடைகின்றன.

வெளிச்சம் மங்க மங்க, தட்டுப் போர் மீதும், வீட்டுக் கூரைகள் மீதும் பறந்து, முரண்டு பிடித்த சேவலும், கோழிகளும் இப்போது கீழே குதித்து, பார்வை மங்கியதால் நிதானமாக எட்டு வைத்து, கோழிக் கூண்டுக்குள் போய் அடைகின்றன.

பாம்பு, பல்லி கோழிக் கூண்டுக்குள் போக முடியாதபடி அதன் வாயிலை, பலகைக்கல் போட்டு இறுக்கி மூடுகிறாள் அம்மா.

வெள்ளாட்டுக் குட்டிகள் கத்தும் ஓசை கேட்கிறது. குட்டியின் சத்தம் கேட்டு ஆடுகளும் கத்துகின்றன..

இப்போது, சுத்தமாக இருட்டிவிட்டது. மின்சார வசதியில்லாத கிராமத்தில், பொழுது விழுந்தால், இருப்பதைச் சாப்பிட்டு, அப்படியே பாயில் சாய்ந்து விடுவார்கள் மக்கள்...! எட்டு மணிக்கெல்லாம் வீட்டுக்கு வீடு குறட்டைச் சத்தம் கேட்க ஆரம்பித்து விடும்.

நடுச்சாமம் இருக்கும். ஊரே உறங்கிக் கொண்டிருக்கிறது. தெருக் கோடியில் ஒரு நாய் பரிதாபமாய் ஊளையிடுகிறது. திடும் என்று வீட்டுக்குள்ளிருந்து அம்மாவின் அலறல்!

''அய்யோ ராசா! போயிட்டியா?''

தாழ்வாரத் திண்ணையில் போர்வைக்குள் சுருண்டு கிடந்த நான், கண் விழித்துப் பார்க்கிறேன்.

தேய்பிறை நிலா பழுப்பு நிறத்தில் அப்போதுதான் உதித்து, எதிர்வீட்டு எலந்தை மரச் சிமிர்களுக்கிடையில் எட்டிப் பார்க்கிறது.

காக்கைகள் இரண்டு, கர்... கர்... என்று லேசாகக் குரல் கொடுத்து, சற்றே இடம் மாறிக் கூட்டுக்குள் அமர்வது - நிலாவுக்கு முன்னால் நிழலாகத் தெரிகிறது...!

அம்மாவின் அலறல் கேட்டு, கைகால்கள் சிலிர்த்திட மெல்லத் தவழ்ந்து திண்ணையிலிருந்து வீட்டு நிலைப்படியைத் தாண்டி உள்ளே எட்டிப் பார்க்கிறேன்.

வீட்டின் நடுவே சின்ன அகல் விளக்கு எரிந்து கொண்டிருக்கிறது.

இரு கைகளையும் கூப்பியவாறு அண்ணன் நீண்டு குப்புறப் படுத்திருக்கிறான்.

வேப்பிலைக் கொழுந்தை அரைத்து பத்துப்போடப் பயன்படுத்திய சிறிய குழவிக் கல்லை எடுத்து, அம்மா மண்டையில் அடித்துக் கொள்கிறாள்.

தரையில் உள்ள அகல் விளக்கொளியில், அம்மா நெத்தியிலிருந்து ரத்தம் பீறிடுவது - அவிழ்ந்த கருட்டைத் தலை முடியுடன் அம்மா அசைவது - சுவர் நிழலில் பேய் ஆடுவதுபோலத் தெரிகிறது...!

என் ரத்தம் உறைகிறது...!

''அப்பந்தான் போயிட்டான். எஞ்சாமி, நீ இருக்கியேன்னு தைரியமா இருந்தேன். இப்படித் தலையில கல்லைப்போட்டுட்டுப் போயிட்டியே அய்யா!'' அடிவயிற்றிலிருந்து குரலெடுத்து அழுகிறாள் அம்மா.

எதிரே பாட்டி, உடைந்த தொண்டையில் ஓசை வராமல் பலவீனமாகக் கேவிக் கொண்டிருக்கிறாள்...!

என்ன நடக்கிறது இங்கே? ஏன் இப்படி ஒரு அவலம்?

'தம்பி! அண்ணன் செத்துப் போயிட்டாண்டா!' அக்கா சொல்கிறாள்.

சாவு என்றால் என்ன? நாலு வயது பையனுக்கு என்ன புரியும்? எல்லோரும் அழுகிறார்கள்...! கிலியில் நானும் அழுகிறேன்.

பக்கத்து வீட்டு மாமா வந்து என்னை வெளியே தூக்கிப்போகிறார். புரியாத வயது, அகால நேரம், பயத்திலும் துக்கத்திலும் தவித்த நான், இதமான அரவணைப்பில் தூங்கிவிட்டேன். ரொம்ப நேரம் தூங்கி விட்டேன் போலும். பொழுது மேலே வந்துவிட்டது.

ஊரோரமுள்ள தோட்டத்துப்பக்கம் அம்மா கையைப் பிடித்துக் கொண்டு நடக்கிறேன்.

வழியில் சுடுகாடு. எங்கள் ஊரில் பெரும்பாலும், இறந்தவர்களைப் புதைப்பதுதான் வழக்கம்.

ஆறடி நீளத்தில், சுடுகாட்டில், செம்மண் வரப்புப்போல உயர்த்திக் கட்டியிருந்தார்கள்.

'என்னம்மா அது?' என்றேன். 'அதுதான் உன் அண்ணன்' என்றாள்.

'அண்ணா! அண்ணா! ஏண்ணா என்னை விட்டுட்டு போயிட்டே...? என்னையும் உங்கூட கூட்டிட்டுப் போயிடு அண்ணா...!' கன்னத்தில் நீர் தாரையாக ஒடுகிறது... தேம்பித் தேம்பி அழுதேன்!...



இறந்த அண்ணன் உடலைத் தனி ஆளாகச் சுடுகாட்டுக்குத் தூக்கிச் சென்று குழிவெட்டிப் புதைத்த அத்தை மகன் சுப்பையா கவுண்டர்

என்னுடைய ஞாபகத்தில் படிந்திருக்கும் முதல் அழுகை அது.

50 ஆண்டுகள் கழித்து, வெளியூரிலிருந்து வந்த என் அத்தை மகன் சுப்பையன், ஒரு அதிர்ச்சியான செய்தி சொன்னார்.

தம்பி! உனக்கு 4 வயசிருக்கும்போது உங்கண்ணன் ஷண்முகம் 'பிளேக்'கில இறந்திட்டான். 'பிளேக்'கில செத்தவங்களை யாரும் தொடமாட்டாங்க. தனக்கும் பிளேக் வந்து செத்துப் போவோம்னு பயம்.

''நான் ஒருத்தன் தனி ஆளா, உங்கண்ணன் பொணத்தைத் தோள்ளே தூக்கிட்டுப்போயி, சுடுகாட்டில நானே குழி வெட்டிப் பொதைச்சேன்...

தன்னுயிரைப் பணயம் வைத்து, துணிச்சலாக இக்காரியத்தைச் செய்த அந்த மனிதரின் தீரச் செயல் சிலிர்க்க வைத்தது.

---

5



நண்பர் – ஆசிரியர் – குமாரசாமி

# பிரண்ட்ஸ்

"என்னோட சொந்த ஊர்ல இருந்து ஒரு கி.மீ. தூரத்துல இருக்கற கலங்கல் கிராமத்துலதான் ஒண்ணாங் கிளாஸ்லருந்து நாலாங்கிளாஸ் வரை படிச்சேன். என்கூட படிச்சவங்கள்ல தங்கமுத்து, ஈஸ்வரன், பாலசுப்பிரமணியம், கிஷ்ணசாமி, நட்ராஜ் எல்லாரும் இப்பவும் ஞாபகத்துல இருக்காங்க. வாத்தியார் பேரு கல்யாணசாமி நாயுடு.


ஈஸ்வரன்

சாப்பாட்டு இடைவேளையில, பரந்து கிடக்கும் வாத்தியாரோட தொட்டிக்கட்டு வீட்டுக் குள்ளே ஓடிப்பிடிச்சி விளையாடுவோம்.

'தண்டபாணி!' – இடி இறங்கினாப்பல வாத்தியார் என் பேரைச் சொல்லி ஒரு குரல் கொடுப்பார். விளையாடின பசங்கள்லாம் சப்த நாடி அடங்கிப்போய் வாத்தியார் முன்னால உட்கார்ந்திடுவோம்.

ஸ்கூலுக்குப் போற வழியில பச்சைப் பயறு, தட்டைப் பயறு, மக்காச்சோளம் – காடுகள்ல விளைஞ்சி முதிர்ந்திருக்கும். பறிச்சி, பால் வடிய மென்னு திம்போம். வழியிலே பாச்சான் வேலியிலே கோவைப் பழம் கொடி நெறைய பழுத்துத் தொங்கும். ஓணான் அதைச் சாப்பிடுறதைப் பாத்தா, கல் எடுத்து ஒரே அடி. எனக்கு இடது கை பழக்கம். குறி தப்பாது. ஓணான் செத்து விழுந்துடும்.

ஈஸ்வரன்னு ஒரு நண்பன். அவன், கடலை மிட்டாய்ப் பிரியன். படிக்கிற புத்தகங்களையெல்லாம் மிட்டாய்க்காரனுக்கு எடைக்குப் போட்டுட்டான். ஒரு முறை நிலைமை மோசமாகி அம்மா, அப்பா அடிப்பாங்கன்னு ஊரைவிட்டே ஓடிவிட்டான். எங்கெல்லாமோ தேடி ஓஞ்சு போய் அவனை மறந்துட்டாங்க.

20 வருஷத்துக்கப்புறம், மெட்ராஸ்ல நான் குடியிருக்கிற வீட்டு வாசல்ல, ஒரு தலை எட்டிப் பார்த்தது.


தங்கமுத்து



எங்கள் ஊர் ஆணழகன் கிருஷ்ணசாமி

யாருன்னு கேட்டு வாசலுக்குப் போனேன். சிக்குப் புடிச்ச தலை, குழிகுழியா தழும்புகள் கொண்ட முகம், காட்டு மிராண்டி தோற்றத்தோட ஓர் இளைஞன்.

என்ன ஆச்சரியம்! அதே ஈஸ்வரன். ஒரு வினாடி ஆடிப் போயிட்டேன். உள்ள வாடான்னா வரமாட்டேங்குறான். சமாதானம் பண்ணி, சாப்பிட வச்சி, அவன் குடும்பத்து நெலைமையை விளக்கிச் சொல்லி ஊருக்கு அனுப்பி வச்சேன்.

இப்ப கல்யாணமாகி, குடும்பத்தோட சந்தோஷமா இருக்கான். பராசக்தி, மனோகரா, ஔவையார், தேவதாஸ் படங்கள் வந்து, சினிமா மக்களை ஈர்த்த காலகட்டம். எல்லாத்தையும் தெரிஞ்சிக்கணும், எல்லாத்தையும் செஞ்சு பாக்கணும்ங்கிற வயசு எங்களுக்கு.

ஸ்கூல்ல இருந்து வீடு திரும்புறப்போ, சூலூர் சண்முகதேவி தியேட்டர் காம்பவுண்ட் ஓரம் ஒரு நடை போவோம். புரொஜக்டர் ரூமுக்கு வெளியே வெட்டிப் போட்ட ஃபிலிம் துண்டுகள் கிடைக்கும். அதை எடுத்துட்டு வந்து வீட்டுக் கதவு துவாரம் வழியா சூரிய வெளிச்சத்தைப் பாய்ச்சி, படம் காட்டுவோம். ஃபிலிம்ல சின்னதா



ஒரே நாளில் 180 கி.மீ. சைக்கிள் சவாரி செய்து மலம்புழா அணை பார்க்க உடன் வந்த நடராஜன்

இருக்கிற சிவாஜி சுவத்துல பெருசா விழுவார்.

நாங்களே எதோ தாமஸ் ஆல்வா எடிசன் ஆன மாதிரி சந்தோஷப் படுவோம். எங்க ஷோ சனி, ஞாயிறுகள்ல தவறாம நடக்கும்.

**நா**லு நண்பர்கள் சேர்கிற இடத்தில் 'திருட்டு தம்' அடிக்கா விட்டால் எப்படி? அந்த 'த்ரில்' அனுபவம் மறக்கவே மறக்காது. அப்போ எனக்கு 11 வயசு இருக்கும். என் ஃப்ரெண்டு தங்கமுத்துவோட அத்தை ராயக்கா பெட்டிக்கடை வச்சிருந்தாங்க. அங்கிருந்து அவன் ஒரு கட்டு பீடியைச் சுட்டுட்டு வந்தான்.



சூலூர் பள்ளித் தோழன்
என்.கே. சுப்ரமணியன்

வாய் நாத்தம் தெரியாம இருக்கிறதுக்காக ஈஸ்வரன் வெங்காயம் கொண்டு வந்தான். நான் வீட்டிலிருந்து அரை தம்பளர் கரும்புச் சக்கரை எடுத்து வச்சிருந்தேன்.

ராத்திரி எட்டு மணிக்குமேல எங்க வீட்ல கதவைச் சாத்திட்டு, ஒருத்தன், 'அசோக மன்னன் கலிங்கத்தின் மீது படையெடுத்தான், சாலையோரத்தில் மரம் வச்சான், தண்ணி விட்டான்'னு சத்தம் போட்டுப் படிப்பான்.. மத்தவங்க திருட்டு தம் அடிப்பாங்க. கொஞ்ச நாள் இந்தக் கூத்து நடந்தது.

புதுப்பழக்கம்ங்கிறதுனால இருமல் தொல்லை தாங்காம அப்பப்போ வெளியே போய் எச்சில் துப்பினோம். பீடிகளைப் பரண்மேல் தூக்கி எறிஞ்சி, அதைச் சுத்தம் பண்ணப் போன பாட்டி கையில மாட்டி டோஸ் வாங்குனது தனிக்கதை.

என் நண்பர்கள் கிருஷ்ணசாமியும்,



குமுதம், கல்கண்டு, விகடன் புத்தகம் தவறாது வாங்கி வந்து தந்த பொங்கியண்ண கவுண்டர்



ஒன்றுவிட்ட சகோதரன் என் சீட்ன் குமரேசன்

நடராஜனும் உள்ளூர்க் காரங்கதான்னாலும் சூலூர் ஸ்கூலுக்குப் படிக்கப் போறப்பதான் ரொம்ப நெருக்கமானோம்.

**எ**ன்னோட வாழ்க்கையில மறக்க முடியாதவங்க எங்க ஊருக்கு வாத்தியாரா வந்த நண்பர் குமாரசாமியும், என் சின்னம்மா மகன் குமரேசனும்.

'மில் வேலைக்குப் போறதுதான் பாதுகாப்பு, மெட்ராஸ் போனா பொம்பளைங்க மயக்கிடுவாங்க'ன்னு பெரியவங்க அம்மாவைப் பயமுறுத்தி என்னை மில் வேலைக்கு அனுப்ப முடிவு செஞ்சாங்க. அந்தச் சமயத்தில் குமாரசாமிதான், 'அவசரப்பட்டு மில் வேலைக்குப் போகாதே. இப்ப நீ எடுக்கக்கூடிய முடிவுதான் உன்னோட எதிர்காலத்தை நிர்ணயிக்கும்'னு என் பக்கம் நின்னார்.

மெட்ராஸ்தான் போறதுன்னு துணிச்சலாக முடிவெடுத்து, மூணுநாள் உண்ணாவிரதம் இருந்து அம்மாவோட முடிவை மாத்தினேன்.

சென்னையில் சிக்கனமா வாழுறது எப்படி, பெண்களின் சகவாசத்தைத் தவிர்ப்பது எப்படி, உடம்பைப் பாதுகாப்பது எப்படின்னு பல விஷயங்களைச் சொல்லி வழியனுப்பி வச்சார் குமாரசாமி அண்ணா.

குமரேசன் அண்ணன் முறை. என்றாலும் எனக்காக உயிரையும் தரத் தயாரா உள்ள தோழர்.

சென்னைக்கு 1958 ஜூன் 8ஆம் தேதி நான் ரயில் ஏறின நாள்லருந்து, 40 வருஷத்துக்கும்மேல என்னை வழி அனுப்பி வைக்கிறதும், கோவைக்குப் போகும்போது வரவேற்கக் காத்திருக்கிறதும் அவர்தான்.



கோட் அணிந்திருப்பவர் தயாளன்... அவர் திருமணத்திற்கு அவர் செலவில் விருதுநகர் சென்றபோது. மாப்பிள்ளைக்கு தைத்த புதுச்சட்டையை எனக்கு அணியக் கொடுத்தார்.

**அ**ப்புறம் ஓவியக் கல்லூரி.

விடுமுறை சமயங்களிலே தமிழகத்தில் உள்ள புராதன கோயில்கள், சிற்பக் கூடங்களுக்கெல்லாம் போய் மணிக்கணக்குல ஓவியங்கள் தீட்டினப்போ, கூட வந்து ஓவியம் தீட்டியவர்கள் சந்திரசேகர், சேனாபதி, மானுவேல், பவாநந்தம், ரஹமத்துல்லா. சந்திரசேகர் – கிட்டத்தட்ட எல்லா ஊர்களுக்கும் என்னோட வந்து வாட்டர் கலர் ஓவியங்கள் தீட்டியிருக்கார்.

அங்க எனக்கு ரொம்ப நெருக்கமான நண்பர் தயாளன். எனக்கு ஒரு வருஷம் சீனியர். ஒரே ரூம்லதான் நாங்க தங்கியிருந்தோம். பாண்டிச் சேரியில் இவர் வீட்டுல தங்கித்தான் டியூப்ளே சிலை, கடற்கரைச்சாலை இதெல்லாம் வரைஞ்சேன். இவர் படிக்கிறப்பவே கல்யாணம் பண்ணிக் கிட்டார். விருதுநகரில் கல்யாணம். நண்பர்கள் எல்லாருமே வரணும்ங்கிறதுக்காக அவரே எங்களுக்கு டிக்கெட் செலவுக்குக் காசு கொடுத்தார். அவரோட கல்யாணத்தன்னிக்கு, அவரை மாதிரியே நானும் புதுச்சட்டை போடணும்னு முடிவு பண்ணி, தன்னோட புதுச்சட்டை பேண்டைக் குடுத்து என்னைப் போட்டுக்கச் சொன்னார்! சாரட் பூட்டின ரதத்துல பொண்ணு – மாப்பிள்ளையை உடகாரவச்சி வெள்ளைக் குதிரைகள் கம்பீரமா நடக்க, நண்பர்கள் கூட்டத்தோட நாங்க ஊர்வலம் போனது, நேத்துதான் நடந்தது மாதிரி இன்னும் பசுமையா ஞாபகம் இருக்கு!

# 6



## மண்ணின் மைந்தன்

**பொ**ங்கல் பண்டிகையை நினைக்கும் போதெல்லாம் மாரப்பக் கவுண்டர் ஓடிவந்து முன்னால் நிற்கிறார். ராம பக்த அனுமன்போல! முப்பத்து இரண்டு வயதில் விதவையான என் தாயின் வலது கரமாக இருந்து, தந்தை விட்டுப் போன நிலத்தில் கடைசி காலம்வரை பாடுபட்டவர்.

வெள்ளையர் ஆட்சிக் காலத்தில், விமான தளத்தையொட்டி என் தந்தையார் எட்டு ஏக்கர் நிலம் வாங்கியிருந்தார். போர் விமானங்கள் நிறுத்திட திறந்த வெளி 'ஷெட்' கட்ட இடம் வேண்டுமென்று அதில் மூன்று ஏக்கர் நிலத்தை அரசு எடுத்துக்கொண்டது.

ஆண்டு ஒன்றுக்கு 200 ரூபாய் குத்தகை என்று கணக்குப் போட்டு 15 ஆண்டுகளுக்கு 3000 ரூபாய் சேர்ந்திருந்தது. நாடு சுதந்திரமடைந்த பிறகு அந்தத் தொகையை வாங்கி, என் படிப்புச் செலவுக்குப் பயன்படுத்த, படிக்காத என் தாயார் ஓயாமல் அரசு அலுவலகப் படிகளில் ஏறி இறங்கினார். நிழல்போல அம்மாவுடன் துணைக்குச் சென்று வந்தார் மாரப்பன்.

ஒரு வழியாக 1950–களில் விமான நிலையத்தை ஒட்டியிருந்த எங்கள் பூமி எங்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

முதலில் கிணற்றைத் தூர்வாரப் போனபோது ஒரு அதிசயம். கிணறு முழுக்க அலுமினியத் தகடொன்று மின்னியது. ஆள் வைத்து உள்ளே போய் இறங்கிப் பார்த்தபோது விடுதலைக்காகப் போராடிய வீரர்கள், ஒரு விமானத்தை வெடி வைத்துத் தகர்த்து, அதன் ஒரு இறகைத் தூக்கி வந்து எங்கள் கிணற்றுக்குள் போட்டு விட்டுச் சென்றிருந்தார்கள்!

ஈயம் பித்தளைக்குப் பேரீச்சம் பழம் தரும் ஆளை வரவழைத்து அந்த இறக்கையை எடுத்துப் போகச் சொல்லி, ஒரு ஆண்டு முழுக்க, அவன் பட்டாணியும் பேரீச்சம் பழமும் எங்களுக்கு சப்ளை செய்தது சுவாரஸ்ய மான கதை!

ஆடிப் பட்டம் மழை பெய்ததும், விதைப்பு நடைபெறும். பருத்தி, சோளம், ராகி இவைகள் விதைக்கப்படும். பாசிப்பயறு, தட்டைப்பயறு, கொள்ளு, நரிப்பயறு போன்றவற்றை உழுபவர்கள், விழா அறுக்கும் போது அந்த வரப்பில் ஒவ்வொரு பயறாய்ப் போட்டுக் கொண்டே போவது என் வேலை.

''பத்து வயசு தாண்டியாச்சில்ல, குடியானவன் மகன் எப்போ உழவு ஓட்டக் கத்துக்கறது? இந்தாப் புடி கலப்பைய'' என்று என்னை மிரட்டி உழவு கற்றுக் கொடுத்தார் மாரப்பன்.

நேராகச் செல்லும் ஏர், நிலத்தின் எல்லையில் வலப்பக்கமாகத் திரும்பும்போது, லேசாக மேழியை ஒரு பக்கம் சாய்த்துப் பிடித்தேன்.

அடுத்த வினாடி அந்தப் பக்கமுள்ள எருது வலி தாங்காமல் குதித்தது. ''அடேய்! அடேய்! என்னடா பண்ணினே?'' ஓடி வந்து பார்த்தார் மாரப்பக் கவுண்டர்.

அந்த ஏரில் பயன்படுத்தியது வாள் கலப்பை. அது ஒரு அடி ஆழத்துக்குமேல் பூமிக்குள் சென்று மண்ணைப் புரட்டிப் போடக் கூடியது. அந்தக் கலப்பையில் பயன்படுத்திய மழு என்னும் இரும்புப்

பட்டை, மாட்டின் கால் குளம்புக்குள் குத்தி விட்டது. அதனால் வலி தாங்காமல் மாடு குதித்து விட்டது.

பின்னந்தலையில் ஒரு தட்டுத் தட்டி, ''கொஞ்ச நேரத்தில் எருதை மொட்டமாக்கப் பாத்தியேடா!'' எனக் கடிந்து கொண்டார்.

பருத்திச் செடி, சோளப் பயிர் – அரை அடி உயரம் முளைத்து மேலே வந்ததும், பாத்தி கட்டிக் கிணற்று நீரைப் பாய்ச்சுவார்கள்.

வாய்க்கால் வரப்புக் கட்டுவது, பாத்திகள் பிரிப்பது எனக்குப் பழக்கமாகிவிட்டது.

கிணற்று நீரை இரண்டு மாடுகள் பூட்டிய கவலையை ஓட்டி, நீர் இறைப்பார்கள். தொலைக்கட்டில் பெரிய உருளை இருக்கும். அதில் வடக்கயிறு மாட்டப்பட்டிருக்கும். தரையில் படுவதுபோல வருவது வால் கயிறு. பண்ணை உருளைமேல் அது வரும். தண்ணீர் சுமந்து வரும் சால் பரியின் மேல்பக்கத்தில் வடக்கயிறும், தகரச்சாலின் கீழே மாட்டுத் தோலால் செய்த பையை வால் கயிறும் இணைத்திருக்கும்.

கிணற்றுக்குள் சால் ப்ரி சென்றதும், வால் கயிற்றை நாம் மூன்றடி இழுத்தால் தகரச்சால், சொம்புபோல பக்கவாட்டில் திரும்பி, தண்ணீரை மொண்டு கொள்ளும். பின் வடக்கயிற்றை இரண்டு முறை அமுக்கி விட்டு, மாட்டை வாரியில் கீழ் நோக்கி ஓட்டியவாறு வடக்கயிற்றின் மீது நாம் ஏறி உட்கார்ந்து கொள்ள வேண்டும். மாடுகள் இரண்டும் உயரமாக இருந்ததால், நுகத்தடியில் இணைக்கப்பட்ட வடக்கயிறு 5 அடி உயரத்தில் இருந்தது. நானோ ஐந்தடிக்கும் குறைவாக இருந்த 12 வயதுச் சிறுவன். ஓடிச்சென்று குதித்து வடக்கயிற்றில் உட்கார முயன்றபோது, கயிற்றைத் தாண்டி அந்தப் பக்கம் தலைகீழாக விழுந்துவிட்டேன். தண்ணீரோடு சென்று கொண்டிருந்த மாடுகளின் கழுத்தைக் கண்ணிக் கயிறுகள் இறுக்க, மாடுகள் திணறின...

ஓடிவந்து என்னைத் தூக்கிவிட்டு, கயிற்றின்மீது அமர்ந்து அந்தத் தண்ணீரை வாய்க்காலில் பாய்ச்சியவர், ''இந்த வயசில கவலை ஓட்டிப் பாக்க உனக்கு ஆசை வந்துடுச்சா, இன்னும் நீ ஒரு சாண் வளரணும். அது வரைக்கும் பொறுமையா இரு''ன்னு சொன்னார்.

ஒவ்வொரு பொங்கல் பண்டிகையின் போதும், மாட்டுப் பொங்கல் நாளன்று, கறவை மாடுகள், கன்றுக்குட்டிகள், விவசாயத்துக்குப் பயன் படுத்தும் எருதுகள், அனைத்தையும் குளிப்பாட்டி, கொம்பு சீவி, பச்சை சிவப்பு வர்ணமடித்து அழகூட்டும் வேலையெல்லாம் மாரப்ப கவுண்டர் தான் செய்வார்.

மாட்டுப் பொங்கல் வைத்து, பூஜை செய்து பூவரசம் இலையில் சர்க்கரைப் பொங்கல் வைத்து மாடுகளுக்கு நாங்கள் ஊட்டிவிடுவோம்.

ஆண்டுகள் 36 ஓடிவிட்டன. உழைத்து உழைத்து ஓய்ந்த மாரப்ப கவுண்டருக்கு 80 வயதாகிவிட்டது. 1967இல் கந்தன் கருணை படம் வெளியான பிறகு அம்மாவைச் சென்னைக்கு அழைத்து வந்துவிட்டேன்.

தனக்குத் தலைவியாக, தன் குடும்பத்திற்கு விளக்கேற்றி வைத்த முதலாளி அம்மாவாக இருந்தவர் சென்னைக்குப் போய்விட்டதில் மாரப்பக் கவுண்டருக்கு ரொம்பவும் வருத்தம். அவருக்கு இரண்டு பிள்ளைகள். அவர்களுக்குத் திருமணமாகி குழந்தை குட்டிகள் என்று தனிக் குடித்தனம் போய்விட்டார்கள்.

வயசான மாரப்ப கவுண்டரும், அவர் மனைவியும் வாரம் இரண்டு மூன்று முறைதான் சமைக்கிறார்கள். மற்ற நாளெல்லாம் பழைய சோறும், நீராகாரமும்தான் என்று கேள்விப்பட்டு, ஊருக்குச் சென்றபோது ஒரு நாள் அவரை வரவழைத்தேன்.

''மாமா! மாசம் 400 ரூபாய் நான் மணியார்டர் பண்றேன்.. வருஷம் ஆனா 4800 ரூபாய் சேரும். ஒரு நல்ல மாடு வாங்கினால், பால் கறந்து, ஊத்தி, ரெண்டு பேரும் பொழைச்சுக்கலாம்'' – என்று சொன்னேன். ''ஏஞ்சாமி சிரமப்படறே! அரமா (ரொம்பவும்) முடியாம போயிட்டா அப்பக் குடு... இப்ப ஒண்ணுஞ்சிரமமில்லே'' – என்றார் அந்த மனிதர்!

'ஐயம் இட்டுண்' என்று நான் படித்திருக்கிறேன்.

அந்தப் படிக்காத மேதை, அந்த வறிய சூழலிலும் 'ஏற்பது இகழ்ச்சி' – என்று உறுதியாகச் சொன்னதைக் கேட்டபோது, மண்ணின் உயர்ந்த பண்பாடு, அவர் வார்த்தையில் தெறித்ததை அறிந்து நெகிழ்ந்து போனேன்.

பிடிவாதமாக இரண்டு ஆண்டுகள் மாதம் 400 ரூபாய் அனுப்பி வைத்தேன்.

புறம்போக்கு இடத்தில், தென்னை ஓலையால் குடிசை வேய்ந்து குடியிருந்த அவர், 'அடுத்த பொங்கலுக்குள் மாடு வாங்கி விடுவேன்' என்ற கனவுகளோடு இருந்தார்.

. அதற்குள் காலன் அவர் கணக்கை முடித்து அழைத்துக் கொண்டான்.

பட்டணம் வந்து படித்து, நான் முன்னேற இராப்பகலாகப் பாடுபட்டு, அம்மாவுக்குத் துணை நின்றவர், இறந்த பிறகும், எங்கள் குடும்பத்துக்கு உதவவே செய்திருக்கிறார்!

மாரப்பக் கவுண்டர் உருவத்தை என் மகள் பிருந்தா ஓவியமாய்த் தீட்ட, 1500 ரூபாய்க்கு அதை ஒருவர் வாங்கிப் போய் விட்டார்.

---



# கிராமத்துத் திருமணம்

**எ**ன் சகோதரிக்குத் திருமணமாகும்போது அவர் வயது 15. 'இருக்கும் ஒரே பெண்ணை, கண்காணாத தூரத்தில் கொடுத்து விட்டால், அவசர ஆத்திரத்திற்கு நாமும் போய் அவளைப் பார்க்க முடியாது. அவளாலும் வர முடியாது' என்பதால் உள்ளூரிலேயே மாப்பிள்ளை பார்த்து அம்மா மணம் முடித்து வைத்தார்.

கோவை மாவட்டத்தில் ஆசிரியர்களுக்கு, அரசு உத்யோகஸ்தர்களுக்கு, போலீஸாருக்குப் பெண் கொடுக்க யோசிப்பார்கள். ஏனென்றால், இந்த வேலை செய்பவர்களை, அரசு கண்டபடி இடம் மாற்றம் செய்யும்.

எனது நண்பர் மனைவி, மைசூரில் உணவு – ஆராய்ச்சி சம்பந்தப்பட்ட மையம் ஒன்றில் வேலை பார்க்க, அவரோ உடுமலைப் பேட்டையில் ஆசிரியராகப் பணிபுரிந்தார். மாதம் இருமுறை மனைவியைப் பார்க்க 200 மைல் தொலைவிலுள்ள மைசூருக்குச் செல்வார். போக வர இரண்டு நாள் சரியாகி விடும். மனைவியுடன் ஒரு நாள் தங்கினால் பெரிய விஷயம்...! இருபது ஆண்டுகள், அவர்கள் வாழ்க்கை இந்தக் கதியில் ஓடிக் கொண்டிருக்கிறது.

இன்னொரு ஆசிரிய நண்பர் மனோகர். கோவை சி.எஸ்.ஐ. பள்ளியில் பணியாற்ற அவர் மனைவியோ ஊட்டியில், தனியார் பள்ளி ஒன்றில் ஆசிரியராகப் பணியாற்றிக் கொண்டு அப்பா வீட்டிலேயே தங்கி, இரண்டு பிள்ளைகளையும் ஊட்டியிலேயே படிக்க வைத்தார்.

திங்கள் முதல் வெள்ளிவரை நண்பர், மேட்டுப்பாளையத்தில், அம்மா வீட்டிலிருந்து தினமும் ரயிலில் கோவை சென்று பாடம் நடத்துவார். வெள்ளி இரவு கோவையில் பஸ் பிடித்து நேரே ஊட்டி சென்று விடுவார்.

நடுங்கும் குளிரில், விறைத்த உடம்போடு சனி, ஞாயிறு குழந்தைகளோடு தங்கி விட்டு, திங்கள் கிழமை அதிகாலை 5 மணிக்கு எழுந்து தயாராகி, பஸ் பிடித்து நேரே கோவை பள்ளிக்கு வருவார்..

இப்படியே 25 ஆண்டுகள் ஓடி விட்டன.

போலீஸ் உத்தியோகத்திற்குச் சொல்லவே வேண்டியதில்லை. நினைத்தால் தண்ணி இல்லாக் காட்டிற்கு மாற்றி விடுவார்கள்.. ஆசிரியர்கள் நிலையும் அதுதான். சமீபத்திய அரசுகள் – ஆரம்பப்பள்ளி, உயர்நிலைப்பள்ளி ஆசிரியர்களுக்குச் சம்பளம் கணிசமாகக் கொடுத்துள்ளனவே தவிர, 40 ஆண்டுகளுக்கு முன்பு ஆசிரியர்கள் சம்பளம் ரொம்பவும் குறைவு, பஸ் வசதி இல்லாத அக்காலத்தில், வேறு பள்ளிக்கு மாற்றிவிட்டால், வேகாத வெயிலில் 20, 25 மைல் தூரம் சைக்கிளில் சென்று வரவேண்டும்.

இதையெல்லாம் யோசித்துத்தான் கோவை மாவட்டத்தில் அந்த உத்தியோகம் பார்க்கும் மாப்பிள்ளைகளுக்கு லேசில் பெண் தர மாட்டார்கள்.

கோவை நகரைச் சுற்றி 12 மைல் சுற்றளவில் சுமார் 50க்கும் மேற்பட்ட நூல் மில்கள் உள்ளன. 3 மாதம் தற்காலிகப் பணி. பின், பணி நிரந்தரமாகிவிட்டால் 58 வயதுவரை ராஜ வாழ்க்கைதான்.

நினமும் எட்டு மணி நேரம் மட்டுமே வேலை, காலை 7.45 மணிக்குத் துவங்கி மாலை 3.45 மணிவரை ஒரு ஷிப்ட். 3.45 மணி முதல் இரவு 12.45 மணிவரை இரண்டாவது ஷிப்ட். இரவு 1 மணி முதல் காலை 7.45 வரை மூன்றாவது ஷிப்ட் வேலை.

இது ஒவ்வொருவருக்கும் மாறி மாறி வரும்.

காடு கரையில், கடப்பாறை, மண்வெட்டி தூக்கிச்சென்று பொழுதுக்கும் பாடுபடுவோருக்குப் பத்து ரூபாய் கூலி கிடைத்தால் பெரிய விஷயம்.

மில் வேலைக்குப் போனால் சாதாரணமாக 1500 ரூபாய் மாதம் கிடைக்கும். WHITE COLLAR JOB என்பதுபோல, குனியாமல் நிமிராமல், துணியில் அழுக்குப் படாமல் வேலை பார்க்கும் அவர்களைக் கண்டால் கிராமத்துக் கூலிகளுக்குப் பொறாமையாக இருக்கும்.

அங்கஹீனமான மாப்பிள்ளையாக இருந்தாலும் அதைப் பொருட் படுத்தாமல் மில் வேலை பர்மனண்ட் ஆயிருந்தால் உடனே பெண் கொடுத்து விடுவார்கள். வேறு ஊருக்கு மாற்றல் பிரச்சினையெல்லாம் இவர்களுக்குக் கிடையாது.

மில்லுக்குப் போகும் மாப்பிள்ளையைவிட, நல்ல தண்ணீர் தோட்டத்து மாப்பிள்ளை உசத்தியாக அம்மாவுக்குத் தோன்றியது. பாலை வனத்தின் நடுவே இருக்கும் சோலைபோல, ஐந்து மைல் சுற்றளவில் செங்காட்டுத் தோட்டம் ஒன்றில்தான் நல்ல தண்ணீர்க் கிணறு இருந்தது.

எங்கள் கிராமத்து மக்கள் அத்தனை பேரும் அந்தக் கிணற்றை நம்பித்தான் வாழ்க்கை நடத்தினார்கள். 250 குடும்பங்கள், தினம் 4 குடம் தண்ணீர் எடுத்தால் விவசாயத்திற்குத் தண்ணீர் பற்றாக்குறை ஏற்படும். அதுபற்றியெல்லாம் அந்தத் தோட்டத்துக்காரர் கவலைப்படவில்லை.

மின்சாரவசதி இல்லாத அந்தத் தோட்டத்தில், ஆயில் எஞ்சின் மூலம்தான் கிணற்றிலிருந்து தண்ணீர் இறைப்பார்கள். மின்சாரக் கட்டணத்தைப் போல 3 மடங்கு எண்ணெய்க்குச் செலவாகும். ஆனாலும் பரவாயில்லை என்று காலை எழுந்ததும் 2 மணி நேரம் எஞ்சினை ஓடவிட்டு, தொட்டியில் தண்ணீர் நிரப்பி, கிராம மக்களுக்கு இலவசமாகத் தண்ணீர் வழங்கினார்கள்.

இரண்டு மைல் தள்ளி இன்னொரு தோட்டத்திலும் நல்ல தண்ணீர்க் கிணறு இருந்தது. ஆனால் அந்தத் தோட்டத்துப் பெண், யாரும் தண்ணீர் கேட்டு நுழைய அனுமதிக்க மாட்டார். மோட்டார் விட்டுத் தொட்டியில் தண்ணீர் நிரம்பியதும், திருட்டுத்தனமாக யாராவது, தண்ணீர் மொண்டு சென்று விடுவார்கள் என்று ஊகித்து, மாட்டுச் சாணம் ஒரு கூடை அள்ளி

அந்தத் தொட்டித் தண்ணீரில் போட்டுக் கரைத்து விடுவார். அதனால் அந்தத் தோட்டத்துக்கு யாருமே தண்ணீர் எடுக்கச் செல்ல மாட்டார்கள்.

இப்படி ஊருக்கே தண்ணீர் வழங்கும் குடும்பத்தில் பெண் கொடுப்பது எனக்கும் பெருமையாக இருந்தது. நல்ல தண்ணீர் தோட்டத்தில் தென்னை, வாழை, மிளகாய், தக்காளி பயிரிடுவார்கள்.. வயலும் கலக்கி, நெற்பயிர் நாற்றும் நடுவார்கள். புஞ்சை மண்ணில், அந்தத் தோட்டத்தில் 10 ஏக்கர் மட்டும் – இப்படி நஞ்சை விவசாயம் செய்வது அதிசயமாக இருக்கும்.

மாப்பிள்ளை ஆரம்பப் பள்ளியுடன் படிப்பை முடித்துவிட்டு, விவசாயம் பார்த்தார்.

கிராமப்புறத் திருமணங்கள் அந்தக் காலத்தில் விஸ்தாரமாக நடக்கும். ஒரு வாரம் முன்பே, உறவுக்காரர்கள் வந்துவிடுவார்கள். பெண்களெல்லாம் லட்டு, ஜிலேபி, மைசூர்பாகு நாள்கணக்கில் செய்வார்கள். ஆண்கள் தெருவைத்தடுத்து ஆயிரம் பேர் அமர்வதுபோல பந்தல் போடுவார்கள். தென்னை ஓலை வெட்டி வந்து ஒரு கும்பல், பாய் பின்னிக் கொண்டிருக்கும். சின்னஞ்சிறுசுகள் வண்டிகள் மீதும், மூட்டை முடிச்சுகள் மீதும் ஏறிக் குதித்து விளையாடிக் கொண்டிருக்கும்.

பட்டினிச்சோறு ஒரு நாள் – அடுத்தநாள் கல்யாணம். மூன்றாவது நாள் முகூர்த்தம் – இப்படி மூன்று நாள் திருமணச் சடங்குகள் நடக்கும்... முதல் நாள், மாமன் முறையினர் சீர்வரிசை செய்து, புத்தாடை கொடுத்து மாப்பிள்ளைக்கு மரியாதை செய்வார்கள். அன்றிரவு மட்டும் மாப்பிள்ளைக்கு முழுச்சாப்பாடு. அடுத்த நாள் கல்யாண நாள். பெரும்பாலும் பழ வகைகள் மட்டும் தருவார்கள். மூன்றாவது நாள் முகூர்த்தம்.



கம்பரின் மங்கல வாழ்த்தைச் சொல்லி 50 ஆண்டுகளாகத் திருமணத்தை நடத்தி வைக்கும் நாவிதர் பழனி...

இந்த முகூர்த்தச் சடங்கு, இரண்டு மூன்று மணி நேரம் நீளும். அந்தச் சமயத்தில் டாய்லட் பிரச்சனை எழக்கூடாது என்பதற்காக, முந்தைய நாள் வெறும் பழ வகைகளைச் சாப்பிடச் சொல்வார்கள்.

எங்கள் திருமணத்தில் பிராமணப் புரோகிதர்கள் அழைக்கப்படுவதில்லை. அருமைக்காரர் என்று அங்கீகரிக்கப்பட்ட ஒருவரே திருமணச் சடங்குகளை நடத்தி வைப்பார்.

நாவிதர் மங்கல வாழ்த்தைச் சொல்வார். அவர் கையில் வெற்றிலையும் அதன்மீது ஒரு கைப்பிடி அரிசியும் இருக்கும். இரண்டு விரலால் அரிசியை எடுத்து மணமக்கள் மீது தூவிக்கொண்டே, கம்பர் எழுதிய மங்கல வாழ்த்தைச் சொல்லி முடிப்பார். அரை மணி நேரம் அது நீளும். இந்தச் சமயத்தில் மாப்பிள்ளைக்கு எதிரில் மணப் பெண்ணின் சகோதரர் அமர்ந்து, பெரிய தட்டு நிறைய குவித்திருக்கும் அரிசி மீது, இருவரும் கைகளைக் கோர்த்து அமர்ந்திருக்க வேண்டும்.

மணப்பெண்ணுக்கு, திருமணத்திற்கு முன்பு தாய்மாமன் சீர் செய்ய வேண்டும். அந்த மரியாதை முடிந்த பின்னர், தாய்மாமன் மணப் பெண்ணை ஊர் எல்லையில் இருக்கும் பிள்ளையார் கோயில்வரை தோளில் தூக்கிச் செல்ல வேண்டும். அங்கு பூஜை முடித்து, திரும்பவும் தோளில் வைத்து வீட்டுக்குத் தூக்கி வரவேண்டும்.

பால்ய திருமணம் நடந்த காலத்தில் இது வழக்கத்தில் இருந் திருக்கும். அப்போது மணப்பெண் சிறுமியாக இருந்திருப்பாள். தோளில் தூக்கிச் செல்வது சிரமமாக இருந்திருக்காது.

இப்போது பெண்கள் 18 வயதை நெருங்கும்போது உருவமும் பெரிதாகிவிடும். கனமும் பிரச்சனையாகி விடும். சில நோஞ்சான் மாமாக்கள் குண்டுப் பெண்ணைத் தூக்க முடியாமல் திணறுவது வேடிக்கையாக இருக்கும்.

நாகரிகம் வளர வளர, மணமகன் தனக்கு மனைவியாக வரப் போகிறவளை யாரும் தொட்டுத் தூக்கி, தோளில் வைத்துப் போகக் கூடாது என்று உத்தரவு போட, அந்தப் பழக்கம் கைவிடப்பட்டது.

திருமணமான பின்பு மணமகன், மாமியார் வீட்டுக்கு மருகலம் சாப்பிடப் போவான். வாழ்நாள் முழுவதும் தங்கள் பெண்ணை வைத்துக் காப்பாற்றப் போகிற மாப்பிள்ளைக்கு, குறைந்தது மூன்று மாதம் விசேஷ உணவு படைப்பார்கள் பெண் வீட்டார்.

எங்கள் வீட்டுக்கு மாப்பிள்ளை வருகின்ற நாள்களில் சிக்கன், மட்டன், வடை, பாயசம் என்று தடபுடலாக மரியாதை செய்வார்கள். நானும் என் சகோதரி கணவரும் மாலை நேரம் சிற்றுண்டியாக, பயத்தம் பருப்பு வடை அல்லது துவரம் பருப்பு வடை ஆள் ஒன்றுக்கு 30 சாப்பிட்டு விட்டு, ஒரு மணி நேரம் கழித்து, இரவு சாப்பாட்டுக்குத் தட்டில் உட்கார்ந்து, அதையும் ஒரு வெட்டு வெட்டுவோம்.

மாடுபிடிக்கும் வயது! பாம்பைக் கையால் பிடித்துக் கரகரவென்று தலைக்கு மேலே சுற்றித் தரையில் அடித்துக் கொல்லும் வயது!

உடல் பலம் பற்றி யாரும் யோசிக்கமாட்டார்கள். நாளைக்கு மலம்புழா அணைபோய் வரலாம் என்று நண்பர்கள் முடிவு செய்தோம். மறு நாள் இரவு 8 மணிக்குக் கிராமத்திலிருந்து கிளம்பி, 20 கி.மீ. தூரத்திலுள்ள கோயமுத்தூர் சென்று, ராஜா தியேட்டரில் 'கிஸ்மத்' என்ற ரஞ்சன் நடித்த இந்திப்படம், இரண்டாவது காட்சி பார்த்துவிட்டு, டீ கடையில் ஒரு டம்ளர் பால் குடித்துவிட்டு, சைக்கிளில் ஏறி 60 கி.மீ தூரத்திலுள்ள பாலக் காட்டுக்கு விடியற்காலை 5 மணிக்கெல்லாம் போய்ச் சேர்ந்து விட்டோம்.

அங்கிருந்து 12 கி.மீ தூரத்திலுள்ளது மலம்புழா அணை. சூரியன் உதிக்கும்போது அணை மேல் இருந்தோம்.

தரையிலிருந்து அணைக்கட்டின் மேற்பரப்புக்கு 45° சாய்மானத்தில் தார்ப்பாதை. காரில் மேலே போக, முதல் கியர் போட்டாலே முக்கி முக்கித்தான் கார் செல்லும்.

நாங்கள் மைனர்கள். மனசுக்குள் வேகமெடுத்து ஒரே மூச்சாக சைக்கிளில் மேலே சென்றோம். பாதி வழியில் சைக்கிள் நின்றுவிட்ட நிலை. சீட்டிலிருந்து எழுந்து நின்று பெடல் செய்து, இஞ்ச் இஞ்சாக மேல் நோக்கி நகர்ந்து ஏறியே விட்டோம்.

* * *

ஊரறிய உலகறிய இப்படித் திருமணம் செய்வதால் மனமுறிவுக்கு வாய்ப்பு அப்போது மிகக் குறைவு.

கணவன் அதிகாலை தோட்ட வேலைக்குப் போய்விடுவான். மனைவி வீட்டு வேலைகளைக் கவனித்துக்கொண்டு காலை 8 மணி அளவில் பழைய சாதமும், மோர் மிளகாயும் எடுத்துச்சென்று கணவனுக்குப் பரிமாறுவாள். பகல் வரை, சமயத்தில் கணவனுக்கு ஒத்தாசையாக வேலை செய்வாள்.

குழந்தைகளைத் தூக்கிவந்து வேப்ப மரக்கிளையில், அரச மரக் கிளையில் தொட்டில் கட்டி உள்ளே போட்டு விடுவார்கள். அது உள்ளேயே ஒண்ணுக்கு, ரெண்டுக்கு எல்லாம் போய் ஒழப்பி வைத்திருக்கும். பகல் உணவு நேரம் எடுத்துச் சுத்தப்படுத்துவாள். தாய்...

மரப்பாச்சி பொம்மை, கிலுகிலுப்பை, கிளிபொம்மையெல்லாம் இரண்டு மூன்று வயதில் விளையாடக் கொடுப்பார்கள்.

கூட்டாஞ்சோறு சர்வசாதாரணம். காலையில் செய்த பருப்பு மீந்து விட்டால், அதற்குள்ளே ரசத்தைவிட்டுக் கொஞ்சம் சாதம் அள்ளிப் போட்டுப் பிசைந்து, வரிசையாய் குழந்தைகளை அமர்த்தி ஆளுக்கு ஒரு உருண்டை கொடுப்பார்கள்.

ஒரு வெல்லத் துண்டை இரண்டு பேர் பங்குபோட, வெல்லத்தின் மீது துணி போட்டு, பல்லால் கடித்து இரண்டாக்கி, ஆளுக்கு ஒரு துண்டு கொடுப்பார்கள். அதற்கு 'காக்கா கடி' என்று சொல்வோம்.

உறவுக்காரர் வீட்டுக்கு வந்தால் வாழை இலையில் உணவு பரிமாறுவார்கள். வீட்டுக் குழந்தைகள், உறவுக்காரருடன் அமர்ந்து அதே இலையில் சாப்பிடுவோம்.

வெளியூர் செல்வதென்றால் அம்மா இடுப்பில் சின்னக்குழந்தையும், அப்பா தோளின் இருபுறமும் கால்போட்டு, தலை முடியைப் பற்றியவாறு பெரிய பிள்ளையும் சவாரி செய்யும்.

இப்படி ஒன்றுக்குள் ஒன்று, ஒட்டி உறவாடி வாழ்வதால்தான், எவ்வளவு ஏழ்மைநிலையிலிருந்தாலும், தங்கள் பிள்ளை கண்காணாத தூரம் போய் படிப்பதையோ வேலை பார்ப்பதையோ கிராம மக்கள் விரும்புவதில்லை.

என் தந்தையாரும் இறந்து, அண்ணனும் பிளேக் நோயால் மரணமடைந்ததால், நான் சண்டை போட்டு அம்மாவிடம் அனுமதி வாங்கி, சென்னை வந்துவிட்டேன்.

எத்தனை ஆண்டுகள் சென்னையில் வாழ்ந்தாலும், பிறந்த மண்மீதும் அந்த மக்கள் மீதும் எனக்குள்ள பாசம் குறையவே குறையாது.

80 வயதைக் கடந்த அத்தை மகனைப் பார்க்கச் சமீபத்தில் ஒண்டிப்புதூர் போனேன். 20 ஆண்டுகளுக்கு முன்பு நான் எடுத்த அவரது புகைப்படத்தைப் பெரிதாக்கிப் பிரேம் போட்டு எடுத்துச் சென்றிருந்தேன். அதைப் பார்த்ததும் நெகிழ்ந்துவிட்டார். சினிமா நடிகனைப் பார்க்கப் பக்கத்து வீடுகளிலிருந்து கூட்டம் கூடிவிட்டது.

''என்ன நடிகனைப் பாக்க வந்திருக்கீங்களா...? உங்களுக்கு இவன் நடிகன். எனக்கு மாமா பையன்...! ஒரு தடவை பழனிமலைக்குப் போயிட்டு வர்றப்போ, செட்டிபாளையத்திலேயிருந்து நம்ம ஊருக்கு 20 கி.மீ. இவனை, நான் தோள்ளே வச்சு சுமந்துட்டு வந்தவனாக்கும்'' என்று அவர் சொன்னபோது, அந்தப் பெருமிதத்தைப் பார்க்க வேண்டுமே!

---

8



# அம்மா பார்த்த சினிமா

**பொ**ள்ளாச்சியிலிருந்து தெற்காக, நாற்பது மைல் தொலைவில் மேற்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியில், வால்பாறை என்னும் ஊர் இருக்கிறது.

ஆழியாறு நீர்த்தேக்கம்! அணைக்கட்டின் ஒரு பகுதியிலுள்ள அழகிய பங்களா! பின்னணியாக உள்ள பாறைகள் மிகுந்த மலைத்

தொடர்! இவற்றை முதன் முதல் காமிராவுக்குள் பிடித்த பெருமை டைரக்டர் ஸ்ரீதரையே சாரும்.

ஓவியக் கல்லூரியில் முதலாம் ஆண்டு படித்தபோது, இயற்கைக் காட்சிகளை 'ஸ்கெட்ச்' செய்ய கோட்டூர் மலையாண்டிபட்டணம், சமுத்தூரை அடுத்த வால்பாறை மலைத்தொடரின் அடிவாரம்வரை சென்றிருக்கிறேன்.

அங்கு ஆழியாறு அணை கட்ட 'புல்டோசர்'களை வைத்து அப்போது வேலைகள் நடந்து கொண்டிருந்தன.

அடுத்து, லாரி டிரைவருக்கு மசால்வடையும் டீயும் வாங்கிக் கொடுத்து லாரியில் ஒண்டிக்கொண்டு, வேட்டைக்காரன் புதூர் வழியே சேத்துமடைக் கிராமத்தில் இறங்கிக் கால்நடையாகச் சுமார் ஆறு மைல் தூரம் காட்டுப் பாதையில் நடந்து மலையடிவாரத்தை அடைந்தேன்.

மலையாளமும் தமிழும் பேசும் மலைவாழ் மக்கள், மூங்கில்களைப் பிளந்து தட்டிபோல் அடித்து, அதிலேயே கூரை வேய்ந்து குடியிருந்தனர்.

பாகப்பிரிவினை, விடிவெள்ளி போன்ற படங்கள் அங்குதான் படமாக்கப்பட்டதாகச் சொன்னார்கள்.

மாலை 4 மணிக்கு ஸ்கெட்ச்சுகளை முடித்துக்கொண்டு புறப்பட்ட போது, இருட்டுவதற்குள் பஸ் பிடிக்க முடியாது என்று தோன்றிற்று.

மெயின் ரோடுக்கு இங்கிருந்து ஏதாவது குறுக்கு வழி இருக்குமா என்று யாரிடமாவது கேட்கத் தேடினேன்.

எனக்குப் பின்னால், தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த ஒரு அம்மையார் வந்து கொண்டிருந்தார். சுமார் 35 வயதைத் தாண்டிய பருவம்! கன்னங் கரேலென்ற உருவம். எண்ணெயையே பார்த்திராததால் செம்பட்டை நிறமாகிப் போன பரட்டைத் தலை. உடலின் கட்டுக் குலையாமல் திடகாத்திரமாக இருந்தார்.

அவரிடம் வழி கேட்டேன்.

சொன்னார்.

ஸ்லாக்கும், பாண்டும், தலையில் தொப்பியும், கையில் நோட்டுமாக அந்த வட்டாரத்து இளைஞர்களிலிருந்து அந்நியப்பட்டுத் தோன்றிய என்னைப் பார்த்து, ''அசலூரரா? என்ன விஷயம இங்கு வந்தீங்க?'' என்று கேட்டார்.

ஓவியம் வரைய வந்தது பற்றி விளக்கினேன். எதுவும் புரியவில்லை அவருக்கு. நோட்டைப் பிரித்துக் காட்டியபோது வரைந்த மலைப் பகுதிகளை அடையாளம் கண்டு ஆச்சரியப்பட்டார்.

இருவரும் பேசிக்கொண்டே நடந்தோம்.

திடீரென்று அந்த அம்மையார், ''சாமி! வேகமா முன்னாடி போயிடுங்க...! இல்லேன்னா, சித்த நேரம் இங்கு நின்னுக்கிட்டிருந்து, நான் கொஞ்சம் தொலைவிலே போனதுக்கப்புறம் வாங்க'' என்றார்.

எனக்கு ஒன்றும் புரியவில்லை.

''என்னம்மா, என்ன ஆச்சு? ஏன் பதட்டப்படறே? எதுக்காக என்னை முன்னால போகச் சொல்றே?'' என்று கேட்டேன். ''மவராசா! என்னைத் தப்பா நெனச்சுக்காதீங்க. மதகடித் தோட்டத்துக் கவுண்டர் அதோ வந்துக்கிட்டிருக்காரு. உங்களோட நான் போறதைப் பாத்தா சந்தேகப் படுவாரு.''

''அவரு எதுக்காகச் சந்தேகப்படணும்?''

''அதை ஏன் கேக்றீங்க...? வேட்டக்காரன்புதூர் கவுண்டரு, ஊருக் குள்ளே புதுசா கீத்துக் கொட்டாயி போட்டிருக்காரு. தமிழ்ப் படங்களைப் போட்டாப் பரவாயில்லையே! இங்கிலீஷ் படத்தைக் கொண்டாந்து காலங்காத்தால ஒன்பது மணி ஷோவுல காட்டுறாங்க.

''அதில என்னங்க! பொம்பளைங்க பாதி அம்மணத்தோட நடிக்கறாங்க! ஆம்பளைகளைக் கட்டிப்புடிச்சி முத்தம் கொடுக்கறாங்க. அப்பாவிக் கிராமத்து சனங்களுக்கு இதெல்லாம் புதுசுங்க...! போதையாத் தெரியுதுங்க...! சின்னஞ்சிறுசுகல்லாம் அந்தப் படத்தைப் பார்த்துட்டு பட்டப்பகல்லயே, சோளக் காட்டுக்குள்ளே சோடி சோடியா ஒதுங்குதுங்க...

''கிராமமே கெட்டுப் போயி கெடக்கறதனால, வயசுப்புள்ளை நீங்க வந்து என்னைக் கூட்டிக்கிட்டுப் போறதா, கவுண்டரு சந்தேகப் படுவாரு...!'' என்றார்.

இதைக் கேட்டுச் சிலையாகி நின்று விட்டேன்.

படித்தவர்கள், நல்லது கெட்டதை அறிந்து நடப்பவர்கள் விஷயம் வேறு. படிக்காத அப்பாவி மக்களின் மனோ நிலை வேறு. அவர்கள் மனத்தில், நல்ல விஷயமாயினும் சரி, கெட்ட விஷயமாயினும் சரி, ஆழமாகப் பதிந்துவிட்டால் அதை மாற்றுவது கடினமான காரியம்.

சினிமாவைப் பற்றி 25 ஆண்டுகளுக்குமுன் பெரும்பாலான கிராமத்துப் பெரியவர்களுக்கு நல்ல அபிப்பிராயம் இருக்கவில்லை.

ஐந்நூறு பேர் உள்ள கிராமத்தில் ஐந்து பேர் படம் பார்க்கப் போனா லும், அவர்கள் காலிகள் என்று பெரியவர்களால் முத்திரை குத்தப் பட்டார்கள். சினிமா பற்றிய அன்றைய மதிப்பீடு இதுதான்.

மது, மாது, சூது இவற்றோடு சினிமாவுக்கும் இடமிருந்தது. படிப்பறிவில்லாத என் தாயார் மட்டும் இதற்கு விதிவிலக்காக முடியுமா?

எஸ்.எஸ்.எல்.சி. வரை நான் பார்த்த படங்களின் எண்ணிக்கை பதினான்கு மட்டுமே! என்னையே சினிமாவுக்கு அனுப்பாதவரை, சினிமா பார் என்று நான் எப்படிச் சொல்ல முடியும்?

ஓவியக் கலையைத் தொடர்ந்து அதையே தொழிலாகக் கொண்டு இறங்குவதில் குழப்பமேற்பட்டு, திரைப்பட உலகம் பற்றி சிந்தனை திசை மாறியபோது, நடிக்க வாய்ப்பு கிடைக்கும் பட்சத்தில் தாயார் அனுமதி பெறுவது முக்கியமாகப்பட்டது.

கோடை விடுமுறையில் கிராமத்துக்குப் போயிருந்தபோது, கே.எஸ். கோபால கிருஷ்ணனின் 'கற்பகம்' படம் எங்கள் பக்கத்து ஊரான சூலூரில் ஓடிக் கொண்டிருந்தது.

கிராமத்து மண்ணின் மணம் குறையாமல், உழைத்து வாழும் நடுத்தர மக்களின் வாழ்க்கைத் தரத்தை, உயரிய பண்பாட்டை, படிக்காத மேதை களை, திரைப்படங்கள் மூலம் இனங்காட்டுவதில் கே.எஸ்.ஜி. முன்னோடியாகத் திகழ்ந்த நேரம்...!

'கற்பகம்' படத்தை எனது தாயார் பார்க்கும்படி செய்ய விரும்பினேன். அவர் பார்க்கும் முதல் பேசும் படம், சினிமா பற்றிய ஒரு நல்ல அபிப்பிராயத்தை அவர் மனத்தில் நிச்சயம் ஏற்படுத்தும் என்று நம்பினேன். அவருடைய 'மூடு' பார்த்து ஒரு காலை வேளை, ''ஏம்மா, நீ சினிமா பார்த்திருக்கியா?'' என்றேன்.

''கல்யாணமான புதுசுல உங்கப்பா ஒரு ஊமைப் படத்துக்குக் கூட்டிக்கிட்டுப் போனாரு. அவ்வளவுதான்!'' என்றார்.

''இப்ப சினிமா பார்க்கணும்னு உனக்கு ஆசையில்லையா?''

''சரிதான்! காலம்போன காலத்தில எனக்குச் சினிமா வேணுமா... கால் வயிறு, அரை வயிறு கஞ்சியை இப்ப ஊத்தற ஆண்டவன் கடைசி வரைக்கும் இதை ஊத்தினாப் போதும்.''

''அவன் எப்படியும் ஊத்துவான்...! நீ சினிமா பார்க்க வர்றியா? ரொம்ப நல்ல படம். சினிமா பார்க்கறது தப்புன்னு சொல்றேல்லே...! இந்தப் படத்தைப் பார்த்துட்டு அசிங்கமான படம்னு நீ சொல்லிட்டேன்னா, நானும் இனிமே படம் பார்க்கறதை நிறுத்திடறேன்...!''

எதற்குமே ஆசைப்படாத தாயார் ''சரி... அப்படித்தான் பார்த்துட்டாப் போச்சு'' என்று பதில் சொன்னார்.



16 வயதில் நான் தீட்டிய நேரு ஓவியம்

அவர் மனசு மாறுவதற்குள் புறப்படுவதுதான் சரி என்று சைக்கிளின் பின்பக்கம் அவரை உட்கார வைத்துக்கொண்டு இரண்டு மைல் தொலைவிலுள்ள சூலூருக்கு மாட்னி காட்சி பார்க்கப் பறந்தேன்!

தியேட்டர் முன்னால் கூட்டத்தையே காணோம். மணி பார்த்தேன். பிற்பகல் மூன்றைத் தாண்டி விட்டிருந்தது.

சாத்தப்பட்டிருந்த இரும்புக் கதவருகே ஒரு தட்டி தென்பட்டது. அருகே போய்ப் பார்த்தேன்.

'பாரதப் பிரதமர் நேருவின் மறைவை முன்னிட்டு தியேட்டர் இன்று விடுமுறை...' ஒருபுறம் அதிர்ச்சி! மறுபுறம் அசடு வழிந்தேன்.

அன்று காலை வானொலியில் நேரு இறந்த செய்தி கேட்டு வருத்தப்பட்ட எனக்கு, அம்மாவை முதன் முதலாகப் படம் பார்க்க அழைத்துப்போகிற வேகத்தில் தியேட்டர் மூடப்பட்டிருக்கும் என்ற எண்ணம் வரவில்லை. ''என்னப்பா! ஏன் வெளியே நிக்கறே?''

''அம்மா! நம்ம பிரதம மந்திரி நேரு இன்னிக்கு இறந்திட்டாருல்ல...! அதனால ஷோ இல்லையாம்.''

''எனக்கெல்லாம் சினிமா ஆசை வந்தா இப்படித்தான் நடக்கும். நான் அப்போவே வேண்டாம்டான்னு சொன்னேன். நீ கேக்கலை. சரி, திரும்பிப் போகலாம்.''

அம்மாவை எப்படியும் மறுநாள் அழைத்துச் செல்வது என்று முடிவு செய்துகொண்டேன்.

மறுநாள் மாலைக் காட்சிக்கு அழைத்துச் சென்று, டிக்கெட் வாங்கி, தியேட்டருக்குள் அழைத்துப்போய் அமர்த்திவிட்டு, ஏதோ நீண்டநாள் லட்சியம் நிறைவேறிவிட்ட மகிழ்ச்சியில் கிராமத்தை நோக்கிச் சைக்கிளை மிதித்தேன்.

வழியில் பலத்த மழை பிடித்துக்கொண்டது. தொப்பலாக நனைந்து விட்ட போதிலும் 'அம்மா படம் பார்க்கிறார்' என்ற மகிழ்ச்சி இதைவிட அதிகமாக இதயத்தை நனைத்தது. அம்மா படம் பார்த்துவிட்டு, இரவு சூலூரில் என் சின்னம்மா வீட்டில் படுத்திருந்துவிட்டு மறுநாள் ஊர் வர ஏற்பாடு...! காலையில் 'குஷி'யாக சூலூர் சென்று, ''என்னம்மா! படம் எப்படி?'' என்றேன்.

''எனக்கு, சினிமா கினிமாவெல்லாம் வேண்டாம். என்னை உட்ருடான்னு அப்பவே சொன்னேன்...! எங்கே நீ கேக்கறே?

''படத்தில் கே.ஆர். விஜயாவை மாடுமுட்டிச் செத்துப் போற ஸீன் நடந்தப்போ போன கரண்ட்தான், 'இதோ இப்ப வருது, அப்ப வருது'ன்னு விடியற வரைக்கும் தூங்கித் தூங்கி விழுந்ததுதான் மிச்சம். போன கரண்ட் வரவே இல்லே...''

எனக்கு மயக்கமே வந்துவிட்டது...



பிலிம்ஃபேர் பரிசளிப்பு விழாவில்...

பிடிவாதத்துக்குப் பெயர் போன தாயாரை மீண்டும் முழுப் படம் பார்க்க மறுநாள் அழைத்தபோது மறுத்தார். உண்ணா விரதம் இருப்பதாக மிரட்டிப் பணிய வைத்தேன்.

முழுப் படம் பார்த்தவரிடம், ''சினிமா எப்படி?'' என்றேன்.

''உலகத்தில நடக்கறதைத்தானே சினிமாவாக் காட்றாங்க...? இதில அசிங்கம் என்ன இருக்கு?'' என்றார்.

அன்றைக்கே நான் சினிமாவில் நடிக்க மானசீகமாக அவரின் அனுமதி பெற்றுவிட்ட மகிழ்ச்சியில் திளைத்தேன்!

---

9



# கிருஷ்ணன் பஞ்சு

**பா**ல பருவத்தில் எனக்கு அட்சராப்பியாசம் செய்வித்து அறிவுக் கண்ணைத் திறந்து வைத்தவர், 'கலங்கல்' என்ற பக்கத்துக் கிராமத்தைச் சேர்ந்த ஆசிரியர் கல்யாணசாமி நாயுடு. ஆறடி உயரம், காந்தியவாதி, கதர்ச்சட்டை, கட்டுக்குடுமி, தீவிர சைவம்...!

பிஞ்சு வயதிலேயே பின்னம், வீசம் வாய்பாடுகளை மனப்பாடம் செய்யச் சொல்லித் தலைகீழாக ஒப்பிக்கப் பயிற்சி தந்தார்.

மனக்கணக்குப் போட அவர் குழந்தைகளுக்கு ஒதுக்கும் நேரம் பத்து செகண்டுக்குக் குறைவாக இருக்கும்.

கணக்கைச் சொல்லிவிட்டுக் கண்ணை மூடிப் பத்து எண்ணுவார். அடுத்து, பையன்களின் தலைமட்டத்துக்குப் பிரம்பு பறக்கும். அதற்குள் சிலேட்டில் விடையை எழுதி வைத்தவன் தலை தப்பிக்கும். எழுதாமல் விழித்துக்கொண்டு நிற்பவன் தலையைப் பிரம்பு பதம் பார்த்து விடும்.

கேட்கக் கொடூரமாகத் தோன்றும். ஆனால், திண்ணைப் பள்ளிக் கூடத்தில் நான்காவது படித்த என்னை, தரத்தின் அடிப் படையில் அரசுப் பள்ளியில் ஆறாவது வகுப்பில் சேர்த்துக் கொண்டனர்.

தனி மனிதர் அப்படி 'கோச்' பண்ணினார். கல்வி போதிப்பதைச் சேவையாகக் கருதியவர் அவர்.

திரைப்படவுலகில் 'ஆரம்பப் பள்ளி ஆசிரிய'ராக நான் மதித்தவர்கள், மதிப்பவர்கள் மதிப்பிற்குரிய இரட்டையர் கிருஷ்ணன் – பஞ்சுதான்.

மலையாளப் படவுலகில் பிரபல ஒளிப்பதிவாளராக விளங்கும் வில்லியம்ஸ், அந்நாளில் என் நெருங்கிய நண்பர். 12'' x 10'' அளவில், 1963இல் அவர் என்னைப் புகைப்படமெடுத்துத் தயாரித்த ஆல்பம், ஸ்டூடியோ வட்டாரத்தில் பரபரப்பை உண்டாக்கியது.

அந்த ஆல்பத்தைப் பார்த்த மாத்திரத்தில், 'பையனுக்குக் களையான முகம் இருக்கிறது' என்று, எனது மாமாபிள்ளை ரத்தினம் தயாரித்த, 'சித்ரா பௌர்ணமி' என்ற படத்தில் பெரிய வேடத்தில் துணிந்து அறிமுகம் செய்ய நினைத்தனர் கிருஷ்ணன் – பஞ்சு. துரதிர்ஷ்டவசமாக அப்படம் நின்று போகவே, ஏவி.எம்.மின் 'காக்கும் கரங்கள்' படத்துக்கு இவர்களே எனக்குச் சிபாரிசு செய்தனர்.

அந்தக் கால குருகுலம் மாதிரி இவர்கள் அதிகபட்சக் கண்டிப்புடன் தொழில் பக்தியை, ஆரம்பத்திலேயே நடிகன் மனத்தில் பதிய வைத்தனர். ஏ.வி.எம். படத்துக்குக் கொடைக்கானலில் நவம்பர் மாதம் படப்பிடிப்பு...! நடிப்புக் கலையில் அன்று நான் பச்சைக் களிமண். ஒரே இரவில் கடுமையான நடன ஒத்திகை பார்த்து மறுநாள் பாடல் படப்பிடிப்பு...!

மூன்று, நான்கு வருடம் முட்டிக்கு முட்டி தட்டி, உடம்பை வில்லாக வளைய வைத்து, ஏகப்பட்ட திட்டுக்கள் வாங்கி, டான்ஸ் மாஸ்டரிடம் கற்றுக் கொள்ளும் நடனத்தை ஒரே இரவில் கற்றுக் கொள்ள முடியுமா, என்ன...?

முதல் ஷாட்... நான் ஆடிய அழகைப் பார்த்து, ''ஏம்பா! டான்ஸ் ஆடறியா...? இல்லே, மண்ணு மிதிக்கறியா...? உன்னையெல்லாம் படத்தில போட்டு என் உயிரை வாங்கறாங்களே!'' தீப்பொறிகளை அள்ளி வீசினார் டைரக்டர் பஞ்சு.

படப்பிடிப்பை வேடிக்கை பார்க்கும் ஆயிரக்கணக்கானோர் முன்பு கூனிக் குறுகினேன். அந்தக் குளிரிலும் தலைவழியே வியர்த்து, உடம்பு நனைந்து, உடைகள் ஈரமாயின.

'தெரியாத தொழிலுக்கு வந்து, இப்படி மாட்டிக்கொண்டு அவஸ்தைப்பட வேண்டுமா?' என்று வேதனை பொங்க விழிகள் நீரைச் சொரிந்தன.

ஏ.வி.எம்.மின் ஒப்பனையாளர் முத்தப்பா ஓடிவந்து, ஜாடையாகத் தோளில் கைபோட்டு அழைத்துப் போய், ''நீ சின்னப்புள்ளே...! சினிமாவைப் பற்றி உனக்கென்ன தெரியும்...! திட்டினா தேஞ்சு போயிட மாட்டே...!



கலங்கல் கிராமத்தில் 1ஆம் வகுப்பு முதல் 4ஆம் வகுப்புவரை ஆசிரியராக இருந்த திரு. கல்யாணசாமி நாயுடு



தமிழக அரசின் நல்லாசிரியர் விருது பெற்றவர்.... சூலூர்-போர்டு ஹைஸ்கூலில் எங்கள் தலைமை ஆசிரியர் திரு. திருவேங்கடசாமி நாயுடு

''நூறு நாடகங்களில் நடிச்சுப் பேர் வாங்கின நாகேஷையே 'சர்வர் சுந்தரம்' படப்பிடிப்பின்போது 'என்னய்யா நடிப்பு இது...? நாடகத்தில



லட்சியக் கனவுகளுடன்..... வில்லியம்ஸ் 1963–ல் எடுத்த புகைப்படம்

நடிச்சிட்டா நீ பெரிய கொம்பன்னு நினைப்பா...? அப்படின்னு திட்டியிருக்கார்'' என்றார்.

நாகேஷ் திட்டு வாங்கியபோதும், இதே முத்தப்பாதான் சமாதானம் செய்தார்.

''சிவாஜியைவிட நீ ஒஸ்தியா...? 'பராசக்தி' ஷூட்டிங்கில அவ்வளவு பெரிய நடிகரையே திட்டியிருக்கார். பஞ்சு சார்கிட்ட திட்டு வாங்கிட்டேல்ல...; இனிமே நீ பெரிய ஆளாயிடுவே'' என்றார் .

குடும்பக் கதைகளைக் கையாளுவதில் சூரர்கள் இந்த இரட்டையர். 'உயர்ந்த மனிதன்' உச்சகட்டக் காட்சியில், சிவாஜி என்னைப் பிரம்பால் அடிக்கும் ஷாட் எடுத்தபோது, 'பிரம்பு ஒடிந்து விட்டால் படப்பிடிப்பு நின்று எமோஷன் தடைப்படும்' என்று ஒரு டஜன் பிரம்பு வாங்கித் தயாராக வைத்திருந்தனர். பிரம்பு அடியைவிட, சிவாஜி உதைக்கும்போது எகிறி விழுந்ததில் தோள்பட்டை மூட்டு கழன்று விட்டது.

'தெய்வப்பிறவி' படத்தில் சிவாஜி, எஸ்.எஸ்.ஆர்., பத்மினி சம்பந்தப்பட்ட உச்சகட்டக்காட்சி...! அக்காவை அவமானமாகப் பேசும் அத்தானை, எஸ்.எஸ்.ஆர். சட்டையைப் பிடித்து உலுக்க, பத்மினி உணர்ச்சிவசப்பட்டுக் குடையால் தம்பி எஸ்.எஸ்.ஆரை விளாசும் கட்டம்...!

''ராஜு'', கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ணிக்குங்க. படத்தில் பிரமாதமாக் வரவேண்டிய ஸீன்'' என்றார் பஞ்சு.

காமிரா ஓடியது. ஷாட் 'ஓகே' ஆனது. ஆனால் பத்மினி எஸ்.எஸ். ஆரை அடித்த அடியில் குடைக்கம்பிகள் உடைந்து, துணி கிழிந்து, கைப்பிடி கழன்று ஓடிவிட்டது. எஸ்.எஸ்.ஆர். உடம்பு வீக்கம் கண்டு, ஜுரம் வந்து, நர்சிங்ஹோமில் இரண்டு நாள் ஓய்வு எடுத்தார்.

பின்னாளில் கொஞ்சம் பிரபலமான பின்பு, இதய வீணை படத்தில் கிருஷ்ணன் – பஞ்சு டைரக்ஷனில் திடீரென நடிக்க அழைப்பு வந்தது. பூஜை முடித்து ஒப்பனையுடன் முதல் நாள் செட்டுக்குப் போனேன்.

''நளினி இவ்வளவு கேவலமா இருப்பானு நான் நெனைக்கலே. தலையைக் கிரீடமா அலங்கரிப்பானு நெனைச்சுக்கிட்டிருந்தேன். காலுக்குச் செருப்பா இருக்கக்கூட லாயக்கில்லாதவனு நிரூபிச்சிட்டா...!'' வசனத்தை உதவி டைரக்டர் படிக்கக் கேட்டுக் கொண்டிருந்தேன். பஞ்சு வந்தார்.

''இதப்பாரு! இந்த டயலாக்குக்கு வேதனை, விரக்தி, வெறுப்பு மூணும் வரணும். உம் மூஞ்சிக்கு எதுவுமே வராது! டேக்...''

அதே கண்டிப்பு. அதே கிண்டல். அவர் மாறவே இல்லை.

''ஸீன் நல்லா வரணுங்கறதுக்காகத்தான் திட்டறோம். நடிக்கத் தெரியாதவனை நான் திட்டறதில்லே. அது பாவம்...! நல்ல நடிகனுக்கு, திட்டும்போது ரோஷம் வரும்...! வேகம் வரும்...! அந்த வேகத்தில் அவனையும் அறியாம பிரமாதமா பண்ணிடுவான். அதனால, அவனுக்குத் தானே பெரிசா பேர் வருது...!'' என்று ஒரு நாள் விளக்கம் சொன்னார்.

வேலை செய்யும்போதுதான் அப்படிப் பயமுறுத்துவார். படப் பிடிப்பு முடிந்து விட்டாலோ, ''டேய் சிவா! உன் வயசென்ன, என் வய சென்ன...? நமக்குள்ள பந்தயம். ஓடிப் பார்த்திடுவோமா...?'' என்பார்.

கொடைக்கானல், கோகர்ஸ் வாக்கில் ஒரு பர்லாங் தூரம் ஓடித் திரும்பினோம். என்ன வேகம், என்ன விளையாட்டுத்தனம்! அவருடைய அலாதி சுறுசுறுப்புக்கு அவரது மெலிந்த உடலே காரணம்.



வில்லியம்ஸ் புகைப்படம்

படப்பிடிப்பு இல்லாத நாள்களில் சென்னையில் வெளியாகும் எந்தப் படத்தையும் விடமாட்டார். முதல்நாள் மாலைக் காட்சியில் குடும்பத்தோடு படம் பார்ப்பார்.

''சிவா! சினிமாக்காரனுக்கு ஒரு வியாதி. அடுத்தவன் படத்தைப் பார்க்காமலேயே 'அது சரியாயில்லையாமே...! தியேட்டரில் கூச்சல்

போடறாங்களாமே...! ஒரு வாரம் கூடத் தாங்காது' என்று சொல்வதில் அவனுக்கு அலாதி சுகம்.

''நானும் விமரிசிப்பேன். ஆனா, படத்தைப் பார்த்துட்டுத்தான் சொல்வேன். ஒரு டைரக்டரோட படத்தைப் பார்க்காமலே, 'அவன் எந்த லட்சணத்தில படம் பண்ணுவான்னு எனக்குத் தெரியும்' அப்படின்னு சொல்றது தப்பு. இன்னிக்குத் தவழும் குழந்தைதான் நாளைக்கு மேதையா உருவெடுக்குது! குழந்தைதானேன்னு அலட்சியம் கூடாது'' என்பார் பஞ்சு.

டைரக்டர் கிருஷ்ணன், பஞ்சுவுக்கு நேர் எதிரிடை. அமைதியாக உட்கார்ந்து எதையாவது சிந்தித்த வண்ணமிருப்பார். கோபமே வராது.

''சிவகுமார்! நடிக்கறப்போ கதையை நல்லா கேட்டுக்கணும். படத்தில் வர்ற கேரக்டரின் தன்மையைக் கற்பனை பண்ணி, 'நான்தான் சத்யன். எனக்கு அப்பா, அம்மா இல்லை! மொதலாளி என்னை வளர்க்கிறார். மொதலாளி என்னைச் சந்தேகப்படறார்' அப்படின்னு நினைச்சு நடிக்கப் பழகிக்கணும்.

''சினிமாக்காரங்களுக்கு வருமான வரி ஒரு பெரிய தலைவலி. பத்தாயிரம் ரூபாயைச் சம்பாதிச்சேன்னா, மூணில் ஒரு பங்கு பிரிச்சு தனியா பாங்க்கில போட்டுடு. அது உன் பணமில்லேன்னு நெனைச்சுக்க. வரி கட்டறப்போ, சிரமமே இருக்காது.

''சம்பாதிக்கிற பணமெல்லாம் நம்மளோடதுன்னு நெனைச்சு அத்தனையையும் செலவு பண்ணினா, வரித் தொல்லை தூங்கவிடாது'' என்று அட்வைஸ் செய்வார்.

சினிமாவுலகம் மட்டுமல்ல... உலக நடப்புக்களையும் அந்த நிமிடம் வரை இருவரும் தெரிந்து வைத்திருந்தனர். இளைய தலைமுறையோடு தோழமையுடன் பழகி, அவர்களின் விருப்பு வெறுப்புகளை அறிந்து வைத்திருந்தனர்.

அதனால்தான் பி.யு. சின்னப்பா, பானுமதி நடித்த 'ரத்னகுமார்' படத்தில் டைரக்ட் செய்யத் துவங்கி 40 ஆண்டுகளில் 4 தலைமுறை கலைஞர்களைக் கையாள அவர்களால் முடிந்தது.

பஞ்சு சாருக்குப் புகை பிடிக்கும் பழக்கத்தை மட்டும் விட்டொழிக்க முடியவில்லை. கடைசி நாள்களில் மெலிந்த உடல், நலிந்த நிலையில், எக்ஸ் – ரேயில் தெரிவதுபோல எலும்புக்கூடு வெளியே தெரிய, நர்சிங்ஹோமில் அனுமதிக்கப்பட்டிருந்தார்.



நான் தீட்டிய பஞ்சுவின் ஓவியம்

மூச்சுவிட முடியாமல் பிராண அவஸ்தைப்பட்டார். டாக்டரை விசாரித்தேன். ''நுரையீரல் தொண்ணூறு சதவீதம் பாதிக்கப்பட்டு விட்டது. அதிகப்படியான புகை பிடிக்கும் பழக்கத்தால் நுரையீரல் கருகி விட்டது. எதுவும் செய்ய முடியாத கட்டம்...'' என்றார்.

கையில் 555 சிகரெட் பாக்கெட்டை 'ஸ்டேட்டஸ் சிம்ப'லாக வைத்துக்கொண்டு நாள் ஒன்றுக்கு 50, 60 சிகரெட் பிடிப்போரை நினைத்துக் கொண்டேன்.

உள்ளே சென்று அவர் கைகளைப் பிடித்து ஆறுதல் சொன்னேன்.

''ஒண்ணுமில்லேப்பா! நீயெல்லாம் எனக்கு வேலை தரலே. அதான் படுத்துட்டேன். நாளைக்கே ஒரு படம் டைரக்ட் பண்ண வாங்கன்னு கூப்பிடு, எழுந்து ஓடி வந்துருவேன்'' என்றார்.

இதை அவர் கூறியபோது, அடுத்த நாள் அவரது வாழ்க்கையின் கடைசி நாள் என்று அவருக்குத் தெரியாது.

மரணத்தோடு போராடும்போதும் அந்த மாமனிதருக்குச் சினிமா மேல் இருந்த காதல் எனக்கு மலைப்பை உண்டாக்கியது.

---



நேர்மையைத் தனது சுவாசக் காற்றாகவும், சற்றும் பிசிறில்லாத ஒழுக்கத்தைத் தனது இலக்காகவும், தன் உழைப்பை மட்டுமே மூலதனமாகவும், மனித நேயத்தை மட்டுமே தன் வாழ்க்கை முறையாகவும் அமைத்துக் கொண்டு வாழ்ந்து காட்டிய சிவகுமார் என்கிற ஒரு மகா நடிகரின் வாழ்க்கையை விவரிப்பதன் மூலம், தற்கால இளைஞர்களுக்கு ஒரு 'ரோல் மாடலாக' இந்நூல் நம் தமிழ்ச் சமுதாயத்திற்கு அர்ப்பணம் செய்யப்பட்டுள்ளது.

1-1-05, வெளியீட்டு விழாவில், கே. பாலசந்தர்

10



# அருட்செல்வர் ஏ.பி.என்

**கா**வி உடை, கண்களில் தீர்க்கமான பார்வை, பத்து நாள் தாடி, சோர்ந்து சுருங்கிய உடம்பு, மெல்லிசான குரல், காலைப் பின்னுக்கு மடித்துப் போட்டு அமர்ந்திருக்கும் அவர்....ஓ! காஞ்சிப் பெரியவரோ? நான் குறிப்பிடுவது சிவாஜியை அல்ல...!

ஒரு கணம் இப்படி அந்தத் தோற்றத்தைக் கண்டு இன்ப அதிர்ச்சி அடைந்தவர், டைரக்டர் கே. பாலசந்தர்.

நடிகரின் தோற்றம், வேடப்பொருத்தம் கண்டு, ஒரு விநாடி மகிழ்ந்த அவருக்கு அந்தச் சந்தோஷம் அதிக நேரம் நீடிக்கவில்லை.

சாமியார் வேடத்திலிருந்த நடிகர், சப்பணம் போட்டு அமர்ந்து மடியிலிருந்த 555 சிகரெட்டைப் பற்றவைத்து ஊதியபோது, இயக்குநர் சிகரம் ஒரு விநாடி அதிர்ந்துதான் விட்டார்! புராண வேடங்களை ஆரம்ப நாள்களில் நான் ஏற்று நடித்தபோது ஏ.பி. நாகராஜன் சொன்ன அறிவுரை இப்போது நினைவுக்கு வருகிறது.

''திரைப்படத்தில் முருகனாக, கண்ணனாக, திருமாலாக, சிவனாக மக்கள் உங்களைக் காணும்போது, அவர்கள் அசல் கடவுளாக நினைத்துக் கன்னத்தில் போட்டுக் கொள்ள வேண்டாம்...! குறைந்தபட்சம் அந்த வேடப் பொருத்தத்துக்காக மனத்திற்குள் பாராட்ட வேண்டுமென்றால், இந்த வேடங்களைச் செய்யும்போது புகை, மது, மாமிசம் போன்ற வற்றைத் தவிர்த்து விடுங்கள்'' என்றார்.

உண்மைதான்! 'என்.டி.ஆர். புராண பாத்திரங்களை ஏற்கும் சமயங் களில் காலையில் செட்டுக்கு வரும்போது எப்படி அலங்கார ரூபமாகக் காட்சியளிக்கிறாரோ, அப்படியே மாலை வரையில், தலையிலுள்ள கனமான கிரீடத்தையோ, மேலே போட்டிருக்கும் பட்டு அங்க வஸ்திரத்தையோ கழட்டி வைக்காமல் – அப்படியே இருப்பார்' என்று சொல்வார்கள்.

முருகன் வேடத்தில் ஒரு கையில் வேலுடன், உடல் முழுக்க ஆபரண அலங்காரங்களுடன் இருக்கும் நான், ஸ்டுடியோவுக்குள் வேடிக்கை பார்க்க வரும் கும்பலின் கண்களில், புகையும் வாயுடன் காட்சியளிப்பதைக் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியவில்லை.

அன்றைய புதுமுகமாக இருந்த எனக்கு, புராணப் படங்களில் நடிப்பது தவம் செய்வது போலத்தான் தோன்றியது.

மறுநாள் படப்பிடிப்பு என்றால், முதல் நாள் இரவு அசந்து தூங்கும் வேளையில் வாசல் கதவு தட்டப்படும். வசனப் பிரதி கொடுக்கப்படும்.

'திருவே! திருவின் உருவே! திருவை உலகிற்களிக்கும் திருமகளே! தினம் துதிக்கும் தொண்டருக்குத் திரவியத்தை அள்ளி வழங்கும் திருவருளே! தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து, திக் கெட்டும் செல்வச் சிறப்போடு செழிக்க வைக்கும் திருப்பெரும் வடிவே! திருப்பாற்கடலில் தோன்றிய திவ்யப் பொருளே! நின் திருமலரடியைத் தொழுகிறேன்... வணக்கம்!'



33 பேருக்குமேல் மேக்–அப் டெஸ்ட் எடுத்து, முடிவில் ஓ.கே.ஆன முருகன் நான்!

இந்தப் பாணியில் பல்லை உடைக்கும் தீந்தமிழ் வசனங்களைப் பார்த்த மாத்திரத்தில் தூக்கம் பறந்துவிடும்.

அதிகாலை மூன்றரை மணிக்கு எழுந்து குளித்து ஸ்டூடியோ சென்று ஒப்பனை, உடை அலங்காரங்களை முடித்து, காலை 6.50க்கு செட்டுக்கு, சிவன் வடிவில் செல்லும்போது, வாசலில் வெள்ளை உடையும் நெற்றி நிறைய விபூதியும் குங்குமுமாய் ஆஜானுபாகுவான தோற்றத்தில், ''வணக்கம், வாங்கய்யா கவுண்டரே!'' என்று வாய் நிறையக் கூப்பிடுவார் அருட்செல்வர் ஏ.பி.என்.

ஐந்து வயது ராணியானாலும் சரி, அறுபது வயதைக் கடந்துவிட்ட நாகையா ஆனாலும் சரி, ஏ.பி.என்.னைப் பொறுத்தவரையில் ஒரே மாதிரியான உபசரிப்பு, ஒரே மாதிரி மரியாதை...!

கடவுள் வேடங்களுக்கு மிகப் பெரிய 'க்ளோஸப்' ஷாட்கள் எடுக்க வேண்டுமென்றால், அவை காலை 7 மணி முதல் 9 மணிக்குள்தான் எடுக்கப்படும். உச்சி வெயிலிலும், அளவுக்கதிகமான மின் ஒளியின் வெப்பத்திலும் முகம் வாடிவிடும் என்பதால் இந்த ஏற்பாடு...!

எப்படியெல்லாம் அன்று திட்டமிட்டுச் செயல்பட்டார்கள்...? தொழிலைத் தெய்வமாக மதித்தார்கள். சிவனின் நெற்றிக்கண் வழியே வந்த பொறிகள்தான் ஆறுமுகனாகப் பின்னால் உருவெடுத்ததாகப் படித்திருக் கிறோம். 'கந்தன் கருணை' படத்தில் ஜெமினிகணேசன் சிவனாக நடிக்கிறார். ஜெமினியின் 6 தலைகள் 'மாஸ்க்' முறையில் படமாக்கப் பட்டன. காமிரா பிரேமை ஆறு பங்காகப் பிரித்து, ஒரு பகுதியில் படமாக்கும்போது அடுத்த ஐந்து பகுதிகளைக் கறுப்புக் காகிதத்தில், எச்சரிக்கையாக மறைத்து, ஒவ்வொன்றாகப் படமாக்க வேண்டும்.

ஆறு முகங்களோடு நடந்தவாறு ஒரு காட்சியில் நான் வசனம் பேச நேர்ந்தபோது, 'மாஸ்க்' முறை உபயோகப்படவில்லை. என் தலைபோல அச்சு தயாரித்தனர். மல்லாந்து என்னைப் படுக்க வைத்து, சைனா களிமண்ணைச் சேறு போலக் குழைத்து, எனது மூக்குத் துவாரத்தில் சுவாசிப்பதற்காக இரண்டு ஸ்ட்ராக்களைத் திணித்தபின், முகத்தின் மேல் அந்தச் சேற்றைப் பூசினார்கள். முகத்திலிருந்து சுமார் 1 அங்குல கனத்துக்கு 'மொத்' 'மொத்' என்று களிமண் சேறு தடவி, சுமார் 10 நிமிடத்துக்கு அது (ஸெட் ஆக) கெட்டிப்படவிட்டார்கள். விரைவில் காயும் தன்மையுள்ள அந்தக் களிமண்சேறு, இறுகும்போது முகத்தின் பல பகுதிகளில் அரிப்பு ஏற்படும்.

கையை உள்ளே விட்டுச் சொறிய முடியாது. அரிப்புத் தாங்காமல் கண்ணைச் சுருக்கினாலோ, மூக்கை நெளித்தாலோ, வாயை விரித்தாலோ அச்சில் நீங்கள் கோணினாற்போல் உருவம் பதிந்துவிடும்.

''எவ்வளவோ பேருக்கு அச்சு தயாரிக்கிறோம். யாருக்குமே அசல் முகம் அமையவில்லை. உங்களுக்கு மட்டும் ரொம்பவும் சரியாக வந்துள்ளதே.... எப்படி?'' என்றார் ஆர்ட் டைரக்டர் கங்கா.

நான் ஓவியக் கலை பயின்றதுடன், சிலை செய்யும் பிரிவில் பகுதி நேர மாணவனாகப் பயிற்சி பெற்றதைக் கூறினேன்.

படப்பிடிப்பு அன்று, என் தலையின் ஒரு பக்கம் மூன்று போலித் தலைகளும், மறுபக்கம் இரண்டு தலைகளுமாகப் பொருத்தினார்கள். என் முக ஒப்பனையின் வண்ணத்திற்கேற்ப அந்த உயிரற்ற தலைகளுக்கு ஒப்பனை செய்யப்பட்டு, ஆறுமுகமும் 12 கைகளுமாக அவஸ்தைப் பட்டுக்கொண்டு நடித்தேன்.

அப்போதெல்லாம், நடிக்கும்போதே நேரடியாகக் குரலையும் ஒலிப்பதிவு செய்வார்கள். டப்பிங் அதிகமாக இராது.

''வீரபாகு தூது செல்.... கட கட கட...

தூய விழியில் நடக்கச் சொல்..... கட கட கட...

வானவரை விடுதலை செய்து வழி தெரிந்து நடக்கச் சொல்..... கட கட கட....''

''கட் ப்ளீஸ்..., சார்! முருகன் வசனம் பேசும்போது ஏதோ ஓசை குறுக்கிடுகிறது. வசனம் தெளிவாக இல்லை.''

ஒலிப்பதிவாளர் ஓடிவந்து ஏ.பி.என்–னிடம் முறையிட்டார்.

ஏ.பி.என். பேசச் சொன்னார். மீண்டும் பேசினேன். தூரத்திலிருந்து பார்த்த ஏ.பி.என்.னுக்குக் குறை ஏதும் தெரியவில்லை. 'மைக்'கில் அதே ஓசை.

திடீரென்று உதவி இயக்குநர் என்னிடம் ஓடி வந்தார். பொம்மைத் தலைக்குள் கையை விட்டு எதையோ எடுத்துக்கொண்டு கீழே ஓடினார். ''இப்போது பாருங்கள்... சரியாக இருக்கும்'' என்றார்.

காமிரா ஓடியது. வசனம் பேசி நடித்தேன். ஷாட் ஓ.கே. ஆனது! தலைக்குள் அவர் கையைவிட்டு எடுத்தது, பம்பரம் அளவுள்ள ஒரு கல். விஷயம் என்னவென்றால், முருகன் வேடத்தில் ஒருபுறம் மூன்று தலையும், மறுபுறம் இரண்டும் மாட்டும்போது, மூன்று தலைப்பக்கம் கனத்தால் கீழே இறங்குவதைச் சரிசெய்ய, இரண்டு தலைப் பகுதியில் பொம்மைத் தலைக்குள் ஒரு கல்லைப் போட்டிருந்திருக்கிறார்கள்!

---

11



# நடிப்பா? ஓவியமா?

**வா**ழ்க்கையில் மிகச் சிறந்த ஓவியனாக உருவாக வேண்டும் என்பதே, பதினைந்து வயதில் எனக்குள் இருந்த லட்சியம். தரையில் மணல் பரப்பி, ஆள்காட்டி விரலால் அ.ஆ.இ.ஈ.....என்று எழுதக் கற்றபின் சிலேட், பென்சில் கட்டத்துக்கு வந்தபோதே ஆடு, மாடு,

பூனை, ரயில் – இவற்றை என் கற்பனைக்குத் தோன்றியபடி வரைந்தது இன்னும் நினைவில் இருக்கிறது.

உயர்நிலைப் பள்ளிக்கு வந்தபோது, முதுகெலும்பை வரைவது எல்லா மாணவர்களுக்கும் தலைவலியாய் இருந்தது. ஆளுக்கு ஒரு சாக்லேட் வீதம் வாங்கிக்கொண்டு அரை மணி நேரத்தில் அத்தனை பேருக்கும் முதுகெலும்பை வரைந்து கொடுத்தபோது, என் முதுகெலும்பு பெருமையால் நிமிர்ந்து நின்றது! பொறியியல் கல்லூரியில் சேரத் திட்டமிட்டு, வகுப்பில் முதல் ஐந்து இடங்களைப் பிடிக்கும் மாணவர்களாகிய நாங்கள் (நான் நாலாவது, ஐந்தாவது இடத்தில்தான் இருப்பேன்) 'காம்போசிட் மாத்ஸ்' எடுத்துப் படித்தோம்.

எஸ்.எஸ்.எல்.சி.யில் தேறியபோது, ''படிப்பில்தான் நீ ஐந்தாவது இடத்தில் இருக்கிறாய். ஓவியத்துறையில் நுழைந்தால் என்றும் முதலிடத்தைப் பெற முடியும்'' என்று மூத்த மாணவர்கள் அறிவுரை வழங்கினார்கள்.

'இந்து' நாளிதழைப் புரட்டினேன். 'ஸ்கூல் ஆஃப் ஆர்ட்ஸ் – சென்னை, என்ற பெயரில், அரசு நிறுவனம் ஓவியக்கலை பயிற்றுவிப்பது பற்றிய விளம்பரம் தென்பட்டது.

அந்நாளில், அந்த நிறுவனத்துக்கு – கடற்கரையில் உழைப்பாளர் சிலை, காந்தி சிலையை வடித்த – வங்கச் சிற்பி தேவிபிரசாத்ராய் சவுத்திரி, பிரின்சிபாலாக இருந்தார். உடனே விண்ணப்பித்தேன்.

'விண்ணப்பம் தாமதமாக வந்ததால், நுழைவுத் தேர்வு எழுதும் வாய்ப்பு போய்விட்டது. அடுத்த ஆண்டு விண்ணப்பிக்கவும்' என்று பதில் வந்தது.

அதன் பிறகு சென்னை வந்து, நடிகர் திலகம் சிவாஜியின் சிபாரிசில் 'மோகன் ஆர்ட்ஸ்' என்னும் விளம்பரக் கம்பெனியில் பத்து மாதம் பயிற்சி பெற்ற அனுபவத்துடன் ஓவியப் பள்ளியில் சேர்ந்தேன்.

ஆறு ஆண்டு தேர்ச்சி பெற்றபின் ஓவியக் கலையில் ஒரு குழப்பம் ஏற்பட்டது எனக்கு.

தேசத் தலைவர்களையும், நேரில் காணும் எந்த மனிதரையும், வாட்டர் கலரிலும், ஆயில் கலரிலும் ஓவியமாக, தத்ரூபமாக என்னால் தீட்ட முடியும்.

தமிழகத்தின் பிரசித்தி பெற்ற கோயில்களையும், சிற்பங்களையும், இயற்கைக் காட்சிகளையும் அதே இடங்களுக்குச் சென்று, வண்ணப் புகைப்படத்தில் காணும் அளவுக்கு நுணுக்கமாக, அழகாக வரைந்திருக்கிறேன்.

ஆனால், இவற்றை இந்தியாவிலுள்ள எந்த ஓவியக் கண்காட்சியிலும் அனுமதிக்க மாட்டார்கள். மாடர்ன் ஆர்ட் என்னும் நவீனபாணி ஓவியங்களையே கண்காட்சியில் அனுமதிப்பார்கள்; சிறந்த நவீன ஓவியத்துக்குப் பரிசும் கொடுப்பார்கள்.

டெல்லியில் உள்ள லலித கலா அகாடமி எக்ஸிபிஷனில் 'ரியலிஸ்டிக்' பாணியில் தீட்டப்பட்ட என் ஓவியங்கள் என்றுமே அனுமதிக்கப்பட்டதில்லை.



மகாபலிபுரம் – திருக்கழுக்குன்றம் ஓவியம் தீட்ட சைக்கிளில் சென்றபோது...

அரசு மட்டத்திலுள்ள, ஓவியக் கலையின் பாதுகாவலர்களின் பரிசு, நான் வரைகின்ற பாணிக்கு என்றுமே கிடைக்காது. அவை 16ஆம் நூற்றாண்டு பாணியைச் சேர்ந்தவை என்று முத்திரை குத்தப்படுகின்றன; அல்லது 'இல்லஸ்ட்ரேஷன்' வகை என்று ஒதுக்கப்படுகின்றன.

அறுபது ஆண்டுகளுக்கும் மேலாக ஓவியக் கலைக்குச் சேவை செய்து வரும் கோபுலு, மறைந்த மேதைகள் சில்பி, கே. மாதவன் மணியம் போன்றோர் லட்சக்கணக்கான மக்களிடையே புகழ் அடைந்தவர்கள்.

அவர்களை, அவர்களின் ஓவியங்களை, அரசு மட்டத்திலுள்ள ஓவியக் கலை நீதிபதிக் குழு அங்கீகரிப்பதில்லை. ஓவியர்களாக மதிப்பது மில்லை.



ஐந்து ரதங்கள் மாமல்லபுரம்

அதே சமயம், பாரத அரசாங்கத்தின் பரிசுகள் பல பெற்ற இந்தியாவின் தலை சிறந்த நவீன ஓவியர் களை, பெரும்பாலான மக்களுக்குத் தெரி யாது. அவர்களுடைய ஓவியங்கள் மக்க ளைக் கவர்வது மில்லை. என் நிலை தர்மசங்கடமாகியது. நான் மக்களுக்காக ஓவியம் தீட்ட வேண்டுமா? அரசின் பரிசை நோக்கி நவீன ஓவியக் கலையில் ஈடுபட வேண்டுமா?

மக்களுக்காக வரைந்தால் சம்பாதிக்கவும் செய்யலாம். பிரபலமும் ஆகலாம். பரிசுக்காக வரைந்தால் எல்லா நேரமும் பரிசு கிடைக்கும் என்று சொல்ல முடியாது. என் ஓவியத் திறமை மக்களுக்குத் தெரியாது.



1962–ல் 8 மணி நேரம் உட்கார்ந்து தீட்டிய தஞ்சை பெரிய கோயில்

வியாபாரத் திரைப்படங்கள், கலைப்படங்கள் பிரச்சினை அங்கும் ஏற்பட்டது. எந்தப் பாணி ஓவியனாக நான் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளப் போகிறேன் என்று குழம்பிக் கொண்டிருந்த நேரத்தில்தான், என் ஓவிய ஆசிரியராக அன்று இருந்த ஏ.பி. சந்தானராஜ் (பின்னர் ஓவியக் கல்லூரி முதல்வர்) ''நீ நடிப்புத் துறையில் தைரியமாக இறங்கு. பிரகாசமான எதிர்காலம் உனக்குக் காத்துக் கொண்டிருக்கிறது'' என்று வாழ்த்தி அனுப்பினார்!



பாண்டி – டியூப்ளே சிலையும் தெருவும் – 1961

திரைப்படத்துறையில் நான் நுழைந்து நாற்பது ஆண்டுகள் முடிந்து விட்டன. 'ஐயோ, எனக்குப் படங்கள் இல்லையே! என் எதிர்காலம் என்ன ஆகுமோ...?' என்று சஞ்சலப்படும் நிலையை ஆண்டவன் எனக்குத் தரவில்லை. அதற்காக அவனுக்கு நான் என்றும் நன்றிக்கடன் பட்டிருக்கிறேன். -

அந்நாட்களில் திரைப்பட உலகில் எந்தப் பிரிவிலும் புதுமுகங்கள் நுழைவது கடினம். எப்படி முன்னுக்கு வருவது...?

கதாநாயகனாக, கல்லூரி மாணவனாகத் தோன்றும் உருவமுமில்லாமல், பள்ளி மாணவன் கட்டத்தைத் தாண்டிய நிலையில், ரெண்டுங்கெட்டான் தோற்றம் அப்போது எனக்கிருந்தது.

சினிமாத் துறையில், ஒவ்வொரு பெரிய கலைஞரிடமும் ஒவ்வொரு விஷயம் என்னைக் கவர்ந்தது.

எந்த வயதிலும் இளமை மாறாத தோற்றத்தைக் காப்பாற்றி வைத்துக் கொண்டு, கடைசிவரை கதாநாயகனாக, நல்ல லட்சியங்கள் உடையவனாக, எம்.ஜி.ஆர். நடித்த விதமும் அவர் பழகும் பண்பும் என்னைக் கவர்ந்தன.

நடிப்பின் பரிமாணங்கள் அத்தனையையும் துல்லியமாகத் தம் ஒப்பற்ற நடிப்பாற்றலால் விளக்கி, இருபது வயதில் அறுபது வயது தசரதன் வேடமேற்றாலும், அந்த வேடத்துக்கு உயிரூட்டும் சிவாஜியின் அபரிமிதமான திறமை மெய்சிலிர்க்க வைத்தது!

வளரும் என்னைப் போன்ற அந்நாளைய புதுமுகங்கள், இந்த இருவரில் யாராவது ஒருவரைச் சார்ந்து இருந்தால், பாதுகாப்பாகவும் எதிர்காலம் பற்றிய பயமில்லாமலும் இருக்கலாம் என்று ஆசைப்பட்டு, அவர்கள் ஆசியுடன் – அரவணைப்புடன் காலம் தள்ள விரும்பினார்கள்.



திருமலை நாயக்கர் மகால் – மதுரை

எம்.ஜி.ஆரும், சிவாஜியும் அடிப்படையில் உயிர்ச் சகோதரர் கள்! ஒரே செடியில் பூத்த இரு மலர்கள்!

அதே சமயம் தொழில் போட்டி என்று வரும்போது, தனித் தனியே இயங்க வேண்டிய கட்டாயத்தில் இருந்தனர்.

இருவரின் சிறப்பம்சங்களுமே என்னை வெகுவாகக் கவர்ந்த நிலை யில், இரு கலைஞர்களின் நல்லாசி யுடன் இருவர் சம்பந்தப்பட்ட படங்களிலும் அவர்களோடு நடிக் கவே ஆசைப்பட்டேன்.

1968ஆம் ஆண்டு துணைப் பாத்திரங்களில் நடிக்க எனக்கு நான்கு படங்களே ஒப்பந்தமாயின. அவை நம்பிக்கையூட்டும் வேடங் களும் இல்லை. மாதத்தில் நான்கு ஐந்து நாள்கள் வேலையிருந்தால் பெரிய விஷயம்...!

ஒரு படத்தில் நடிக்க அப்போது எனக்குச் சம்பளம் 1,500 ரூபாய் முதல் 4,000 ரூபாய்க்குள், வேடத்துக்குத் தக்கபடி தரப்பட்டது.



1962–ல் 3 மணி நேரத்தில் தீட்டிய திருச்சி மலைக்கோட்டை

மாதத்தில் இருபத்தைந்து நாள் தெருவையே வெறித்துப் பார்த்தபடி ஓட்டுவது கடினமாக இருந்தது.

ஊரில் ஆசிரியர் நண்பர் குமாரசாமி, காந்திதாஸ், குமரேசன் போன்றோருக்கு என் நிலையை விளக்கிக் கடிதம் எழுதினேன்.

'நீ சென்னைக்குப் போனது ஓவியனாக உருவாகத்தான். ஆறு வருடம் படித்து 'முதல் தர மாணவன்' என்று டிப்ளமோ வாங்கியிருக்கிறாய். எந்தக் கம்பெனியில் வேலைக்குச் சேர்ந்தாலும் ஆரம்பக் கட்டத்திலேயே மாதம் 3,000 ரூபாய் உன்னால் சம்பாதிக்க முடியும்.

'சினிமா சந்தர்ப்பம் உனக்கு இடையில் வந்ததுதானே. அடிப்படை தெரியாமல் அதிர்ஷ்டத்தால் கிடைத்த வாய்ப்பு. தெரியாத துறையில் எதிர்காலம் சிறப்பாக இருக்குமென்று பகல் கனவு கண்டு கொண்டிருப்பதை விட, தெரிந்த தொழிலில் தன்னம்பிக்கையோடு இறங்குவதே புத்திசாலித் தனம்' – என்று நீண்ட கடிதம் எழுதி விட்டார் குமாரசாமி.

ஒரு வாரம் அவரது லெட்டர் என்னைத் தீவிரமாகச் சிந்திக்க வைத்தது. 'நடிப்பு எனக்குச் சம்பந்தமில்லாத ஒன்றா? நடிக்க வேண்டிய

ஆர்வமும் திறமையும் உண்மையிலேயே என்னிடம் இல்லையா? இது ஒரு விபத்தா...?'

சிந்தனை முடிவில், என்னுள் ஒரு தெளிவு ஏற்பட்டது. அதை அப்படியே அவருக்குப் பதிலாக எழுதினேன்.

''அன்பு அண்ணா! நினைவு தெரிந்த நாளிலேயே வருங்காலத்தில் சினிமா நடிகனாகத்தான் ஆவேன் என்று நான் முடிவு கட்டவுமில்லை. கனவு காணவுமில்லை.

அதே சமயத்தில் ஆண்டுக்கு இருமுறை பொங்கல், தீபாவளி நாள்களில் மட்டும் நான் படம் பார்க்க அனுமதிக்கப்பட்ட போதிலும், பார்த்த அந்தப் படங்கள் என் மனத்தில் ஏற்படுத்திய பாதிப்பை மறுப்பதற்கில்லை.

தேவதாஸ், பரா்சக்தி, ஔவையார், மலைக்கள்ளன், மதுரை வீரன் படங்களின் போஸ்டர்களைப் பார்த்து மெய்மறந்து நின்ற நினைவுகளைத் தள்ளுவதற்கில்லை!

பிஞ்சு வயதில் பராசக்தி, மனோகரா, ராஜாராணி, வணங்கா முடி, இல்லற ஜோதி – பட வசனங்களைத் திருட்டுத்தனமாக மனப்பாடம் செய்து பள்ளி மாணவர்களை நான் அசத்தியதை அசட்டை செய்ய முடியாது.



ஏசுவின் பிறப்பு. F. MATANIA தீட்டிய ஓவியத்தைப் பார்த்து நான் வரைந்தது – 1960

சினிமா என்னையறியாமல் என்னுள்ளே புகுந்து இடம் பிடித்துக் கொண்டிருந்திருந்தது:

இதுவரை எனக்குச் சந்தர்ப்ப மளித்த படங்களில் நான் தலையை மட்டுமே காட்டியிருக்கிறேன். நடிப்பை நான் இன்னும் வளர்த்துக் கொள்ளவுமில்லை. என் நடிப்பை முழுமையாக வெளிப்படுத்திய படம் வரவுமில்லை.

வெளி வந்த படங்களில் அரை குறையான என் நடிப்பையும் என் தோற்றத்தையும் பார்த்து விட்டுப் பல ரசிகர்கள் எனக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள்.



ஓவியர் சந்தானராஜ்

'தயாரிப்பாளர்களும், டைரக்டர்களும் உங்களுக்கு நல்ல வேடங்கள் கொடுத்தால் நீங்களும் பிரகாசிப்பீர்கள்' என்று எழுதுகிறார்கள்.

தமிழகத்தின் எங்கோ ஒரு மூலையில் இருக்கும் ரசிகருக்கு என்மீது நம்பிக்கை இருக்கிறது. என் எதிர்காலம் பற்றிய ஒரு கணிப்பு இருக்கிறது,

'செலுலாய்டில்' அந்த நிழலுக்கு உருக்கொடுத்த நான், அவ்வளவு சீக்கிரத்தில் நம்பிக்கையை இழக்கலாமா?

கஷ்டப்படாமல் கிடைக்கும் பணமும் புகழும் நிரந்தரமாகுமா? நிலையான மகிழ்ச்சியைத்தான் தருமா?

இப்போது கைவசம் ஐயாயிரம் ரூபாய் இருக்கிறது. மாதம் ஒன்றுக்கு ஊரிலிருந்து வந்த மணியார்டர் 85 ரூபாயை வைத்துக்கொண்டு 7 ஆண்டுகள் இந்தியா முழுக்கச் சுற்றி, ஓவியக்கலை பயின்றவன் நான்.

மாதம் 200 ரூபாய் வீதம் சிக்கனமாகச் செலவு செய்து, இரண்டு ஆண்டுகள்வரை நடிப்புத்துறையிலேயே போராடுகிறேன்.

அதற்குப் பிறகும் வாய்ப்பு திருப்திகரமாக வரவில்லையென்றால் Pan - Cake ஐ மறந்துவிட்டு ப்ரஷ்ஷை எடுத்துக்கொண்டு பழைய தொழிலுக்கே போய்விடுகிறேன்...' என்று எழுதி அனுப்பினேன்...!''

கடிதத்தில் குறிப்பிட்ட இரண்டாண்டுவரை சோதனை தொடர வில்லை. அவ்வாண்டு இறுதியில், பாதியில் நின்று போயிருந்த ஏ.வி.எம்.மின் 'உயர்ந்த மனிதன்' படம் முடிவடைந்து வெற்றிகரமாக வெளிவந்து வாழ்வில் ஒளி சேர்த்தது.

## 12



# கவிஞர் படம் – கதாநாயக அனுபவம்

கவிஞர் கண்ணதாசன் பாய்மீது கம்பீரமாக உட்கார்ந்திருக்கிறார். 'சந்ததி' படத்தின் படைப்பாளி கௌசிக்கும், மேஜர் சுந்தரராஜனும் எதிரே அமர்ந்திருக்கிறார்கள்.

'சந்ததி' படத்துக்கு ஓர் உருக்கமான தத்துவப் பாடல் வேண்டும். ஹீரோவின் தந்தை பாரிஸ்டர். சிறந்த அறிவுக் கூர்மை மிக்கவர். பலசாலி. சுகபோகங்களில் அதிகம் ஈடுபாடு உடையவர்.

மகன் தூய்மைக்கு உதாரணமானவன்!

பரம்பரைத் திமிர் பேசும் பாரிஸ்டர். தன் மகனுக்கு வரும் அத்தனை சம்பந்தங்களையும் அலட்சியமாக ஒதுக்கி விடுகிறார். ஒரு கட்டத்தில் மகன் உடல்நிலையில் கோளாறு தென்படுகிறது.

மருத்துவப் பரிசோதனையில் அவனுக்கு ரத்தப் புற்றுநோய் எனச் சொல்லப்படுகிறது. தன் வம்சம் அழிந்துவிடக் கூடாதே என்ற வெறி தலைதூக்குகிறது பாரிஸ்டருக்கு.

அலட்சியப்படுத்திய பெண் வீட்டாரைத் தேடி, அவரே இப்போது வலிய செல்கிறார். அவரது துரதிர்ஷ்டம், மகனுக்கு வந்துள்ள வியாதி பற்றிய செய்தி ஏற்கனவே அவர்களுக்கு எட்டி விட்டிருந்தது.

ஒரு உபாயம் செய்கிறார் அவர்! பம்பாயில் காசுக்கு உடலை விற்கும் ஒரு பெண்ணை அழைத்து வந்து 'டெல்லியிலிருக்கும் என் நண்பர் மகள் இவள்' என்று மகனுக்கு அறிமுகப்படுத்தித் திருமணத்தை முடித்து விடுகிறார்.

உச்சகட்டத்தில், மகன் இறக்கும்முன் அவனுக்குத் தந்தையின் நாடகம் அனைத்தும் புரிகிறது. அவன் உயிரை விடும்போது மனைவிக்கு வாரிசு பிறந்து விடுகிறது.

காசுக்குப் பிள்ளை பெற வந்தவள், தாய்ப் பாசத்தால் குழந்தையைப் பிரிய மறுத்தபோது, அந்தஸ்து பற்றிப் பேசும் பாரிஸ்டரே ஒரு தெருக் கூத்து நடிகைக்குப் பிறந்தவர் என்ற உண்மை வெளியாகிறது...!

''அண்ணே, புற்றுநோயை மையமாகக் கொண்ட கதை...! மரணவாயிலில் அமர்ந்திருக்கும் பிள்ளை பாடும் பாடல் இது. பல்லவியிலேயே புற்றுநோய் பற்றிய வார்த்தைகள் விழுந்தால் நன்றாக இருக்கும்'' என்கிறார் மேஜர்.

ஒரு விநாடிதான் யோசனை: 'எழுதிக் கொள்ளுங்கள்' என்கிறார் கவிஞர்.

**'என்னிடத்தில் அன்புற்று நோய்கொடுத்தான் இறைவன்**
**சந்ததியில் விருப்புற்று நோய்கொண்டான் தந்தை**
**அப்போது புரியவில்லை ஆண்டவனின் வடிவம்**
**இப்போது வருகிறது இறைவனவன் கடிதம்...'**

'தன்னோட வாழ்க்கையில் நடந்த துயரச் சம்பவங்களை நினைச்சு, அவன் உருகுகிறாற்போல ஏதாவது ஒரு சரணத்தில் மொத்தக் கதையையும் சுருக்கமாச் சொன்னா நல்லா இருக்கும்' என்கிறார் படைப்பாளி கௌசிக். (பெருமாள்)

சில விநாடிகள் சிந்திக்கிறார். அருவி மழை பிய்த்துக்கொண்டு பாய்கிறது.

'இரவுக்கு வாழ்ந்த பெண்களில் ஒருத்தி
உறவுக்கு வந்தது என்வீடு – அதில்
வரவுக்கு ஒன்றை வைத்த பின்னாலே
செலவில் முடிந்தது என் ஏடு'

– இப்படி எத்தனை கதைகளுக்கு, எவ்வளவு சம்பவங்களுக்கு, எத்தனை ஆயிரம் பாடல்களைக் கவிஞர் எழுதியிருப்பார்! நம் கால கட்டத்திலே அவர் ஒரு மாபெரும் கவி!

அந்தக் கவிஞருக்கு, 'டீன் ஏஜ்' தோற்றத்தில் அன்றிருந்த என்னைக் கதாநாயகனாக வைத்து ஒரு படம் எடுக்க ஆசை தோன்றிற்று.

நாட்டுக்காகத் தன் வாழ்வை அர்ப்பணிக்கும் ஒரு போர் வீரனைப் பற்றிய கவிதை நயம்மிக்க அந்த ரஷ்யப் படத்துக்குப் பெயர், 'Balad of a Soldier.' எனது ஜோடியாகத் திருமதி புஷ்பலதா நடித்தார்.

1966-ல் 'தாயே உனக்காக' என்ற பெயரில் வெளிவந்த அந்தப் படத்தில் எம்.ஜி.ஆர். தவிர, அந்நாளில் தமிழகத்தில் பிரபலமாக இருந்த அத்தனை பெரிய நடிக நடிகையரும் கௌரவ வேடத்தில் நடித்தனர்.

போர்முனையில், நெருக்கடியான ஒரு கட்டத்தில், இரண்டு 'டாங்க்'குகளை வெடிவைத்துத் தகர்த்த தீரச் செயலுக்காக அந்த இளைஞனுக்குப் பரிசொன்று தர ஆசைப்பட்டு ''என்ன வேண்டும்? கேள்!'' என்கிறார் ராணுவ தளபதி.

பால்மணம் மாறாத அந்த இளைஞன். ''அம்மாவைப் பார்க்க வேண்டும்'' என்கிறான். யுத்த நெருக்கடி தீராத நிலையிலும் அவன் வயது கருதி விசேஷ அனுமதியில் பத்து நாள் லீவு கொடுத்துத் தாயாரைப் பார்த்து வர அனுமதிக்கிறார்.

செய்தி அறிந்த சக தோழர்கள் – சென்னை, சேலம், கோவை, மேட்டுப்பாளையத்தில் வசிப்பவர்கள் – தத்தம் வீடுகளுக்குச் சென்று குடும்பத்தினரைப் பார்த்துவரச் சொல்கிறார்கள்.

நண்பர்களின் வீடுகளுக்குச் சென்றுவிட்டுத் தாயைச் சந்திக்கும் போது அவனுக்குப் பத்து நிமிடமே மிஞ்சுகிறது.

நடிப்பு அனுபவமோ, நடிகர்கள் பழக்கமோ இல்லாத புத்தம் புதுமுகமாக இருந்த எனக்கு, அது மூன்றாவது படம்!

படப்பிடிப்புத் தளத்தில் பிரபல கலைஞர்கள் அமர்ந்திருக்கும்போது நேரே சென்று என்னை அறிமுகப்படுத்திக் கொள்ளும் தகுதியும் எனக்கு அப்போது இல்லை! தைரியமும் இல்லை.

சூழ்நிலையினைச் சுமுகமாக அமைத்துக் கொள்ளாவிட்டால், நடிக்கும்போது பதற்றம் முகத்தில் தெரிந்துவிடும். படம் பூராவும் வருகிற வேடம் இது.

பளிச்சென்று தெரிந்த ஒரு வழி மொத்த ஸ்கிரிப்டையும் மனப் பாடம் செய்து கொள்வதுதான்.

இக்காலத்தைப்போல, அன்று செட்டில் முன்பின்னாக உளறி விட்டு 'டப்' செய்யும்போது உச்சரிப்பைச் சரிசெய்யும் வாய்ப்பு கிடையாது.

தெளிவாக வசனங்களைப் பேசியே ஆகவேண்டும். முகபாவத்தில் கொஞ்சம் முன்பின்னாக இருந்தால்கூடப் பரவாயில்லை. வசனம் பேசுவதில் பதற்றமோ, உளறலோ இருக்கக்கூடாது. எனவே படத்தில் அத்தனை கலைஞர்களும் பேசும் மொத்த வசனத்தையும் அதிகாலை எழுந்து மனப்பாடம் செய்து வைத்துக்கொண்டேன்.

படப்பிடிப்புத் தளத்துக்குள் சிவாஜி வந்தால் புலி வருவதுபோல் தோன்றும். முத்துராமன், மேஜர் சுந்தரராஜன், தேவிகா சம்பந்தப்பட்ட திருமணக் காட்சியில், ஏகப்பட்ட கூட்டத்தின் நடுவில் நிற்கும்போது படித்த வசனமெல்லாம் மறந்துவிட்டது போன்ற பிரமை ஏற்படும்.

பத்மினியை விதவையாக, எதிர்பாராமல் சந்திக்கும் காட்சியில் அந்த அம்மையாரின் வெள்ளைப் புடவைத் தோற்றத்தையும் காட்சியின் சூழ்நிலையையும் (ஏற்கனவே தெளிவாகத் தெரிந்ததால்) நினைத்தபோது 'கிளிஸரைன்' போடாமலே பல முறை அழுததால் காக்கிச் சட்டை நனைந்து அசிங்கமாகத் தெரிந்தது.

டைரக்டர் புல்லய்யா கோபித்துக் கொண்டார். ''நல்லாத்தான் நடிக்கறே... ஆனா, பிரேமுக்கு வெளியே போய் நடிக்கறே! முண்டம்! காமிரா பிரேமுக்குள்ள நடிச்சாத்தானே படத்தில் விழும்!'' என்றார்.

தாஸ் என்பவர் அன்று எங்கள் படத்துக்குப் புரொடக்ஷன் நிர்வாகி யாக இருந்தார்.

''தாஸ் அண்ணே! சினிமாவில் எத்தனை வருஷம் சர்வீஸ்?'' என்று கேட்டேன்.

'''மனோகரா' படம் பார்த்திருக்கியா...? சிவாஜி தர்பார் ஸீன் ஞாபகம் இருக்கா...? அப்போ எல்லாம் சிவாஜிக்கு நான் உதவியாளராக இருந் திருக்கேன்...'' என்றார்.

டென்சிங்கும் ஹில்லாரியும் இமயமலை உச்சியைத் தொட்டதுகூட எனக்கு அவ்வளவு அதிசயமாகப் படவில்லை!

அந்த தாஸின் நட்பைப் பிடித்துக்கொண்டு, 'இணைத் தயாரிப்பாளர் முருகேச முதலியாருக்குக் காலையில் 6 மணிக்கு வண்டி அனுப்பணும்.

'டைரக்டர் புல்லய்யா வர்ற வண்டியிலேயே அவரது துணைவியார் சாந்த குமாரியை அழைச்சிக்கிட்டு வந்து சீக்கிரமா மேக்கப் போடச் சொல்லணும்.'

'கூட்ஸ் வண்டி ஷாட் எடுக்கணும்னா 70 மைல் தொலைவிலுள்ள நகரி–புத்தூர் ரயில்வே ஸ்டேஷனுக்குக் காலையில் 8 மணிக்கெல்லாம் யூனிட்டோட ரெடியா இருக்கணும்' – என்று புரொக்ராம் எல்லாம் போடுவேன்.

சேலம் ஏற்காடு மலைப்பகுதியில் உச்சகட்ட காட்சி படமாக்கப் பட்டது. மகன் வருவான் வருவான் என்று பத்து நாளாகக் காத்திருந்த தாய், உண்மையிலேயே மகன் பத்து நிமிட அவகாசத்தில் வீடு வந்த போது, கூலி வேலைக்குப் போய் விடுகிறாள்.

திருமதி புல்லையாதான் எனது தாயாராக நடித்தார். விதவை வேடத்தில் நடித்த அவரது தாலிக்கயிறு, ஜாக்கெட்டை மீறி அவ்வப்போது வெளியே தெரிந்தது!

பொதுவாக, டைரக்டர்கள் எல்லாருமே படபடப்பானவர்கள், உணர்ச்சிவசப்படக் கூடியவர்கள், கோபக்காரர்கள்தான். ஏ.பி.என்., பீம்சிங், ராமண்ணா, திருலோகசந்தர் போன்றோர்தான் விதிவிலக்காக, சாந்தமாக செட்டில் இருப்பவர்கள்.

தாலி வெளியே தெரிந்ததும், தாத்தா வயதிலிருந்த புல்லையா, மனைவி மீது பாய்ந்து, மின்னல் வேகத்தில் அதைக் கழட்டித் தூர எறிந்து விட்டார்.

சாந்தகுமாரி. ''ஐயோ! தாலிங்க அது'' என்று கூச்சலிட, ''குத்துக் கல்லு மாதிரி நான் உயிரோட இருக்கேன். நான் செத்தாத்தான்டி அதைப் பத்திக் கவலைப்படணும். வேற தாலி கட்டறேன் ஒழுங்கா நடி'' என்று அதட்டினார். காட்சி நன்றாக அமையவேண்டும் என்பதுதானே படைப் பாளியின் நோக்கம்!

ஒரிஜினல் மிலிட்டரி ஷூவோடு க்ளைமாக்ஸில் பள்ளத்தாக்கில் வேகமாக ஓடியபோது, கால் இடறிக் கீழே விழுந்து விட்டேன். ஐந்து நிமிஷத்தில் சரேலென, கணுக்கால் பகுதி வீங்கிவிட, ஷூவைக் கழட்ட முடியாமல் அறுத்து எடுக்க வேண்டியதாகிவிட்டது.

நொண்டிக்கொண்டே படத்தை முடித்துவிட்டு, புத்தூருக்குச் சென்று பச்சிலைக் கட்டுப் போட்டுக்கொண்டு நான்கு மாதம் வீட்டிலே படுத்திருந்தேன்.

''டேய் பேபி..., (பேரன் வயதிலிருந்த என்னை டைரக்டர் அப்படித்தான் அழைப்பார்) நடிகன் வாழ்க்கை, ரேஸ்ல ஓடற குதிரை மாதிரி! ஆரோக்கியமாக இருந்து மைதானத்தில ஓடற வரைக்கும்தான் அதுக்கு மரியாதை! அடிபட்டுக் கால் உடைஞ்சாலோ, வேறு ஆபத்து நேர்ந்தாலோ அந்தக் குதிரையைச் சுட்டுடணும்.

''அதுமாதிரிதான் கலைஞர்கள்...! உடம்புதான் உங்களுக்கு மூலதனம். அதுக்கு எந்த ஊறும் விளையாமப் பாத்துக்க'' என்று வாஞ்சையோடு அறிவுரை கூறியது இன்னும் பசுமையாக நினைவிருக்கிறது.

தி. நகர், கிருஷ்ணவேணி தியேட்டரிலும் படம் வெளியானது. வழக்கறிஞர் நண்பர்கள் சுப்ரமணிய ராவ், ஸ்தனிஸ்லாஸ், பாலாபழனூர் ஆகியோரை அழைத்துக்கொண்டு போயிருந்தேன்.

சிவாஜி, பத்மினி, எஸ்.எஸ்.ஆர்., விஜயகுமாரி, முத்துராமன், தேவிகா, மேஜர், நாகேஷ், மனோரமா, வி.கே.ஆர்., ஜெயலலிதா என்று பிரபலங்கள் அனைவரின் 'கட் - அவுட்' பேனர்களை வைக்கவே தியேட்டரில் இடம் போதவில்லை. கதாநாயகனாக நடித்த புதியவன் தலையை எங்கு வைப்பார்கள்!

பாவம்! பேனரில் ஏதோ ஒரு இடுக்கில் வேண்டா வெறுப்பாக, சாணி கலரில் ஒரு காக்கிச் சட்டை உருவம் தெரிந்தது. அது நான்தான் என்று முடிவு செய்து கொண்டேன்.

எல்லா நடிகர்களின் பெயர்களையும் பத்திரிகைகளில் விளம்பரப் படுத்தியவர்கள், அத்தனை பேரும் கௌரவ வேடம் என்பதைத் தெரிவிக்க மறந்து விட்டார்கள்.

விளைவு, படம் திரையில் விழுந்த 20 நிமிடங்களில் சிவாஜியின் பாகம் முடிவடைந்துவிட, ஆர்வத்தோடு வந்த சிவாஜி ரசிகர்கள் ஏமாற்றத்தைத் தாங்க முடியாமல், ''போச்சுடா! 2.50 டிக்கெட் வீணாப் போச்சு...! வாங்கடா போகலாம்'' என்று பின் வரிசையிலிருந்து மடமடவென்று நாற்காலிகளைக் காலி செய்து விட்டனர். அவர்கள் செய்கை எனக்கு ஒன்றைத் தெளிவுபடுத்தியது–

''நாம் செல்ல வேண்டியது வெகுதூரம் இருக்கிறது, நடிப்பால் மக்களை ஈர்ப்பது சாதாரண விஷயமல்ல...!''

---

## 13



# உயர்ந்த மனிதர் ஏ.வி.எம்.

'நல்லது என்று தோன்றுவதை உடனே செய்துவிடு. நெஞ்சில் துணிவு இருப்பின் மனிதன் எதையும் சாதிக்கலாம். வாழ்க்கைக்குக் கடவுள் பக்தி எவ்வளவு முக்கியமோ அந்த அளவு எளிமையும் முக்கியம்.'

'திறமை எங்கிருப்பினும் தேடிச்சென்று பாராட்ட வேண்டும். விமரிசனத்தை வெறுக்கும் எந்தக் கலையும் வளராது.'

– இந்தக் கொள்கைகளை வாழ்க்கையில் கடைப்பிடித்து வாழ்ந்து காட்டியவர், மேனா என்று வாஞ்சையோடு, திரையுலகினரால் அழைக்கப் பட்ட ஏ.வி. மெய்யப்பச் செட்டியார். அவர்கள்...

அந்த மேதையின் எண்ணங்களுக்குச் செயல் வடிவம் கொடுத்து, அத்தனை திரைப்படங்கள் உருவாவதற்கும், பல்வேறு படங்களின் படப்பிடிப்புகள் இன்றும் குழப்பமில்லாமல் நடப்பதற்கும் காரண மானவர், முதுகெலும்புக்கு ஒப்பானவர் – அன்பிற்கும் மதிப்பிற்கும் உரிய ரங்கசாமி ஐயங்கார்.



ரங்கசாமி அய்யங்காருடன்

1965இல் சென்னையில், நெரிசலான புதுப்பேட்டையில் குறுகலான ஒரு தெருவில், மாதம் 15 ரூபாய் வாடகை கொடுத்து, நான் தங்கிப் படித்து வந்த வீட்டைக் கண்டுபிடித்து, ஏவி.எம். ஸ்டூடியோவுக்கு என்னை முதன் முதலாக அழைத்துச் சென்றபோதும் சரி, 196 படங்களை முடித்துத் திரையுலகில் நான் தொடர்ந்து பணியாற்றும் இந்நாளிலும் சரி அதே உபசரிப்பு, அதே மரியாதை, பாசம் மிக்க அரவணைப்பு!

இன்று, கிராமப்புறத்திலிருந்து வந்து, கணக்கு வழக்கு ஒன்றும் தெரியாத அரைகுறை நபர்களெல்லாம் ஒரு படத்திற்குப் புரொடக்ஷன் மானேஜராக இருந்துவிட்டு, உடனே சொந்தப் படம் தயாரிக்கும் அளவுக் குத் தங்களைத் 'தேற்றி'க் கொள்ளுகிற காலகட்டத்தில் – கிட்டத்தட்ட ஐம்பது ஆண்டு காலமாக ஸ்டுடியோ நிர்வாகத்தைத் தவிர வேறு எந்தத் துறையிலும் மனத்தை ஈடுபடுத்தாமல், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற முதுமொழிக்கு இலக்கணமாக வாழ்ந்துவரும் அந்தப் பெரியவரைப் பார்க்கும்போதெல்லாம் கைகூப்பி வணங்கத் தோன்றும்.

திரு. மேனா திட்டமிட்டுக் கொடுக்கும் வேலைகளை ரங்கசாமி ஐயங்கார் ஏற்றுக்கொண்டதும், அதைச் செய்துமுடிக்க எவ்வளவு பணம் வேண்டும், எவ்வளவு ஆட்கள் வேண்டும், எவ்வளவு நாள்கள் ஆகும் என்பதைக் கச்சிதமாகக் கணக்குப் போட்டுச் சொல்வார்.

முதலாளி வற்புறுத்தினாலும், நடைமுறையில் இயலாத விஷயத்தை முதலாளியின் நன்மதிப்பைப் பெறுவதற்காக, 'சீக்கிரம் முடித்துத் தருகிறேன்' என்று சொல்லவே மாட்டார். முதலாளியின் நலனே தொழி லாளியின் நலம் என்ற கொள்கைப்படி வாழும் அவர் சொல்லை யாரும் தட்டிப் பேசமாட்டார்கள்...!

வங்க மொழியில் வெற்றிகரமாக ஓடிய 'உத்தர் புருஷ்' என்ற திரைப்படத்தின் தமிழ் உரிமையை வாங்கி 'உயர்ந்த மனிதன்' படத்தைத் தயாரிக்கத் திட்டமிட்டார் மேனா.

நான் அப்படத்தில் ஏற்ற வேடமே, வங்கமொழிப் படத்தில் பிரதான மாக இருந்தது. மெலிதான அந்தக் கதையை வலுப்படுத்தி நடிகர் திலகத்தை என் தந்தையார் வேடத்தில் நடிக்க வேண்டுமென்று கேட்டார் பெரியவர்.

சிவாஜிக்கோ மூலப் படத்தில் (அசோகன் தமிழில் ஏற்றது) வரும் டாக்டர் வேடம் ரொம்பவும் பிடித்துப் போய்விட்டது. ''சின்ன ரோலா னாலும் ரொம்பவும் 'இம்ப்ரஸிவ்' ரோல். நான் அதைச் செய்கிறேன்'' என்று சிவாஜி கேட்டார்.

''நீங்க அந்த ரோலை ஊதித் தள்ளிடுவீங்க. அதைவிடச் சிக்கலான தந்தையின் வேடத்தைச் செய்யறதுக்கு உங்களை விட்டால் வேறு ஆள் இல்லை'' என்று விளக்கி, சிவாஜியை இசைய வைத்தார்.

புராணப் படங்களில் பிரபலமாக விளங்கிய, என் நிஜ உருவத்தை, மக்கள் தெரிந்துகொள்ள 'உயர்ந்த மனிதன்' படம்தான் உதவியது.

சிவாஜி, சௌகார், வாணிஸ்ரீ, மேஜர், பாரதி, வி.கே.ஆர்., மனோரமா – அனைவருக்கிடையில் எனக்கு மிகவும் அழுத்தமான, அனுதாபத்தைப் பெறக்கூடிய வேடம்.

''உங்களுக்கு 'லைஃப் டைம் ரோல்'. ரொம்பவும் கஷ்டப்பட்டு நடிக்கணும். படம் முடிஞ்சு வெளியே வர்ற வரைக்கும், வேற சிந்தனை இருக்கக்கூடாது. 'பெஸ்ட் ஆஃப் லக்' '' என்று வாழ்த்தினார் மேனா.

'பொய் பேசமாட்டேன்' என்று சத்தியம் செய்த அரிச்சந்திரனுக்குத் தானே சோதனை வந்தது?

'ஒரு சமயத்தில் ஒரு படத்தில் மட்டும் நடிச்சாத்தான் முழுமையாக நம்மை நடிப்பில் ஈடுபடுத்திக்கொள்ள முடியும்' என்று பெரியவர் சொன்னது நூற்றுக்கு நூறு உண்மை.

ஆனால், விதி விளையாட்டுக் காட்டியது... 'உயர்ந்த மனிதன்' படம் மூவாயிரம் அடி வளர்ந்திருக்கும். ஒரு நாள் எம்.ஜி.ஆர். என்னை அழைத்தார்.

விஜயா ஸ்டூடியோவில் உள்ள மினி தியேட்டரில் மாலை 6–30 க்கு 'பூலரங்குடு' என்ற தெலுங்குப் படம் போட்டுக் காட்டினார்கள். எம்.ஜி.ஆர். அவரது மனைவி திருமதி ஜானகி, எம்.எஸ். விஸ்வநாதன் ஆகியோருடன் அந்தப் படத்தை நானும் பார்த்தேன்.

குதிரை வண்டிக்காரனாக நாகேஸ்வரராவ் நடித்திருந்தார். அதில் இரண்டாவது கதாநாயகனாக சோபன்பாபு நடித்திருந்தார். இரண்டு பாடல்களும் பத்துக் காட்சிகளும் உள்ள நல்ல பாத்திரம் அது.

எம்.ஜி.ஆர். என்னை அழைத்து, ''சோபன்பாபு வேடத்தை நீ செய் தம்பி'' என்று கூறினார்.

ஏ.வி.எம்.மில் 'உயர்ந்த மனிதன்' படத்தில் நடித்து வரும் விவரத்தை அவரிடம் சொன்னேன். ''சரி, அவர்களிடம் இது பற்றிச் சொல்லிவிட்டு வா'' என்றார் அவர்.

ஏ.வி.எம்.மில் வந்து சொன்னேன்.

''சிவாஜி சம்பந்தப்பட்ட அறுபது காட்சிகளில் நீங்கள் வருகிறீர்கள். அதனால், சிவாஜி கால்ஷீட்டுக்கு இடையூறு வருமே?'' என்றார்கள்.

''சிவாஜியோடு நிறையக் காட்சிகள்..., அதனால் சிக்கல் வரும் என்று கூறுகிறார்கள்'' என்றேன் எம்.ஜி.ஆரிடம்.

''சிவாஜி எப்போ கால்ஷீட் தர்றாரோ, அப்போ நான் விட்டுத் தர்றேன்னு சொல்லு'' என்றார் எம்.ஜி.ஆர். – ஏ.வி.எம்.முக்குத் திரும்பவும் ஓடினேன்...!

''என்ன சார்! பெரிய தொல்லையாப் போச்சு. உங்களுக்குப் பெரிசா பேர் வர்ற வேஷம் குடுத்திருக்கோம். அதிலே கவனம் செலுத்தறதை

விட்டுட்டு, இப்படி அவசரப்படறீங்களே! உங்க இஷ்டம்போல செய்யுங்க'' என்று மனம் நொந்து பேசினார் ஐயங்கார்.

ஒரு முடிவோடு எம்.ஜி.ஆரைப் பார்த்தேன்.

''அண்ணே! உங்களோட நடிக்கிற வாய்ப்பை இழக்கறதுக்காக இந்த ஒரு தடவை என்னை மன்னிச்சிடுங்க. அவங்க சொல்றதிலேயும் நியாயம் இருக்கு. ஒப்புக்கிட்ட படத்தை ஒழுங்கா முடிச்சிட்டு வர்றேன்'' என்றேன்.

''பொழைக்கத் தெரியாத புள்ளையா இருக்கியே. நாம தொழிலாளிங்க. நாலு கம்பெனில வேஷம் பண்ணினாத்தானே பொழப்பு நடக்கும். சரி, சரி... அந்தப் படத்தை நல்லபடியா முடி, பிறகு சந்திக்கலாம்'' என்றார்.

ஏ.வி.எம்.மில் அதன்பிறகு ஒரு வாரம் படப்பிடிப்பு நடந்திருக்கும். யாருமே எதிர்பாராத விதத்தில் ஸ்டுடியோ தொழிலாளிகள் வேலை நிறுத்தம் செய்தனர். உக்கிரமான அந்தத் போராட்டத்தை ஒடுக்க முடியாமல், பேச்சுவார்த்தையில் சமரசம் ஏற்படாத கட்டத்தில், ஏ.வி.எம். ஸ்டுடியோ இழுத்து மூடப்பட்டுவிட்டது.

என் இதயமே ஒரு விநாடி நின்றுவிட்டது. ஸ்டுடியோவை எப்போ திறப்பார்கள்? 'உயர்ந்த மனிதன்' படம் அவ்வளவு தானா? – இந்தக் கேள்விகளுக்குத் தெளிவான விடைசொல்ல யாராலும் முடியவில்லை. இரவு முழுவதும் தூக்கம் பிடிக்கவில்லை. நமக்கு இனி விடிவு காலம் எப்போது என்று யோசித்தபோது எம்.ஜி.ஆர். அந்த வேடம் செய்யச் சொன்னது நினைவு வந்தது. காலையில் அவரைப் போய்ப் பார்த்து, சம்மதம் தெரிவித்து விடுவோம் என்ற தீர்மானத்தில் கண்களை மூடினேன்.

விடிந்து கண் விழித்தால்..., அன்றைய தினத்தந்தி விளம்பரத்தில் 'என் அண்ணன்' என்ற பெயரோடும் எம்.ஜி.ஆர், ஜெயலலிதா உருவங்களுடன் (எனக்கு அளிப்பதாகச் சொன்ன வேடத்தில்) முத்துராமன் உருவத்தையும் இணைத்து வீனஸ் பிக்சர்ஸார் வெளியிட்டிருந்தார்கள்.

'அரசனை நம்பி, புருஷனைக் கைவிடக்கூடாது' என்பது பழமொழி. இப்போது அரசன், புருஷன் இரண்டு பேருமே கைவிட்ட அபலையாக அன்றாடமும் கன்னத்தில் கைவைத்து ஆகாயத்தையே வெறித்துப் பார்த்தவாறு நாள்களை ஓட்டினேன்...

கிட்டத்தட்ட பதினெட்டு மாதங்களுக்குப் பிறகு ஸ்டுடியோ திறந்தபோது, மேனாவைவிட நான்தான் பெருமகிழ்ச்சியடைந்தேன். எல்லோருமே புத்துணர்ச்சி பெற்றவர்களாக ஆர்வத்துடன் செயல்பட்டனர்.

சிவாஜி இந்த இடைப்பட்ட காலத்தில் எடையைப் பெருமளவு குறைத்து என்னைவிட இளமையாகத் தோன்றினார்.

'பர்ஃபெக்ஷ'னுக்குப் பெயர்போன மேனாவை, படமாக்கப்பட்ட ஒரு காட்சி உறுத்தியது. கௌரவமான குடும்பத்தலைவி வேடத்தில் நடிக்கும் சௌகார் ஜானகிக்கு ஒரு காட்சியில் கொடுக்கப்பட்ட 'நைட்கவுன்' ரொம்பவும் மெலிதாக இருக்கவே, உள் ஆடை பளிச்சென்று தெரிந்தது. அந்தக் காட்சியை வேறு உடை அணிவித்து திரும்பவும் படமாக்கிவிடச் சொன்னார் மேனா.

ஐயங்கார் பதறிப்போய் ஓடிவந்து, ''சார்! அதுக்காகப்போட்ட 'செட்'டை ஸ்டிரைக் நடக்கறதுக்கு முன்னாடியே கலைச்சிட்டோமே'' என்றார்.

''திரும்பவும் அந்த 'செட்'டைப் போடுங்க...''

''அம்பதாயிரம் ரூபாய் செலவாகும்...'' அது சாதாரணத்தொகை இல்லை. சிவாஜிக்கே அந்தப் படத்திற்குச் சம்பளம் 1 லட்சத்து 25 ஆயிரம் ரூபாய்தான் என்று கேள்விப்பட்டேன்...

''ஆகட்டும் பரவாயில்லை. நமக்குப் படம் நல்லா இருக்கணும்...''

சுமார் நூற்றைம்பது அடி, அதாவது ஒண்ணரை நிமிடம் ஓடுகிற காட்சிக்கு மீண்டும் ஐம்பது ஆயிரம் செலவாவதைப் பற்றி அவர் துளியும் கவலைப்படவில்லை.

படத்தின் உச்சக்கட்ட காட்சிக்கு, சிமெண்ட் பலகைகளை வைத்து வெளிப்புறத்திலேயே பெரிய தொழிற்சாலை போன்ற 'செட்'டை நிர்மாணித்தனர்.

பொய்யே பேசாத, தவறே செய்யாத சத்யன் என்கிற அப்பாவியை, அவன் முதலாளி அவசரப்பட்டுச் சந்தேகத்தின் பேரில் அடித்துத் துரத்திவிட, போக்கிடம் தெரியாத அவன், இறந்துபோன தாயை நினைத்துத் தெருவில் அழுதவாறு வருகிறான்.

அப்போது தொழிற்சாலை தீப்பிடித்து எரிந்து கொண்டிருக்கிறது. நெருப்பின் நாக்குகளுக்கிடையே தன் தாயார் தோன்றி, ''ஊரே உன்னை வெறுத்தாலும் உனக்காக நான் இருக்கிறேன் வாப்பா, வா'' என்று அழைக்க, நெருப்பு மாளிகைக்குள் பாய்ந்து விடுகிறான் அந்த அப்பாவி.

இதற்கிடையில் முதலாளிக்கு, சத்யன் தன்னுடைய மகன்தான் என்ற விவரம் தெரியவே, பிள்ளையைத் தேடி வந்தவர் தானும் அந்த அக்னி குண்டத்தில் இறங்கிப் பிள்ளையைக் காப்பாற்றுகிறார்.

ஆறு இரவுகள் அரும்பாடுபட்டு, அவஸ்தைப்பட்டு இந்த உச்சக்கட்டக் காட்சியைப் படமாக்கினார்கள் இரட்டையர் கிருஷ்ணன் – பஞ்சு.

படம் ரிலீஸான சமயம் – வெலிங்டன் தியேட்டரில் மாலைக் காட்சியில் ரசிகர்களுடன் படம் பார்த்தேன். உடம்பையும், உடைகளையும் நீரில் நனைத்துக் கொண்டும், உஷ்ணம் தாங்காமல், உள்ளே சுவாசிக்கப் பிராணவாயு இல்லாமல், சிரமப்பட்டும் நடித்த அந்த உச்சக்கட்ட நெருப்புக்காட்சி தியேட்டரில் காட்டப்பட்டபோது, ''டேய்! ஜிகினா பேப்பரை கட் பண்ணி ஃபேன் காத்தில பறக்கவுட்டு, நெருப்புன்னு நம்பளை ஏமாத்தப் பார்க்கறானுக. நம்பளுக்கா இந்த ட்ரிக்கெல்லாம் தெரியாது...''

ரசிகர்களின் கேலிப்பேச்சு நெஞ்சில் நெருப்பை வார்த்தது. ஓடிப் போய் திரைக்கு முன்னால் நின்று என் அக்னி பிரவேச அனுபவத்தை அவர்களுக்கு விளக்க, என் கால்கள் பரபரத்தன...! ஆனால், ஏதும் செய்ய முடியவில்லை.

'சர்வர் சுந்தரம்' என்ற படத்தில், ஸ்டூடியோவில் எப்படி மழை பெய்ய வைக்கிறார்கள்.., டம்மி குதிரையில் உட்கார்ந்தவாறு ஓட்ட – நிஜ குதிரையில் செல்வதுபோல எப்படிப் படமாக்குகிறார்கள்..., காரை நிற்க வைத்துவிட்டு, 'பேக் புரொஜக்ஷன்' முறையில், அது ஓடுவதாக எப்படித் திரையில் காட்டுகிறார்கள் என்பதையெல்லாம் ரசிகர்களுக்குத் தெளிவாக விளக்கியதன் பலனை இப்போது உணர்ந்தேன்.

சினிமா என்பது ரகசியமாக உருவாக்கி, பகிரங்கமாக வெளியிட வேண்டிய சாதனம்.

உடம்புக்கு உள்ளே இருக்கும் சதை, எலும்பு, நரம்புகளையெல்லாம் தெளிவாகப் படிப்பவன், பெண்ணின் புற அழகை முழுமையாக ரசிக்க முடியுமா?

---

14



# சிவாஜியின் தொழில் பக்தி

**பொ**துவாக இன்றைய சினிமா, எல்லா வகைகளிலும் எளிதாகி விட்டது என்றே சொல்ல வேண்டும். அடுக்கடுக்கான வசனம் பேச வேண்டியதில்லை. அழுது புலம்ப வேண்டியதில்லை! இருபது வயதில், எழுபது வயது வேடம் ஏற்க வேண்டியதில்லை! பேசத் தெரிய வேண்டாம்!

பாடத் தெரிய வேண்டாம்! ஆடத் தெரிய வேண்டாம்! திரையில் தோன்ற வேண்டும்! அழகாகத் தோன்ற வேண்டிய அவசியம்கூட இல்லை

நடிகனாக வர விரும்புபவனுக்கு அதிகபட்சத் தேவை, நடிகனாகும் ஆசை மட்டுமே. கதாசிரியர், டைரக்டராக அறிமுகமாக விரும்புபவருக்கு, பணம் வைத்திருக்கும் ஒருவரிடம் கதை என்ற பெயரில் ஏதாவது ஒன்றைச் சொல்லி, அவரை 'இம்ப்ரஸ்' செய்ய முடிந்தால் போதும்.

பொதுவான நிலை இது. விதிவிலக்காகத் திறமைசாலிகளும் உருவாவதை மறுக்க முடியாது. கற்பனை வளம்மிக்க இளந்தளிர்கள் எல்லாத் துறையிலும் வரவேண்டும்.

ஒரு வெளிப்புறப் படப்பிடிப்பின்போது குளத்தங்கரையில் கொக்கு ஒன்று அமர்ந்திருப்பதை டைரக்டர் பார்த்துவிட்டார். நடிப்பு, கதையெல்லாம் பிறகு பார்த்துக் கொள்ளலாம் என்று, காமிராவைத் தூக்கிக் கொண்டு ஓடிவரப் பணித்தார்.

ஒளிப்பதிவாளரிடம், ''நான் ஒரு கல்லை வீசி எறிகிறேன். அந்தக் கொக்கு பறக்கும்போது, அதைக் காமிராவில் படம் பிடி...'' என்றார்.

டைரக்டர் கல் வீசியதும் கொக்கு பறந்தது. காமிரா இயங்கியது. இங்குமங்குமாகப் பறந்த கொக்கு, வெள்ளைப் புள்ளியாகிப் பார்வையில் மறைந்ததும் 'கட்' என்றார் டைரக்டர்.

''வெரிகுட் ஷாட்! இந்தக் கொக்கு பறக்கும் ஷாட்டை வைத்தே, சிம்பாலிக்காகக் கதையைச் சொல்லி விடுவேன்...'' என்றார் டைரக்டர்.

பிலிமைக் கழுவி, பிரதி எடுத்துத் திரையில் படத்தைப் போட்டுப் பார்த்தார்கள். 'குளோசப்' ஆரம்பத்தில் கொக்கு இருந்தது. படாரென்று பறந்து மறைந்துவிட்டது. அதன்பின் காமிரா தென்னை மரங்கள், வயல்வெளிகள், திரண்ட மேகங்களைக் காட்டி ஓய்ந்தது.

''எங்கேய்யா... கொக்கே படத்தில் பறக்கக் காணோம்...?'' என்று கூச்சலிட்டார் டைரக்டர்.

ஒளிப்பதிவாளர் அசடு வழிந்தார்.

இந்த ஒளிப்பதிவு மேதை என்ன செய்தார்? நூறு அடி தூரத்தில் அமர்ந்திருந்த கொக்கை ஆரம்பத்திலேயே Zoom Forward செய்து, Close ஆகக் காட்டி, காமிராவை ஓடவிட்டிருக்கிறார். டைரக்டர் கல் வீசியதும், பொசுக்கென்று கொக்கு பிரேமை விட்டு வெளியே பறந்து சென்று விட்டது. லென்ஸ் வழியாகப் பார்த்தவாறு, காமிராவை எல்லாப் பக்கமும் திருப்பி, பாவம் – கொக்கைத் தேடியிருக்கிறார். இவர் காமிரா கண்ணுக்கு

அகப்படாமல், கொக்கு வேறு திசையில் பறந்து மறைந்துவிட்டது. விளைவு, காமிராக்குள் தென்னை மரங்கள், வயல்வெளிகள், மேகங்கள்... கொக்கு மட்டும் மிஸ்ஸிங்!

புத்திசாலி! செய்த தவற்றை ஆரம்பத்திலேயே டைரக்டரிடம் சொல்லியிருக்கலாம். அரை குறை அறிவு, அனுபவமின்மை காரணமாக ஏற்பட்ட பயத்தால் ஒன்றும் சொல்லாமல், படமாக்கப்பட்ட நெகடிவ் சுருளைக் கழுவ அனுப்பிவிட்டார். இதுபோல எல்லாத் துறைகளிலும் முறையான பயிற்சியும், தேவையான அனுபவமும் இல்லாத சிலர் 1980 களில் நுழைந்துவிட்டது வேதனைக்குரிய விஷயம்!

புத்தபிரானாக வேஷம் போடவேண்டியவர், மொட்டையடிக்க மறுக்கிறார். முருகன் வேஷம் தாங்குகிறவர் மீசையை எடுக்க மறுக்கிறார். ''இதில் மீசையை எடுக்க வேண்டுமா? முருகனை எவன் நேரிலே பார்த்திருக்கிறான். கற்பனைப் பாத்திரம்தானே... மீசையோடு இருந்தால் என்ன...!'' என்று விவாதிக்க வேறு செய்கிறான். நகைச்சுவைக்காக அப்படி வேடம் போடுவது வேறு விஷயம்.

முடிதான் தனக்கு முக்கியம் என்பவர்கள் அந்த வேடங்களையாவது ஏற்க மறுப்புத் தெரிவித்திருக்க வேண்டும்.

35 ஆண்டுகளுக்கு முன்பு செங்கல்பட்டை அடுத்த திருவடிசூலம் என்ற மலைப்பகுதியில் ஒரு படப்பிடிப்பு...! அதிகாலை சூரிய உதயத்துக்கு முன்பே படப்பிடிப்புக் குழுவினர் முகாமிட்டு விட்டனர். 20 குதிரைகள். குதிரைகளின்மேல் கொள்ளைக்காரர்கள். இந்தக் கொள்ளைக் கூட்டத்துக்குத் தலைவன் ஒருவன்.

திருமங்கை மன்னன் பற்றிய காட்சி அது. தன் வாழ்நாளில் 'விஷ்ணு பகவானுக்கு ஒரு ஆலயம் கட்டியே தீருவேன்' என்ற லட்சிய வேட்கை யுடன் கோயில் திருப்பணியைத் துவங்குகிறான் மன்னன்.

கையில் செலவழிக்கப் பணம் குறைந்துவிட்ட நிலையில், வழிப் பறிக் கொள்ளையடித்துக் கோயிலைக் கட்டி முடிக்க முடிவு செய்கிறான்.

ஒரு நாள் அதிகாலை திருமண கோஷ்டி ஒன்றைக் காட்டுப் பாதை யில் மடக்கி நிறுத்துகிறான் கொள்ளைக்கார மன்னன். அத்தனை பேரின் அணிமணிகள் கழற்றப்பட்டு, கொள்ளைக்காரன் முன்பு குவிக்கப் படுகிறது.

மணமகனின் காலில் மெட்டி என்று சொல்லப்படும் ஆழி ஒன்று மட்டும் கழற்றப்படாமல் இருக்கிறது. அது கொள்ளைத் தலைவன் கண்ணில் படுகிறது.

''காலில் ஆழி மின்னுகிறது. கழற்ற மனம் வரவில்லையோ...?'' என்று கேட்க,

''அதை மட்டும் என்னால் கழற்ற முடியவில்லை. நீயே கழட்டி எடுத்துக்கொள்...!'' என மணமகன் பதில் சொல்கிறான்.

கொள்ளைக்காரன் மண்டியிட்டுக் குனிந்து, கைவிரல்களால் ஆழியைக் கழற்றிவிட முயன்று முடியாமல், பற்களின் துணையை நாடுகிறான். கால் விரல்களை வாய்க்குள் விட்டு ஆழியைப் பற்களால் கடித்து இழுத்துக் கழற்றியபோது,

''திருமங்கை மன்னா...! என்னை உனக்குத் தெரியவில்லையா...?'' என்று கேட்டவாறு மகாவிஷ்ணு, மணமகன் உருவிலிருந்து மாறித் தென்பட, அவர் பாதம் பணிந்து கதறுகிறான் மன்னன்.

படமாக்க வேண்டிய காட்சி இது...!

திருமங்கை மன்னனாக அன்று நடித்தவர், தமிழகத்தின் மிகப்பெரும் நடிகர். அன்று அவருக்கிருந்த செல்வாக்குக்கு, வானத்தையே வில்லாக வளைக்க முடியும்!

மகாவிஷ்ணு வேடத்தில் நடித்தவர், திரையுலகுக்குப் புதுமுகம். ''நடிப்பு வாசனை தெரியாத, பிரபலமாகாத இளைஞன் காலை நான் தூக்கி, வாயில் விரலை வைத்துக் கடிக்கவேண்டுமா? என் கௌரவம் என்ன ஆவது...?

''புராணத்தை எத்தனை பேர் ஒழுங்காகப் படித்திருக்கப் போகிறார்கள்...? கால் விரலுக்குப் பதிலாக, கைவிரலில் மோதிரம் இருப்பது போல் காட்சியை மாற்றிப் படமாக்கி விடுங்கள்...'' என்று அவர் கூறியிருக்க முடியும். அவர் சொல்லவில்லை.

திருவடிசூலம் கிராமம். குடிசைவாழ் மக்கள் நிறைந்த ஊர். அந்த எளிய கிராமவாசிகள் காலைக் கடன், ஊரை அடுத்த திறந்த புல்வெளியில் கழிப்பதே வழக்கம்...!

படப்பிடிப்புக்குத் தீர்மானிக்கப்பட்டதோ, அந்தப் புல்வெளி! எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியையும் நன்றாகப் பார்த்தே வைக்க வேண்டும், இல்லாவிடில், பாதம் அசிங்கப்பட்டு விடும்.

இதில் அறியாமலும், அலட்சியமாகவும் நடந்தவர்கள் அகப்பட்டுக் கொண்டு அசடு வழிந்தது வேடிக்கையாக இருந்தது.

காட்சியின் கடைசி கட்டம் படமாக்கப்பட இருந்தது. காமிரா ஓடியது. வசனங்கள் பேசப்பட்டவுடன், கொள்ளைக்காரன் வேடத்திலிருந்த அந்தப் பெரிய நடிகர், மடாரென்று மண்டியிட்டு, அந்தப் புதுமுக

நடிகரின் காலைத் தூக்கி, தன் முழங்கால் மீது வைத்து, கைகளால் ஆழியைக் கழற்ற முயன்றார். முடியவில்லை. மின்னல் வேகத்தில் பாதத்தை மேலே தூக்கி, கால் விரலை வாய்க்குள் விட்டுக் கடித்து ஆழியைக் கழற்றி விட்டார்.

நடித்த புதுமுகம் மட்டுமல்ல, டைரக்டர் குழு மட்டுமல்ல, படப் பிடிப்பை வேடிக்கை பார்த்த பெருங்கூட்டமே சிலிர்த்து விட்டது!

''அண்ணே! ஷாட் ஓ.கே.யா...? இல்லை, இன்னொரு தடவை செய்யட்டுமா...?'' என்று நடிகர் கேட்டார்.

அதிர்ச்சியில் மெய்மறந்திருந்த டைரக்டர், ''ரொம்ப நல்லா அமைஞ் சிட்டுது...! இன்னொரு தடவையா...? வேண்டவே வேண்டாம்.'' என்றார்.

செய்யும் தொழிலைத் தெய்வமாக மதித்து, அந்தஸ்து பேதம் பாராமல், காட்சிக்கேற்ப அப்படி நடித்தவர் வேறுயாருமல்ல, நடிகர் திலகம்தான்!

அன்றைய புதுமுக நடிகர், அடியேன்தான்!

---



இவ்வளவு பெரிய மேதைகள் இவரை இங்கு பாராட்டக் காரணம் அவருடைய ஒழுக்கம், அவருடைய நேர்மை, அவருடைய உயர்ந்த உள்ளம் ஆகியவைதான்.

இதைவிட, சிவகுமாரை மணந்து கொண்ட அவர் மனைவிக்கு வேறு என்ன வேண்டும்.

சூர்யா -கார்த்திக் - பிருந்தான்னு நல்ல கொழந்தைகளைப் பெற்றுக் கொடுத்து பதிலுக்கு அவங்க கடமையைச் செஞ்சிட்டாங்க.

1-1-05, வெளியீட்டு விழாவில், **கவிஞர் வாலி**

15



# காவல் தெய்வம்

நடிப்புத்துறை மீது எனக்கு நம்பிக்கை பிறந்த நாள் 1969 மே மாதம் 1ஆம் தேதி! அன்றுதான் ஜெயகாந்தனின் 'கை விலங்கு' நாவல் 'காவல் தெய்வம்' என்ற பெயரில் எஸ்.வி. சுப்பையா தயாரிக்க, நடிகராக அதுவரை இருந்த கே. விஜயன், இயக்குநர் அந்தஸ்து பெற்ற முதல் படம்.

சென்னையில் எல்.ஐ.சி. கட்டடத்தை அடுத்த 'குளோப் தியேட்டரில்' (அலங்கார்) அந்தப் படம் வெளியாகி இருந்தது. படம் வெளியான அன்று அதிகாலையே தியேட்டர் பக்கம் சென்று பேனர் விளம்பரங்களைப் பார்த்தேன்.

திருவிளையாடலில் – 'மாஸ்டர் பீஸ் பெர்ஃபாமன்ஸ்' நாகேஷ் செய்ததுபோல், நடிகர் திலகத்துக்கு இப்படத்தில் அமைந்த அற்புத வேடம் சாமுண்டி கிராமணி. நான்கு நாள் அவர் நடித்துக் கொடுத்ததைப் படம் முழுக்க நிரவி மொத்தக் கதைக்கே உயிரோட்டத்தை ஏற்படுத்தியிருந்தார் டைரக்டர் விஜயன்.



சாமுண்டி கிராமணி சிவாஜி

சிவாஜியின் விளம்பரத்தோடு, இப்படத்தில் கதாநாயகனாக நடித்த எனக்கும், இணையாக நடித்த லட்சுமிக்கும் 'கட் – அவுட்' விளம்பரம் வைத்திருந்தனர். அதைப் பார்த்த என் இதயத்தில் பன்னீர் தெளித்தது போன்ற மகிழ்ச்சி பிரவாகமெடுத்தது. பள்ளிச் சிறுவனாக இருந்தபோது, தியேட்டர் முன் நடிக நடிகைகள் உருவத்தைப் பெரிய அளவில் வரைந்து வைப்பதே சிறந்த ஓவியக்கலை என்று, அந்த வயதில் எண்ணி 'இறைவா,

பேனர் கலையில் நான் பெரிய ஓவியனாக அருள் தா' என்று வேண்டிக் கொண்டு சென்னைக்கு வந்தேன்.



வழிகாட்டிய ஓவியர்கள் திரு. சுந்தரமூர்த்தியும், திரு. R. நடராஜனும்

இங்கு வந்து மோகன் ஆர்ட்ஸ் என்ற விளம்பரக் கம்பெனியில் பத்து மாதம் பயிற்சி பெற்றபோதுதான், 'அது எவ்வளவு கடினமான வேலை, ஆனால் குறைவான சம்பளம் பெறும் துறை' என்று புரிந்தது. சுமார் 20 ஆண்டுகளுக்கும் மேலாக, பேனர் ஓவியங்கள் தீட்டுவதில் சிறந்து விளங்கிய மறைந்த ஓவியர் பிரம்மம் சுந்தரம், பதி, ஜோசப், வேலாயுதம், வஜ்ரவேலு போன்ற ஓவியர்கள் சதுர அடியை நிரப்ப 15 பைசா வீதம் கணக்கிட்டு, பேனர் வரைந்து சம்பளம் பெறுவதை அறிந்து வேதனைப் பட்டேன்.

ஓவியக் கலையிலேயே கடுமையான உழைப்பையும், மிகக் குறைந்த சம்பளத்தையும் உள்ளடக்கிய துறை இதுதான்.

கொளுத்தும் வெயிலில் தாழ்வாகப் போடப்பட்ட தகரக் கொட்டகையின் அடியில் மின்சார விசிறியோ, காற்று வசதியோ இல்லாமல், வியர்வையில் ஊறிக்கொண்டு, அழுக்கு வேஷ்டியும் உடல் முழுக்கச் சாயமுமாய் அந்த ஓவியர்கள், கை மூட்டு கழன்றுவிடும் அளவுக்கு, பட்டை பிரஷ்ஷை வைத்து அந்தப் பெரிய திரைச்சீலையில் நடிகர்கள் உருவத்தைக் கொண்டுவர உயிரை விடுவதைத் தினந்தோறும்

பார்த்தேன். படம் வெளியாகும் நாள் நெருங்கி விட்டால், இரவு பகல் எல்லாமே அவர்களுக்கு ஒன்றுதான். வெளியீட்டுத் தேதியில், நீட்டிய வண்ண ஓவியங்கள் காய்வதற்குமுன் நீண்ட டயர் வண்டிகளில் ஏற்றி, விடிவதற்குமுன் தியேட்டர் அருகே கொண்டுசென்று, கூட்டம் வரும்முன் கட்டி அழகு பார்த்துவிட்டுத் திரும்புவார்கள் அந்த ஓவியர்கள்.

கொதித்துச் சூடேறிப்போன உடம்போடு, வீடு சென்று எண்ணெய் தேய்த்துக் குளித்து உடம்பைக் குளிர்வித்து, கோழி பிரியாணி சாப்பிட்டு அந்த அதிர்ச்சியில் சாய்வார்களே, அந்தத் தூக்கம் எந்த மாத்திரை போட்டாலும் வராது.

எனக்கு ஓவியக்கலை மீதிருந்த பசிக்கு இந்த இடம் ஏற்றதல்ல; ஓவியக் கல்லூரியே ஏற்ற இடம் என்றார் ஓவியர் சுந்தரமூர்த்தி.

நீண்ட பரிசோதனைக்குப் பிறகு ஓவியக் கல்லூரியில் சேர ஏற்பாடு செய்துகொடுத்தவர் ஓவியர் ஆர். நடராஜன்.

எந்த விளம்பரக் கம்பெனியில் பயிற்சியாளனாக ஆரம்பத்தில் சேர்ந்தேனோ, தியேட்டர் விளம்பரக் கலையில் பயிற்சி பெற்றேனோ, அதே மோகன் ஆர்ட்ஸ்தான் 'காவல் தெய்வம்' படத்தின் தியேட்டர் விளம்பரத்தையும் செய்திருந்தது.

வீரபாண்டிய கட்டபொம்மன், அன்னையின் ஆணை, நயாதௌர், டென் கமாண்ட்மென்ட்ஸ் போன்ற படங்களுக்குப் பேனர்கள் வரையப் பட்ட காலத்தில், நான் பயிற்சி மேற்கொண்டேன்.

மோகன் ஆர்ட்ஸ், சிவாஜியின் ஆதரவில் பிரபலமாகி வந்த விளம்பர நிறுவனம். 'பராசக்தி'யில் நடிக்கும் காலத்திலேயே இந்த நிறுவனத்தின் உரிமையாளர் ஓவியர் மோகனும் சிவாஜியும் நண்பர்கள். ''படப்பிடிப்பு இல்லாத வேளைகளில் மோகன் ஆர்ட்ஸுக்கு சிவாஜி வருவார். புகாரி ஹோட்டலில் சமோஸா, டீ வாங்கிவரச் சொல்வார். நான்தான் வாங்கி வந்து கொடுப்பேன்'' என்று ஓவியர் வேலாயுதம் சொல்வார். சிவாஜி உட்கார்ந்து சிற்றுண்டி சாப்பிட்ட இடம், ஓய்வெடுத்த அறை இங்கெல்லாம் சென்று 'நாமும் அப்படி நடிகர் ஆகி விடுவோமா' என்று வேடிக்கையாக நான் நினைத்துப் பார்த்து, தகாத ஆசை என்று அழித்துக் கொண்டதுண்டு.

இன்று அதே சிவாஜியுடன் நான் நடித்த படத்துக்கு, அதே மோகன் ஆர்ட்ஸ் விளம்பரங்கள் செய்திருந்தது. என் தோள்மீது கைபோட்டு அன்போடு அரவணைத்த நண்பர்கள், மூத்த கலைஞர்கள்தான் என் உருவத்தையும் வரைந்திருக்கிறார்கள் என்று உணர்ந்தபோது நெகிழ்ந்து போனேன்.

இறைவன் அனைத்துக்கும் மேலானவன்! குழந்தைக்கு எது தேவை என்பது தாய்க்கு மட்டுமே தெரியும். உடல் நலத்துக்குக் கேடு வரும் தின்பண்டத்தைப் பிடிவாதமாக வேண்டும் என்று கேட்டு குழந்தை அழுதாலும், அதை அதட்டி மிரட்டியோ, வேடிக்கை காட்டியோ மறக்கடித்துவிட்டு நல்லவற்றையே தாய் குழந்தைக்கு ஊட்டுகிறாள்.

அதேபோல, அறியாமை காரணமாக நாம் அது வேண்டும், இது வேண்டும், அம்பாசிடர் கார் வேண்டும், வீடு வேண்டும் என்று ஆண்டவனை வேண்டினாலும், நமக்கு எது வேண்டுமோ, எது ஏற்றதோ, அதையே அவன் நமக்கு அளிக்கிறான்.

சிறுவயதில் நான் வேண்டிக்கொண்டபடி,' பேனர் ஓவியனாகவே என்னை அவன் உருவாக்கியிருந்தால் இந்தக் கட்டுரை எழுதும் நிலையில் நான் இருந்திருக்க மாட்டேன். இதன் கருப்பொருளாகவே இருந் திருப்பேன். எனவே பிரார்த்தனையின்போது பொருளாசைகளைக் கோரிக்கையாக்குவதை விடுத்து, 'ஐயனே! நான் வெறும் பம்பரம்! அதை ஆட்டுவிக்கும் சாட்டை நீதான். எனக்கு எது வேண்டும், என்னால் எது செய்யப்பட வேண்டும் என்று முடிவு செய்பவன் நீ. ஏற்றத்தைக் கொடுத்தாலும், வீழ்ச்சியைக் கொடுத்தாலும், மன நிம்மதி – நோயற்ற வாழ்வு இந்த இரண்டை மட்டும் தர மறந்துவிடாதே' என்று மட்டும் வேண்டிக் கொள்ளத் தொடங்கினேன்.

இந்தப் படம் தந்த இன்னொரு மகிழ்ச்சி – 'அப்பாடா! சிவ குமாருக்குன்னு ஏத்த ஜோடி இந்தப் படத்திலதாண்டா அமைஞ்சிருக்கு' என்று ரசிகர்களும், பத்திரிகைகளும் ஒருமனதான என்னையும் லட்சுமி யையும் பாராட்டினர்.

நாங்கள் ஜோடியாக நடித்த இரண்டாவது படமான 'காவல் தெய்வம்' தான் எங்களைப் பிரபலப்படுத்தியது!

இதற்குமுன் பல நடிகைகளுடன் இணைந்து நடித்த நான், லட்சுமியுடன் நடித்த இப்படத்துக்கு, 'குமுதம்' பத்திரிகை விமரிசனம் செய்யும்போது...

'கிழங்கட்டைகளையே பார்த்து அலுத்துப்போன கண்களுக்கு, உண்மையிலேயே இளமையோடு இருக்கும் இரண்டு இளம் உள்ளங் களின் அளவான உறவாடல்களைப் பார்க்கும்போது இவர்கள் நன்றாக இருக்கட்டும் என்று வாழ்த்தத் தோன்றுகிறதல்லவா?' என்று எழுதி இருந்தது.

இந்தப் படத்தின் தயாரிப்பாளர் அண்ணன் எஸ்.வி. சுப்பையா ஒரு உணர்ச்சிப் பிரவாகம். அபூர்வக் கலைஞர். விந்தையான மனிதர்!

நாடகம் மூலமாக நடிப்பில் பயிற்சி பெற்று, முதிர்ந்த அனுபவத்தைக் கொண்டு, அறிவுபூர்வமாக ஒரு வேடத்தைச் செய்வது ஒருவிதம்! உணர்வுபூர்வமாக வேடத்தைத் திரையில் வடிப்பது இன்னொரு விதம்!

சுப்பையா அண்ணன், இரண்டாவது ரகத்தைச் சேர்ந்தவர். பாரதியின் வேடமாகட்டும், அபிராமிபட்டர் வேடமாகட்டும், விவசாயி, வேலைக்காரன் – பாத்திரங்களாகட்டும், இவர் கையாளும்போது இயற்கையாகவும், பார்ப்போரைக் கலங்கச் செய்யும் விதத்தில் எமோஷனலாகவும் செய்து விடுவது இவர் பாணி.

உண்மையில் இவர் சுபாவமே அதுதான். ரொம்பவும் 'சென்டிமெண்டல் டைப்'! ஒரு பிரபல இயக்குநர், தாளில் எதையும் எழுதாமல் வாயாலேயே நீண்ட வசனங்களைச் சொல்லிக் கொடுத்து நடிக்க வைப்பவர். பத்து வரி வசனங்களை முதலில் சொல்லி எஸ்.வி.எஸ் மனப்பாடம் செய்து தயாராகியபோது, ''ஏழாவது வரியை நாலாவதாகச் சொல்லுங்க, நாலாவது வரியை ஏழாவதா வச்சுக்குங்க! ஸ்டார்ட் காமிரா... ஆக்ஷன்'' என்று அதிர்ச்சி வைத்தியம் கொடுத்துவிட்டார். இந்த அதிரடியில் குழம்பிப்போய் எஸ்.வி.எஸ். நிற்கும் சில நொடியில், ''உங்களால இதைச் செய்ய முடியாது...! வீராசாமி நீ பேசுப்பா...'' என்று வசனங்களைப் பக்கத்திலிருந்த நடிகருக்குக் கொடுத்துப் பேசச் சொல்லி டேக் எடுத்து விட்டார் டைரக்டர்.

அதிர்ச்சியிலும் அவமானத்திலும் உறைந்துபோன சுப்பையா அண்ணன், கடைசி மூச்சுவரை அவர் முகத்தில் விழிக்கவில்லை.

படப்பிடிப்பு இடைவேளை... லைட்பாய், புரொடக்ஷன் உதவியாளர்கள், ஆயா என வரிசையாகச் சாப்பிட்டுக் கொண்டிருப்பார்கள். மோர் சாதம் முடியும். திடீரென்று எஸ்.வி.எஸ். நுழைவார். எல்லோரின் எச்சில் இலைகளையும் மின்னல் வேகத்தில் சேர்த்து எடுத்துப்போய் குப்பைக் கூடையில் போட்டு விடுவார். 'தான் என்ற அகந்தை தலையெடுக்காமல் செய்ய இதுதான் வழி' என்பார்.

சாமுண்டி கிராமணியாக நடித்த சிவாஜி, பணம் வாங்க மறுத்து விட்டார். ''நீங்க தயாரிக்கிற முதல் படம். இதில் நான் கௌரவ நடிகர்... பணம் எதுவும் வேண்டாம்'' என்று கூறியபோது உணர்ச்சிப் பெருக்கால், நா தழுதழுத்தவாறு, ''அடுத்த ஜென்மத்தில் நாயாகப் பிறந்து, சிவாஜிக்கு நன்றிக் கடனைத் தீர்ப்பேன்'' என்று பத்திரிகையில் பேட்டி கொடுத்தார்.

சோதனைகள் வந்தபோது இறைவனைத் திட்டுவார். 'நூறு மைல் நடந்து வந்து உங்ககிட்ட சண்டை போடப் போறேண்டா' என்று சென்னையிலிருந்து திருப்பதிக்குத் தன்னந்தனியாக நடந்தே சென்றார்.

இரவு காட்டுப் பாதையில் நரிகள் ஊளையிடும் சத்தம், கீரிகளும், முயல்களும் பாதையைக் கடக்கும் அதிர்ச்சி, சில் வண்டின் ஓசை...! இவை மனத்தைத் தளரச் செய்த போதும், தட்டுத் தடுமாறி நடையைத் தொடர்ந்து, உலகில் சொந்த பந்தம், சொத்துப் பத்து இல்லாத தனி மனிதனாக இருப்பவன் மன நிலையை அன்று அனுபவித்ததாகச் சொன்னார்.

தன் மகனைப் பள்ளியில் ஆசிரியர் அடித்து விட்டார் என்று கேள்விப் பட்டு, அங்குச் சென்று சண்டமாருதம் செய்து, பள்ளியிலிருந்தே அவனை விலக்கி வீட்டுக்கு அழைத்து வந்து விட்டார்.

காயத்ரி மந்திரமும், சந்தியாவந்தனமும் அவரே போதித்தார். ''இன்றைய படிப்பு அறிவை மட்டும் வளர்க்குது. நல்லொழுக்கத்தைப் போதிக்கத் தவறிட்டுது'' என்பார்.

புதிராக வாழ்ந்தவர், யாருக்கும் தெரியாமல் திடீரென்று இறந்து விட்டார். சென்னையை அடுத்த செங்குன்றம் எல்லையிலுள்ள காரனோடை கிராமத்திலுள்ள அவர் தோட்டத்தில் இறுதிச் சடங்குக்குச் சென்றேன்.

ஆறடிக் குழியில் அவர் உடலை இறக்கி மண்ணை அள்ளிப் போட்டு மூடும்போது, ''ஐயோ! அப்பாவை மூடாதீங்க. அவருக்கு மூச்சு முட்டும்'' என்று சிறுவன் சரவணன் சொன்ன வார்த்தைகள், அவரின் பிரிவுத் துயரைப் பல மடங்கு அதிகரிக்கச் செய்து விட்டன.

---

என் மூத்த அண்ணன் இளம் சிவகுமார் அவர்களுக்கு...

நீர் ஓவியர் என்றாலும், மலையுச்சில் அமர்ந்தபடி தூரத்துப் பார்வைகளைத் தூரிகையால் வரையாமல், நடந்து பார்த்து, வியர்வையில் நனைந்த சந்தோஷங்களையும், அனுபவங்களையும் விவரித்திருக்கிறீர்கள்.

என்னைப் போன்ற இப்பாட்டையின் பாதசாரிகளுடைய மனமார்ந்த பாராட்டு என்றென்றும் உமதாகும்.



வெளியீட்டு விழா அன்று கமல்ஹாசன் அனுப்பியது.

16



# மரமேறிய அனுபவம்

**ந**ண்பர்கள் வீட்டுக் குழந்தைகளின் பிறந்தநாள் விழாக் களுக்கு நேரம் கிடைக்கும்போது குடும்பத்தோடு செல்வேன். ஐந்தாறு வயதுடைய சிறுவர் சிறுமிகள் அந்த விழாவில் வண்ணத்துப் 'பூச்சிகள்போல வித விதமாக உடையணிந்து, மேற்கத்திய இசைக்குத் தங்கள் இஷ்டம்போல

ஆடுவார்கள். சில குழந்தைகளிடம் உடல் அசைவும், கையைச் சொடுக்கும் லாவகமும், தலையை ஒரு பக்கமாகச் சாய்த்து ஆடும் ஒய்யாரமும் எனது சிறு வயதுப் பருவத்தை நினைவுபடுத்தும்.

கிராமத்தில் மகா சிவராத்திரி, கார்த்திகை தீபம், தைப் பொங்கல், ஆடிப் பண்டிகை முதலிய நாள்களில் கோயில்களில் விசேஷ பூஜை நடக்கும்.

செண்டை, நகாரா, தாரை, தப்பட்டை, பறை போன்ற வாத்தியக் கருவிகள் இசைக்கப்படும்.

என் வயதொத்த ஏழைச் சிறுவர்களெல்லாம் அந்த இசைக்கேற்ப அவரவருக்குத் தெரிந்த மாதிரி ஆடுவார்கள். ஒன்றுபோல் அழகாக ஆட அவர்களுக்கு யாரும் சொல்லித் தந்ததில்லையாதலால், ஒவ்வொருவனும் ஒவ்வொரு மாதிரி ஆடுவான்.

இசையின் ஒலி, என் காது வழியே உடலுக்குள் சென்று ஒரு உபாதையை ஏற்படுத்தும். ஆனால் அவர்களைப்போல கூட்டத்தில் ஆடக் கூச்சம்...!

வீட்டுக்கு வந்து கதவைச் சாத்திக்கொண்டு, தூரத்திலிருந்து கேட்கும் வாத்திய ஒலிக்கேற்ப ஆடிப் பார்ப்பேன். எனக்கே சகிக்காது.

ஸ்கேலை எடுத்து இரண்டு காலுக்கும் இரண்டு அடி கொடுத்து, 'உனக்கெல்லாம் இது வராதுடா' என்று சலித்துக் கொள்வேன்.

பிற்காலத்தில், ஆட்டபாட்டங்கள் நிறைந்த சினிமாவில் நடிப்பேன் என்று அந்தச் சிறு வயதில் கனவில்கூட நான் நினைத்ததில்லை.

ஓவியக் கலைஞனாக, ஆறு ஆண்டுகள் படிப்பு முடிந்து தேர்ச்சி பெற்றபின், காற்று திசை மாறி அடித்ததில் திரையுலகுக்கு வந்து விட்டேன்.

எந்தவிதமான அடிப்படைத் தகுதியோ, பயிற்சியோ இல்லாத பச்சை மண்!

படங்களில் தலைகாட்டத் துவங்கி, ஏழு படங்களில் நடித்து முடிக்கிற வரைக்கும், பாடல் காட்சியில் நடிக்கும் வாய்ப்பே கிடைக்கவில்லை.

டைரக்டர் கே.எஸ்.ஜி.யின் 'கண்கண்ட தெய்வம்' – படத்தில் பாடி ஆட வாய்ப்பு நிச்சயம் கிடைக்கும் என்று தெரிந்தது.

எச்சரிக்கையுணர்வு அதிகமுள்ள எனக்கு, உடனே நடனம் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற வேகம் பிறந்தது.

நடன ஆசிரியர் தங்கராஜை நடனம் கற்றுத்தர மாதம் ஐந்நூறு ரூபாய் சம்பளத்தில் ஏற்பாடு செய்துகொண்டேன்.

மூர்மார்க்கெட் சென்று 'ஹிஸ் மாஸ்டர்ஸ் வாய்ஸ்' கிராமபோன் பெட்டி ஒன்றைப் பேரம் பேசி வாங்கிக் கொண்டேன். 'கம் செப்டம்பர்', 'ஹடாரி' ரெக்கார்டுகள் அந்த நாள்களில் பாப்புலர். மவுண்ட் ரோடு மர்ஃபி ரேடியோ கடை சென்று, அந்த ரெக்கார்டுகளை வாங்கிக் கொண்டேன்.

நடன ஒத்திகை ஆரம்பமாயிற்று. ஒரு நாளைக்கு இரண்டு மூவ்மெண்ட் சொல்லிக் கொடுத்து, சுமார் ஆறு முதல் எட்டு மணி நேரம் அந்த ரெக்கார்டை ஓடவிட்டுப் பயிற்சி செய்தேன். மூன்றரை நிமிட நேரம் வரும் அந்த இசை முடிவதற்குள் சுமார் முப்பது வெவ்வேறு மூவ்மெண்டுகள் ஆடும் வண்ணம் கற்றுக் கொண்டேன்.

மாதக் கடைசியில் கண்ணாடியில் பார்த்தால் முகம் சோர்ந்து, கண்ணுக்குக் கீழே கருவளையம் வந்து, கழுத்துக் கடியில் 'காலர் போன்' தெரிந்தது.



பயந்து போய் மாஸ்டரிடம் கேட்டேன். அவர், ''தினம் எட்டு மணி நேரம் ஆடியதால் களைத்துப் போயிருக்கிறாய்...! ஆட்டுக் கால் சூப் சாப்பிடு...! சரியாகி விடும்...'' என்றார்.

சொன்னபடி அதையும் செய்து படப்பிடிப்புக்குத் தயாராக இருந்தேன்.

மாயூரத்தை அடுத்த மல்லியத்தில் 'கண்கண்ட தெய்வம்' படப்பிடிப்பு!

கிராமியக் கதை என்பதால், இசையும் பாடலும் கிராமியப் பாணியில் அமைக்கப்பட்டிருந்தது.

நான் கற்றுக் கொண்டதோ, மேற்கத்திய இசைக்கான மேற்கத்திய மூவ்மெண்டஸ்.

மாஸ்டரைப் பார்த்தேன், ''பயப்படாதே... ஓரளவுக்கு இசையைப் புரிந்துகொண்டு ஆடப் பழகியவன், எந்தப் பாணி நடனமானாலும் கொஞ்சம் முயற்சித்தால், எளிதில் ஆடிவிட முடியும்'' என்றார்.

எனக்கு நம்பிக்கை வரவில்லை. மாஸ்டரைத் துளைத்தெடுத்து மல்லியத்தில் கே.எஸ்.ஜி.. வீட்டுக்கு எதிரே இருந்த ரைஸ்மில் மைதானத்தில் பாடலுக்கு ஏற்ப நடன ஒத்திகையை ஆரம்பித்தேன்.

தொடர்ந்து இரண்டு மூன்று நாள்கள் மாலை நேரத்தில் நான் வியர்த்து விறுவிறுத்து வருவதைப் பார்த்த டைரக்டர், ''என்னப்பா, இப்படி வேர்த்துப்போய் வர்றே...?'' என்று கேட்டார்.

''நாளைக்குப் பாட்டு ஸீன் எடுக்கறதாகச் சொன்னாங்க..., அதான் டான்ஸ் ஒத்திகை பார்த்துக்கறேன்....''

''சரியாப் போச்சு....! நீ மரத்து மேலே இருந்து பாடற மாதிரி வித்தியாசமா படமாக்கப் போறேன்...! ஏன் வீணா இப்படி ஆடி ஸ்ட்ரெயின் பண்ணிக்கிறே...?'' என்று கேட்டார் அவர்.

மரத்தின் மேல் பாடலா...? மீண்டும் எச்சரிக்கையுணர்வு விரைவாக வேலை செய்தது. நாளைக்குக் காலையில் படப்பிடிப்பைப் பார்க்க வருகிற ஆயிரம் பேருக்கு முன்னால் திடீர்னு டைரக்டர் 'தென்னை மரத்தில் ஏறு'ன்னு என்னைச் சொல்லிட்டா, என் கதி என்ன ஆகும்?

அடுத்த விநாடி தென்னந்தோப்புக்கு ஓடினேன். மரமேறித் தேங்காய் பறித்துக் கொண்டிருந்த ஒருவரைத் துணைக்கு அழைத்துக் கொண்டேன்.

தொழில் மீது உள்ள வெறியில், காலில் தாம்புக் கயிறு மாட்டாமல் மடமடவென்று பத்தடி உயரம் ஏறிவிட்டேன்.

காலின் பிடிப்பில்தான் அப்போது என் உடலின் பளு மொத்தமும் இருந்தது.

சில நொடிகள் ஆகியிருக்கும்..., கால்கள் இரண்டும் தந்தியடித்தன. இறுக்கமான கால் மடிப்புகள் வழியே ரத்த ஓட்டமும் தடைபட்டதால் உதறல் எடுத்தது.

உடனே பயம் தொற்றிக் கொண்டது. அந்த உயரத்திலிருந்து விழுவதைத் தவிர்ப்பதற்காக, தென்னை மரத்தை மார்போடு அணைத்து இறுக்கிப் பிடித்துக் கொண்டேன்.

கீழேயிருந்த மரமேறி, ''ஐயையோ! நெஞ்சை மரத்தில் அணைக்காதீங்கய்யா! சரிச்சு வரும்போது நெஞ்சுத் தோல் உரிஞ்சிடும்...'' என்றார்.

''அது எனக்கும் புரியுதுப்பா...! ஆனா, கையை எடுத்தேன்னா கீழே விழுந்திடுவேனே...!'' என்று சொல்லிக் கொண்டிருக்கும்போதே, கைகளும் கால்களும் பிடி தளர ஆரம்பித்து, 'சர்' என்று கீழே வரத் தொடங்கினேன்.

எதிர்பார்த்ததுபோல தென்னை மரம் நெஞ்சையும், கைகளின் உட்புறத்தையும் பதம் பார்த்துவிட்டது.

சிராய்ப்புகளிலிருந்து ரத்தம் கசிந்தது. தாங்க முடியாத எரிச்சல்...! வாய்க்காலில் ஓடிய தண்ணீரில் கழுவப் போக, மேலும் எரிச்சல்...!

மறுநாள் வெற்றுடம்போடு குளித்துவிட்டு வந்த என்னைப் பார்த்த டைரக்டர் ''உடம்பெல்லாம் என்ன காயம்?'' என்று கேட்க, மரம் ஏறப் பழகிய கதையைச் சொன்னேன்.

''உனக்கு ஏன் இந்த வேலையெல்லாம்...? மரத்து மேலே ஏர்றத்துக்கு நேத்திக்கே ஏணியெல்லாம் வாங்கி வச்சிருக்காங்க...! அதை வச்சு சிரமமில்லாம ஏறிக்கலாமே...!'' என்றார்.

மரத்தின் மேல் மட்டும் வசதியாகவா இருந்தது...? ஒரே செவ்வெறும்புக் கூட்டம். கண்ட இடங்களில் அவை கடித்து, கூட்டத்தின் முன்னே வசதியாகச் சொறிய முடியாமல் அவஸ்தைப்பட்டு, இரண்டு நாள்கள் அங்கேயே நின்ற மாதிரியுமில்லாமல், உட்கார்ந்த மாதிரியு மில்லாமல் நடித்தபோது அனுபவித்த சிரமங்கள், படம் பார்த்த ரசிகர்களுக்கு எப்படித் தெரியும்?

---

17



# புரட்சித் தலைவரின் தாய்ப்பாசம்

**எம்.**ஜி.ஆர். முதலமைச்சராக இருந்த நேரம்!

கோட்டையில் முதலாவது மாடியிலிருந்து தம் பிரத்யேக அறையிலிருந்த எம்.ஜி.ஆர் வேகமாக இறங்கி வந்து, அந்த மூதாட்டியை மாடிக்கு மெதுவாக அழைத்துச் சென்று, தம் இருக்கைக்கு எதிரே அமரச் செய்து, பின்னர் தாமும் அமர்ந்தார்.

''உங்க புள்ளை, உங்களைப் பத்தி நெறையச் சொல்லியிருக்காரு! உங்களை நேரில் சந்திச்சதில் எனக்கு ரொம்ப சந்தோஷம்...! என்ன! காபி, டீ, குளிர்பானம் ஏதாவது சாப்பிடறீங்களா...?''

எம்.ஜி.ஆரை., அன்றைய தமிழ்நாட்டின் முதலமைச்சரை நேரில் சந்தித்ததில் அந்த அம்மையார் நெகிழ்ந்து போய், எழுபத்தோரு வயதை மறந்து, பதினேழு வயதுப் பெண்போல் நாணித் தலைகுனிந்து, வாய் பேசாமல் அமர்ந்திருந்தார். தனக்கு எதுவும் வேண்டாம் என்பதற்கு அறிகுறியாகத் தலையை மட்டும் ஆட்டினார்.

பத்தாயிரம் ரூபாய் நன்கொடைக்கான காசோலையை முதல்வரிடம் அவர் கொடுக்க, புகைப்பட ப்ளாஷ்கள் மின்னி ஓய்ந்தன...! அந்த அம்மையார் –

என் தாயார்தான்!

1977இல் நாகப்பட்டினத்தில் புயல் நர்த்தனமாடி, கணக்கற்றோர் வாழ்க்கையில் விளையாடிய சேதி கேட்டு, ஏதாவது ஒரு சிறு தொகையை நன்கொடையாக இச்சமயத்தில் தரலாம் என்று தீர்மானித்து முதல்வரோடு போனில் தொடர்பு கொண்டேன். ''கோட்டைக்குப் பத்து மணிக்குமேல் வா'' என்று சொன்னார்.

உடல் நலமின்றிச் சில நாள்களாக அவதிப்பட்டுக் கொண்டிருந்த எனது தாயாரிடம் ''எம்.ஜி.ஆரைப் பார்க்கப் போகிறேன்! வருகிறாயா?'' என்றேன்.

படக்கென்று எழுந்து, ஏதோ ஒரு தெம்பில் உடனே குளித்துப் புடவை மாற்றிக் கொண்டு தயாராகிவிட்டார்.

செய்தி அறிந்தவுடனே, கீழே ஓடி வந்து என் அன்னையாரை முதலமைச்சர் அழைத்துச் சென்ற பண்பு என்னை மெய் சிலிர்க்க வைத்தது.

பொதுவாக, தாய் வடிவத்தைத் தெய்வமாகப் போற்றும் பண்புடையவர் எம்.ஜி.ஆர்.! என் அன்னையார்மீது குறிப்பாக அவர் அன்பு செலுத்த வலுவான சம்பவம் ஒன்று பின்னணியாக உள்ளது.....!

1966இல் 'காவல்காரன்' படத்தில் எம்.ஜி.ஆருடன் அவரது தம்பி வேடத்தில் நடிக்க எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்தது.

முதல் நாள் படப்பிடிப்பில் என்னைச் சந்தித்த அன்றே, எனக்கு இருக்கை கொண்டுவரச் சொல்லி, அதில் என்னை அமரச்செய்து பின்னர் அவர் அமர்ந்தார்.

நான் பேசுவதை ஆழ்ந்து கேட்டார். அந்தப் பண்பு எனக்குக் கொஞ்சம் தைரியத்தைக் கொடுத்தது. பேச்சு அவரவர் அன்னையரைப் பற்றித் திரும்பியது.

''ஒரு ஆண்மகன், தன்னோட வீரத்தைக் காட்டணும்னா, சிங்கத்திடமும் புலியிடமும் காட்டணும். அதுதான் அழகு. அதை விட்டுட்டு, நாம அடிச்சாலும் அணைச்சாலும் அம்பது மைலுக்கு அந்தப் பக்கம் கொண்டுபோய் விட்டாலும் மறுபடியும் நம் வீட்டுக்கே வந்து நம்ம காலைச் சுத்திக்கிட்டிருக்கிற நாய்கிட்ட வீரத்தைக் காட்டக் கூடாது – அப்படின்னு எங்கம்மா சொல்லுவாங்க'' என்றார் எம்.ஜி.ஆர்.

''வாழ்க்கையில் தான்படும் எந்தக் கஷ்டத்தையும் எங்க அம்மா எனக்குத் தெரிவிக்காம வளர்த்தாங்க...'' என்றேன் நான்.

''தாயின் அரவணைப்புக்கு நிகர் எதுவுமே இல்லை. அதே மாதிரி தாயை விட்டுப் பிரியற சோகத்துக்கு நிகரா எந்த வேதனையுமில்லே.

''பர்மாவுக்கு நாடகம் நடத்த நானும் அண்ணா சக்கரபாணியும் கப்பல்லே புறப்பட்டபோது, என் தாயாரை விட்டுப் பிரிந்தது தாங்க முடியாத வேதனை! தாயார் கரையில் நின்னு அழுதாங்க. நாங்க கப்பல்லே இருந்து தேம்பி அழுதோம்'' என்று நினைவு கூர்ந்தார் எம்.ஜி.ஆர்.

''எனது தாயார் எந்த நிலையிலும் என் முன்னால் அழுததில்லே! அவங்களுக்குக் கல்மனசுன்னு நான் நினைக்கலே. தன்னை விட்டுக் கண்காணாத தூரத்துக்குப் போயி படிக்கிற புள்ளை முன்னால், மனசொடிஞ்சு கண்ணீர் விட்டா, அது பிஞ்சுமனத்தை ரொம்பப் பாதிச்சிடும்னு நெனைச்சிருக்கலாம். அதனால் ஒரு தடவைகூட என்னை வழி அனுப்பும்போது என் தாயார் கண்ணீர் விட்டதில்லே'' என்று சொன்னேன்.

அடுத்து நான் சொன்ன விவரம் அவர் மனத்தில் ஆழமாகப் பதிந்துவிட்டது.

''ஒருமுறை விடுமுறையில் கிராமத்துக்குச் சென்றிருந்தபோது, வேட்டைக்குச் சென்று வந்திருந்த சவுளி என்பவர் என்னைப் பார்க்க வந்தார்.

''சாமி! நல்லா இருக்கீங்களா! புதுசா கிடைச்ச தேன் மூணு பாட்டில் இருக்கு. தரட்டுங்களா'' என்றார்.

''போன தடவை நீ கொடுத்ததே இன்னும் ரெண்டு மாசத்துக்கு வரும். இப்போ வேண்டாம்'' என்றேன்.

''சாமி! இது மலைத் தேனுங்க...! ஆறு மாசத்துக்கு முன்னாடி, நம்ம அம்மாவுக்குக் கை ஒடிஞ்சு போனப்போ பாலக்காட்டுக்கு மீன் எண்ணெய் வாங்கியாரப் போனேங்க. அப்ப கிடைச்சதுங்க'' என்றான்.

''அம்மாவுக்குக் கையொடிஞ்சு போச்சா...? என்னப்பா சொல்றே....?'' என்று திகைப்புடன் கேட்டேன்.

''நல்ல கதையா இருக்குதுங்களே! அம்மா அவங்களுக்கு வலது கை மணிக்கட்டு மேல் ரெண்டு எலும்பும் ஒடிஞ்சு உள்ளங்கை கீழே தொங்கிகிட்டிருந்தது. அவங்க பொழைக்கறதே கஷ்டம்னு ஆகி, நான் பாலக்காட்டுலேருந்து மீன் எண்ணெய் கொண்டாந்து, பனை மட்டையில் ஊத்திக் கட்டி, ராத்திரிப் பகலா, தொட்டில்ல கையை வச்சு ஆட்டிக்கிட்டே இருந்தமே..! உங்களுக்கு சேதி தெரியாதா சாமி?.....

''தாம்புக் கயிறு எடுக்க, கதவின்மேல் ஏறிப் பரண்மீது கை வைத்த போது கால் வழுக்கி, சுமார் பத்து அடி உயரத்திலிருந்து கீழே விழுந்ததில் எலும்பு முறிவு ஏற்பட்டிருக்கிறது. 'இந்தச் சேதி புள்ளைக்குத் தெரிந்தால், படிப்பைக் கெடுத்துக்கொண்டு வீணாக இங்கே வந்து விசனப்படுவான்! எனவே, எந்தக் காரணத்தை முன்னிட்டும் இந்த விபத்து விஷயத்தை யாரும் என் பிள்ளைக்கு எழுதக்கூடாது' என்று எனது நண்பர்களிடம் சத்தியம் வாங்கி விட்டாராம் என் அன்னை.

''ஓவியக் கல்லூரியிலிருந்து கலாசார சுற்றுப் பயணமாகப் பம்பாய், அஜந்தா, எல்லோரா, அவுரங்காபாத், ஹைதராபாத் என்று சுற்றிவிட்டு நான் அப்போதுதான் ஊருக்கு வந்திருந்தேன்.

''அம்மாவைப் பார்த்தபோது முறிந்த கை ஒட்டி விட்டிருந்தது. மாவரைக்கும் கல்லில் அரிசி போட்டு, தானே அரைத்துக் கொண்டிருந்தார்.

''என்னம்மா? சவுளி என்னமோ சொல்றான்? இதெல்லாம் உண்மைதானா? ஏன் எனக்குத் தகவல் சொல்லலே?''

''அட போ! கை ஒடிஞ்சா, தானா அப்புறம் ஒட்டிக்குது. நீ படிப்பைக் கெடுத்துட்டு வந்து என்ன பண்ணப் போறே? போயி, வேலையைப் பாரு...' என்றார் அம்மா.

ஐந்து குழந்தைகளைப் பெற்று, ஒவ்வொன்றாகப் பிளேக், காலரா நோய்க்கு மூவரைப் பறிகொடுத்த சோதனையுடன், 32வது வயதிலேயே கணவனையும் இழந்து, கைவசமிருந்த பிள்ளையை 300 மைலுக்கு அப்பால் படிக்க அனுப்பிவிட்டு, ஏழ்மையிலும் வறுமையிலும் வாடிய தாயார், தன் உயிருக்கே ஆபத்து வந்த நிலையில், மனம் கலங்காது, தன் பிள்ளை இங்கே எக்காரணத்தை முன்னிட்டும் வரக்கூடாது என்று அனைவரையும் கட்டுப்படுத்தி வைத்திருந்த செயல், மன உறுதி–எம்.ஜி.ஆரை ஸ்தம்பிக்கச் செய்துவிட்டது.

இந்த உரையாடல் நடந்து நான்கு மாதங்களுக்குமேல் ஆகிவிட்டது. 1967 ஜனவரி 12ஆம் தேதி துப்பாக்கி குண்டடிபட்டு அரசினர் மருத்துவ மனையில் எம்.ஜி.ஆர். சேர்க்கப்பட்டிருந்தார். ஒரு தனி மனிதனுக்கேற் பட்ட துயரச் சம்பவம் இத்தனை மானுடர்களைப் பாதிக்குமா? என்ன கூட்டம்! எத்தனை விதமான மனிதர்கள்...!

எம்.ஜி.ஆர். மாடியில் ஒரு அறையில் சிகிச்சை பெற்று வந்தார். கீழே பார்வையாளர்களுக்கு ஒரு பெரிய புத்தகம் போடப்பட்டிருந்தது. வருவோர் போவோர் அவர் நலனுக்குப் பிரார்த்தித்துக் கையெழுத்திட்டுச் சென்றனர்.

நானும் வாரம் ஒரு முறை என்று மூன்று தடவை கையெழுத்துப் போட்டுவிட்டேன். அவரைத்தான் பார்க்க முடியவில்லை.

கடைசியாக ஒரு அசட்டுத் தைரியத்தில், மாடிக்குச் சென்றேன். ஆர்.எம். வீரப்பன் வராந்தாவில் இருந்தார். சொன்னேன். ''நீங்கள் அருகில் போனால் அவர் பேச முயற்சிப்பார். அது உடல் நலத்துக்கு இடையூறாக இருக்கும்'' என்றார்.

''அவர் நலம் பெறவே நானும் வேண்டுகிறேன். பரவாயில்லை..., வருகிறேன்'' என்றேன்.

என்ன தோன்றியதோ, ''சிவகுமார்! தூரத்திலிருந்து அவரைப் பார்த்து விட்டுப் போய்விடுங்கள்'' என்றார்.

எம்.ஜி.ஆர். தங்கியிருந்த அறைக்குக் குறுக்கே நீள பெஞ்ச் ஒன்று தடுப்பாகப் போடப்பட்டிருந்தது. இரண்டு பேர் காவல் இருந்தனர்.

வந்திருந்த எம்.எல்.ஏ.க்களிடம் சில வார்த்தை பேசி அனுப்பிய எம்.ஜி.ஆர். எதேச்சையாக என் பக்கம் பார்வையைத் திருப்பினார்.

கண்களில் சந்தேகமும் கேள்விக் குறியும் தென்பட்டன. ''ஏன் தம்பி! நீ சிவகுமார் தானே?''

''ஆமாம்...''

''அடடா! வெளியேவா நிற்கிறாய்...? உள்ளே வா'' என்றார், அந்தப் பலவீனமான கட்டத்திலும். உள்ளே சென்றேன்.

''அண்ணே, சம்பவத்தன்று நான் கோயம்புத்தூரிலுள்ள என் கிராமத்துக்குப் போயிருந்தேன்...''

''ஊருக்குப் போயிருந்தியா? ஊரிலே **அம்மா** சௌக்கியமா இருக் காங்களா...?'' என்று தெளிவாக அர்த்த புஷ்டியுடன் அவர் கேட்டதுதான்

தாமதம்..., அடக்கி வைத்திருந்த வெள்ளம் பீறிட்டு அழுத்து வருவது போல, எனது கண்கள் கண்ணீர் மழை பெய்தன!

என்றைக்கோ ஒரு அரை மணி நேரம் நான் வாதிட்ட சம்பவத்தை மனத்தில் ஆழமாகப் பதிய வைத்திருந்து, தாம் கஷ்டப்பட்டு உயிருக்குப் போராடியவாறு மருத்துவமனையில் படுத்திருந்த இந்த நேரத்தில்கூட சற்றும் பிசகாமல் 'அம்மா சௌக்கியமா!' என்று கேட்ட அந்த அன்பும் பண்பும் அவர் நினைவாற்றலும் என்னைப் பிரமிக்க வைத்தன!

அவரது நினைவாற்றலுக்கு ஈடாக திரைப்பட உலகில் இன்னொருவரை நான் இன்றுவரை காண முடியவில்லை.

---



Perfectionist - என்பதற்குத் தமிழ் நாடக உலகிலும் சினிமா உலகிலும் அர்த்தம் என்ன என்பதைத் தன்னுடைய பணிகளின் மூலமாகவும் செய்து காட்டியவர் பாலசந்தர்.

அவர் சிவகுமாரை Perfectionist என்று சொல்கிறார் என்றால், வேறு சர்டிஃபிகேட் தேவையில்லை.

1-1-05, வெளியீட்டு விழாவில், சோ

## 18



# மேஜர் – நாடக ஆசான்

அன்று மாலை சென்னை ராஜா அண்ணாமலை மன்றத்தில் 'எதிர் நீச்சல்' நாடகம் என்று போஸ்டர் விளம்பரங்கள் பறைசாற்றின. இன்றைக்கு எப்படியும் நாடகத்தைப் பார்த்தே தீருவதென ஆட்டோ பிடித்து, ஆயிரம் பேருக்கு மேல் அமர்ந்து பார்க்கும் அண்ணாமலை மன்றத்துக்குப் பறந்தேன்.

ஐம்பது ரூபாய்க்கும் டிக்கெட் இருந்தது. ஆனால், ஐந்து ரூபாய் டிக்கெட்டே என்னால் வாங்க முடிந்தது. கடைசி வரிசையில்தான் அந்த டிக்கெட்டுக்கு அமர்த்துவார்கள்.

சௌகார் ஜானகியோடு ஏ.வி.எம்.படத்தில் நடித்த பழக்கமிருந்ததால் நேரே ஒப்பனை அறைக்குச் சென்று அவரைப் பார்த்தேன்.

நாடகம் பார்க்க வந்த விவரமறிந்து ரொம்ப சந்தோஷப்பட்டு, ''ஸீட் எங்கே?'' என்று கேட்டார். டிக்கெட்டைக் காட்டினேன்.

''சீ சீ... என்ன இது...? அவ்வளவு தூரமிருந்து பார்த்தால் ஆள் முகமே சரியாகத் தெரியாது. ஒரு நிமிடம் வெயிட் பண்ணுங்க'' என்றவர், முதல் வரிசையில் அமர காம்ப்ளிமெண்டரி டிக்கெட் பெற்றுத் தந்தார்.

லாட்டரி சீட்டில் பரிசு பெற்றவனின் மகிழ்ச்சி எனக்கு.

ராகினி ரிக்ரியேஷன்ஸ் குழுவினர் நடத்தும் நாடகம் அது. சென்னை நகரத்தைத் தமது அபூர்வப் படைப்புக்களால் நாடகாசிரியர் கே. பாலசந்தர் சொக்கவைத்த காலம் அது...! மேஜர் சந்திரகாந்த், நீர்க்குமிழி, மெழுகு வர்த்தி, எதிர் நீச்சல் – நாடகங்கள் சென்னையில் நடைபெறுவதாகச் செய்தி எட்டினால் போதும்! நாடகக் கொட்டகையை மக்கள் முற்றுகை யிடுவார்கள்.

இன்று நாம் பார்க்கும் இயக்குநர் பாலசந்தருக்கும் அன்று கண்ட பாலசந்தருக்கும் எவ்வளவு வித்தியாசம்! தேடிய வேட்டை கிடைத்துத் திருப்திகரமாக உண்டு நிழலில் கண் சொக்கும் புலியின் நிலையில் இன்று இருக்கிறார் அவர்.

அன்றோ, பல நாட்களாகப் பட்டினி கிடந்து ஒன்றும் கிடைக்காமல் ஊருக்குள் பாய்ந்தால் புலி என்ன வேகம் காட்டும்..., அப்படி! எதைச் சிந்தித்தாலும் மையப்புள்ளிவரை ஆழமாக யோசித்து, ஊசிமுனை கொண்டு, ஒவ்வொரு சம்பவத்தைப் பிரசவிக்கவும், மூளையைக் குத்தி வதை செய்து, நாம் தொட்ட இடத்தை, நாம் செய்யும் வித்தையை எவனும் செய்திருக்கக்கூடாது என்ற வெறியோடு அவர் பேனா பிடித்த காலம்...!

நடிகர்களிலே சிவாஜி, நாகேஷ், மேஜர் சுந்தர்ராஜன் போன்ற வர்கள்தான் 'போட்டோகிராபிக் மெமரி' உள்ளவர்கள். பத்துப் பக்க வசனமாக இருந்தாலும் ஒருமுறை படித்து, மறுமுறை படிக்குமுன் மனத்தில் பதிய வைத்துச் சொல்லிக்காட்ட வல்லவர்கள்.

நாகேஷும், மேஜரும் பட்டை தீட்டப்பட்ட காலம் அது...!

இரண்டாவது மணி அடித்துத் திரை விலகியது. ஏகப்பட்ட எதிர் பார்ப்புகளுடன் கண்களை அகலவிரித்து அனைத்தையும் ஊன்றிப் பார்த்து ரசித்தேன்.

பட்டுமாமியாக, மடிசார் பளபளக்க வெளேர் என்ற பாதத்தில் மெட்டியும், கொலுசும் கொஞ்ச, மேடையில் தன் குறும்பான நடிப்பினால் மின்னினார் சௌகார்.

மற்றவர்களின் தேவைகளைப் பூர்த்திசெய்து வாழ்க்கையை ஓட்டும் 'மாடிப்படி' மாதுவாக நாகேஷ்...! மாதுவின் மீது பரிதாபப்படும் ஒரே ஈரம்மிக்க இதயமாக மேஜர் சுந்தரராஜன்...!

எடுபிடி வேலை செய்து எச்சில் சோறு தின்பவன், வீட்டிலுள்ள பெண்ணைக் காதலிக்கிறான் என்ற குற்றச்சாட்டு எழுந்தபோது, ஆதரித்த பெரியவரும் ஒதுங்கி விடுகிறார்! தேர்வு எழுதப் போகுமுன் தாசில்தாரின் காலில் விழுந்து ஆசிபெற விரும்புகிறான் மாது! அவரோ வீட்டினுள் இருந்து வெளியே வர மறுக்கிறார்.

''பரவாயில்லை சார்! உங்கள் ஆசீர்வாதத்தை நானே பெற்றுக் கொள்கிறேன்'' என்று ஈஸிசேர் மீது இருந்த கைத்தடியை எடுத்துப் பிடித்து ''படவா ராஸ்கல்! நான் ஆசீர்வாதம் பண்ணாம, உனக்கு வேற எவன்டா பண்ணுவான்? போய் நல்லா எழுதிட்டு வா'' என்று மேஜரைப் போலவே நடித்து, அடுத்த நொடியில், மாதுவாக அவர் காலில் விழுந்து அழுதவன் நன்றி கூறி, மேலே எழுவதாக நாகேஷ் நடிக்கும் கட்டம் கொட்டகையில் அனைவரின் கண்களையும் குளமாக்கிவிடும்.

நாடகம் பார்த்து வந்த இரவு தூக்கத்துக்குப் பதில் அசாத்திய விழிப்பு ஏற்பட்டது. நான் எங்கே இருக்கிறேன்...?

ஏதோ, அதிர்ஷ்டக்காற்று இந்தப் குப்பையை, கோபுரத்தில் ஏற்றி விட்டிருக்கிறது! அடுத்து ஒரு துரதிர்ஷ்டக் காற்றடித்து, மீண்டும் குப்பை மேட்டுக்கே பறந்து வருவதற்குள் உஷாராகி விடவேண்டும்!

அதிர்ஷ்டத்தால் உயர்ந்தவன்தான் அஞ்சி நடுங்க வேண்டும். திறமையால் உயர்ந்தவன் என்றும் திடமாகத்தான் இருப்பான். நடிப்புத் திறமையை வளர்த்துக் கொள்ள வேண்டும் என்ற வெறி என்னுள் பிறந்தது. உடனே சொந்த நாடகக் குழு பிரசவித்தது.

'அம்மன் தாலி' என்ற பெயரில் எம்.எஸ். பெருமாளின் நாடகம் அரங்கேறியது. அடுத்து, 'குங்குமச் சிமிழ்' என்னும் பெயரில் பழனி கோபுவின் நாடகம் தொடர்ந்தது. 'பொம்மை' சாரதி, நண்பர் ஸ்ரீரங்கன் ஆகியோருடன் உருவாக்கிய 'ஜீவநதி' நாடகம் அடுத்து அரங்கேறியது.

நாடகங்கள் தொடர்ந்து நடக்க, சபாக்களின் மேலான ஆதரவு வேண்டும். சினிமாத் துறையில் வளரும் நடிகனான எனது நாடகங்களுக்குப் பெரிய 'கேட் கலெக்ஷன்' இருக்காது! எனவே சந்தர்ப்பம் தர சபா செயலாளர் நெளிவார்.

கையைக் காலைப் பிடித்து ஒப்புதல் பெற்றாலும், நாடகம் ஒன்றுக்கு 450 ரூபாய் மட்டும் தருவார்கள். மேலே ஆகும் செலவை நான் கையிலிருந்து போட்டுக் கொள்வேன்.

'அம்மன் தாலி'யை ஐம்பது முறை நடத்த இரண்டரை ஆண்டுகள் ஆகிவிட்டன. ஒரு நாடகம் முடிந்து அடுத்த நாடக சந்தர்ப்பம் வரும் போது, நாடக வசனங்களே மறந்துபோகும் அளவுக்கு அத்தனை நாள் இடைவெளி!

நாடகத்தின் இயக்குனராக லாரன்ஸ், முக்கிய நடிகராக ஆசிரியர் ராஜமனோகர், நிர்வாகியாக எம்.ஏ.பட்டதாரி முத்துசாமி என அனுபவப் பட்டவர்கள் குழுவை நடத்திச் சென்ற போதும், அதிக சந்தர்ப்பங்களைச் சபாக்களிடம் பெறமுடியவில்லை.

மேஜர் சுந்தரராஜன் எப்போதுமே சொந்தச் சகோதரர்போல் என்மீது அன்பு செலுத்துவார். எனது இரண்டாவது படமான 'மோட்டார் சுந்தரம் பிள்ளை' படத்திலேயே எனக்குத் தந்தையாக நடித்துப் பழக்கமானவர்.

பழக்க வழக்கங்களில் நானும் அவரும் வேறுபட்டாலும், மனத் தளவில் இருவருக்கும் பல விஷயங்களில் ஒற்றுமை உண்டு. சில கொள்கைகளில் வேறுபாடு உண்டு.

'பாபு' படத்தில் எனக்குத் தந்தையாக அவர் நடித்தபோது ஹேம மாலினி கல்யாண மண்டபத்தில் ஒரு திருமணக் காட்சி எடுக்கப்பட்டது. நிறைய நாடகங்களில் நடிக்க வேண்டும் என்ற வெறி இருந்தும் சந்தர்ப் பங்கள் குறைவாகக் கிடைப்பதை அப்போது அவரிடம் தெரிவித்தேன்.

''குழந்தே! (அப்படித்தான் அவர் என்னை அழைப்பார்) வைரம் தன்னைத் தானே பட்டை தீட்டிக்கொள்ள முடியாது. அடுத்தவன்தான் அதைச் செய்யணும். என் நாடகக் குழுவில் வந்து சேர்ந்து விடு'' என்று அழைப்பு விடுத்தார்.

ஒரு நல்ல நாளில் சம்மதம் தெரிவித்துவிட்டு 'அச்சாணி' நாடகத்தில் என்.எஸ்.என். தியேட்டர் குழுவுடன் இணைந்தேன். திருவல்லிக்கேணி பெரிய தெருவில் குருநாதர் என்.எஸ். நடராஜ ஐயரின் குடியிருப்பு இரண்டாவது மாடியில் இருந்தது.

பூஜை முடிந்து அனைவரும் வட்டமாக அமர்ந்து பாடங்களைப் பெற்றுப் படித்துக் காட்டிவிட்டு, ஐயாவிடம் ஆசி பெற்றுத் திரும்புவோம்.

பத்து நாள்கள் உட்கார்ந்து வசனங்களைப் படிப்போம்...!

மேடையில், அடுத்து மூவ்மெண்ட்டோடு ஒத்திகை நடைபெறும். சொன்னதைச் சரியாகப் புரிந்துகொள்ளாவிட்டாலோ, சரியான இடத்தில் மூவ்மெண்டைச் செய்யாவிட்டாலோ மேஜருக்குக் கடும் கோபம் வரும். அவரின் கர்ஜனைகளைத் தாங்கப் பிடிக்காமல் பல அரங்கத்தின் சுவர்கள் கூட விரிசல் விட்டிருக்கின்றன.

நாடகம் வெற்றிகரமாக அரங்கேறிவிட்டால்! அன்றிரவு திருவிழா தான்! சொந்தப் பிள்ளைகளுக்கு, அவர்கள் விருப்பம் பார்த்துப் பரிமாறுவதுபோல உபசரிப்பில் அசத்திவிடுவார்.

படப்பிடிப்பு இல்லையென்றால் ஜே ஜே என்று அவர் வீட்டில் பத்துப் பேர் இருந்துகொண்டே இருப்பார்கள். அரட்டை நேரம் போக, அடுப்படியில் பக்குவமாகச் சமைக்க மனைவிக்குச் சொல்லிக் கொடுப்பார். பம்பாய், டெல்லி, ஹைதராபாத் என்று வெளியூர் நாடகங்களுக்கு ரயிலில் ஒரு பெட்டியை வாடகைக்கு அமர்த்தி, அதிலேயே சமையல் செய்து சாப்பிட்டு ஆடிப்பாடி, அட்டகாசம் செய்து அடித்துப் புரண்டு... ஓ... என்ன இனிமையான நாள்கள்!

செயலாளர் சந்தானம், மேடைப் பொறுப்பேற்கும் ராஜகோபால், ஓ.வி.எஸ். நடிகர்களான வீரராகவன், ஜே. கோகுல்நாத், 'காமெடி' ராஜகோபால் மற்றும் எல்லா அலுவலகங்களிலும் பணிபுரியும் எல்லா ஜாதி, மதத்தினரும் ஒரே மனத்துடன் சங்கமமான இடம் என்.எஸ்.என். தியேட்டர்ஸ்.

உண்மையான எந்த ஒரு கலைஞனும், தான் புகழோடு இருக்கும் போது, தன்னால் எதையும் செய்யக்கூடிய வலுவும் திறனும் இருக்கும் போது, தன்னை இரண்டாம் பட்சமாக்கிக் கொண்டு, தன் படைப்புக்களில் அடுத்தவன் பெயர் பெற அனுமதிக்க மாட்டான்.

நாடக மேடையில் இதற்கு விதிவிலக்காகத் திகழ்ந்தவர் மேஜர் சுந்தரராஜன்! என்று என்.எஸ்.என். தியேட்டர்ஸில் என்னை இணைத்துக் கொண்டேனோ, அன்று முதல் மேஜரை ஆசானாக ஏற்றுக்கொண்டு தலைமைக்கு உரிய மதிப்பைக் கொடுத்து வந்தேன்.

ஆனால் அவரோ, வெளியூரிலும் சரி... உள்ளூரிலும் சரி... பாராட்டாயினும், மாலை மரியாதை செய்வதாயினும் கொட்டகைக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் என்னை இழுத்து வரச் செய்து, சமமான மரியாதைகள் பெற்றுத் தந்தார்.

இவற்றுக்கு எல்லாம் சிகரமாக அமைந்தது, நாடகக் குழுவில் பலத்த போட்டிகளுக்கிடையில் பிடிவாதமாக நின்று, கோமல் சுவாமிநாதன் எழுதிய 'அப்பாவி' நாடகத்தில் என்னைக் கதாநாயகனாக நடிக்க வைத்தது!

குழுவில் சீனியர், ஜூனியர் பிரச்சினையெல்லாம் எழுந்தபோதும், 'அப்பாவியாக நடிப்பது வேறு, நகைச்சுவையாக நடிப்பது வேறு..., சிவாதான் அப்பாவியாக, சிறப்பாக நடிக்க முடியும்' என்று வாதிட்டு, இப்பிரச்சினையில் 20 ஆண்டுகளுக்கு மேலாக இயங்கி வந்த என்.எஸ்.என். தியேட்டர்ஸ் குழுவே சிதறிவிடும் நிலை வந்த போதும், தன் நிலையில் பிடிவாதமாக இருந்து, அந்த வேடத்தை எனக்குப் பெற்றுத் தந்தபோது, அந்த நல்ல மனம் வாழ மனமார இறைவனைப் பிரார்த்தித்தேன்.

அடுத்து, என்.எஸ்.என். தியேட்டர்ஸ் நாடகக் குழுவின் ஆயிரமாவது நாடகம் நடக்கவிருந்தபோது, மேஜருக்குப் பெயர் வாங்கித் தந்த ஞான ஒளி, டைகர் தாத்தாச்சாரி, தீர்ப்பு, இளையராஜா - இப்படி ஏதாவது ஒரு நாடகத்தை ஆயிரமாவது நாடகமாக நடத்தாமல், நடிகர் திலகம் தலைமையில் 'அப்பாவி' நாடகத்தையே என்.கே.டி. கலா மண்டபத்தில் நடத்தி, என்னை அவர் கௌரவித்தது அவரது பெருமைக்கெல்லாம் சிகரமாக அமைந்தது.

---

சிவகுமாரை எல்லாரும் நடிகருக்கான இலக்கணம், ஓவியருக்கான இலக்கணம், ஞாபக சக்திக்கான இலக்கணம்னு சொல்றாங்க. இது எல்லாத்துக்கும் மேல அவரு ஒரு சிறந்த மனிதனுக்கான இலக்கணம்.

1-1-05, வெளியீட்டு விழாவில், பாலா



# 19



'காரைக்கால் அம்மையார்'

## கடவுள் வேஷங்கள்

**ப**ல புராணப் படங்களில் நடித்துப் புகழ்பெற்று, சிறிது இடைவெளிக்குப் பிறகு மீண்டும் புராணப் படங்களில் நடிக்க பல வாய்ப்புகள் என்னைத் தேடி வந்தன. அனைத்தையும் நிராகரித்து விட்டேன். கடைசியாக நான் நடித்து வெளிவந்த 'கிருஷ்ண லீலா' படத்தின் வியாபார ரீதியான தோல்விதான் நான் எடுத்த இந்த முடிவுக்குக் காரணம்.

புராணப் படங்களும் பொழுது போக்கை அடிப்படையாக வைத்து உருவாக்கப்படுபவைதான்! புராணத்தை நம்பாவிட்டாலும், இரண்டரை மணி நேரம் அலுப்புத்தட்டாத வகையில் படம் இருக்குமானால், அதை ரசிகர்கள் வரவேற்கவே செய்வார்கள்.

இறையுணர்வுக்கும், இறை எதிர்ப்பு உணர்வுக்கும் திரைப்பட உலகைப் பொறுத்தவரை சம்பந்தமே இல்லை! அன்று கடவுள் நம்பிக்கையில்லாத எம்.ஜி.ஆர். கூட, சின்னப்பா தேவரின் விருப்பத்துக் கிணங்கி ஒரு படத்தில் முருகன் வேஷம் போடவே செய்தார். புராண இதிகாசங்கள் பொய், புனைசுருட்டு என்று பிரச்சாரம் செய்த எம்.ஆர்.ராதா கூட, கம்சன் வேஷம் போட்டு நடிக்கவே செய்தார். எல்லாவித வேஷமும் போட்டு நடிப்பது, நடிகனுக்குத் தொழில்.

ஒவ்வொரு காலகட்டத்தில் ஒவ்வொரு பாணிக் கதைகள் வரவேற்பைப் பெற்றது போல, புராணப் படங்கள் அமோகமாக மக்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டபோது, நான் கடவுள் வேடமேற்று நடித்தேன்.

அந்த நாள்களில் புராணப் படங்கள் வெற்றி பெற்றதற்கு நான்கு காரணங்கள் தென்படுகின்றன! 'கோடி ரூபாய் செலவானாலும் சரி. சொர்க்கலோகத்தைப் படத்திலே காட்டுங்கள்! காட்சி ஜோடனைகளால், கருத்தாழம் மிக்க சம்பவங்களால், மக்களை மெய்மறக்கச் செய்யுங்கள்!' என்று ஊக்குவிக்கும் பணமுள்ள படமுதலாளிகள் அப்போது இருந்தனர்.

திருவிளையாடல்புராணம், கந்தபுராணம், ராமாயணம், மகாபாரதம், பாகவதம், சிலப்பதிகாரம், அரிச்சந்திரபுராணம் என்று அனைத்து நூல்களிலும் மூழ்கி, எந்த முத்து நன்முத்து, அவற்றில் எந்தப் பகுதி மக்களை ஈர்க்கவல்லது எனத் தீர்மானித்து, திரைக்கதை வசனம் எழுதும் ஆற்றல், பள்ளியில் படிக்காத மேதைகள், ஏ.பி.என்., கே.எஸ்.ஜி. போன்றோருக்கு இருந்தது.

இரண்டு வரி பாடலைச் சொன்னால், இது இந்த நூலில், இந்த அத்தியாயத்தில் வருகிறது என்று 'பளிச்'சென்று சொல்லிவிடக் கூடிய அபூர்வ நினைவாற்றல் பெற்றிருந்தனர்! சுவையும் ஆழமும் மிக்க வசனங்கள் அவர்களின் படத்தின் வெற்றிக்கு அடிகோலின.

'திருவிளையாடல்' போன்ற ஒரு படத்தில் சிவாஜி, சாவித்திரி, முத்துராமன், தேவிகா, நாகேஷ், ஓ.ஏ.கே. தேவர், டி.எஸ்.பாலையா, வரலட்சுமி, டி.ஆர். மகாலிங்கம் என ஜாம்பவான்கள், அவரவர்களுக்குக் கொடுக்கப்படும் வேஷத்தைப் பிய்த்து உதறினார்கள்! எந்த வேடத்துக்கும் ஏற்ற நடிப்பாற்றலும், முக, உடலமைப்புடனும் பல நடிக நடிகையர் அப்போது இருந்தனர்.

'கந்தன் கருணை' படத்துக்காக, முருகன் சூரனை வதம் செய்யும் உச்சகட்டக் காட்சியைப் படமாக்கக் கோவளம் கடற்கரையில், ஆர்ட் டைரக்டர் கங்காவின் மேற்பார்வையில், மகாபலிபுரம் கடற்கரைக் கோயில் போல - ஏழு கோபுரங்கள் அமைக்க, சுமார் நூற்றைம்பது கார்ப்பெண்டர்கள், மோல்டர்கள், பெயிண்டர்கள் இரண்டு மாதங்களாக இரவு பகல் வேலை செய்தனர்.

படப்பிடிப்புக்கு முந்தைய நாள் சிவாஜி, அசோகன், பாலாஜி உட்பட பல புகழ்மிக்க நடிகர்களும், ஆயிரத்துக்கும் மேற்பட்ட துணை நடிகர்களும் கோவளம் கிராமம் சென்று தங்கினார்கள்.

அன்றிரவு என்னை அழைத்துச் சென்ற கார், மேற்கொண்டு முன்னேற முடியாத அளவு சூறாவளிக் காற்றும் மழையும் பாதையை மறைத்தன. புயல் கரையைக் கடக்கும் அபாயமிருந்ததால், கடலே பொங்கி நாற்பது அடி உயரத்துக்கு அலைகள் எழும்பி, ஊருக்குள் புகுந்து எந்த நேரமும் எங்களைக் கபளீகரம் செய்துவிடக்கூடிய அபாயம் இருந்தது. விடியும் வரை யாரும் தூங்கவில்லை.

புயல் ஓய்ந்த மூன்றாவது நாள், போர் ஓய்வில் காணப்படும் அமைதி நிலவியது! ஆனால், படப்பிடிப்புக்காக நான்கு லட்ச ரூபாய் செலவழித்துப் போடப்பட்ட அந்த ஏழு கோபுரங்களும் எங்கே...? மனிதச் சுவடுகளை மறைத்ததுபோல, கோபுரங்களுக்குப் பயன்படுத்திய பலகைகளையும் அட்டைத் தூண்களையும், மரச்சட்டங்களையும் பிய்த்துக் குதறிப்போட்டுவிட்டுப் போய்விட்டது புயல்!

ஒரு அடி பிலிம்கூட ஒளிப்பதிவு செய்ய முடியாத வேதனையுடன், சென்னை வந்து சேர்ந்தோம்.

தயாரிப்பாளர் ஏ.எல். சீனிவாசன் அப்போது பம்பாயில் தங்கியிருந்தார். தயாரிப்பு நிர்வாகி வீரய்யா போன் மூலம் தொடர்பு கொண்டு, புயலால் ஏற்பட்ட நான்கு லட்ச நஷ்டம் பற்றித் தெரிவித்தார். ''அப்படியா? பரவாயில்லை! சாரதா ஸ்டூடியோவுக்குள் செட் போட்டு கிளைமாக்ஸை முடித்துக் கொள்ளுங்கள்'' என்று எவ்விதச் சலனமுமின்றிச் சிரித்துக்கொண்டே பதில் சொன்ன ஏ.எல்.எஸ்.ஸின் நெஞ்சுரம் அனைவரையும் அதிரச் செய்தது!

இதேபோல் 'ராஜராஜ சோழன்' படம் உருவானபோது, தஞ்சை பிரகதீசுவரர் ஆலயத்தைப்போலவே, வாசு ஸ்டூடியோவில் ஒரு கோயிலை நிர்மாணித்தார்கள். ஒற்றைக் கல்லால் செய்யப்பட்ட நந்தியின் அளவுகூட மாறாமல் செய்யப்பட்டது. காமிரா முன்பு கண்ணாடி ஒன்றை ஸ்டாண்டில் பொருத்தி வைத்து, கோயிலின் கோபுரத்தையும் உச்சியிலுள்ள கலசத்தையும், போடப்பட்ட செட் கோயிலின் மீது, நிஜமாகவே கோபுரம்

இருப்பதுபோல ஆர்ட் டைரக்டர் கங்கா வரைந்து படமாக்க உதவியது, ஓவியனான என்னையே பிரமிக்கச் செய்தது.

மற்றொரு படப்பிடிப்பில், பாற்கடலில் ஆதிசேஷன் பாம்பின்மீது திருமாலும் லக்ஷ்மியும் பள்ளி கொள்ளும் காட்சியைப் படமாக்கினார்கள். சுமார் இருநூறு அடி நீளம், நூறு அடி அகலமுள்ள ஸ்டூடியோ தளத்தினுள் ஒரு ஏரியை அமைத்து, 'ஸ்னோசம்' போன்ற திரவ வஸ்துவை ஐம்பதாயிரம் ரூபாய்க்கு வாங்கி நீரில் கலந்து, அசல் பாற்கடலைப் போன்று செய்து.., அலைகள் அடிக்க வைத்துப் படமாக்கி அசத்தினார்கள்.!

ஒரு குறிப்பிட்ட கதாபாத்திரத்துக்கு ஏற்ற நடிக நடிகையைத் தேர்ந்தெடுக்க ஆறு மாதம், ஓராண்டுகூடக் காத்திருந்து, பலபேரை வரவழைத்து ஒப்பனை டெஸ்ட் செய்து பரிசீலித்திருக்கிறார்கள்.

முருகன் வேடத்துக்கு என்னைத் தேர்வு செய்யும் முன்னர், கிட்டத் தட்ட முப்பது பேர் பரீட்சை செய்து பார்க்கப்பட்டனர். விநாயகர், பிரும்மா வேடங்கள் தவிர, எல்லாவிதமான கடவுள் அவதாரங்களையும் ஏற்று நடிக்க எனக்கு வாய்ப்புக் கிடைத்தது.

'காரைக்கால் அம்மையா'ரில் சிவன் வேடமேற்றதுடன், துரிதகதியில் ஒரு பாடலுக்கு ஸ்ரீவித்யாவுடன் நடனமும் ஆடும் வாய்ப்பு அளிக்கப் பட்டது.

**'தகதகதக தகதக என ஆடவா...**
**சிவ்சக்தி சக்தி சக்தியோடு ஆடவா...'**

எனத் திருமதி கே.பி. சுந்தராம்பாள், காரைக்கால் அம்மையார் வேடமேற்று, சிவன்-பார்வதியை நேரில் சந்தித்த ஆனந்தத்தில் உணர்ச்சி பொங்கப் பாட, அம்மையும் அப்பனும் ஆனந்தக் கூத்தாடும் காட்சி அது!

''இந்தப் பையன் டான்ஸரா...? நல்லா ஆடுவானா...? பாட்டு ரொம்பவும் ஸ்பீடா இருக்கே...! புதுப் பையனை நம்பியிருக்கியே ஏ.பி.என்...!'' என்று திருமதி கே.பி.எஸ். என்னைப் பார்த்துவிட்டு முறையிட...,

''கவலைப்படாதீங்க! அவங்க ஆடும்போது நீங்களும் நடிக்கத்தானே போறீங்க...! அப்ப பாருங்க...'' என்று தன்னம்பிக்கையோடு பதிலளித்து விட்டு, என்னை அழைத்தார் டைரக்டர்.

''கவுண்டரே! நடனத்துக்கே அரசனான நடராஜன் வேஷத்தை உங்களுக்குக் கொடுத்திருக்கேன்...! ஆனா, உண்மையிலேயே நடனத்துக்கு அரசி இப்ப ஸ்ரீவித்யாதான். அஞ்சு வயசிலிருந்து பதினஞ்சு வருஷமா மேடையில தனிக் கச்சேரி பண்ற ஸ்ரீவித்யாவை நீங்க 'பீட்' பண்ணனும், ஒரு வாரம் 'டைம்' தர்றேன்..., நல்லா ஒத்திகை பார்த்துக்குங்க...!'' என்றார்.

மறைந்த மேதை பி.எஸ்.கோபாலகிருஷ்ணன், நடனத்தை 'கம்போஸ்' செய்ய, அவரது உதவியாளர் விமலா எனக்கு 'கோச்' பண்ணினார்.

ஏற்கனவே சோப்ரா மாஸ்டரிடம் இரண்டு ஆண்டுகள் கதக் நடனம் பயின்றிருந்ததால், பயம் ஏற்படவில்லை. ஆனால், கடுமையாக ஒத்திகை பார்த்துக் கொண்டேன்.

ஸ்ரீவித்யா ஒத்திகைக்கு வருவார். நான் அவரை ஆடவிட மாட்டேன். என் பயிற்சியைப் பார்த்துவிட்டு வீட்டுக்குப் போய்விடுவார்.

ஆறு நிமிடப் பாடல். ஏழு நாள்கள்! தினமும் பன்னிரண்டு மணி நேரம் படமாக்கப்பட்டது. தலையிலுள்ள ஜடாமுடிக் குள்ளிருந்து கங்கை போல் வியர்வை, பிரவாகம் எடுத்து ஓடிவரும். இடுப்பிலும் கைகளிலும் இறுக்கிக் கட்டப்பட்ட நகைகள் ரத்த ஓட்டத்தைத் தடைசெய்யும். காலில் சலங்கைகள் மோதிமோதி ரத்தம் வடியும்.

ஏழாவது நாள் படப்பிடிப்பு முடிந்தபோது, மாஸ்டர் காலில் விழுந்த என்னை அப்படியே எடுத்து அணைத்துக்கொண்டார். பரத நாட்டியம் முறையாகப் பயின்ற ஸ்ரீவித்யாவுடன் நீங்கள் சமமாக ஆட, அவ்வப் போது திட்டியதை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டாம்'' என்றார். அந்தப் பாடல் காட்சிதான் முழுமையாக எனக்கு நிறைவளித்தது. அதை மிஞ்சும் வகையில் ஆடும் வாய்ப்பு இதுவரை கிடைக்கவில்லை.

இன்று ஒரு இளைஞருக்குப் பாடவோ, ஆடவோ, சண்டைப் பயிற்சியோ தெரிந்திருந்தால், அவரை வைத்துப் பாடகனாகவும், ஆடல் கலைஞனாகவும், ஸ்டண்ட் நடிகனாகவும் தொடர்ந்து இரண்டொரு படத்தில் பயன்படுத்திவிட்டு, அவரை வீட்டுக்கு அனுப்பிவிடுகிறார்கள்!

அன்று தயாரிப்பாளர்களும் இயக்குநர்களும் நடிகனை உருவாக்கி னார்கள்! தேர்ந்த நடிகனுக்கு ஆட, பாட, சண்டையிடப் பயிற்சியளித்தனர். அதனால்தான் தன் நடிப்பாற்றலோடு இவற்றை இணைத்து, பல ஆண்டுகள் அவன் பரிமளிக்க முடிந்தது.

புராணப் படங்களில் கடைசியாக நான் பங்கு பெற்ற 'கிருஷ்ண லீலா' படம், துவங்கிய வேகத்தில் முடிக்கப்படவில்லை. தயாரிப்பாளர்கள் மாறினார்கள். கால இடைவெளியில் ரசனையும் மாறிவிட்டது.

ஏ.பி.என். இறப்பதற்குமுன் எவ்விதக் குறையும் வைக்காமல் படத்தை முடித்துக்கொடுத்தார். பத்திரிகையாளர் காட்சிக்கு ஏற்பாடு செய்து, படம் பற்றி முறையான விமரிசனம் வர வழி செய்தேன்.

என்ன செய்தும், சென்னையிலும் வெளியூர் தியேட்டர்களிலும் மூன்றாவது வாரம் ஓடவே படம் திணறியது. புராணப் படங்களின் சீசன் முடிந்து அடுத்த சீசன் துவங்கிவிட்டது!

---

## 20



# இரண்டாம் கதாநாயகன்

'**வ**சனங்களை ஏற்ற இறக்கத்துடன்' கடைசி எழுத்துக்கள் தேய்ந்து போகாமல், அழகாக உச்சரிப்பது எப்படி? எவ்வளவு உணர்ச்சிகரமான காட்சியாயிருப்பினும் கண் இமைக்காமல் பாவங்களை வெளிப்படுத்து வது எப்படி? முத்து முத்தாக உருண்டு கண்களில் அடியில் திரண்டு நிற்கும் நீரை, நீண்ட நேரம் விழாமல் வைத்திருந்து, குறிப்பிட்ட

வசனம் பேசும் போது மட்டும் விழவைப்பது எப்படி? பத்தடி தூரத்தில் தரையில் போட்டுள்ள 'மார்க்கை'ப் பார்க்காமல், மேலே பார்த்தபடி நடித்துக் கொண்டே அந்த மார்க்கில் போய் நிற்பது எப்படி? கோபம், பயம், சாந்தம், சோகம் போன்ற பாவங்களுக்கு முகத்திலுள்ள சதைகளை எப்படி நகர்த்த வேண்டும்? இசையில், நடனத்தில் ஒரு ஆவர்த்தனம், அரை ஆவர்த்தனம் என்றால் என்ன அளவு? கொலை செய்யும் வெறியை முகபாவங்களில் கொடூரமாகக் காட்டி, கை நரம்புகள் முறுக்கேறுவதைத் தெளிவாகச் செய்யும் நேரம்! எதிராளியின் கழுத்திலுள்ள நம் விரல்கள் குரல்வளையைப் பதம் பார்க்காமல் நடிப்பது எப்படி? என்று நடிப்புக் கலையின் எண்ணற்ற வித்தைகளில் எதையுமே தெளிவாகக் கற்றுக் கொள்ளாமல் அரைகுறையாக நான் இருந்த நேரம்.

அந்நாளைய பிரபல இயக்குநர் ஒருவர் ''அடுத்த படத்தில் நீதான் ஹீரோ'' என்றார். 'குருவி தலையில் பனங்காயை வைக்கிறாரே..., அது எப்படித் தாங்கும்?' என்று சின்ன பயம் உள்ளுக்குள் இருந்தது.

அதே சமயம் 'நாம் புதுமுகமல்ல...! ஏழெட்டுப் படங்களுக்குமேல் நடித்தாயிற்று. திறமையுள்ள இயக்குநர் முயற்சித்தால் முழு ஹீரோவாக நம்மை மாற்ற முடியாதா என்ன?' என்ற ஒரு நம்பிக்கையும் இருந்தது.

'ஹீரோ' என்று ஒரு மாதத்துக்கு முன்னர் சொன்னவர், திடீரென்று பத்திரிகைச் செய்தியில் ஒரு முன்னாளைய ஹீரோ பெயருடன் என் பெயரையும் இணைத்து, இரண்டு ஹீரோக்கள் நடிக்கும் படம் என்று தெரிவித்தார். படப்பிடிப்பு துவங்கப் போகும் தேதி நெருங்கும்போது, 'சிவகுமார் இரண்டாவது ஹீரோ' என்றார்.

பரணி ஸ்டுடியோவில் பூஜை போட்டுப் படப்பிடிப்பைத் தொடங்கிய அன்று, ''உனக்கு... ம், இப்படத்தில் வேஷமிருக்கிறது. ரெண்டு ஸீன் எப்படியும் வரும்'' என்றார் தயாரிப்பு நிர்வாகி.

எதிர்பாராமல் ஒரு பாடல் காட்சியும் சேர்த்தபோது, 'பரவாயில்லை! வேடம் எப்படியும் மனத்தில் நிற்கும்' என்று தீர்மானித்தேன்.

என் துரதிர்ஷ்டம், இயக்குநரின் கற்பனை வேறு பக்கமாகத் திரும்பவே, படக்கதையின் வடிவம் மாற்றப்பட்டு, எனது பாடல் காட்சியும், வசனக் காட்சிகளும் இறுதியில் கத்தரிக்குப் பலியாகி, படத்திலும் இல்லாமல், பணமும் வராமல் பலிகடா ஆக்கப்பட்டேன்.

அடுத்து எந்தத் தயாரிப்பாளர் வந்து, ''நீங்கதான் என் படத்தில் ஹீரோ'' என்று சொன்னாலும், சூடு கண்ட பூனைபோல, ''எனக்கு வேண்டாம் சாமி...! தொழிலைக் கத்துக்கற வரைக்கும், இரண்டாம் கதாநாயகனாகவே நடிக்கிறேன்'' என்று சொல்லிவிட்டேன்.

இரண்டாம் கதாநாயகன் வேடம் என்றால் 'கதாநாயகனுக்கு அடுத்த வேடம்' என்று அர்த்தம். ஹீரோ பாத்திரத்தில் அது சரிபாதியாகவும் இருக்கும். உப்புச் சப்பில்லாத ஒரே காட்சியாகவும் இருக்கும்! சுருங்கச் சொன்னால், அது ஒரு மண்புழுபோல! ஏதோ அதனால் கொஞ்சம் உபயோகம் இருக்கும். ஆபத்து இருக்காது.

படத்தில் வரும் எல்லா வேடங்களுக்கும் நடிக்கின்ற வாய்ப்பு இருக்குமெனினும், கதாநாயகன் என்ற முத்திரை குத்துவதற்கு, படத்தின் இடைவேளைக்குள், எமோஷனலாக இரண்டு காட்சிகளோ, அல்லது இரண்டு சண்டைக் காட்சிகளோ, படத்தின் முடிவில் 'பாசம் மிக்கவன், ஏழைப் பங்காளன், சத்தியத்தைக் காப்பவன்' என்று அழுத்தமாக மனத்தில் பதியும் வண்ணம் சில காட்சிகளோ இருக்கும். அதாவது, கதைக் கரு, அந்த ஹீரோ அல்லது ஹீரோயின் பாத்திரத்தை மையமாக வைத்து எழுதப்பட்டிருக்கும்.

அதனால் படம் முடிந்து வெளியே வருபவர்கள், அந்த முக்கிய வேடத்தைப் பற்றித்தான் பேசுவார்கள். இரண்டாம் கதாநாயகனோ, மற்ற பாத்திரங்களோ மனத்தில் பதியாமல் இரண்டாம் பட்சமாகப் போய் விடுவார்கள்.

இருப்பினும், இரண்டாம் நாயகன் ஒரு இளவரசன்போல! நாட்டைக் காப்பாற்றும் பொறுப்பு, மக்களின் அன்றாடப் பிரச்சினை, அயல்நாட்டுடன் போர் அல்லது சமாதானம்...! இப்படி மண்டைக் குடைச்சல் அரசனுக்குத்தானே! இளவரசன் எந்தவிதக் கவலையுமில்லாமல் தன் விருப்பம்போல வாழ்க்கையை ஓட்டலாம்.

அதுபோல படம் நன்றாக ஓடினாலும் ஓடாவிட்டாலும், தயாரிப் பாளர் லாபம் சம்பாதித்தாலும் நஷ்டமடைந்தாலும் எந்தவிதக் கவலையும் இல்லாமல், பழியும் இல்லாமல், கொடுத்த வேடத்தைச் செய்துவிட்டு சில்லறையை (அது கொஞ்சமாக இருப்பினும்) வாங்கிக் கொண்டுபோய் நிம்மதியாக வாழ்க்கையை ஓட்ட இரண்டாம் பட்ச வேடங்களில் வசதி உண்டு!

அவரைச் செடி முளைத்து மண்ணில் வேர்விடும் வரைதான், விதையிலுள்ள சத்தை நம்ப வேண்டும். அதன் பிறகு தனக்கு வேண்டிய நீரையும் சத்தையும் அது பூமியில் தன் வேர் மூலமாகத்தான் தேடிப் பெற்றுக்கொள்ள வேண்டும்.

நடிப்பின் பரிமாணங்களை, அடிப்படை நெளிவு சுளிவுகளைக் கற்றுக் கொள்ளும் வரைதான் இரண்டாம் கதாநாயகனாக நடிக்க வேண்டும்!

இரண்டரை மணி நேரம், படம் பார்க்கும் ஆயிரக்கணக்கான வர்களைத் தன் நடிப்பால் கவர முடியும், மகுடிக்குக் கட்டுப்பட்ட பாம்புபோல் சொக்கவைக்க முடியும் என்று நினைக்கு வளர்ந்த பின்பும் இரண்டாவது ஹீரோவாகவே காலத்தை ஓட்ட நினைப்பது முட்டாள்தனம்.

என் பலம் எனக்குத் தெரியாமல், 'இன்னும் ஹீரோவாக நடிக்கும் தகுதியை நான் பெறவில்லை' என்று பயந்து கொண்டிருந்தபோது எனக்கு ரோஷமூட்டி, 'இனிமேல் இரண்டாம் பட்ச வேடங்களை ஏற்பதில்லை' என்று நான் முடிவெடுக்க ஒரு ஹீரோ காரணமாக இருந்தார். அவருக்கு என்றும் நான் நன்றி சொல்லக் கடமைப் பட்டிருக்கிறேன்.

அந்தப் படத்தில் அந்த ஹீரோவும் நானும் அண்ணன், தம்பியாக நடித்தோம்.

பொதுவாக எல்லா மனிதர்களையும்போல், ஹீரோக்களும் ஏதோ ஒரு வேளையில் 'மூட் அவுட்' ஆக இருப்பதுண்டு!

என்னவோ தெரியவில்லை அந்த ஹீரோவுக்கு, நான் சம்பந்தப்பட்ட காட்சிகளிலெல்லாம் மூட் அவுட்டாகவே இருந்தது. நாங்கள் இருவரும் சேர்ந்து தோன்றும் காட்சிகளில், எனக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டிய – நான் வசனம் பேசும் ஷாட்டிலும்கூட, தன்னைக் காமிராவுக் குச் சாதகமாக நிறுத்திக்கொண்டு, என்னைத் திருப்பி, என் முதுகு காமிராவுக்கு எதிரே இருப்பதுபோல் செய்தார்.

பொறுமையாக இருந்தேன்! இன்னொரு காட்சியின்போது, ஒரு பழம்பெரும் நடிகையின் பெயரைச் சொல்லி, ''என்ன மிஸ்டர்! அந்த அம்மா மாதிரி நடிக்கறீங்க...? அவங்கதான், தன் மூஞ்சியை எப்பவும் காமிராவுக்கே காட்டணும்னு நினைப்பாங்க'' என்றார்.

அடுத்து ஒரு நாள், நான் நீண்ட வசனம் பேசவேண்டிய காட்சி படமாயிற்று. உதவி இயக்குநர் வந்து வசனத்தைப் படித்தார். பத்து முதல் பதினைந்து வரிகள் இருக்கும். வசனத்தை நான் மனத்தில் பதிய வைக்க விடாமல் முதுகில் தட்டியவாறு, என்னோடு விளையாடுவதுபோல் பாவனை செய்தார் அந்த ஹீரோ.

இந்தக் காலகட்டத்தில், நான் ஓரளவு நாடகப் பயிற்சி பெற்றிருந் தேன். வார்த்தைக்கு வார்த்தை மனப்பாடம் செய்து பேசுவது சில சமயம் இடைஞ்சலாகி விடும். ஸ்ரீதர், மல்லியம் ராஜகோபால், கோபால கிருஷ்ணன், ஏ.பி.என். போன்ற நாடக அனுபவம் பெற்ற கதாசிரியர் களின் வசனம், மனப்பாடம் பண்ண எளிதாக இருக்கும்!

காரணம், அவர்கள் பேசிப் பார்த்து, எந்த வார்த்தையை அடுத்து எந்த வார்த்தை விழுந்தால் மனப்பாடம் செய்யவும், அழுத்தமாக உச்சரிக்கவும் வசதியாக இருக்கும் என்று தீர்மானித்து வசனம் எழுதுவார்கள்.

மற்ற வசனகர்த்தாக்கள், தங்கள் எண்ணங்களை அழகான வார்த்தைகளால் வடித்துத் தந்துவிடுவார்கள். சில சமயங்களில், அது பேசி நடிக்க அவஸ்தையாக இருக்கும்! புதுமுகமாக இருந்தால் வார்த்தைக்கு வார்த்தை அப்படியே மனப்பாடம் செய்து பேசியாக வேண்டும் என்று புரட்டி எடுத்து விடுவார்கள்!

நாடக அனுபவம் பெற்றவன், முதலில், சொல்ல வரும் கருத்தை மனத்தில் வாங்கிக்கொள்வான். அடுத்துதான் வார்த்தைகளை மனப்பாடம் செய்வான்.

இந்த அனுபவத்தை நான் பெற்றிருந்ததால், அந்த ஹீரோ எவ்வளவு இடையூறு செய்தபோதும், சொல்ல வேண்டிய விஷயத்தை மனத்தில் வாங்கிக் கொண்டேன்.

வார்த்தைகளை அப்படியே மனப்பாடம் செய்யாவிடினும், காட்சிக்கு வேண்டிய உத்வேகத்தோடு, கருத்தை மட்டும் மாற்றாமல் பேசி நடித்து 'ஓ.கே' வாங்கினேன்.

படத்தின் இடைவேளையின்போது வரும் காட்சி ஒரு நாள் படமாயிற்று. தம்பி, அண்ணன் காலைத் தொட்டு ஆசி பெறுவதுபோல் 'ஷாட்' எடுக்க வேண்டும்.

காமிராவுக்கு எனது பின்புறத்தைக் காட்டினால் அசிங்கமாக இருக்குமென்று, பக்கவாட்டில் நின்ற நிலையில் ஹீரோ காலைத் தொட்டு வணங்கினேன்.

''என்ன மிஸ்டர்! நாடகக்காரன் மாதிரி சைடுல வந்து கும்புடுறீங்க...! நேரா வந்து கும்பிடுங்க'' என்றார். நாடக வர்க்கத்தின் மீது அவருக்கு என்ன கோபமோ தெரியவில்லை.

அவர் எண்ணத்தைப் புரிந்துகொண்ட நான், காமிராவுக்கு முதுகைக் காட்டியவாறு நின்று அவர் காலில் விழுந்து கும்பிட்டேன். என்னை மேலே தூக்கியவர், அவர் முகத்தோடு என் பின்தலை மட்டும் காமிராவுக்குத் தெரிவதுபோல சேர்ந்து அழுத்திப் பிடித்துக்கொண்டார்.

படத்தில், அவர் முகத்தின் மீதும் என்பின் தலை மீதும் காட்டப்பட்டிருக்கும் 'இடைவேளை'!

ஓவியக் கலையை முறையாகப் பயின்று, வேலையில் சேர்ந்து சம்பாதிக்கும் தருணத்தில், ஒன்றும் தெரியாதவனாகச் சினிமாவில்

சேர்ந்து, பத்து ஆண்டுகள் பல சிரமங்களையும் அவமானங்களையும் சந்தித்து, ஓரளவு நடிப்பு என்றால் என்னவென்று புரிந்துகொண்ட கட்டத்தில் என்னை நடிக்கவிடாமல் செய்த அந்த ஹீரோவின் 'பண்பை' நினைத்துப் பல நாள் நான் வேதனைப் பட்டதுண்டு.

'முன்னால் ஓடும் குதிரைக்குத்தான் மரியாதை' என்று, ஒன்றோடு ஒன்று போட்டி போட்டு ஓடும் குதிரைப் பந்தயம் போன்ற இத்துறையில், தன்னை யாரும் மிஞ்சக்கூடாது என்ற எண்ணம் அந்த ஹீரோவுக்கும் இருந்தது தவறில்லைதான்!

'இனி நானும் ஒரு ஹீரோ...! இது என்னுடைய படம்...! இந்தப் படம் வெற்றி கண்டது...! இது தோல்வியைத் தழுவியது!' என்று சீரியஸாக நான் தொழிலை மேற்கொள்ள, அந்த ஹீரோவின் நடவடிக்கை காரணமாக இருந்ததில் இரட்டிப்பு மகிழ்ச்சியே...!

---



**'இது ராஜபாட்டை அல்ல'** - என்ற தலைப்பே ஓர் அற்புதமான தகவலைத் தாங்கி வருகிறது.

ரொம்ப பேர், ஊரை விட்டு, நெறைய சினிமா கனவுகளை கண்ணுலயும், நெஞ்சிலயும் அப்பிக்கிட்டு சென்னைக்கு வந்து அலைஞ்சு, எப்படியும் சினிமாவுல ஈஸியா வந்திடலாம்னு நெனைக்கறாங்களே! அவர்களுக்கெல்லாம் இந்த நூல்தான் பைபிள்!

அவர் பெற்ற புகழுக்கு ஒரு விலை கொடுக்கப்பட்டிருக்கிறது என்பது இதைப் படிக்கும் போது புரியும்.

1-1-05, வெளியீட்டு விழாவில், **கவிஞர் வாலி**

21



'டிக்... டிக்... டிக்...' டிவி.தொடர் இரணியன் வேடம்

# நாடக அனுபவங்கள்

**நா**டக மேடை ஒரு நடிகனுக்குப் பயிற்சிக் களம்.

உடம்பைக் கச்சிதமாக வைத்திருக்க உடற்பயிற்சி எவ்வளவு முக்கியமோ, அந்த அளவுக்கு ஒரு கதாபாத்திரத்தைக் கையாளவும், மனப்பாடம் செய்வதோடல்லாமல் அந்தக் கதாபாத்திரம் இயல்பாகப்

பேசுவதுபோல வசனங்களை உச்சரிக்கவும், கூட்டத்தினரைக் கண்டு ஏற்படும் பதற்றம் போகவும், நடிக்கும்போது கைகால்களைப் பயன்படுத்தவும் (gestures) நாடக மேடை பெரிதும் உதவுகிறது.

மேடையேறி ஆயிரக்கணக்கானோர் முன்னால் நடிக்கும்போதுதான் தன் திறமை என்ன என்பதை நடிகன் உணருகிறான்.

தன்னம்பிக்கை அரும்பும் இடமே மேடைதான்!

எந்தக் காட்சியில் எப்படி நடித்தால் கைதட்டல் பெறலாம், எந்த வசனத்தை எப்படிப் பேசினால் கரவொலி கிளம்பும் என்பதெல்லாம் நாடகத்தில் நடித்தாலொழிய, நடிகன் தெரிந்துகொள்ள முடியாது.

தன் திறமைக்கு, நடிப்பாற்றலுக்கு உடனடியாக ரசிகர்களிடம் பாராட்டு பெறுவது, வெகுமதி பெறுவது எவ்வளவு சுகானுபவம் என்பது நாடக நடிகனுக்கு மட்டுமே தெரியும்.

உள்ளூர் நாடகங்களுக்கு மிகக் குறைந்த தொகையே சபாக்களில் தருவார்கள். அங்கத்தினர் மாதா மாதம் தரும் பணத்தை அடிப்படையாக வைத்தே சபாக்கள் நடப்பதால், அதிகத் தொகை தரமுடியாது. 'கேட் கலெக்ஷன்' அதிகமாக ஆகிறது என்னும் பட்சத்தில் நாடகத்துக்குத் தரும் சன்மானத்தை உயர்த்துவார்கள்.

எனவே, தொழில் நாடகக் குழு, அமெச்சூர் நாடகக் குழு அனைத்துமே வெளியூர் நாடகங்களை ஒப்புக்கொள்வதன் மூலம்தான் அதிக சன்மானத்தைப் பெறமுடிகிறது. பத்து நாடகங்களை வெளியூர்களில் நடத்தி, அதில் வரும் லாபத்தை வைத்துத்தான் அடுத்த நாடகம் தயாரிக்க ஆகும் செலவை ஈடுகட்டுவார்கள்.

நாடகத் திரைச்சீலைகள், ஒலி, ஒளி அமைப்புச் சாதனங்கள் மற்றும் நாடகத்துக்குத் தேவையான உபகரணங்களைப் பெரிய நாடகக் குழுக்கள் ரயிலில் பார்சல் செய்துவிட்டு அல்லது லாரிகளில் அனுப்பிவிட்டு, நடிகர்க்ள் ரயிலில் பயணம் செய்வார்கள்.

1968இல் சொந்தமாகக் குழு வைத்திருந்த காலத்தில், நாங்கள் அப்படிச் செய்யவில்லை. ஒரு பெரிய 'லக்ஷுரி' பஸ்ஸை வாடகைக்கு அமர்த்தி, அதிலேயே எல்லா உபகரணங்களையும் ஏற்றிக்கொண்டு, நடிக நடிகை யரும் அவற்றுடன் பயணம் செய்வோம்.

ராஜபாளையம், சிவகாசி, விருதுநகர் ஆகிய பகுதிகளில் நாடகம் என்றால், முந்தைய நாள் இரவு ஏழு அல்லது எட்டு மணிக்கு, சென்னையை விட்டுப் புறப்படுவோம்.

பத்துப் பதினோரு மணிவரை பாட்டு, ஆட்டம், கூத்து கும்மாள மாகப் போகும் பஸ். அதன் பிறகு நிசப்தமாகிவிடும். எனக்கு எப்போதும்

டிரைவருக்குப் பக்கத்து ஸீட்தான். டிரைவரைவிட எச்சரிக்கையாகக் கொட்டக் கொட்ட விழித்தவாறு பாதையை நான்தான் கூர்ந்து கவனித்துக் கொண்டிருப்பேன்.

காலையில் திருச்சி ஹோட்டலில் சிற்றுண்டி. பகல் உணவு மதுரையில். மாலை 4 மணி அளவில் விருதுநகர் – சிவகாசி சென்றடைவோம்.

இரவு 7 மணியிலிருந்து 8 மணிவரை ஆடிட்டோரியத்தில் ஈ காக்கைகூட இராது. 9 மணிக்கு நாடகம் துவங்குமுன், முதல் மணி அடித்துவிட்டுத் திரையை லேசாக விலக்கிப் பார்த்தால், ஒரே மல்லிகைப்பூ மணமாக இருக்கும்! காதிலும் கழுத்திலும் ஏகமாக அசல் தங்க நகைகள், விலை உயர்ந்த வண்ண வண்ணப் பட்டுப் புடவைகள் அணிந்தவாறு அரங்கின் பெரும்பகுதியைப் பெண்களே நிறைத்திருப்பர்!

ஐயாயிரம் பேர் அமர்ந்திருந்தாலும், ஊசி விழும் சத்தம் தெளிவாகக் கேட்குமளவுக்கு அவ்வளவு அமைதி இருக்கும். மேல்நாட்டு வழக்கம் போல், நாடகத்தின் இடையே அளவுக்கதிகமாகக் கைதட்டியோ, கூச்சல் போட்டோ தொல்லை தராமல், நாடகம் முடிந்ததும், அது நிறைவான நாடகமாய் இருக்கும் பட்சத்தில், அனைவரும் எழுந்து நின்று கைதட்டி மரியாதை செய்வார்கள்.

விருதுநகரில் இரண்டு மணி நேர நாடகமெல்லாம் போதாது. நாடகம் முடிந்து தேசியகீதம் இசைத்த பிறகும் பெரும்பாலானோர் எழுந்திருக்கவே இல்லை. ''நாடகம் முடிந்துவிட்டது'' என்று மைக்கில் சொல்ல, ''முடிந்து விட்டதா, இல்லையா என்பதை நாங்க முடிவு பண்றோம். திரையை விலக்கிட்டு ஆளுக்கு ரெண்டு பாட்டுப் பாடுங்க'' என்றார்கள்.

ஆடிப்போய்விட்டோம்! பாத்ரூமில் மட்டுமே பாடும் எனக்கு, பல்லாயிரக் கணக்கானவர்கள்முன் 'மை'க்கைப் பிடித்துப்பாடும் தண்டனை அன்றுதான் முதன்முதலில் விதிக்கப்பட்டது. நல்ல காலமாக ஆட்சேபணை சொல்லாமல் ரசித்தார்கள்!

இயற்கையின் சீற்றத்தால் எதிர்பாராமல் நாடகம் நடத்த முடியாமல் போவதும் உண்டு.

கடலூரை அடுத்த பரங்கிப்பேட்டையில் ஒரு முறை நாடகம் நடத்தச் சென்றபோது, அரை குறையாகக் கட்டியிருந்த நாடக மேடையின் ஓலைகளெல்லாம், புயல் காற்றின் வேகத்தில் பறந்து போய்விட்டன. பேய் மழையில் மின் இணைப்புக் கம்பிகளில் 'ஷாக்' அடிக்க ஆரம்பித்தது. மக்கள் தரையில் அமர முடியாமல் மழைத் தண்ணீர் ஒரடி உயரம் நின்றது.

வேறு வழியில்லாமல், அடுத்த நாள் நாடகத்தை நடத்த முடிவு செய்தோம். அமெச்சூர் நாடகங்கள் நடத்துவோருக்கு ஒரு சிக்கல். அன்று ஞாயிற்றுக்கிழமை. நாடகத்தை முடித்துவிட்டு இரவோடு இரவாகப் புறப்பட்டுச் சென்னை திரும்பி, மறுநாள் அலுவலகம் செல்பவர்கள் நேரத்துக்குச் சென்றுவிட ஏற்பாடு செய்திருந்தோம்.

இப்போது திங்கள் இரவுக்கு நாடகம் ஒத்திவைக்கப்பட்டதால் இரண்டு டாக்ஸி பிடித்து, ஆபீஸ் போகும் நடிகர்களைச் சென்னைக்கு அனுப்பி வைத்து, மறுநாள் மாலை 3 மணிக்கு அலுவலகத்தில் பர்மிஷன் கேட்டு, அதே டாக்ஸியில் 7 மணிக்குள் பரங்கிப்பேட்டை வரச் சொன்னோம்.

மறுநாள் திங்கள் காலையில் புதிதாக மேடை அமைத்து, திரைச் சீலைகளைக் காய வைத்து, மின் இணைப்புகளைச் சரி செய்து, எல்லோரும் ஒப்பனையுடன் காத்திருந்தோம். ஒரு டாக்ஸி ரிப்பேர் ஆனதில் நாடகம் துவங்க ஒரு மணி நேரம் தாமதம் ஆகிவிட்டது...! மக்கள் நன்றாக ரசித்தார்கள்...!

தாமதமாகத் துவங்கினால்கூடப் பாதகமில்லை. ஆனால், நடிகர் – பிரபல சினிமா நடிகர் வரவே இல்லை என்று தெரிந்தால், வெளியூர் மக்கள் ஆவேசமடைந்து கொட்டகையையே இரண்டுபடுத்தி விடுவார்கள்.

திருப்பூர் பொருட்காட்சியில் ஒரு ஆண்டு எங்கள் நாடகம் ஏற்பாடாகி இருந்தது. பின்னாளில் தமிழக வீட்டு வசதி வாரியத் தலைவரான மணிமாறன் அன்று நாடகத்தை ஒப்பந்தம் செய்திருந்தார்.

வழக்கம்போல் முந்தைய நாள் பஸ்ஸில் குழுவினர் அனைவரும் திருப்பூருக்குப் புறப்பட்டுச் சென்றுவிட்டனர்.

எனக்குச் சேர்ந்தாற்போல் பத்து நாள்கள் இரவும் பகலும் படப்பிடிப்பு இருந்தது அப்போது. பகலில் 'பாபு' படப்பிடிப்பு. இரவில் 'தேரோட்டம்' படப்பிடிப்பு.

'திட்டமிட்டபடி வேலையை முடித்துக் கொடுங்கள். விமானத்தில் உங்களை அனுப்புகிறோம்' என்றார் தயாரிப்பாளர், இயக்குநர் வி.டி. அரசு.

விடியும்வரை தூங்காமல் வேலை செய்துவிட்டு, பல் துலக்கிச் சிற்றுண்டி அருந்தி, மீண்டும் வேலையைப் பகல் பதினோரு மணிவரை தொடர்ந்து முடித்தோம்.

பிற்பகல் 2.10 மணிக்கு விமான நிலையத்துக்கு என்னைக் காரில் அனுப்பி வைத்தார் வி.டி. அரசு. பொதுவாக எந்த விமானமும் நம் நாட்டில் சரியான நேரத்துக்குப் புறப்படுவதில்லை. ஏன் புறப்படவில்லை என்று நாம் கேட்க வேறு முடியாது.



'அம்மன் தாலி' – நாடகம் பொன்விழா N.K.T. கலா மண்டபம்

அன்று அதிசயமாகச் சரியான நேரத்துக்குப் புறப்பட்டது. இன்னும் ஒரு மணி இருபது நிமிடத்துக்குள் கோவை சேர்ந்து விடுவோம் என்று கனவு கண்டேன். பகல் கனவு பலிப்பதில்லையே!

விமானம் ஓடுதளத்தில் முக்கால் பகுதி ஓடி, மேலே எழும்பும் சமயம் சின்ன அதிர்வு. பின் தாறுமாறாக இடப்பக்கமும் வலப்பக்கமுமாக ஓடி, காட்டுக்குள் ஓய்ந்தது. முன் சக்கரம் விடுபட்டுக் காணாமல் போய் விட்டது.

'தீப்பிடித்துக் கொள்ளலாம், சீக்கிரம் குதியுங்கள்' என்றனர் பணிப் பெண்கள். விபத்தில் ஏற்பட்ட அதிர்ச்சியைவிட, இனி 300 மைல் தொலைவிலுள்ள திருப்பூருக்கு இரவு 7 மணிக்குள் எப்படிப் போய்ச் சேர்வது என்ற வேதனை என்னைக் கவ்விக்கொண்டது.

இன்று மாலைக்குள் கோவை செல்ல எந்த விமானமும் இல்லை என்றார்கள். டாக்ஸி ஒன்று பிடித்து வீடு திரும்பினேன். பல கம்பெனிகளில் தெரிந்தவர்களுக்கு போன் செய்து விவரம் சொல்லி, புதிய வாடகைக் கார் ஒன்று உடனே வேண்டும் என்றேன்.

4 மணிவரை கார் ஏதும் வரவில்லை. பக்கத்து வீட்டுத் தாத்தா சொன்னார் : ''இனிமே எங்கே நீ போகப்போறே... 'Plane met with an accident'ன்னு தந்தி அடிச்சுட்டுப் படுத்துக்கோ'' என்றார்.

எனக்கிருந்த வேதனையில் அவர் கழுத்தை நெரித்துவிடத் தோன்றியது. அவர் சொன்னபடியே 'விமானம் விபத்துக்குள்ளாகியது' என்று தந்தி அடிக்கும்போது 'காரில் வந்துகொண்டிருக்கிறேன்' என்பதைச் சேர்த்துக் கொடுத்தேன்.

மாலை 5 மணிக்கு, நாகர்கோவிலைச் சேர்ந்த டிரைவர் ஒருவருடன் புது கார் ஒன்றை ஏ.பி.என். அலுவலகம் அனுப்பி வைத்தது.

மலைப்பகுதியில் ஓட்டிப் பயிற்சி பெற்ற அபாரமான டிரைவர் அவர். மீட்டர் முள் 110க்கும் 120க்கும் இடையிலேயே பெரும்பாலும் இருந்தது. பேய்த்தனமாக ஓட்டினார்!

ஒரு இடத்தில் குறுகலான பாதை...! லாரி ஒன்று போகிறது. எதிரே சைக்கிள் ஆசாமி ஒருவர் வேடிக்கை பார்த்தவாறு வருகிறார். அந்த வேகத்தில் 'பிரேக்' போட்டால் வண்டி கவிழ்ந்துவிடும். பக்கவாட்டில் புழுதிக் காட்டுக்குள் இறக்கி, 200 கெஜ தூரம் ஓட்டிப் பாதைக்குத் திரும்பினார் டிரைவர்.

விழுப்புரம் தாண்டி, மாற்றுப் பாதையில் தவறுதலாகப் போய், 20 கிலோ மீட்டர் திரும்பி வந்து சரியான பாதையைப் பிடித்தோம்.

சேலம் வந்தபோது – ஏற்கனவே ஜனநெரிசல் உள்ள நகரம் – முதல் காட்சி சினிமா விட்டதில் ஊர் முழுக்கப் பாதையெங்கிலும் மக்கள் வெள்ளம் பொங்கிச் சென்றது.

ஹாரன் கிழிந்து விட்டது. இரண்டு கிழவர்களும், ஒரு குழந்தையும், கோயில் மாடு ஒன்றும், பன்றிக் கூட்டமும் அதிர்ஷ்டவசமாக உயிர் தப்பின.

உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு திருப்பூர் எல்லையைத் தொட்டபோது, ரயில்வே கேட் மூடியிருந்தது. ஓடிச்சென்று காவலாளி காலைப் பிடித்து நிலைமையை விளக்கி – சட்ட விரோதமாகக் கதவைத் திறக்கச் செய்து – பொருட்காட்சியில் போய் மூச்சிரைக்க நின்றேன். என் வாழ்நாளில் அவ்வளவு அசிங்கமாக, அலங்கோலமாக, நான் டைஃபாய்டு ஜுரத்தில் படுத்தபோதுகூடக் காட்சியளிக்கவில்லை.

மேடையேறினேன். மைக்கைப் பிடித்தேன். நிலைமையை விளக்கினேன். அரை மணி நேரத்தில் நாடகத்தைத் துவக்குவதாகச் சொன்னேன்.



'குங்குமச் சிமிழ்' – நாடகம் A.P.N. தலைமையில் நெய்வேலியில் நடந்தபோது எடுத்த படம்

மணி நடு இரவு பன்னிரண்டை நெருங்கிக் கொண்டிருந்தது. நிலைமையை உணர்ந்துகொண்ட மக்கள் நிதானமாக ''நாளைக்கு நாடகம் போடுங்கள்... இவ்வளவு சிரமப்பட்டு எங்களை மதித்து வந்து சேர்ந்ததற்கு நன்றி'' என்றார்கள்.

அவர்கள் சொன்ன வார்த்தை நெஞ்சில் தேனாகப் பாய்ந்தது! நடித்துப் பெறும் மகிழ்ச்சியைவிட, இதைக் கேட்டு அதிகமாக நெகிழ்ந்து போனேன்.

---

## 22



# சில அவஸ்தைகள் – அவமானங்கள்

திரைப்பட உலகில் எனக்கு முன்னால் அறிமுகமாகி உயர்ந்த புகழ்பெற்ற அத்தனை நடிக நடிகையருடனும் ஒரு படத்திலாவது நடித்துவிட வேண்டும் என்ற ஆவல் எனக்கு இருந்ததுபோல, பிரபலமாக விளங்கிய எல்லா இயக்குநர்கள் படங்களிலும் நடித்துவிட வேண்டும் எனவும் ஆசைப்பட்டேன்.

தமிழிலும் தெலுங்கிலும் பிரபலமாக விளங்கிய அந்தப் பெண் இயக்குநர் படைப்பிலும் நடித்திட ஆசைப்பட்டேன். படங்களை இயக்கு வதுடன் தயாரிக்கவும் செய்தார் அவர். என் கனவு நனவாகும் வகையில் தமது டைரக்ஷனில் எனக்கு ஹீரோ சந்தர்ப்பமளித்தார்.

படப்பிடிப்பு நாள் நெருங்கிவிட்டது. எனக்குப் பரபரப்பு தாங்க முடியவில்லை! இரண்டு நாளில் செட்டுக்குப் போகிறோம். இன்னும் உடை தைக்க கம்பெனியிலிருந்து ஆள் வரவில்லை. படப்பிடிப்புத் துவங்கும் நாளன்று ஒப்பனையுடன் தயாராக இருந்தேன். கம்பெனி காஸ்ட்யூமர் பளபளவென்று ஜொலிக்கும் டீ ஷர்ட், பாண்ட்டுடன் சிவப்பி லும் மஞ்சளிலுமாகக் கண்ணைக் கூசும் உடை வகைகளைக் கொண்டு வந்து நீட்டினார்.

பாண்டை மாட்டினேன். இடுப்பில் பட்டன் போட முடியவில்லை. இடுப்பிலிருந்து பாதம்வரை இறுக்கிப் பிடித்தது. சட்டையை மாட்டி னேன். எனது மார்பு அகலத்தைவிட அது குறுகலாக இருந்தது.

''உண்மையைச் சொல்லுங்கள்..., இது என் அளவுக்குத் தைத்ததா?''

''இல்லை. இது போன படத்து ஹீரோவோட டிரஸ். ஒவ்வொரு ஸீன்லேயும் அவரு போடற டிரஸ்ஸுக்கு ஏழு செட், ஏழு விதமான துணிகள்லே தச்சு வைப்போம். ஒரு 'செட்'டை எடுத்து உபயோகப் படுத்திட்டு மத்த துணிகளை ஒதுக்கிடுவாரு. படம் வேற படு அடி...! அதைச் சரிக்கட்டணும்னா, உங்க மாதிரி புது நடிகர்களுக்கு இதைப் போட்டுத்தான் படம் எடுக்கணும்...! இந்தப் படத்தைப் பொறுத்த வரைக் கும் உங்களுக்கு டிரஸ் தைக்கறதா எங்க முதலாளிக்கு உத்தேசமில்லை. உங்க திருப்திக்கு வேணும்னா சொந்த டிரஸ்ஸைப் போட்டுக்கிட்டு வந்து நடியுங்க...''

காஸ்ட்யூமர் அதிர்ச்சி வைத்தியம் கொடுத்தார். விவரம் தெரியாமல், ஏற்கெனவே சில படங்களில் சொந்த டிரஸ்ஸை உபயோகப்படுத்த, படம் வெளிவந்த பிறகு சில ரசிகர்கள், ''சார்! இந்த டிரஸ் அந்தப் படத்தில் வந்ததுதானே!'' என்று கேட்டு, தயாரிப்பாளர் டிரஸ்ஸை நான் சொந்தத் துக்குப் பயன்படுத்துவதாக மறைமுகமாகக் குற்றம் சாட்ட நேர்ந்தது. இப்போது என்ன செய்வது? தட்டிக் கேட்டால், 'ஹீரோவா வந்தவுடனே ஆட்டம் போடுகிறான்' என்பார்கள். ஹீரோவா வருவது முக்கியமல்ல. எத்தனை வருஷம் ஹீரோவாகவே தாக்குப்பிடிக்கிறோம் என்பதுதான் முக்கியம். பொறுமையும் சகிப்புத்தன்மையும் அதிகமாகத் தேவைப் படுகிற தொழில் இது.

முடிவாக, பளபளக்கும் மாஜி ஹீரோ சட்டைகளை அணிந்து நடிக்க முடிவெடுத்தேன். மாஜி ஹீரோவின் 'ஹைஹீல்ஸ்' ஷூக்களும் கூடவே

வந்தன. நாள் முழுக்க அதன் மீது நின்றதில், பாதத்தில் ரத்த ஓட்டமின்றி வலிக்கத் துவங்கியது.

சட்டை அளவு போதவில்லையென்றால் கொஞ்சம் தையலைப் பிரித்தாவது தைக்கலாம். ஷூ அளவு போதவில்லையென்றால் பிரித்துச் செய்ய முடியாதே!

பாசத்தோடு என் உடம்பை இறுகப் பற்றிக் கொண்ட அந்தப் பளபளா உடையில் மே மாதத்தில் விஜயா கார்டனில் பாடல் காட்சி படமாயிற்று.

'ரா... ரா... ரிரீ...' இவ்வளவுதான் ஹம்மிங். மூன்று செகண்ட் ஒலிக்கும் இந்த ஹம்மிங் முடிவதற்குள் நான் சுமார் பத்து அடி ஓடிவந்து, புல்தரையில் படுத்திருக்கும் கதாநாயகியைத் தூக்கிவிட வேண்டும்.

ஓடிவந்து குனிந்து தரையிலிருந்த ஹீரோயினைத் தூக்கினேன். 'டர்ர்ர்...' என்ற சத்தம்! பாண்ட் பின்பக்க இடுப்பிலிருந்து முன்பக்கம் வரை தையல் விடுபட்டு, குறுக்காகக் கிழிந்துவிட்டது.

படப்பிடிப்பைப் பார்ப்பவர்களுக்குக் கேட்கவே வேண்டாம். ஒரே கலாட்டா, கூச்சல்! உடனே டவலைக் கட்டிக்கொண்டு பாண்டைக் கழற்றிக் கொடுத்து இரட்டை நூல் போட்டுத் தைத்து வாங்கி அணிந்து நடித்தேன்.

அடுத்த பாடல், கொடைக்கானல் பின்னணியில் படத்தில் வருகிறது என்றார்கள். 'அப்பாடா! நம்மைக்கூட அழைத்துக்கொண்டு கொடைக் கானல் போய், குளுகுளு சூழ்நிலையில் பாடலைப் படமாக்கப் போகிறார்கள்' என்று உள்ளுக்குள் உவகை கொண்டேன்.

படப்பிடிப்பு நாளன்று கார் வந்தது. ஸ்டுடியோவுக்குப் போனேன். என்னையும் ஹீரோயினையும் ஒரு மொட்டை மாடிமீது ஏற்றி விட்டார்கள்.

பாடல் ஒலித்தது. ''ஹீரோயினைப் பிடித்துக்கொண்டு லேசாக அசைந்தவாறு பாடுங்கள்'' என்றார். ''ஏன்?'' என்றேன். ''படகு செல்லும் போது, லேசாக நாம் இப்படியும் அப்படியும் சாய்வோம் அல்லவா! அப்படி அசைந்தவாறு பாடுங்கள்'' என்றார். பேந்தப் பேந்த விழித்துக் கொண்டு பாடினேன்.

திடீரென்று இரண்டு பக்கட்டில் தண்ணீர் வந்தது. ஒன்று ஹீரோயின் பக்கமும், ஒன்று என் பக்கமும் வைக்கப்பட்டன. இப்போது எதிரும் புதிருமாக இருவரும் உட்கார்ந்து பாடினோம். ''குனிந்து பக்கெட்டி லிருந்து தண்ணீரைக் கையில் எடுத்து இருவர் முகத்திலும் அடித்துக் கொள்ளுங்கள்'' என்றார்.

''எதற்கு?'' என்றேன்.

''படகில் போகும்போது ஏரித் தண்ணீரில் நீங்கள் இப்படி விளையாடியதில்லையா?'' என்றார்.

புரிந்து விட்டது! பாட்டும் முடிந்து விட்டது. 'கொடைக்கானல் பயணமும்' நிறைவடைந்து விட்டது!



'ஏணிப்படிகள்'

பாடல் காட்சியை எடிட் செய்து டைரக்டர் பார்த்தபோது, நானும் மறைந்திருந்து திரையில் பார்த்தேன். க்ளோஸப்பில் நாங்கள் பாடும் சில ஷாட்களைத் தவிர, லாங் ஷாட் பூராவும் யாரோ முகம் தெரியாத ஒரு ஆணும் பெண்ணும் படகில் சவாரி செய்தவாறு கையைக் காலை அசைத்தவாறு போய்க் கொண்டிருந்தனர்...!

ஒரு நாள் திருமணக் காட்சி படமாயிற்று. அப்பா நடிகர் ஒருவர் அன்றுதான் முதல் நாள் படப்பிடிப்புக்கு வந்தார். நடிகருக்கு சில்க் ஜிப்பா,

பட்டு வேஷ்டி அணிவிக்கப்பட்டது. காமிரா ஓடியது. ''சார்! காமிராவின் வலது பக்கம் கண்ணீரோடு பார்த்துக் கொஞ்சம் சிரியுங்கள்...! இப்போ அட்சதையை வீசுங்க...! இப்போ, இடது பக்கம் பாருங்க... 'அடடே... ராமையாவா? வாங்க வாங்க... ஏன் லேட்?' என்று சொல்லியவாறு வெளியே வந்திடுங்க...''

டைரக்டர் சொன்னபடி நடிகர் முடித்தார். ஒப்பனை கலைக்கப் பட்டது. ''அப்புறம் எப்ப சார் எனக்கு ஷூட்டிங்?'' அப்பா நடிகர் கேட்டார்.

''உங்க ஷூட்டிங்தான் முடிஞ்சு போச்சே. இனிமே அடுத்த படத்தில் சந்திப்போம்.''

உறைந்து போனார் நடிகர். தெலுங்குப் படத்தைத் தமிழ்ப் படம் போல் காட்ட இந்த உத்தி. லாங் ஷாட்டில், வேறு நடிகர்கள் உள்ளனர். க்ளோஸப் ஷாட்களில் மட்டும் தமிழ் நடிகரைப் பயன்படுத்துகிறார்கள்...!

அனுபவம் மிக்க இயக்குநர் இவ்வளவு அலட்சியமாகத் தொழிலை ஏமாற்று வித்தையாகச் செய்தது வேதனையாக இருந்தது.

இச்சமயத்தில் எனது திருமணம் முடிவாயிற்று. அதுவரை முன்பணம்கூட அந்த நிறுவனத்தில் நான் வாங்கவில்லை. திருமணச் செலவுக்காகப் பணம் கேட்டேன். படம் முக்கால் பகுதி வளர்ந்து விட்டது. எனினும் பணம் தருவது பற்றி, போனில் திருப்தியான, நம்பிக்கையான பதில் வரவில்லை.

'தேவைப்படும் பணம் புரட்ட முடியாதோ' என்று அவஸ்தைபட்டுக் கொண்டிருக்கும்போது, ''அடுத்த கால்ஷீட் எப்போ தர்றீங்க சார்?'' என்று தயாரிப்பு நிர்வாகி போனில் கேட்டு மேலும் எரிச்சலை உண்டாக்கினார்.

திருமணம் முடிந்து சென்னையில் வேறொரு படப்பிடிப்பில் இருந்தேன். கையில் பணக் கட்டை வைத்துக்கொண்டு நாய்க்கு பிஸ்கட் காட்டி அழைப்பதுபோல நிர்வாகி அழைத்தார்..! வந்தேன். ''இப்போது பணம் தேவையில்லை. திருமணம்முடிந்து விட்டது. இனிமேல் உங்கள் படம் முடிந்தபிறகு தந்தால் போதும்'' என்றேன்.

அவர் நகர்வதாகக் காணோம். நானும் பணத்தைப் பெறுவதாக இல்லை. வேறு வழியின்றி அவர் திரும்பிச் சென்று, நடந்ததை டைரக்ட ரிடம் சொல்லியிருக்கிறார்.

'படத்தை முடிக்க முடியாமல் போய்விடுமோ...? சிவகுமார் தொல்லை கொடுப்பானோ...?' என்று பயந்து விட்டார்கள். டைரக்டர் வீட்டிலிருந்து போன்மேல் போன் வந்தது. நான் பேசவில்லை. மறுநாள்

எதிர்பாராமல் நான் போனை எடுத்தபோது அடுத்த முனையில் டைரக்டர்! மாட்டிக் கொண்டேன்...! ''தம்பி! உங்க கல்யாண வரவேற்புக்கு என்னால் வரமுடியலே, மன்னிச்சுக்குங்க...! இதோ அரை மணியிலே வீட்டுக்கு வர்றேன்.''

''சார்! நீங்க வயசில பெரியவர். நீங்க இங்க வந்து வாழ்த்தறது சரியில்லை. நான் உங்க வீட்டுக்கு வந்து ஆசி பெற்றுக் கொள்கிறேன்...'' நானும் என் மனைவியும் அவர் வீட்டுக்குச் சென்றோம்.

கணவனும் மனைவியுமாக வாசலில் நின்று வரவேற்று எங்களை உள்ளே அழைத்துச் சென்றனர்.

''புதுமணத் தம்பதிக்கு எங்களுடைய அன்பளிப்பு இது. கோயில்ல போய் உங்களுக்காக அர்ச்சனை பண்ணி, பிரசாதமும் இதுல வெச்சிருக்கேன்...''

புது வேஷ்டி சட்டையுடன் புதுப் புடவையும் வைத்து, அதன்மேல் சம்பளத்தில் ஒரு பகுதியை வைத்து, ''மறுக்காம வாங்கிக்கணும். மனசுக்குள்ளே எந்த வருத்தமும் வெச்சுக்கக்கூடாது'' என்று தந்தார். பெற்றுக் கொண்டு திரும்பினோம். புதிதாக எனக்கு உடைகள் வேண்டும் என்றோ, எனது பாடலைக் கொடைக்கானலில்தான் படமாக்க வேண்டும் என்றோ கேட்க நடிகனுக்கு உரிமை கிடையாது. 'இந்தப் படத்துக்கு இது போதும்' என்று இயக்குநர் கூறிவிட முடியும். ஆனால், முறையாகக் காட்சியை எடுக்காமல், ஒட்டுவேலை செய்து ஏமாற்றி, படம் அடிபடுகின்றபோது, இயக்குநர், தயாரிப்பாளர் மட்டுமல்ல... நடிக நடிகையரும், படத்துக்குப் பணியாற்றிய அத்தனை பேருமே பாதிக்கப்படுகிறார்கள் என்பதை அந்த அனுபவம் மிக்க இயக்குநர் அன்று உணரவில்லை.

இன்று அவர் உணர்ந்தபோது அவரைச் சுற்றி எந்தத் தயாரிப்பாளரும் இல்லை.

---

23



## வேலுமணி அம்மாள்

**கோ**வை நகரைச் சேர்ந்த வேலுமணி அம்மாள்..., எண்ணற்ற ஏழை எளிய அநாதைக் குழந்தைகளுக்கும், என் போன்ற எத்தனையோ கலையுலகச் சகோதர சகோதரிகளுக்கும் அன்பையும் பாசத்தையும் பொழிந்த தெய்வத்தாய்...!

இந்நாளில் நாம் யாரோடு பழகினாலும், அன்பு செலுத்தப் பயப்படுகிறோம்! அளவுக்கு மீறிய அன்பு, தொல்லையாக மாறி மனக்கஷ்டமும் பணநஷ்டமும் அடையச் செய்துவிடும் என்று இயந்திரமாக வாழப் பழகிக் கொண்டோம்.

ஆனால், அந்த அம்மையாரோ கோவை நகரம் மட்டுமல்ல, சுற்றிலுமுள்ள மலைப் பகுதிகளுக்கெல்லாம் சென்று மலைவாழ் மக்களின் துயர் துடைக்கச் சேவை செய்தவர். அன்பைப் பொழிந்தவர்.

கடந்த முப்பது ஆண்டுகளில் கோவை மாநகருக்கு நாடகமோ, கலை நிகழ்ச்சிகளோ நடத்த யார் சென்றிருந்தாலும் அந்த அம்மையாரைச் சந்திக்காமல் வந்திருக்க முடியாது.

நாடகத்துக்கு வசூல் சரியில்லை என்று தெரிந்தால், உடனே காரை எடுத்துக்கொண்டு நகரை ஒரு சுற்றுச் சுற்றி நண்பர்களிடம் ரூபாய் 5,000 அல்லது 10,000 வசூல் செய்து, நாடகம் துவங்கும் முன்பே குழுவினரிடம் ஒப்படைத்து, உற்சாகமாக நடிக்கச் சொல்வார்.

நடிகர் திலகத்தின் பிறந்த நாள் அக்டோபர் ஒன்று என்பதை அறிந்து வைத்திருந்து, கலைஞர்களுடன் கோவைக்கு வந்த சிவாஜிக்கு, யாருக்கும் தெரியாமல் – இரவோடு இரவாக நூற்றைம்பது குழந்தைகளுக்குச் சீருடை தைத்து அணிவித்து, சிவாஜி பற்றிப் பாடல் இயற்றிப் பாடப் பயிற்றுவித்து, இதுவரை யாரும் பார்த்திராத அளவு பெரிதாக ஒரு 'கேக்' செய்ய ஆர்டர் கொடுத்து, மறுநாள் சிவாஜியை மட்டுமல்ல, அனைத்துக் கலைஞர்களையும் மூக்கின்மேல் விரல் வைக்கும் அளவுக்கு விழாவை நடத்தினார்!

எத்தனையோ பேரின் நினைவாற்றலைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால், இவர் அளவுக்கு யாரையும் ஒப்பிட முடியவில்லை. ஒரு தடவை பார்த்துப் பெயரைக் கேட்டுக்கொண்டால் அந்தக் கம்ப்யூட்டர் மூளையில் தெளிவாக அது பதிந்து விடும்! சென்னை வந்தால் ஒவ்வொரு நடிகர் வீட்டுக் குழந்தைகள், வேலைக்காரர்கள், டிரைவர்கள் அனைவரையும் பேர் சொல்லித்தான் அழைப்பார்.

பிரியத்தோடு, நேயத்தோடு பழகுவதால் அனைத்தும் அவர் நெஞ்சில் ஆழமாகப் பதிந்து விடுகிறது போலும்!

இந்த அபூர்வ அன்னையோடு எனக்கேற்பட்ட அனுபவங்கள் சுவையானவை 1972இல் ஒருநாள் சென்னை வந்த அவரை, படப்பிடிப்பின் போது ஏ.பி.என். எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

முற்பிறவியின் தொடர்போ என்று ஆச்சரியப்படும் விதத்தில் எடுத்த எடுப்பிலேயே, ''டேய்! சிவா, நீ கோயமுத்தூர்ல நம்ம ஸ்கூல்லயா

படிச்சே?'' என்று சொந்தப் பிள்ளையோடு பேசுவதுபோல் 'டா' போட்டுப் பேசினார்.

''இல்லையம்மா! நான் சூலூரில் படித்துவிட்டுச் சென்னை வந்து விட்டேன்'' என்றேன். பேச்சின் முடிவில் உரிமையுடன், ''உன் தம்பி ராமகிருஷ்ணனுக்கு (அவருடைய மகன்) அடுத்த வாரம் கல்யாணம். ஏ.பி.என்., நம்பியார், முத்துராமன் எல்லாம் வர்றாங்க...! நீயும் அவசியம் வரணும்'' என்று கூறி, திருமண அழைப்பிதழைக் கொடுத்துச் சென்றார்.

திருமணத்தன்று வாழ்த்துத் தந்தி ஒன்று அனுப்பி மனசார வேண்டிக் கொண்டேன். ஒரு வாரம் கழித்து அம்மாவிடமிருந்து ஒரு கடிதம் வந்தது.

'ஏம்பா! கல்யாணத்துக்குத்தான் நீ வரலே. ஒரு வாழ்த்துத் தந்தி அடிக்கக் கூடவா உன் தம்பி பொறாதவனாப் போயிட்டான்?' என்று கேட்டிருந்தார்.

'அம்மா! நீங்க கோடீஸ்வரி. எத்தனையோ பேர் மேல பாசம் செலுத் தறீங்க. அப்படியிருக்க, வந்திருக்கிற ஆயிரக்கணக்கான தந்திகள்ல ஏதோ ஒரு கோடியில கிடக்கிற என் தந்தியை நீங்க பாத்திருக்க வாய்ப்பில்லை' என்று எழுதி அனுப்பினேன். இரண்டு நாளில் பதில் வந்திருந்தது.

''கண்ணா! உன் மனசை ரொம்பவும் புண்படுத்தி எழுதிட்டேன். உன் தந்தியைக் கண்டுபிடிச்சிட்டேன். அம்மாவை மன்னிச்சுடுப்பா.''

''கோழி மிதிச்சுக் குஞ்சு செத்துப் போகாது! உங்க மகனை அடிக்க வும், அரவணைக்கவும் உங்களுக்கு எப்பவும் உரிமையுண்டு.''

- இப்படிப் பல கடிதப் போக்குவரத்துகளும், நேரடி உபசரிப்பு களும் சில மாதங்கள் நடந்தன.

கோவையிலிருந்து அம்மா ஒருநாள் போன் செய்தார்.

''சிவா, 'ராமகிருஷ்ண கல்யாண மண்டபம்' ஒண்ணு கட்டறோம். உன் கல்யாணம் இந்த மண்டபத்திலதான் நடக்கணும். எத்தனை வருஷம் ஆனாலும் சரி...''

''அம்மா! சினிமாக்காரனோட சிநேகம் வைப்பாங்க..., சினிமாக்கார னுக்கு விருந்து வைப்பாங்க..., ஆனா, அவனுக்கு யாரும்மா பொண்ணு தருவாங்க? அப்படி யாராவது ஒரு ஏமாளி கிடைச்சா, அவசியம் பண்ணிக்கறேன்.''

''என்னடா பேசறே நீ...! உனக்குப் பொண்ணு தரமாட்டாங்களா? சரி விடு. நானே இங்கே பொண்ணு தேடறேன்...''

இரண்டு ஆண்டுகள் கழித்து, நான் கோவையிலுள்ள அம்மாவுக்குப் போன் செய்தேன்!

''அம்மா! ஒரு அப்பாவிப் பொண்ணு மாட்டிக்கிட்டா. ஒண்ணரை வருஷம் அலைஞ்சு, பல பேரைப் பார்த்துக் கடைசியா ஒருத்தி அகப் பட்டுக்கிட்டா...! அவ மனசு மாறுறதுக்குள்ளே சீக்கிரம் கல்யாணத்தை முடிச்சிடணும்.''

''... ... ...''

''என்னம்மா! நான் பேசறது உங்களுக்குக் கேக்குதா! ஏன் பேசாம இருக்கீங்க...?''

''என்னத்தைப் பேசறது...? 1974 ஜூலை ஒண்ணாம் தேதிக்கு யாரோ, பொள்ளாச்சி வேலுசாமி கவுண்டர் நம்ம கல்யாண மண்டபத்தை ஏற்கெனவே ஃபிக்ஸ் பண்ணி வச்சிருக்காரு...''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. சொன்ன வாக்கை நீங்க காப்பாத் தணும். எந்தக் கவுண்டரா இருந்தாலும் கான்சல் பண்ணச் சொல்லுங்க. இது நல்ல முகூர்த்தம்..., தள்ளிப்போட முடியாது...!''

''ஏற்கெனவே ஒப்புக்கிட்ட பார்ட்டியைக் கான்சல் பண்ணச் சொல்லிக் கேக்கற அளவுக்கு நீ முட்டாளில்லை. தமாஷுக்குக் கேக்கறேன்னு தெரியும். இப்ப என்னடா பண்றது?''

''என்ன பண்றதுன்னு என்னைக் கேட்டா எப்படி?''

''சரிடா! நீ உடனே புறப்பட்டு வா. கோயமுத்தூர்ல இருக்கற அத்தனை கல்யாண மண்டபத்துக்கும் போயி ஒரு முட்டு முட்டிப் பார்த்துடுவோம். எங்கேயும் கிடைக்கலேன்னா இருக்கவே இருக்கு நம்ம வீடு...! பந்தலைப் போட்டு இங்கேயே முடிச்சுடுவோம்...!''

''அடுத்தநாள் கோவை சென்றேன். என் 'அதிர்ஷ்டம்' எந்தக் கல்யாண மண்டபமும் கிடைக்கவில்லை. ஜூலை 1ஆம் தேதி ரொம்பவும் நல்ல முகூர்த்த நாள் என்றதால், சந்து பொந்துகளிலுள்ள மண்டபங்கள் கூட 'ஃபுல்!'

''வீட்டில் நடத்தி வைக்கட்டுமா?'' என்று கேட்டார். ஆயிரம் பேருக்குமேல் அமர்ந்து நிம்மதியாகப் பார்க்க வீடு போதாது.

மின்னல் வேகத்தில் அம்மாவுக்கு ஒரு யோசனை பிறந்தது. உடனே காரை எடுத்துக்கொண்டு அவினாசி போய் அங்கிருந்து புளியம்பட்டி செல்லும் பாதையில் தண்டுக்காரன் பாளையம் என்ற கிராமத்திலுள்ள ஒரு திருமண மண்டபத்தைக் காட்டினார்.

''பொட்டல்காடு என்று பார்க்காதே! ஒரே வாரத்தில் இங்குப் பந்தல் போட்டு, இருபதாயிரம் பேர் வந்தாலும் சமாளிக்கும் அளவுக்கு எல்லா ஏற்பாட்டையும் செய்து தருகிறேன்'' என்றார்.

அவர் ஏற்கனவே இதய நோயாளி. கொடுத்த வாக்கைக் காப்பாற்றத் தினந்தோறும் காலை 6 மணிக்கு, கோவையிலிருந்து மேட்டுப்பாளையத்தி லுள்ள தமது பண்ணைக்குச் செல்லும் வழியில் 30 மைல் தொலை விலுள்ள கல்யாண மண்டபத்துக்குச் சென்று, பந்தல் போட மரங்கள், ஓலைகள், நாற்காலிகள், அலங்காரப் பொருட்கள், சமையல் செய்ய பாத்திரம் பண்டங்கள், அரிசி பருப்பு அனைத்தையும் வாங்க ஏற்பாடு செய்தார். அவர் கையை விட்டு நிறைய செலவும் செய்தார். மேஜர் சுந்தரராஜனோடு வரும் எங்கள் நாடகக்குழு தங்க தனி வீடு...! பத்திரிகை யாளர் குழாம் தங்க வேறு வீடு...! அந்த அலாதிக் காட்டில் பதினைந்து நாள் இரவு பகலாக அலைந்து திருமண ஏற்பாடுகளைச் செய்து, தாலி கட்டும் நேரத்தில் என் அருகே நின்று ஆனந்தக் கண்ணீரோடு அட்சதை போட்டார். காலில் எலும்பு முறிவு ஏற்பட்டதால் என் தாயாருக்கு அட்சதை போடும் பாக்கியம் கிடைக்கவில்லை. ஊரிலேயே தங்கி விட்டார்.

சத்தியம் செய்து சொல்வேன்..., அவருடைய இரண்டு பிள்ளைகள், மூன்று பெண்களுக்குத் திருமணமானபோதுகூட இந்த அளவுக்குத் தம்மை வருத்திக்கொண்டிருக்க மாட்டார். என் பிள்ளைகள் பிறந்த சேதி சொன்னபோது அகமகிழ்ந்து போனார். தனக்குப் பேரக் குழந்தைகள் இருந்தபோதும், என் குழந்தைகளின் புகைப்படங்களைப் பெரிதாக்கி, பிரேம் போட்டுப் படுக்கையறையில் வைத்திருந்தார்.



கார்த்திக் - அம்மா - சூர்யா

அளவுக்குமேல் என் மீது அன்பு செலுத்திவிட்டாரே! இனிமேல் தொல்லை தராமல் இருக்கலாமா? தந்தேன்.

மேட்டுப்பாளையத்திலுள்ள பிரசித்தி பெற்ற விஸ்கோஸ் ஃபாக்டரியில், என் உறவுக்கார இளைஞன் வேலையில் சேர, சிபாரிசு செய்யச் சொல்லி அம்மாவிடம் கேட்டேன்.

என்னிடம் சரி என்று சொன்னவர், அந்த இளைஞன் நேரில் போன போது ஐந்தாறுமுறை சாக்குச் சொல்லி இழுத்தடித்து விட்டாராம். நான் ஊருக்குச் சென்றபோது அவன் கண்கலங்க இதைச் சொன்னான்.

வாலிப முறுக்கு...! 'நம் ஆளை அவமானப்படுத்தி விட்டாரே' என்ற ஆத்திரம், என் அறிவை மழுங்கச் செய்துவிட்டது...! 'எந்த ஒரு காரியத்துக்கும் உணர்ச்சி வசப்படும்போது முடிவெடுக்கக் கூடாது...! நிதானமாயிருக்கும்போது அறிவுபூர்வமாகச் சிந்தித்து முடிவெடுக்க வேண்டும்' என்ற கொள்கையுடைய நான், அன்று ஒரு வேகத்தில் அம்மாவைத் திட்டி நீண்ட கடிதம் எழுதி அனுப்பினேன்.

'நீங்க பெரிய ஆலவிருட்சம்! ஆயிரம் குருவிகள் அதன்மேல வந்து உக்காருது. அதில நானும் ஒருத்தன். அப்படியிருக்க, இந்த மரம் எனக்கே சொந்தம்னு நான் நினைக்கறது எவ்வளவு பெரிய முட்டாள்தனம்.

'பரம்பரைப் பணக்காரர்களுக்கு, ஏழை ஜனங்களை அலட்சியப் படுத்தறது, அலைக்கழிக்கிறது பொழுதுபோக்கு! நீங்க மட்டும் விதி விலக்கா இருக்க முடியுமா...?'

நான் பயன்படுத்திய வாசகங்களை என் தாயார் படித்திருந்தால்கூட மன்னிக்க மாட்டார்! தபாலில் சேர்த்த பின்னர்தான் வார்த்தைகளின் கடுமையை உணர்ந்தேன். இனி ஒன்றும் செய்ய முடியாது...

கடிதம் போய்ச் சேர்ந்த மறுநாள், அதைப்படித்த அம்மா ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டார். சிகிச்சை பெற்று வருவதாகத் தகவல் வந்தது...! உடல்நலம் பற்றி விசாரித்துக் கடிதம் எழுதும் யோக்கியதையை நான் இழந்து விட்டுத் தவித்தேன்.

ஒரு மாதம் கழிந்து போன...! அம்மாதான் பேசினார்.

''டேய், சிவா! ஆச்சரியமா இருக்கா? அம்மாதான் பேசறேன். மெட்ராஸுக்கு வந்திருக்கேன். உன் லெட்டர் கிடைச்சது. படவா ராஸ்கல்! நேர்ல வந்து கவனிச்சுக்கறேன்...''

என் தவிப்பை யாரிடமும் சொல்லவில்லை. உட்கார முடியவில்லை. நிற்க முடியவில்லை. புனுகுப் பூனைபோல் அலைந்து கொண்டிருந்தேன்.

பிற்பகல் 3 மணி, ஆளுயர மாலை இரண்டுடன் அம்மா வந்தார். என்னையும், என் மனைவியையும் அழைத்து மாலைகளைக் கொடுத்து அணிவிக்கச் சொன்னார். காலில் விழச் சொல்லி ஆசீர்வாதம் செய்து, பைக்குள் கைவிட்டு ஐந்து நூறு ரூபாய் நோட்டுகளை அள்ளிக் கொடுத்தார்!

என் பிள்ளைகளுக்கும், பெண்ணுக்கும் பழங்களையும் இனிப்பு களையும் சாப்பிடும் போட்டி வைத்து, வென்றவனுக்கும் தோற்ற வனுக்கும் நூறு நூறு ரூபாய் கொடுத்தார்.

அன்று எங்கள் ஆறாவது திருமண நாள்... அம்மாவின் பரிவில் திக்குமுக்காடிப் போனோம். நன்றி தெரிவிக்கும் வகையில் 'ராமன் பரசுராமன்', 'சாமந்திப் பூ' ஆகிய படங்களை ரிலீஸாக்குமுன் அம்மாவுக்குப் போட்டுக் காட்டினேன்.

கோவை புறப்படுமுன் சொன்னார். ''நீ சிபாரிசு செய்யச் சொன்ன மில்லில் எனக்கிருந்த உரிமை போய் இரண்டாண்டு ஆயிற்று. முடியாது என்று சொன்னால், நீ வருத்தப்படுவாய் என்றுதான் மௌனமாக இருந்தேன்.

''பெத்த மனம் பித்து, பிள்ளை மனம் கல்லுங்கறதை உன் லெட்டர் நிரூபிச்சிட்டுது. லெட்டரைப் படிச்சுட்டு ரெண்டு நாள் வருத்தப்பட்டேன். அப்புறம் மனசைத் தேத்திக்கிட்டேன். இப்போ எல்லாத்தையும் மறந்திட் டேன்'' என்றார்.

விசாகப்பட்டினத்தில் 'சிந்து பைரவி' படப்பிடிப்பில் இருந்தபோது, 'அம்மா காலமாகி விட்டார்' என்ற சேதி கிடைத்தது. விமான வசதி இல்லை...! ரயிலில் புறப்பட்டாலும், இரண்டு நாளாகிவிடும் கோவை செல்ல. என் தாயாருக்குமேல் நான் போற்றிய அந்த உத்தமத் தாயைக் கடைசியாகப் பார்க்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டவில்லை. என் மனை வியை மட்டும் விமானத்தில் அனுப்பி வைத்தேன்.

ஜெயகாந்தன் சொல்வார் – ''நான் எந்தச் சாவுக்கும் போவதில்லை. நம்மோடு ரத்தமும் சதையுமா பேசி, பழகி, உண்டு, உறங்கி உல்லாசமாக வாழ்ந்த ஒருவரைக் காலில் கட்டும், மூக்கில் பஞ்சும், வாயில் அரிசியுமாய் சவமாகப் பார்க்க நான் விரும்பவில்லை. காரணம், அந்தக் கடைசிப் பார்வை மட்டும் என் நினைவில் நின்று, பசுமையாக வாழ்ந்த நினைவு களையெல்லாம் கொன்றுவிடும். அதை நான் அனுமதிப்பதில்லை'' என்று. என்றென்றும் என் நினைவில் அந்த அன்னை வாழ்ந்து கொண் டிருக்க வேண்டுமென்பதற்காகத்தான் இறைவன் அந்தப் பூத உடலைப் பார்க்கும் வாய்ப்பை எனக்கு அளிக்காமல் இருந்து விட்டானோ!

## 24



# மாமனிதர் சின்னப்பா தேவர்

"ஏன் சிவா, படம் ரிலீஸ் ஆகி ஒரு மாசத்துக்கு மேல ஆகுது..., நடிச்சதுக்கு நீ இன்னும் பணமே வாங்கிக்க மாட்டேங்கிறே..., அக்கவுண்ட்டெல்லாம் குளோஸ் பண்ணனும்ப்பா...! எப்போ வர்றே?"

கற்பகம் ஸ்டூடியோவில் ஒரு படப்பிடிப்பில் நான் இருந்தபோது, பெரியவர் சின்னப்பா தேவரிடமிருந்து போன்! எனக்குக் கோபம் கோபமாக வந்தது.

''அண்ணா! தெரியாத்தனமாக என் கல்யாணத்தை நடத்தி வையுங் கன்னு உங்ககிட்ட சொல்லிட்டேன். நீங்க, கல் சிலைக்குக் கனகாபிஷேகம் பண்றவரு...! தங்கத்தேரு இழுக்கறவரு...! உங்ககிட்டப் போயி, 'மனுஷங் களுக்கு நல்ல காரியம் பண்ணிவையுங்க'ன்னு கேட்டது ரொம்பத் தப்பு...! இதோ இப்பவே வந்து சம்பளக் காசை வாங்கிக்கறேன். என் கல்யாணத்தை நடத்தி வைக்க ஊர்ல நாலு கிழடுகள் கிடைக்காமலா போயிடுவாங்க...? இதோ வர்றேன்...! வந்திட்டேன்...''

''அட அடேய்! என்னப்பா இப்படிக் கோவிச்சுக்கறே? காஷியர் சொன்னாரு. 'சிவகுமார் இன்னும் பணமே வாங்கிக்கலே'ன்னு...! அதனால் போன் பண்ணினேன். நான் இல்லாம நீ எப்படிக் கல்யாணம் பண்ணிடுவே... பார்த்துவிடலாம். சின்னப்புள்ளே! என்னப்பா உனக்கு இவ்வளவு கோபம் வருது...?''

'வெள்ளிக்கிழமை விரதம்' படத்தில் கதாநாயகனாக நடிக்க ஒப்பந்த மான போதுதான் நேரடியாகத் தேவரைச் சந்தித்தேன். பல விஷயங்கள் பேசினேன். அவரை 'தேவர் அண்ணா' என்றுதான் நான் அழைப்பது வழக்கம்.

எந்தப் படத்தையும் தியேட்டரில் போய் மக்களோடு பார்த்து அபிப் பிராயங்களை வளர்த்துக் கொள்ளும் பழக்கமுள்ள தேவர் அண்ணாவுக்கு, 'பெண்ணை நம்புங்கள்' படத்தில் எனது நடிப்பு ரொம்பவும் பிடித்துப் போயிற்றாம். விட்டலாச்சாரியாவின் புதல்வர் ஸ்ரீநிவாஸ் டைரக்ட் செய்த படம் அது.

படத்தின் கதைப்படி, என் அம்மாவையும் அப்பாவையும் திருமண மான கையோடு சந்தேகப் பேய்க்கு அடிமையாக்கிப் பிரித்து விடுகிறார் எம்.ஆர்.ஆர்.வாசு.

படத்தின் பிற்பகுதியில், வாசுவின் மகளான ஜெயசித்ராவை மணந்து கொண்டு, அவரை அவமானப்படுத்திப் பழிவாங்கும் இளைஞன் வேடத்தை நான் ஏற்றிருந்தேன். தியேட்டரில் நல்ல வரவேற்பு இருந்த தைப் பார்த்த தேவர், ''அடுத்த படத்தில் இந்தப் பையன்தான் ஹீரோ...'' என்று அன்றே சொல்லிவிட்டாராம்.

'சிவகுமார் என்றால் அழகான, சாப்ஃடான பையன். பயந்த சுபாவ முள்ள வேடங்களுக்கு ஏற்றவன்' என்று அவர் அலுவலகத்தில் பலர் சொன்ன அபிப்பிராயத்தைத் தவிடுபொடியாக்க, ஆக்ரோஷமான

இளைஞன் வேடத்தில் 'வெள்ளிக்கிழமை விரதம்' படத்தில் என்னை நடிக்க வைத்தார்.

ஒப்பந்தப் பேச்சு வார்த்தை நடந்த அன்றுதான், ''சிவா, ஏழை புரொட்யூஸர், பணக்கார புரொட்யூஸர்னு பாரபட்சம் காட்டாம, தேதி எழுதிக் குடுத்திட்டா எந்தக் காரணத்தைக் கொண்டும் மாத்தாம, நீ நடிச்சுக் குடுக்கறேன்னு கேள்விப்பட்டேன். ரொம்ப சந்தோஷம். ஏழை புரொட் யூஸரா தொழிலை ஆரம்பிச்சவங்கதானே எல்லோரும். நீ கடைசி வரைக் கும் இந்தப் பழக்கத்தை மாத்திக்காதே.

''இன்னொரு முக்கியமான விஷயம்! சினிமா கவர்ச்சியான தொழில்...! இதில் 'லவ்' கிவ்வுன்னு மாட்டிக்காதே! அதையெல்லாம்விட, அவங்க அவங்க இனத்தில் கல்யாணம் பண்ணிக்கணும். பெத்தவங்களுக்குப் பிடிச்ச மாதிரி பிரச்சினையில்லாம பொண்ணைத் தேர்ந்தெடுக்கணும்.

''பிரச்சினையுள்ள குடும்ப வாழ்க்கைன்னா மனம் கிடந்து அலை பாயும். நிர்மலமான மனசுலதான் ஸீனை, வசனங்களைத் தெளிவா, சீக்கிரமா பதிய வச்சுக்க முடியும்.

''நீ கோயம்புத்தூர்ல பொண்ணு பாரு. தகப்பன் ஸ்தானத்திலிருந்து நான் கல்யாணத்தை நடத்தி வைக்கிறேன்'' என்றார்.

பெரியவரின் ஆசிப்படியே கோவை மாவட்டத்தில் எனக்குப் பெண் முடிவாயிற்று. செய்தியைக் கேட்டுச் சந்தோஷப்பட்டவர், ''எத்தனை லட்சம் பணம் வேணும்னாலும் நான் தர்றேன். ஜாம்ஜாம்னு கல்யாணத்தை நடத்து'' என்றார்.

''உங்கள் வாழ்த்துக்களே கோடி ரூபாய்க்குச் சமம். லட்சங்கள் ஏதும் வேண்டாம். கல்யாணத்தை முன்னிருந்து நடத்தி வையுங்கள் போதும்'' என்றேன்.

வெள்ளிக்கிழமை விரதம் படத்தில் நடிக்க எனக்குப் பேசிய சம்பளப் பணத்தை அப்படியே செலவு செய்து, சென்னையில் திருமண வரவேற்பை நடத்தித் தரும்படி தேவரிடம் கேட்டுக் கொண்டேன்.

ஊரில் திருமண ஏற்பாடுகளைக் கவனித்துக் கொண்டிருந்த நண்பர், ஆசிரியர் குமாரசாமியிடமிருந்து அவசரமாக ஒரு கடிதம் வந்தது. 'சொந்தக் கிராமத்தை விட்டு இருபத்தைந்து மைல் தள்ளி நடுக்காட்டில் உள்ள திருமண மண்டபத்தில் கல்யாணத்தை வைத்துள்ளோம். விலைவாசிகள், போக்குவரத்துச் செலவுகள், நாம் போட்ட பட்ஜெட்டில் திருமணத்தை முடிக்கப் போதுமானதாக இருக்குமா என்ற சந்தேகம் வந்துவிட்டது. கல்யாணத்துக்கு இன்னும் இரண்டே நாள்தானிருக்கிறது. வரும்போது

எப்படியாவது சமாளித்துத் தயாரிப்பாளர்களிடம் மேற்கொண்டு 15 முதல் 20 ஆயிரம் ரூபாய் வசூல் செய்து கொண்டு வா' என்று எழுதிவிட்டார்.

இருக்கிற நேரத்தில் எவ்வளவு முயன்றும் பணம் புரட்ட வழியில்லை. கடைசியாகத் தேவர் அண்ணாவிடம் சென்றேன்.

''அண்ணா, கல்யாணத்துக்குக் கொஞ்சம் அதிகம் செலவாகும்போல் தெரிகிறது. என் சம்பளப் பணத்திலிருந்து 15 ஆயிரம் ரூபாய் கைமாத்தாகக் கொடுங்கள். திருமண வரவேற்புக்குள் அதைத் திருப்பித் தந்து விடுகிறேன்'' என்றேன் தேவரிடம்.

''அட! எவ்வளவு பணம் வேணும்னாலும் வாங்கிக்கன்னு நான் அப்பவே சொன்னேனே! தம்பி மாரியப்பனிடம் சொல்லி வாங்கிக்கோ'' என்றார்.

தேவர் பிலிம்ஸிலிருந்து வாங்கிய நோட்டுக் கட்டுகளை அப்படியே கர்சீப்பில் வைத்து முடிந்துசென்று, சொந்த ஊரான காசிகவுண்டன் புதூரிலிருந்த என் தாயாரிடம் கொடுத்தேன்.

''தவிர்க்க முடியாத செலவு வந்தாலொழிய இந்தப் பணத்தில் யாரும் கை வைக்கக்கூடாது'' என்று சொல்லி வைத்தேன்.

சொன்னபடியே தேவர் அண்ணாவும், ஏ.பி.என்.னும் கல்யாணத்துக்குக் கோயமுத்தூர் வந்து, முன்னிருந்து வாழ்த்திவிட்டுச் சென்னை திரும்பினார்கள்.



வெள்ளிக்கிழமை விரதம்

திருமணம் முடிந்து கணக்கு வழக்கெல்லாம் பார்த்தபோது, இந்தப் பணத்தைத் தொட வேண்டிய அவசியம் ஏற்படவில்லை.

சென்னையில், வரவேற்புக்கு முந்தைய நாள் அதிகாலை ஐந்து மணிக்கு, தேவர் அண்ணாவைப் பார்க்க அவர் வீட்டுக்குச் சென்றேன்.

தினந்தோறும் விடிவதற்குமுன் மூன்று மணிக்குக் கடற்கரை சென்று, நடக்கும் பழக்கமுள்ள அவர், அப்போதுதான் வீடு திரும்பி குளித்து பூஜை முடித்து, புத்துணர்ச்சியோடு என்னை வரவேற்றார்.

''என்னப்பா! அவ்வளவு அவசரம்...? இந்நேரத்துக்கு வந்திருக்கே...!''

''உங்க ஆசீர்வாதத்தில் கல்யாணம் நல்லபடியா முடிஞ்சிட்டுது! கைமாத்தா வாங்கிட்டுப்போன பணத்துக்கு வேலையே இல்லை. அதைத் திருப்பிக் கொடுத்திட்டுப் போக வந்தேன். இந்தாங்க...'' என்று பணத்தை டீபாயில் வைத்ததைக் கண்ட அவர் ஒரு விநாடி அதிர்ந்து விட்டார்.

''ஏன் சிவா! இந்தப் பணத்தை உன்கிட்ட நான் கேட்டேனா... என்னப்பா அவசரம் இதுக்கு?''

''அண்ணா! 'கடன் பட்டார் நெஞ்சம்போல் கலங்கினான் இலங்கை வேந்தன்'னு வேதனையின் உச்சத்துக்குக் கடன் வாங்கினவன் மனசைக் கம்பன் உதாரணம் காட்டியிருக்கிறான். கைமாத்தா வாங்கினதைத் திருப்பிக் கொடுக்கற வரைக்கும் எனக்குத் தூக்கம் வருமா...?''

''என்கிட்ட கைமாத்து வாங்கினதை அவ்வளவு கேவலமா நினைக்கிறியா?''

''அண்ணா! தகப்பனோட பாசம் என்னன்னு தெரியாத நான், உங்களைத் தகப்பனுக்கு மேலா நினைக்கறதாலதான் இந்தப் பணத்தை வாங்கிட்டுப் போனேன். நீங்க இல்லேன்னா, கல்யாணத் தேதியைத் தள்ளி வச்சு, அந்தப் பணம் சம்பாதிச்ச பிறகுதான் கல்யாணத்தையே நடத்தி இருப்பேன்.''

''அடப்பாவி! எத்தனையோ நடிகர்களுக்கு, நடிகைகளுக்கு லட்சக் கணக்கில அட்வான்ஸ் பணம் கொடுத்திருக்கேன்...! வீடு வாங்க, கார் வாங்கன்னு அவங்களுக்குக் கொடுத்த பணத்தைக் கணக்குப் பார்த்தா, பத்து லட்சத்தைத் தாண்டும். யாரையுமே திருப்பிக் குடுங்கன்னு கேட்ட தில்லே. என் படத்தில் நடிச்சுக் கழிச்சுக்குவாங்க! கேவலம் இந்தச் சின்னத் தொகையைத் திருப்பிக் கொடுத்து என்னை அவமானப் படுத்துறியே'' என்றார்.

''இதை அவமானமாக நெனைக்காம, பெரிய மனசு பண்ணி ஏத்துக் கிட்டீங்கன்னாத்தான், நான் நிம்மதியா வீட்டுக்குப் போவேன்'' என்று கை கூப்பி வணங்கி அவரிடமிருந்து விடைபெற்றுக் கொண்டேன்.

நான் செய்ததுதான் சரி என்ற போதிலும், அந்த வள்ளல் மனத்தைப் புண்படுத்தி விட்டோமோ என்று சஞ்சலப்பட்டேன்! 6.7.74 அன்று தமது மாமியார் இறந்த செய்தியைக்கூட என்னிடம் தெரிவிக்காமல், ராஜேஸ்வரி திருமண மண்டபத்தில் ஆறு மணிக்கு எங்களை வரவேற்று வாழ்த்தி விட்டு, தேவர் பிலிம்ஸாரை எல்லாவற்றையும் கவனித்துக் கொள்ளப் பணித்துவிட்டு, கோவைக்குப் புறப்பட்டுச் சென்று இறுதிச் சடங்கில் கலந்து கொண்டார்.

என்னுடைய முதல் மகன் சரவணன் பிறந்தபோதும், இரண்டாவது மகன் கார்த்திக் பிறந்தபோதும் காலை ஆறு மணிக்கு வடபழனி சென்று அர்ச்சனை செய்து, பிரசாதங்களை எடுத்துச்சென்று, நர்சிங் ஹோமில் குழந்தைக்குக் கொடுத்து, ஒவ்வொரு சவரன் தங்க நாணயம் பரிசளித்துப் பேரன்களை வாழ்த்தினார்.

அந்த அதிர்ஷ்டம், என் மகள் பிருந்தாவுக்குக் கிடைக்கவில்லை. அவள் பிறப்பதற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்னரே அந்த மாமனிதர் முருகனடி சேர்ந்து விட்டார்!

---




அம்மா எலும்பும் தோலுமாக இருக்கலாம். கை கால்களில் சுருக்கம் இருக்கலாம். குளிக்காமல் வேர்வை நாற்றம் வீசலாம்.

எவ்வளவு இருந்தாலும் தாயின் மடியில் படுக்கிற சுகம், கருப்பைக்குள் படுக்கிற சுகம் மாதிரிதான் என்று சிவகுமார் அவர்கள் எழுதியிருக்கிறார்.

தாயைப் பற்றிய அந்தக் கட்டுரையைப் படித்தால் கூட இந்த நூல் எந்த அளவுக்கு நமக்கும் நம்முடைய வாழ்க்கைக்கும் அருகாமையில் இருக்கக் கூடிய நூல் என்பதை உணர்ந்து கொள்ளலாம்.

1-1-05, வெளியீட்டு விழாவில், **வழக்கறிஞர் சுமதி**

## 25



# ஒரு நடிகை உருவாகிறாள்

''லைட்ஸ் ஆன்... ஸ்டார்ட் சவுண்ட்... பார்ட் டு பை த்ரீ, டேக் ஒன்...''

''ஆக்ஷன்!''

''கட்... கட்... என்னம்மா சிரிப்பு சிரிக்கிற நீ! இதெல்லாம் ராத்திரி வர்றவன்கிட்ட வச்சுக்க...! இப்ப கொஞ்சம் நல்லபடியா சிரி...!''

நடிகை புத்தம்புது முகமல்ல. ஏற்கனவே இரண்டு வெற்றிப் படங்களில் பிரமாதமாக நடித்துப் பெயர் வாங்கிய நடிகை. வசவு நெருப்பை வார்த்தையாக உமிழ்ந்தவர், தொழிலுக்குப் புதிய டைரக்டருமல்ல. சுமார் இருபத்தைந்து ஆண்டுகளுக்கு மேலாகத் தொழிலில் இருப்பவர்...!

ஒருவாறாகச் சமாளித்து, டைரக்டர் கேட்டபடி சிரிக்க, ஷாட் 'ஓ.கே' ஆனது. பெண்மை இளக்காரமாக்கப்படுவது வெளி உலகில் மட்டுமல்ல, சினிமா உலகிலும்தான். அவர்களுக்குப் பெண்மை ஒரு போகப் பொருள். நுகர்ந்ததும் கசக்கி எறிய வேண்டிய மலர்.

ஒட்டுமொத்தமாகப் பெண் இனத்தைப் பலர் இப்படிக் கருதும் போது, நடிகை எம்மாத்திரம்!

தனக்கு உண்மை தெரிகிறதோ இல்லையோ, வாய் கூசாமல் ஒரு நடிகையின் யோக்யதாம்சத்தைப் பற்றிக் கதையளப்பதில் எவரும் சளைப்பதில்லை!

அவள் எவ்வளவு தரங்கெட்டவள் என்று த்தானே பேசி விட்டாலும், தன் ஆசைக்கு இணங்குகிறாள் என்றால் இவன் தயார்!

மறந்துகூட ஒரு விநாடி, அவள் தன் உடன் பிறந்தவளாக, தாயாக இருந்து, மற்றவன் இப்படிப் பேசினால் தன்னால் தாங்க முடியுமா என்று எவரும் யோசிப்பதில்லை...!

ஒரு புகழ்மிக்க கவிஞன், பல பெண்களோடு தொடர்பு கொண்டவன், ஆயிரம் மலர் தாவும் வண்டு என்ற பழமொழியைத் தாண்டி, பல்லாயிரம் மலர்களைத் தன் வாழ்நாளில் நுகர்ந்தவன்.

அவனிடம் ''என்னய்யா, இப்படிக் கண்ட பெண்களோடு அலைகிறாயே!'' என்று ஒரு பெரியவர் கேட்டாராம். ''நான் போகாவிட்டால் பல வீடுகளில் அடுப்பு எரியாது. அதனால் ஒரு விதத்தில் இவர்கள் வாழ நானும் உதவி செய்கிறேன். ஆனால், நான் குடும்பப் பெண்களை என்றும் தீண்டியதில்லை'' என்றானாம் அந்தக் கவிஞன்.

ஒரு குடும்பம், தாயாருக்கு வயது இப்போது நாற்பதைத் தாண்டி விட்டது. பிறந்த ஐந்தும் பெண்கள். ஆறாவது ஒரு வயதில் பையன். இதில் மூத்ததாகப் பிறந்த பெண்தான் பாவம் செய்தவள். செய்யப் போகிறவள்!

குடும்பத்தைக் காக்கும் பொறுப்பு மூத்தவள் தலையில் விழுகிறது. ஆமாம்! பெண் தாவணி போடும் நாளுக்காகத் தாய் காத்துக் கொண்டிருக்கிறாள்!

பூப்படைவது எவ்வளவு பெருமைக்குரிய விஷயம்...! ஆனால், அதுதான் துவங்கப்போகும் அவளின் இருண்ட வாழ்வுக்குப் பச்சைக் கொடி!

ஏற்கெனவே நாள்கணக்கில், வாரக் கணக்கில், எப்போதாவது ஒரு வேளை சாப்பாடு...! அதுவும் கிடைக்கவில்லையென்றால் பானைத் தண்ணீருடன் குடும்பமே பட்டினி.

இந்தக் கட்டத்தில், பெண்ணை விலை பேசி ஹோட்டலுக்கு அனுப்பு வதைவிடப் பெரிய கொடுமை, பெற்ற தாய்க்கு வேறு எதுவுமிருக்க முடியாது.

மானம் போவதானால் உயிரை விட்டுவிட வேண்டும் என்று எழுத, பேச நன்றாக இருக்கும்! அதை வாழ்க்கையில் மனிதன் கடைப்பிடிக்கத் தொடங்கினால், கால் பங்கு மக்கட் தொகைகூட மிஞ்சுவது கஷ்டம்...!

ஹோட்டலிலிருந்து திரும்பி வருகிறாள் மகள்! ''அம்மா! இதற்காகவா என்னைப் பெற்றெடுத்தாய்? ஒரு சொட்டு விஷம் கொடுத்து என்னைக் கொன்றுவிடம்மா...'' – கதறியவாறு, நடை தளர்ந்தவாறு, நகங்கள், பற்களின் தழும்புகளுடன், உடலெங்கும் ரத்தம் உணர்ச்சி மேலீட்டில் பொங்கியோட, கொண்டுவந்த இரண்டு மூன்று 100 ரூபாய் நோட்டுகளைப் பெற்றவள் மீது வீசிவிட்டு, அந்த மலர் மயங்கி மடியில் விழுகிறது.

கண்ணீர் ஆறு ஓய்ந்தவுடன், கோழிக் குருமாவும், மட்டன் பிரியாணியுமாக அன்று வீட்டில் விருந்துச் சாப்பாடு...!

செய்த பாவத்தை எண்ணி, பெற்றவள் ஒரு வாரம் பொறுமையாக இருக்கிறாள். ஆனால், வயிற்றுக்குப் பொறுமை இல்லை. பசித் தீ மீண்டும் குடும்பத்தைப் பற்றி எரிக்கிறது. குடும்ப நிலைமையைப் பெண்ணுக்கு விளக்குகிறாள். இக்கொடுமையிலிருந்து மீள வேறு என்ன வழி என்று மகளைக் கேட்கிறாள்.

புரியாத இளஞ்சிட்டு, விரும்பாத பாதையில், மீண்டும் பயணத்தைத் தொடர்கிறது!

காலச் சக்கரம் இப்படியே உருண்டோடுகிறது.

சுமாரான முக அமைப்பு உள்ளவள் என்பதால், பல கோணங்களில் படமெடுத்து, ஆல்பத்தை ஸ்டூடியோ வட்டாரத்திலும், தயாரிப்பு நிறு வனங்களிலும் உலவ விடுகிறார் தரகர் ஒருவர்.

புதுமலர்களில் வேட்கையுள்ள ஒரு படைப்பாளியின் கண்ணில் அந்தப் புகைப்பட ஆல்பம் படுகிறது.

அழைத்துவர ஆள் ஒருவனுக்குக் கார் கொடுத்து அனுப்புகிறார். அம்மா துணையோடு அவள் வந்ததைக் கண்டு எரிச்சலடைகிறார்.

''இரவு ஏழு மணிக்கு அலுவலகத்தில் உனக்கு ஒப்பனை டெஸ்ட்..., ஒத்திகை எல்லாம் உண்டு! உன் அம்மாவை வீட்டிலேயே விட்டு விட்டு, நீ ஒருத்தி மட்டும் வா'' என்கிறார்.

புரியாத வயதில் தெரியாத பாடங்களைப் படிக்க நேர்ந்தவளுக்கு, படைப்பாளியின் நோக்கம் புரிகிறது!

தலைக்குமேலே வெள்ளம் போய்விட்டது. மிச்சம் இனி என்ன இருக்கிறது? இரவு அவர் சொன்னபடியே போகிறாள். படைப்பாளியின் நோக்கம் நிறைவேறுகிறது! படத்தில் நடிக்க வாய்ப்பும் கிடைக்கிறது! அவன் ஆரத்தழுவியபோதே அதிர்ஷ்ட தேவதையும் அவளைத் தழுவி னாள் போலும்!

'கொடிது கொடிது வறுமை கொடிது...!

அதனினும் கொடிது இளமையில் வறுமை!' – என்ற வரிகளின்படி, அவள் இளமையில் வறுமையை அனுபவித்த போதிலும், அந்த வறுமை யின் கோரப் பற்கள், பிறப்பில் அவள் பெற்ற வனப்பை, அகோரப் படுத்த முடியவில்லை.

காந்தக் கண்களும், கறுத்து அடர்ந்த முடியும், செக்கச் சிவந்த மேனியும், சினிமா காமிராவுக்கு ரொம்பவும் நெருக்கமாகி விடுகின்றன.

ஒன்றில் அறிமுகம்...! அடுத்த படத்தில் ஆடலும், பாடலும் இணைந்த சந்தர்ப்பம்...! இப்படி ஐந்தாறு படங்களைத் தாண்டும்போது, அனைவஃராலும் ஏற்றுக்கொள்ளும் அளவுக்குப் புகழ் சேர்கிறது!

ஆண்டு இரண்டைக் கடக்கிறது!

இப்போது அவள் படு'பிஸி'! காலை ஏழு மணி முதல் ஒரு மணி வரை ஒரு படப்பிடிப்பு...! பிற்பகல் இரண்டு முதல் இரவு ஒன்பது மணிவரை வேறொரு படப்பிடிப்பு...! தொடர்ந்து இரவு பத்துமணி முதல் நடு இரவு தாண்டி ஒரு மணிவரை தவிர்க்க முடியாத மற்றொரு படத்தின் படப்பிடிப்பு!

காய்ந்து கிடந்த புல், மழையில் உயிர் பெற்றுச் செழித்துக் கொழித்து வளர்வதுபோல, இன்று அவள் வருமானத்தில் அத்தனை உடன் பிறப்பு களும் உல்லாசமாக உண்டு, மகிழ்ந்து வளர்கின்றனர்.

படுக்கையில் சாய நேரமின்றி, நாளொன்றுக்குப் பதினெட்டு மணி நேரம் உழைக்கிறாள்.

பணமும் குவிகிறது. புகழும் குவிகிறது. வசதியும் பெருகுகிறது. சிக்கிச் சீரழியும் நரக வேதனையிலிருந்து, தன்னை மீட்ட கடவுளுக்கு நன்றி சொல்லி அவள் லேசாகக் கண்ணை மூடுகிறாள்.

இரவு 12 மணி.

அயர்ந்து தூங்கியவளை அலறி எழுப்புகிறது டெலிபோன் மணி. 'அறிவுகெட்ட ஜென்மம்! யாரடா அவன்... இந்நேரம் போன் செய்வது?' என்று கோபமும் அலுப்புமாக ரிஸீவரை எடுத்துக் காதில் வைக்கிறாள்.

அடுத்த பக்கத்தில் படைப்பாளி...! ஆம்! அறிமுகப்படுத்தின அதே படைப்பாளிதான்...!

பாதி இரவு கடந்த பின்னும் தூக்கம் பிடிக்காமல், படுக்கை சுகத்துக்குப் பழைய உறவு தேடி போன் செய்கிறார்...! வாழ்வு தந்தவனிடம் வரமுடியாது என்று சொல்ல அவளுக்கு வலிமையான மனமில்லை... போகிறாள்.

வறுமையால் பலாத்காரம் செய்யப்பட்டாள் அன்று...! வசதியால் பலாத்காரம் செய்யப்படுகிறாள் இன்று...!

---

சிவகுமார் வெறும் தனிமனிதரல்ல. ஒரு வாழ்க்கை முறை. இது வெறும் புத்தகமல்ல. ஒரு வரலாற்று நூல். சிவகுமார் பற்றிய ஒரு வரலாற்று நூலாக மட்டுமில்லாமல் ஏறத்தாழத் தமிழ்த் திரையுலகின் 40 ஆண்டு கால வரலாற்று நூலாக இது பரிணமிக்கிறது என்பதுதான் எனக்கு மிகப்பெரிய ஆச்சர்யத்தை அளிக்கிறது.

1-1-05, வெளியீட்டு விழாவில், கே. பாலசந்தர்



26



## ஆரூர்தாஸ்

'**பா**சமலர்' படம் பார்க்காத தமிழ் ரசிகன் இந்த உலகில் எந்த மூலையிலும் இருக்கமாட்டான்! இருக்க முடியாது! 1961இல் வெளியான அந்தப் படம், 'பராசக்தி'க்குப் பிறகு சமூகப் படங்களில் மிக ஆழமாக, எல்லா ரசிகர்கள் மனத்திலும் இடம் பிடித்த படம்!

நடிப்புக் கலையில் என் குருநாதராக நான் என்றும் போற்றும் சிவாஜியே, அந்த உச்சகட்டக் காட்சியில், உயிரும் மெய்யும் உருக, இப்படத்தில் நடித்ததுபோல் இன்னொருமுறை நடிக்க முடியாது!



நடிகர் திலகத்திற்கு 29 படங்கள் கதை – வசனம்

படத்தின் பின்பகுதியில், சிவாஜி தன் மகனை அழைத்துக்கொண்டு, தங்கையுடன் வாழ்ந்த அந்த பிரம்மாண்டமான பங்களாவுக்கு வருவார். சாப்பிட்டு முடித்த எச்சிலை, நான்கைச் சுருட்டி எடுத்துவந்து நீட்டிய வில்லி பி.எஸ்.ஞானம், ''அட நீயா! நான் யாரோ பிச்சைக்காரன்னு நெனச்சேன்...! நீ இன்னும் உயிரோடத்தான் இருக்கியா? நீ செத்துப் போயிட்டதா உன் தங்கச்சி நெனைச்சுக்கிட்டிருக்கா...! திரும்ப எதுக்கு வந்தே? போ... போ...'' என்று விரட்டிவிட்டுச் சென்றுவிடுவார்.

பஞ்சடைந்த கண்களும், சாம்பல் நிற முடியும், வறண்ட உதடுகளும் கிழிந்த கோட்டுமாய், சிவாஜி – அந்த அம்மையார் போன திசையை வெறித்துப் பார்த்துவிட்டு, தன் மகனிடம் திரும்பி ''எனக்கு ஒரு தங்கச்சி பொறந்த மாதிரி உனக்கொரு தங்கச்சி வேண்டாம் ராஜா'' – என்று கூறியவாறு சிறுவனை அழைத்துக்கொண்டு புறப்படுவார்.

தீபாவளி சமயம். தெருவில் புஸ்வாணம் வைத்துக் கொளுத்தி விடுகிறார்கள். அது ஏன் எரியவில்லை என்று பார்க்க, ஒரு சிறுமி புஸ்வாணம் அருகே சென்றபோது, குபீரென்று நெருப்புப் பொறி மேலே கிளம்பி விடும்!

சிவாஜி பாய்ந்து சென்று, அந்தச் சிறுமியை அள்ளி எடுத்து அப்புறப் படுத்துவார். அதற்குள் நெருப்புப் பொறி அவர் கண்களைப் பதம் பார்த்து விடும்!

இரண்டு கண்களிலும் பார்வை இழந்த சிவாஜி, வீட்டிலே படுத்த வாறு தங்கையை நினைத்துக்கொண்டு, சிறு சத்தம் கேட்டாலும், ''யாரு! ராதாவா? என் தங்கச்சி ராதா வந்துட்டாளா...? ஓ..., வரலியா!'' என்று முணுமுணுத்துக் கொண்டிருப்பார்.

அப்போது தங்கை ராதாவாக நடிக்கும் சாவித்திரி ஓடிவந்து வாச லருகே நின்று ''அண்ணா'' – என்று குரல் கொடுப்பார்.

மின்சாரம் பாய்ந்ததுபோல, அதிர்ந்து ''அம்மாடி! வந்திட்டியா'' என்பார் சிவாஜி...!

அண்ணன் முன்னே மண்டியிட்ட சாவித்திரி, அவர் உடம்பைப் பிடித்துக் கொண்டு சொல்வார்...!

''அண்ணா, என்னைப் பாருண்ணா...! ஏன் என்னைப் பாக்க மாட்டேங்கறீங்க?''

''என்னால பாக்க முடியாதும்மா...! என் ரெண்டு கண்ணும் போயிடுச்சும்மா!''

அதிர்ச்சியில் கதறுகிறார்..,

''அய்யோ அண்ணா! வைரம்போல ஜொலிச்சு, விரோதிகளையும் வசீகரிக்கும் உங்க அழகான கண்கள் எங்கேண்ணா! என்னை விட்டு எங்கண்ணா போனீங்க?''

''எங்கயும் போகலம்மா! நீ கிழிச்ச அன்பு வட்டத்தைத் தாண்டி நான் எங்கயும் போகலேம்மா...!

''இதெல்லாம் பாக்கறப்போ, நாம ஏண்டா சின்னக் கொழந்தையாவே இருந்திருக்கக் கூடாதுன்னு தோணுது!''

''அப்போ, உனக்கு ஒரு வயசு! எனக்குப் பத்து வயசு! சதா அழுது கிட்டே இருப்பே! எடுத்து மடியிலே போட்டுகிட்டு,

''கைவீசம்மா..., கைவீசு...! கடைக்குப் போலாங் கைவீசு...! முட்டாய் வாங்கலாம் கைவீசு...!''

அதற்குமேல் வார்த்தைகள் வராமல் உடைந்துபோய் தங்கையை அணைத்துக் கொள்வார்!

அப்போது சாவித்திரியின் மகள், ஐந்து வயதுச் சிறுமி ஓடிவந்து ''அம்மா! அம்மா! இந்த மாமாதான் புஸ்வாணம் வெடிச்சப்போ என்னக் காப்பாத்துனாரு'',என்பாள்.

அந்தக் குழந்தையை அள்ளி அணைத்து ''அம்மாடி உன் பேரு என்னடா'' - என்பார்.

''சாந்தி'' - என்று குழந்தை சொல்லும்.

''என் வாழ்க்கையில எனக்குக் கிடைக்காத ஒண்ணை, உங்கம்மா உனக்குப் பேரா வச்சிருக்காளா!'' என்றவர், சாவித்திரி பக்கம் திரும்பி,

''அம்மாடி! எனக்கு ஒரு சின்ன உதவி செய்யறியா? நீயோ பணக்காரி...! என் பையனுக்கு உன் பொண்ணைக் குடுப்பியா..? என்னைச் சம்மந்தியா ஏத்துப்பியா?''

''என்னண்ணா சொல்றீங்க! அதைவிட பாக்கியம் எனக்கு வேற என்ன வேணும்!''.

தங்கையின் வார்த்தை கேட்டு நெகிழ்ந்தவர், அந்த இரு குழந்தைகளையும் அள்ளி எடுத்துக்கொண்டு,

''எங்களுக்கும் காலம் வரும்...! காலம் வந்தால் வாழ்வு வரும்...!
வாழ்வு வந்தால் அனைவரையும் வாழ வைப்போமே!''

என்று பழைய பாடலைப் பாடியவாறு ஆடி, அப்படியே கட்டிலில் சாய்ந்து உயிரை விடுகிறார். அண்ணனின் முடிவுகண்டு அதிர்ந்த சாவித்திரியும் அவர்மீது விழுந்து தன் உயிர் துறக்கிறார்...!

கண்கள் குளமாக, கனத்த இதயத்தோடு, தமிழகமெங்குமுள்ள தியேட்டர்களிலிருந்து ரசிகர்கள் வெளியேறுவார்கள்! அண்ணன் - தங்கை பாசத்தை அவ்வளவு அழுத்தமாக இதுவரை யாரும் சொல்ல முடியவில்லை!

இந்த ஒரு படத்திற்கு வசனம் எழுதியதன் மூலம், என் போன்ற கோடிக்கணக்கான சிவாஜி ரசிகர்களின் இதயத்தில், ஒரே நாளில் இடம் பிடித்து விட்டார், 'தாஸ் அண்ணா' என்று நான் அன்புடன் அழைக்கும் திரு.ஆரூர் தாஸ்!

அந்தப் படத்தில், சிவாஜியும் ஜெமினியும் ஒரே மில்லில், ஆரம்பத்தில் வேலை செய்வார்கள். ஒரு கட்டத்தில் சிவாஜி முதலாளியாகி விடுவார்! ஜெமினி தொழிலாளர் தலைவனாக இருப்பார்! ஆள்குறைப்பு என்ற பெயரில், சிலரை சிவாஜி வேலையைவிட்டு நீக்கி விடுவார். அந்த ஆட்களுக்காகப் பரிந்து பேச, அவர்களோடு ஜெமினி சிவாஜியை ஆபீஸில் சந்திப்பார்..! மீண்டும் அவர்களுக்கு வேலை தர ஜெமினி வற்புறுத்த, சிவாஜி மறுத்துவிடுவார்...!

ஒரு கட்டத்தில் ஜெமினியைப் பார்த்து சிவாஜி கிண்டலாகச் சொல்வார்.

''நம்முடன் வேலைபார்த்த ஒருவன், இன்று இந்த நிலைக்கு வந்து விட்டானே என்ற வயிற்றெரிச்சல் உனக்கு!''.

''இல்லை, தனக்குத் தண்ணீர் இல்லாததால் ஒரு செடி கருகுமே தவிர, இன்னொரு செடிக்குத் தண்ணீர் கிடைத்ததே என்ற ஏக்கத்தால் எந்தச் செடியும் எரிவதில்லை.

''இந்தத் தத்துவத்தில் வளர்ந்து, தன்னம்பிக்கையில் மலர்ந்து, கவலையில்லாத வாழ்வு நடத்துகிற என்னை விட்டுவிட்டு, வேறு எவனாவது கையாலாகாதவனிடம் உன் வயிற்றெரிச்சல் கதையைச் சொல்லு'' என்பார் ஜெமினி.

நீண்ட அந்த உரையாடலில், ''எனக்குச் சுயநல நோக்கமில்லை, பொதுநல உணர்வோடுதான் வாதாடுகிறேன்'' என்பார் ஜெமினி.

''பொதுநலம்...! பொறியிலே பலகாரம் வைப்பது எலியின் பசியைப் போக்கவா...! புற்றின் முன்னால் மகுடி ஊதுவது நாகத்தின் காதுகளை நாதத்தால் குளிர வைக்கவா?

''காட்டுக்குள்ளே குழி பறிப்பது, யானை ஓய்வு பெறுவதற்காகவா? கணையை வில்லிலே பூட்டுவது கலைமானுக்கு வேடிக்கை காட்டவா? இல்லை...! இல்லை...! இதெல்லாம் பிறர் துன்பத்திலே இன்பம் காண வேண்டுமென்ற பேய் வெறி...! ம்... பேய் வெறி...''

சக்கர நாற்காலியில் உட்கார்ந்து, பென்சிலைச் சீவிக்கொண்டு, அலட்சியமும், எரிச்சலும், கோபமும் கலந்த பல்வேறு முக பாவங்களோடு, இந்த வசனங்களைப் பேசி நடித்து, எங்களுக்கெல்லாம் பைத்தியம் பிடிக்கச் செய்தார் சிவாஜி...!

சிவாஜியின் அபரிமிதமான நடிப்பாற்றலையும், வசனங்களுக்கு உயிர்கொடுக்கும் அழகையும் உள்வாங்கிக்கொண்ட திரு.ஆரூர்தாஸ், அவருடைய ஆஸ்தான வசனகர்த்தாவாகி – பார் மகளே பார், படித்தால் மட்டும் போதுமா, அன்னை இல்லம், அன்பளிப்பு, தேனும் பாலும், தங்கை, இருமலர்கள், புதிய பறவை, பைலட் பிரேம்நாத், என 29 படங்களுக்கு வசனம் எழுதி, அப்படங்களின் வெற்றிக்குத் துணை நின்றார்.

எதிரும் புதிருமாகத் தொழிலில் போட்டிபோட்ட திரு. எம்.ஜி. ஆருடனும் பணியாற்றி, கிட்டத்தட்ட 18 படங்களுக்கு வசனம் எழுதி எம்.ஜி.ஆர். பாராட்டினையும் பெற்றார்.

1955ல் கோவையிலிருந்து வெறும் 10 ஆயிரம் ரூபாயுடனும், பழைய 'ரெனால்டு' காருடனும் சென்னை வந்தவர் தயாரிப்பாளர் திரு. சாண்டோ சின்னப்பா தேவர்.

தேவர் பிலிம்ஸ் துவக்கி, 'வாஹினி' நாகி ரெட்டியாரிடம் நெகடிவ் உரிமைகளைக் கொடுத்து, தயாரிப்புக்கு வேண்டிய பணம், ஸ்டுடியோ, எடிட்டிங், லேப், ரிக்கார்டிங் என அனைத்து வசதிகளையும் பெற்று, ஜுபிடரில் தன்னோடு நடித்த திரு.எம்.ஜி.ஆரை கதாநாயகனாக ஒப்பந்தம் செய்து, பானுமதியை ஜோடியாகப் போட்டு 'தாய்க்குப்பின் தாரம்' – படத்தை முதன்முதலாக உருவாக்கி வெளியிட்டு வெற்றி பெற்றார்.

எம்.ஜி.ஆரிடம் தெரிவிக்காமல், அப்படத்தைத் தெலுங்கில் 'டப்' செய்து வெளியிட்டதில் மனஸ்தாபம் ஏற்பட்டு, 5 ஆண்டுகள் இருவரும் பிரிந்து இருந்தனர்.

இடையில் தேவர் அண்ணா, 'நீல மலைத்திருடன், செங்கோட்டை சிங்கம், வாழவைத்த தெய்வம்' என்று மற்ற ஹீரோக்களை வைத்துப் படங்களைத் தயாரித்து வியாபார ரீதியில் வெற்றியும் கண்டார்.

ஜெமினி – சரோஜாதேவி நடித்த 'வாழவைத்த தெய்வம்' படத்தைத் தேவர் அண்ணா எடுத்தார்! அதுதான் 'தாஸ்' தேவர் பிலிம்ஸில் பணி யாற்றிய முதல் படம்! திரையுலகில் தன்னை 'வாழவைத்த தெய்வம்' என்று இன்றும் தேவர் அண்ணா பற்றி நெக்குருகச் சொல்கிறார் தாஸ்.

ஐந்தாண்டு இடைவெளிக்குப் பிறகு தேவரும், எம்.ஜி.ஆர், அவர் களும் சமரசம் செய்துகொண்டு உருவாக்கிய படம் 'தாய் சொல்லைத் தட்டாதே'

எம்.ஜி.ஆர். படங்கள் முடிய 6 மாதம், ஒரு வருடம்கூட சாதாரண மாக ஆகும். ஆனால் தேவர் அண்ணா பூஜைபோட்ட ஒரே மாதத்தில் படத்தை முடித்து வெளியிட்டார். 1961 தீபாவளியில் வெளியான 'தாய் சொல்லைத் தட்டாதே' மிகப்பெரிய வசூலைத் தந்தது.

ஆரம்பத்தில் எம்.ஜி.ஆர்.அவ்வளவு எளிதில் தாஸை ஏற்றுக் கொள்ளவில்லை. இவன் 'சிவாஜி காம்பவுண்ட்' ஆள் என்று ஒதுக்கியே வைத்திருந்தாராம்.

'தாய் சொல்லைத் தட்டாதே' படத்தின் முதல்நாள் படப்பிடிப்பின் போது, தேவர், தாஸை அழைத்து, எம்.ஜி.ஆருக்கு டைலாக்கைப் படித்துக்காட்டு என்று உத்தரவிட்டிருக்கிறார்.

''பொதுவா, கணவனை இழந்த பெண்களைப் பார்க்கறதே அபச குணம்னு சொல்வாங்க! ஆனா, நான் விடிஞ்சதும் எங்கம்மா முகத்திலதான் முழிப்பேன். அதனால, எனக்கு வெற்றிமேல வெற்றி கிடைக்குது! எனக்கு எப்பவுமே தாய்தான் தெய்வம்! அந்தத் தாய் சொல்லை என்னிக்குந் தட்டமாட்டேன்!''

இந்த வசனத்தை தாஸ் படித்ததும், தாய்மீது பக்தி கொண்ட எம்.ஜி.ஆர். தன்னுடைய உணர்வை அப்படியே பிரதிபலித்த அந்த வசனங்களை மீண்டும் ஒருமுறை படிக்கச் சொல்லியிருக்கிறார்!

தாஸ் அண்ணா படித்ததும், அப்படியே கட்டிப்பிடித்து 'ஷூட்டிங் நடக்கறப்ப எல்லாம் என் பக்கத்திலேயே இரு' என்று அன்புக் கட்டளை யிட்டாராம். அன்று எம்.ஜி.ஆர். மனத்தில் இடம் பிடித்த தாஸ், 'பெற்றால் தான் பிள்ளையா?' படம்வரை தொடர்ந்து அவரின் பல படங்களுக்கு திரைக்கதை வசனம் எழுதினார்.

ஏ.வி.எம். நிறுவனம் தயாரித்த 'காக்கும் கரங்கள்' படம்தான் என்னைத் திரையுலகில் அறிமுகப்படுத்தியது. அப்படத்திற்கும் வசனம் எழுதியவர் தாஸ் அண்ணாதான்.

AVM குமாரர்கள் தங்களின் உடன்பிறப்புபோல தாஸையும் டைரக்டர் ஏ.சி. திருலோக்சந்தர் அவர்களையும் கருதினார்கள். வீரத்திருமகன், நானும் ஒரு பெண், காக்கும் கரங்கள், அன்பே வா – என ஏ.சி.டி. இயக்கிய ஏ.வி.எம் படங்களுக்கெல்லாம் தாஸ் கதை வசனம் எழுதினார். திருலோக் சந்தர் உருவாக்கிய 12 படங்களுக்கு ஆரூர்தாஸ்தான் கதை வசனம்.

அதேபோல நடிகர்? தயாரிப்பாளர் பாலாஜி அவர்கள் உருவாக்கிய 'தங்கை' படத்திற்கு வசனம் எழுத ஆரம்பித்து, 'விதி' படத்தின் மாபெரும் வெற்றியைத் தொடர்ந்து பாலாஜி நிறுவனத்துக்கு 12 படங் களுக்குக் கதை வசனம் எழுதியிருக்கிறார்.

திரையுலகில் வாழ்வளித்த திரு.சாண்டோ சின்னப்பா தேவர் நிறுவனத்தில் 'வாழவைத்த தெய்வம்' படத்தில் துவங்கி, நான் நடித்த 'வெள்ளிக்கிழமை விரதம்' படம்வரை 18 ஆண்டுகள் அந்த நிறுவனத்தில் பணிபுரிந்திருக்கிறார். என்னோடு 10 படங்களுக்குப் பணி புரிந்திருக்கிறார்.

இவ்வளவு சிறப்புகள் உள்ள தாஸ் அவர்களும், ஆரம்பத்தில் சினிமா உலகத்தில் அலைக்கழிக்கப்பட்டவர்தான்...!

எதிர்காலம் எப்படி இருக்கும் என்று தெரியாத இளம்வயதில், தொழில் ஏதும் பிடிபடாத காலத்திலேயே, தன்னுடைய 22-வது வயதில் திருமணம் செய்துகொண்டார்.

கர்ப்பத்தில் குழந்தையும், கண்களில் குளத்தையும் கொண்டிருந்த அருமையும் வறுமையுமாயிருந்த வாழ்க்கைத் துணையைவிட்டு, சென்னை வந்து நிறைய ஏமாற்றங்களைச் சந்தித்திருக்கிறார்!

தஞ்சை 'ராமையா தாஸ்' தான் துவக்கத்தில் 'டப்பிங்' படங்களுக்கு வசனம் எழுத வாய்ப்பளித்தார்.

'படித்த பெண்' என்ற படத்துக்கு ஒரு பாடல் எழுத, ஏ.எல்.நாராயண னின் உதவியாளராகப் பேனா பிடித்து எழுத ஆரம்பித்தார்.

விரக்தியின் விளிம்பில், 'வீணாய்ச் சினிமா உலகுக்கு வந்து, வாழ்க்கையை நாசமாக்கிக் கொண்டோமே' என்று வேதனைகளை ஆரம்ப நாள்களில் அனுபவித்தவர்.

இவர் திரையுலகில் கால் பதித்து 50 ஆண்டுகள் ஓடிவிட்டன...!

★ ★ ★

எந்தவித பலவீனத்துக்கும் அடிமையாகாமல், ஏசுவைத் தொழுது, எல்லாக் கடவுளும் ஒன்றென்ற உணர்வுடன், எழுத்தையே வாழ்க்கை யாக்கி, இந்த ஐம்பது ஆண்டு காலத்தில் 450 படங்களுக்குமேல் கதை வசனம் எழுதி, பணம் சம்பாதித்து, சென்னையில் சொந்தமாக வீடு, கார் வாங்கி, பிள்ளைகுட்டிகளைப் படிக்க வைத்து, பூட்டாதாரிகளாக்கி, மணம் முடித்து வைத்து, இன்று நிம்மதியாகவும் ஆரோக்கியமாகவும் வாழும் தாஸ் அண்ணா திரையுலகில் ஒரு அபூர்வ மனிதர்தான்...!

---

வாழ்க்கையை ஒரு தவமாக நடத்துவதென்பது எல்லாருக்கும் எளிதல்ல. அப்படித் தவமாக நடத்தக் கூடியவன் எவனாவது இருந்தால், அவனை மகாத்மா என்று அடைமொழி கொடுத்து ஒரு படமாக மாட்டி வைத்துவிட்டு, 'இவன் போல் நம்மால் நடக்க இயலாது' என்று சொல்லிவிட்டு, நாம் நம் வழியில் நடந்து பழகிப் போன தேசமிது. சிவகுமார் வாழ்க்கை ஒரு தவம். அதுதான் சிவகுமாரிடம் எனக்கு ஏற்பட்ட ஈர்ப்பு.

1-1-05, வெளியீட்டு விழாவில், **தமிழருவி மணியன்**



27



## ரவிச்சந்திரன்

1963ஆம் வருடம்...., ஸ்ரீதரின் சித்ராலயா சார்பில் பேப்பரில் விளம்பரம். திரைப்படத்தில் நடிக்க புது முகங்கள் தேவை. கல்லூரி மாணவ மாணவியர் விண்ணப்பிக்கலாம் என்றிருந்தது.

அன்றைய காலகட்டத்தில் அது புரட்சிகரமான விளம்பரம். எம்.ஜி.ஆர்., சிவாஜி, எஸ்.எஸ்.ஆர்., முத்துராமன், எம்.ஆர்.ராதா,

எஸ்.வி.சுப்பையா, டி.எஸ்.பாலையா என அத்தனை நடிகர்களும், தொழில் முறை நாடகக் கம்பெனிகளில் சிறுவயது முதல் நடித்து, நடிப்பில் பழம் தின்று கொட்டை போட்டவர்கள்!

நடிகைகள் ஒரு சிலர் நாடக அனுபவம் பெற்றவர்கள். மற்ற அத்தனை கதாநாயகிகளும் பரதநாட்டியம் கற்று அரங்கேறியவர்கள்; அல்லது, மிகச்சிறந்த பாடகிகள்.

'முன் அனுபவமே இல்லாத புத்தம் புது முகங்கள் தேவை' என்று ஸ்ரீதர் விளம்பரம் செய்திருந்தது நிச்சயம் பல நடிகர்களுக்கு எரிச்சலை மூட்டியிருக்கும்.

ஓவியக் கல்லூரியில், அப்போது எனக்கு ஆசிரியராக இருந்தவர், இந்தியாவின் புகழ்மிக்க ஓவியர்களில் ஒருவரான திரு.ஏ.பி. சந்தான ராஜ்.

கல்லூரி ஆண்டுவிழா நிகழ்ச்சி ஒன்றில், 'அனார்கலி' ஓரங்க நாடகத்தில் சிவாஜி பேசி நடித்த 7 நிமிட வசனத்தை, எமோஷனலாக நான் நடித்துக் காட்டினேன். அடுத்து 'சேரன் செங்குட்டுவன்' நாடக வசனத்தை, கர்ஜனை செய்து பேசி நடித்தேன்.

இதைப் பார்த்த திரு. சந்தான ராஜ், ''நீ இருக்க வேண்டிய இடமே வேறு. இவ்வளவு நடிப்பாற்றல் உன்னிடம் இருக்குமென்று நான் கொஞ்சம்கூட நினைத்ததில்லை. வகுப்பில் புழு மாதிரி, அமைதியாக உட்கார்ந்து ஓவியம் தீட்டுவாய்...! மேடையில் மிரட்டி விட்டாய்'' என்று சந்தோஷத்தில் என்னை அல்லாக்காகத் தூக்கி, மூன்று சுற்றுச் சுற்றித் தரையில் இறக்கி விட்டுச் சொன்னார்.

செய்தித் தாளில் விளம்பரத்தைப் பார்த்ததும், ஸ்ரீதர் படத்துக்கு நாமும் விண்ணப்பம் செய்யலாம் என்று சொல்லி, செயிண்ட் தாமஸ் மவுண்டிலிருந்து அதிகாலை 6 மணிக்கு, எழும்பூர் செயிண்ட் ஆண்ரூஸ் சர்ச்சுக்கு வந்து விட்டார்.

இரண்டு ரோல் கருப்பு வெள்ளை நெகடிவ் வாங்கி, பல கோணத்தில் என்னை நிற்க வைத்துப் புகைப்படம் எடுத்தார். பிரிண்ட் போட்டு, சித்ராலயா நிறுவனத்திற்கு அனுப்பினோம்.

என்னைப் போலவே கல்லூரி மாணவ மாணவியர் தமிழகமெங்குமிருந்து சுமார் 5000 பேர் விண்ணப்பித்திருந்தனர்.

ஆனால் 'காதலிக்க நேரமில்லை' என்ற அந்த வண்ணப்படத்தில் ஹீரோவாக நடிக்கும் வாய்ப்பு, மலேசியாவிலிருந்து திருச்சி வந்து படித்துக்கொண்டிருந்த திரு. ரவிச்சந்திரனுக்குத்தான் கிடைத்தது.

ஒளிப்பதிவாளர் பி.என்.சுந்தரம், அவரை ஸ்ரீதரிடம் அறிமுகப்படுத்த அழைத்து வந்திருக்கிறார்.

சிவாஜி கணேசன் அவர்கள் கண்களைப் போலவே, ஒளிமிக்க உருண்டையான கண்கள். நீண்ட மூக்கு. ஓவல் ஷேப் முகம் – அழகிய பற்கள்..! நீண்ட கைகள்...!

போதாததற்கு ஸ்ரீதர் முன்பு, அந்த இளைஞன் கால் மேல் கால்போட்டு அமர்ந்து, ஸ்டைலாக சிகரெட் ஒன்றை எடுத்துப் பற்ற வைத்து, சிகரெட் பாக்கெட்டை ஸ்ரீதர் பக்கமும் நீட்டியிருக்கிறார்.

புகழ்மிக்க நடிகர்கள் முன்போ, பெரிய டைரக்டர்கள் முன்னிலையிலோ, புது முகங்கள் கூனிக்குறுகி, வியர்த்து விறுவிறுத்து நின்று, தட்டுத் தடுமாறித்தான் பேசுவார்கள்.

இந்த இளைஞனின் துணிச்சலும், ஸ்டைலும், தோற்றமும் ஸ்ரீதர் அவர்களுக்குப் பிடித்துப் போய்விட்டது.

புதுமுகம் ரவிச்சந்திரன் எப்படி நடிக்கப் போகிறார்! முன் அனுபவம் இல்லாத, கல்லூரியில் படித்த இளைஞரை, ஸ்ரீதர் எப்படிக் கையாளப் போகிறார் என்று திரையுலகமே ஆவலோடும், ஏளனத்தோடும் எதிர்பார்த்தது.

பொள்ளாச்சியிலிருந்து தெற்கே 20 மைல் தொலைவில் ஆழியாறு அணை. அப்போதுதான் கட்டப்பட்டது. அணையின் ஒரு பகுதியில் ஒரு கெஸ்ட் ஹவுஸ். அதையொட்டி அழகிய பூங்கா...! தூரத்தில் ஆனை மலைத் தொடர்.

ரம்மியமான அந்தப் பின்னணியில் 'விஸ்வநாதன் வேலை வேணும்' என்று டி.எஸ்.பாலையா, காஞ்சனா, ராஜஸ்ரீ முன்னிலையில், ரவிச் சந்திரன் மற்ற மாணவர்களோடு ஆடிப்பாடும் காட்சியைப் பார்த்ததும் அனைவரும் வாயடைத்துப் போய்விட்டார்கள்.

திரு. ரவிச்சந்திரனுக்கு 'பாடி லேங்வேஜ்' ரொம்பவும் பிரமாதமாக இருந்தது. ஏதோ, பத்துப் படங்களில் ஹீரோவாக நடித்தவர்போல, கொஞ்சமும் தயக்கமோ, பயமோ இன்றி டான்ஸ் மூவ்மெண்ட்களை அழகாகச் செய்திருந்தார்.

'அனுபவம் புதுமை... அவரிடம் கண்டேன்...' என்றொரு பாடல் சிருங்கார ரசத்துடன் படமாக்கப்பட்டிருந்தது. 'நாளாம் நாளாம் திருநாளாம்' என்று ஊட்டியில், ரவிச்சந்திரன் – ராஜஸ்ரீ, முத்துராமன் – காஞ்சனா இரு ஜோடிகளும் பாடி ஆடும் காட்சி, கல்லூரி மாணவர்களைக் குதூகலமிடச் செய்தது.

நண்பர் நாகேஷ் புகழின் உச்சியை நெருங்கிக் கொண்டிருந்த நேரம்! அவரது டைலாக் டெலிவரி, மாடுலேஷன், உடம்பை ரப்பராக வளைத்து அவர் செய்யும் சேட்டைகள் – பாலையா அவர்களிடம் நாகேஷ் கதை சொல்லும் காட்சி படத்தின் ஹைலைட்! –

அப்புறமென்ன? படம் வெள்ளிவிழா கொண்டாடியது! 175 நாள்கள் என்றால், இப்போது செய்வதுபோல காலைக்காட்சி ஒன்றை மட்டும் ஓட்டிக் கொண்டாடுவதல்ல! 10 சென்டரிலும் 3 காட்சிகளாக படம் ஓடி வசூலைக் குவித்தது.

அடுத்தது எல்.வி. பிரசாத் இயக்கத்தில் 'இதயக் கமலம்'. அதில் கே.ஆர்.விஜயாவுக்கு இரட்டை வேடம். ஹீரோயின் சப்ஜக்ட்டாக இருந்த போதிலும் ஹீரோவை ஓரங்கட்டாத படம்!

'உன்னைக் காணாத கண்ணும் கண்ணல்ல
உன்னை எண்ணாத நெஞ்சும் நெஞ்சல்ல
நீ சொல்லாத சொல்லும் சொல்லல்ல
நீ இல்லாமல் நானும் நானல்ல'

என்று மனைவி, கணவன் மீதுள்ள காதலை, உருக்கமாக வெளிப்படுத்தும் பாட்லைக் கண்ணதாசன் எழுதியிருந்தார். ஒளிப்பதிவாளர் கே.எஸ். பிரசாத், பல வண்ணங்களில், விஜயாவின் நிழல், ஊடாடுவதுபோல வித்தியாசமாகப் படமாக்கி யிருந்தார்.

'தோள் கண்டேன் தோளே கண்டேன்' டார்ஜிலிங் சென்று, பி.பி.சீனிவாஸ் குரலில் ரவிச்சந்திரன் பாடும் பாடல் காட்சியைப் படமாக்கியிருந்தார்கள்.

'மலர்கள் நனைந்தன பனியாலே – என்
மனமும் குளிர்ந்தது இரவாலே – ''

அதிகாலை பனிமூட்டத்தில், குளித்து ஈரத்தலையில் டவல்சுற்றி முறுக்கி விட்டு, துளசி மாடத்தைச் சுற்றி, பூபறித்தவாறு கே.ஆர்.விஜயா பாடுவார். ரவிச்சந்திரன், படுக்கையில் உறங்கியவர் கண் விழித்து, கண் களால் காதல் மொழி பேசுவார். 'இப்படி ஒரு மனைவி நமக்குக் கிடைக்க மாட்டாளா' என்று ரசிகர்கள் ஏங்கினார்கள்.

அந்தப் படமும் வெள்ளி விழா கொண்டாடியது. கருப்பு வெள்ளை யில், புகழ்மிக்க கதாநாயகர்கள் எம்.ஜி.ஆரும், சிவாஜியும் நடித்துக் கொண்டிருந்தனர். பத்துப் படங்களில் 2 படங்கள், பெரிய நடிகர்களை வைத்து வண்ணத்தில் படமாக்கிய காலத்தில், இந்தப் புதுமுகத்திற்கு, வண்ணப்படங்கள் வெள்ளி விழாப் படங்களாக – வெற்றி வாகை சூடின!

அடுத்து திரு.டி.ஆர். ராமண்ணா, 'குமரிப்பெண்' என்றொரு படத்தை ரவிச்சந்திரன் – ஜெயலலிதாவை இணையாகப் போட்டு படமாக்கினார். முழுக்க முழுக்கப் பொழுதுபோக்குப் படம்.

'வருஷத்தைப் பாரு – அறுபத்தி ஆறு' என்று ரயிலுக்குள் தோழிகளுடன் கதாநாயகி கும்மாளமிடும் பாட்டு சூப்பர்! சூப்பர் ஹிட்!

கோவை மில் தொழிலாளிகள், அந்தக் காட்சி வருவதற்கு 10 நிமிடம் முன்பு பர்மிஷன் போட்டு, தியேட்டருக்குள் டிக்கட் வாங்கி வந்து அந்தப் பாட்டை மட்டும் பார்த்து விட்டு, மீண்டும் வேலைக்குப் போவார்கள். அப்படி ஒரு க்ரேஸ்...!

அந்தச் சமயத்தில் எனக்குக் கார் வசதியில்லை. இரண்டாம் கதாநாயகனாகப் படங்களில் நடித்துக் கொண்டிருந்தேன். ஒரு படத்திற்கு ரூ. 4,000 சம்பளம். எனவே சைக்கிளில், சென்னை ஜெயராஜ் தியேட்டருக்குச் சென்று, கர்சீப்பால் முகத்தை மறைத்துக்கொண்டு, டிக்கட் வாங்கிப் படத்தைப் பார்த்துவிட்டு, கடைசி ரீல் ஓடிக்கொண்டிருக்கும்போது கிளம்பி வந்துவிட்டேன்.

புதுமுகங்கள் அதிகம் நுழைய முடியாத காலம். என் முகம் ரசிகர்களுக்கு நன்கு அறிமுகமாயிருந்த நேரம். என்னடா இந்த நடிகர் சைக்கிளில் வந்திருக்கிறார் என்று ரசிகர்கள் கேலி செய்வதைத் தவிர்க்கவே படம் முடியுமுன் கிளம்பி வந்தேன்.

டி.ஆர். ராமண்ணா, அந்தப் படத்தின் வெற்றியைத் தொடர்ந்து 'நான்', 'மூன்றெழுத்து' என வண்ணத்தில் பொழுதுபோக்குப் படங்கள் எடுத்து, எல்லாம் வெற்றிகரமாக ஓடின. 'நான்' படத்தில் ஒரு காருக் குள்ளேயே டூயட் பாடல் ஒன்றை முழுசாகப் படமாக்கினார், ராமண்ணா.

ஏ.வி.எம். நிறுவனம், என் மரியாதைக்குரிய இயக்குநர் ஏ.சி.திருலோகசந்தர் இயக்கத்தில் வண்ணத்தில் 'அதே கண்கள்' படத்தை உருவாக்கியது. ரவிச்சந்திரன் – காஞ்சனா ஜோடி!

கருப்பு வெள்ளையில் 'உயர்ந்த மனிதன்' படத்திற்காக அதே ஸ்டுடியோவில் நான் நடித்துக் கொண்டிருந்தேன்.

வண்ணப்படம் என்பதால் அதற்குப் போடப்பட்ட செட்டே அழகாக, ரம்மியமாக இருக்கும். நடிக நடிகையர் உடைகளும் பல்வேறு மெலிதான வண்ணங்களில் கண்ணைக் கவரும்.

கருப்பு வெள்ளைப் படங்களுக்கு, உடைகள் எல்லாம் சாம்பல் கலரிலும், கருப்பு, வெள்ளையிலும்தான் தைப்பார்கள்.

ரவிச்சந்திரன் – காஞ்சனா ஒப்பனையும் உடைகளும் என்னைப் போன்றோரைப் பொறாமைப்பட வைத்தன.

'அதே கண்கள்' படமும் பல நாள்களைத் தாண்டி ஓடியது. ஜெய், ராஜன், ஸ்ரீகாந்த் மூன்றுபேரும் ஹீரோக்களாகப் படங்கள் செய்த போதிலும், ரவிச்சந்திரனுக்கு அமைந்ததுபோல டைரக்டர்கள், வெற்றிப் படங்கள் அந்தக் கட்டத்தில் அவர்களுக்கு அமையவில்லை.

டைரக்டர் கே.பி. ஸ்ரீதர் அவர்களுக்குப் பிறகு ஸ்டார் டைரக்டராக வேகமாக வளர்ச்சி பெற்று வந்த நேரம். 'நான்கு சுவர்கள்' படத்தைக் கோவாவில் உருவாக்கினார். ஆங்கிலப் படம் போன்று தோற்றமளிக்கும் வித்தியாசமான படம். அதில் நண்பர் ரவிச்சந்திரனும் ஜெய்யும் நாகேஷும் நடித்தனர்...!

1966இல் ஜெமினி சார்பில் எஸ்.எஸ். வாசன் அவர்கள் உருவாக்கிய 'மோட்டார் சுந்தரம் பிள்ளை'யில் திரு. ரவிச்சந்திரனுடன் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது. சிவாஜிக்கு மூன்று மருமகன்கள். நான் மூத்த பெண் காஞ்சனாவின் கணவன். இரண்டாவது பெண் சைலஸ்ரீ. அவரது கணவர் சூர்யகுமார். மூன்றாவது பெண் ஜெயலலிதா. அவரது காதலராக ரவிச் சந்திரன் நடித்தார்.

உண்மையில் ரவி – ஜெயலலிதாதான் காதல் ஜோடி. பாடல் காட்சி அவர்களுக்குத்தான்!

மளமளவென்று படங்கள் குவிந்தன. எம்.ஜி.ஆர்., சிவாஜி – கால்ஷீட் கிடைக்காத தயாரிப்பாளர்கள் அடுத்த வெற்றிப்பட ஹீரோவான ரவிச்சந்திரனை ஒப்பந்தம் செய்தனர். இரவு பகலாக நடித்தார். வசதியும் கூடிற்று. புகழும் கூடிற்று.

இளமைப்பிராயம், தொட்டதெல்லாம் பொன்னாகும் சூழல்! கொஞ்சம் தடுமாறி விட்டார். திரையுலகில் இது ரொம்பவும் சகஜம்! இன்னொரு மணம் செய்து, அவருக்கும் பிள்ளை பெற்று, கொஞ்ச காலம் வாழ்ந்துவிட்டு, மீண்டும் புறப்பட்ட இடத்துக்கே வந்துவிட்டார்.

கோவலன் – கண்ணகி காலத்திலேயே நடந்துவிட்ட சம்பவம்! புதிதாகச் சொல்ல ஏதுமில்லை! முதல் மனைவி, மகன் ஹம்சவர்த்த னுடன் இப்போது இனிதே வாழ்ந்து வருகிறார்.

கர்வமில்லாத மனிதர். தானுண்டு தன் வேலையுண்டு என்று இருப்பவர். அடுத்தவர் பற்றிப் புறம் பேசமாட்டார்...! இனிய நண்பர் ரவிச்சந்திரன்...!

---

28



## ஏ.வி.எம். ராஜன்

1963இல் முருகன் பிரதர்ஸ் என்ற இன்னொரு பேனரில் ஏ.வி.எம். நிறுவனம் 'நானும் ஒரு பெண்' படத்தைத் தயாரித்தது. எஸ்.எஸ்.ஆர். – விஜயகுமாரி நாயகன் நாயகியாக நடித்தனர். படிக்காத கருப்புப் பெண் வேடத்தில் விஜயகுமாரி மிகச் சிறப்பாக நடித்த படம்.

'கண்ணா கருமைநிறக் கண்ணா
உன்னைக் காணாத கண்ணில்லையே'

'அழகும் இல்லாமல், படிப்புமில்லாமல் என்னைப் படைத்து, படிப்பும் வசதியும் மிக்க வீட்டில் மருமகளாக்கி என்னை ஏன் சித்ரவதை செய்கிறாய்' என்று கண்ணபரமாத்மாவிடம் கசிந்துருகி நடிக்கும் அக்காட்சி படம் பார்த்தோரால் மறக்க முடியாது.

அதே படத்தில் இளஞ் ஜோடி ஒன்று அறிமுகமாகியிருந்தது!

'ஏமாறச் சொன்னதும் நானோ
என்மீது கோபம் தானோ'

டி.எம்.சௌந்தர்ராஜன் - சுசீலா பாடியுள்ள இப்பாடலுக்குப் பொருத்தமாக அந்த ஜோடி நடித்தது.

அவர்கள்தான் AVM ராஜன், புஷ்பலதா! படம் முடிந்து வெற்றி பெற்ற கையோடு திரு. ராஜனும் திருமதி. புஷ்பலதாவும் வாழ்க்கையிலும் இணைந்து விட்டனர்.

அசப்பில் இன்னொரு ஜெமினி கணேசன்போல, இளமையும் துறுதுறுப்புமாக அழகாக இருப்பார் ராஜன்...! கிண்டியிலுள்ள கவர்னர் மாளிகையில் பணிபுரிந்தவர். பி.ஏ.பட்டதாரி.

கண்ணியமான மனிதர். நிதானமாக வார்த்தைகளை அளந்து பேசுவார். அழகாக நடிப்பார்.

ஜெமினி கணேசன் அழகைப் பார்க்க வேண்டுமானால் 'பார்த்திபன் கனவு' படம் பார்க்க வேண்டும். வைஜயந்தி மாலாவுடன் கந்தர்வலோக ராஜகுமாரன் – ராஜகுமாரிபோல அவ்வளவு அழகாக இருப்பார்கள்.

அதேபோல மதுசூதனராவ் உருவாக்கிய 'வீர அபிமன்யு' படம், AVM ராஜன் மிக அழகாகத் தோன்றிய படம்! காஞ்சனா இதில் அவருக்கு ஜோடி...! ராஜ உடை அலங்காரம் அவர் உடம்புக்கு அவ்வளவு கச்சித மாகப் பொருந்தும்.

நடிப்புக் கலையை வளர்த்துக்கொள்ள சொந்தமாக நாடகக் குழு நிறுவி கற்பூரம், ஆலமரம், பால்குடம் போன்ற நாடகங்களை அரங்கேற்றி நூற்றுக்கணக்கான மேடைகளில் நடித்தார்.

'ஆலமரம்' பிலஹரி எழுதியது. ராஜுமார்த்தன் என்ற தயாரிப்பாளர் வாங்கி, 'கஸ்தூரி திலகம்' என்ற பெயரில் திரைப்படமெடுத்தார். மேஜர் சுந்தர்ராஜன் – சௌகார் பெற்றோராக நடிக்க, நானும் லட்சுமியும் கதாநாயகன் நாயகியாக நடித்தோம். ஸ்ரீவித்யா என் தங்கையாக நடித்தார்.

'கற்பூரம்' சிங்காரவேலன் என்ற ஆசிரியர் எழுதியது. அதுவும் 'பால்குடம்' ஆகிய இரண்டு நாடகமும் திரைப்படமாயிற்று. ராஜன் – புஷ்பலதா தம்பதி நடித்தனர்.

'திருமகள்' என்ற படத்தில் AVM ராஜன் அவர்களும் நானும் நண்பர்கள். ராஜனின் முறைப்பெண் லட்சுமி. திருமணத் தேதி முடிவான பின், நீச்சல் குளத்தில் தலையில் அடிபட்டு ராஜன் இறந்துவிட அவர் வீட்டில் நான் தங்க நேரிடுகிறது. லட்சுமிக்கும் எனக்கும் இடையே நெருக்கம் அதிகமாகி, ஒருநாள் தவறு நடந்துவிடுகிறது. அதன் பிறகு உருக்கமான காட்சிகள், திருப்பம் மிக்க சம்பவங்களுடன் பழம் பெரும் டைரக்டர் ASA சாமி எழுதி இயக்கிய படம்.

தேவர் பிலிம்ஸ் 'துணைவன்' என்றொரு படம் தயாரித்தது. முருக பக்தராக ராஜனும், கடவுள் நம்பிக்கையற்ற மனைவியாக செளகார் ஜானகியும் மாறுபட்ட வேடங்களில் உணர்ச்சிப் பிழம்பாக நடித்து, பெரிய வெற்றி கண்ட படம் அது.

'சக்கரம்' என்றொரு படம். 'ராபின் ஹூட்' போன்ற வேடத்தில் காட்டுக்குள் மறைந்து வாழும் திருடன் – ஏழைகளுக்கு உதவும் இரக்க குணம் கொண்டவனாக ராஜன் அதில் நடித்திருந்தார். ஜெமினி கணேசன் அவரைவிடப் பல ஆண்டுகள் சீனியர். ஆனால் நடிப்பில் அவரை ஓரங்கட்டி ஆடியன்ஸிடம் கிளாப்ஸ் வாங்கினார் ராஜன்.

அவரும் ஐம்பது அறுபது படங்கள் நடித்துவிட்டு, ஒரு கட்டத்தில் படத்தயாரிப்பில் இறங்கினார். நடிகர்களுக்குப் பெரும்பாலும் தங்கள் தொழில்தான் அதிகம் தெரியும். தயாரிப்பு என்பது வேறு. அதில் பணம் புரட்டுவது, குறிப்பிட்ட காலத்திற்குள் படத்தை முடிப்பது, பேசிய சம்பளத்தை நடிகர்களுக்குக் கொடுப்பது, லாபகரமாக விநியோகஸ்தர்களிடம் வியாபாரம் பேசுவது, விளம்பரம், வாங்கிய கடனை வட்டியுடன் பைனான்சியருக்குத் தருவது என்று மண்டைக் குடைச்சல் சமாச்சாரங்கள் நிறைய உண்டு.

சிவாஜி போன்ற நட்சத்திர நடிகர்களைப் போட்டுப் படமெடுத்தும் அவரால் லாபமடைய முடியவில்லை. இரண்டு மூன்று படங்கள் எடுத்து, கடன் மேல் கடன் ஆகி கட்டமுடியாமல் திணறினார்.

ஒரு காலகட்டத்தில் கலைத்துறையை விட்டே அந்த நல்ல கலைஞர் விலக நேர்ந்தது துரதிர்ஷ்டம். மகமாயி பக்தரான அவர் மதம் மாறி கிருத்துவத்தைத் தழுவினார்.

தற்போது தமிழகமெங்கும், ஏசுவின் பெருமைகளை ஆங்கிலத்தில் அழகாகப் பிரசங்கம் செய்கிறார் என்று கேள்விப்பட்டேன்.

'எங்கே வாழ்க்கை தொடங்கும் - அது
எங்கே எவ்விதம் முடியும்..?
இதுதான் பாதை - இதுதான் பயணம்
என்பது யாருக்கும் தெரியாது...!'

---

# 29



## ஸ்ரீகாந்த்

'வெண்ணிற ஆடை' படத்தின் முதல் விளம்பரத்தைப் 'பேசும் படம்' அட்டையில் பார்த்தபோது 'அட இவர் என்னைப் போலவே இருக்கிறாரே' என்று ஒரு கணம் ஆச்சர்யப்பட்டேன். அவர்தான் என் இனிய நண்பர் ஸ்ரீகாந்த்...!

கோவை மாவட்டம் ஈரோடைச் சேர்ந்தவர். அமெரிக்கத் தூதரகத்தில் வேலை பார்த்துக்கொண்டே நிறைய நாடகங்களில் நடித்தவர் கதை விவாதங்களில் ஈடுபடுபவர். உயர்ந்த தத்துவப் புத்தகங்களைப் படித்துக் கொண்டே இருப்பார்.

மாம்பலம் கிளப் ஹவுஸில் தங்கியிருந்தபோது, இவர்தான் நிரந்தர வருமானமுள்ள இளைஞர். நாகேஷ், வாலி போன்றோர் திரையுலகின் கதவு திறக்கக் காத்துக்கொண்டிருந்த காலம்.

மாதா மாதம் சம்பளம் வாங்கி, அரிசி, பருப்பு, காய்கறிகள் வாங்கி அழகாக அவரே சமையலும் செய்து, கனவில் மிதக்கும் வாலிக்கும் நாகேஷுக்கும் அவரே பரிமாறுவார்.

'ராகினி ரிக்ரியேஷன்ஸ்' கே.பி.தலைமையில் புதுமையான நாடகங் களை அரங்கேற்றி, சென்னை மக்கள், சினிமாவை மறந்து நாடகக் கொட்டகை நோக்கித் திரும்பக் காரணமாக இருந்த ஒரு நாடகக்குழு.

நாகேஷ்தான் கதையின் மையம். அது 'எதிர்நீச்சல்', 'நவக்கிரகம்', 'மெழுகுவர்த்தி', 'நீர்க்குமிழி' – எந்த நாடகமாயினும் அந்த நாடகத்தின் ஹீரோ நாகேஷ்தான்! அவருக்குப் பக்கபலமாக மேஜர் சுந்தர்ராஜன், ஸ்ரீகாந்த், 'நாயர்'ராமன், மனோரமா, ஷோபா, எஸ்.என். லட்சுமி போன்றோர் வேடங்கள் இருக்கும்.

'எதிர்நீச்சல்' நாடகத்தில் திரைப்பட நடிகை சௌகார் ஜானகி, 'பட்டு மாமி' வேடம் ஏற்று வாழ்ந்துகாட்டி பிராமணப் பெண்களின் இதயத்தில் இடம் பிடித்தார்.

'மேஜர் சந்திரகாந்த்' – ஏஜிஸ் ஆபீசில், கே.பி. அவர்கள் பணி புரிந்தபோது, ஆங்கிலத்தில் நாடகமாக எழுதி மேஜர் வேடத்தில், பாலச்சந்தரே நடித்திருக்கிறார்.

தமிழில் 'மேஜர் சந்திரகாந்த்' மேடை ஏறியபோது, சுந்தரராஜனின் கம்பீரத் தோற்றமும், மிரட்டும் குரலும் அந்த வேடத்திற்கு ஒரு கௌரவத்தைத் தேடிக் கொடுத்து – 'மேஜர்' என்ற டைட்டிலும் அவர் பேரொடு நிரந்தரமாக ஒட்டிக்கொண்டது.

அந்த நாடகத்தில் மேஜருக்கு இரண்டு பிள்ளைகள். ஒருவன் பெயர் ஸ்ரீகாந்த். மற்றவன் ரஜனிகாந்த். வெங்கி என்கிற வெங்கடராமன்தான் ஸ்ரீகாந்தாக அந்த நாடகத்தில் நடித்துப் பெயர் பெற்றார்.

ஸ்ரீதர் அவர்கள் 'மேஜர் சந்திரகாந்த்' நாடகத்தைப் பார்த்து, வெங்கியை, 'வெண்ணிற ஆடை' பட ஹீரோவாக ஒப்பந்தம் செய்தார். நாடகத்தில் ஸ்ரீகாந்தாக நடித்தவருக்கு திரைப்பட உலகிலும் ஸ்ரீகாந்த் என்ற பெயரே நிலைக்கட்டும் என்று வைத்துவிட்டார்.

'வெண்ணிற ஆடை' படத்தில் அனைவரும் புது முகங்கள். ஸ்டார் டைரக்டர் ஸ்ரீதர் அறிமுகப்படுத்தியதால் மிகப்பெரிய கௌரவம் அவருக்குக் கிடைத்தது.

தமிழகமெங்கும் ஒரே இரவில் அவர் பாப்புலர் ஆகிவிட்டார்! அறிமுக நடிகர்களுக்குச் சம்பளமெல்லாம் பெரிதாகத் தரமாட்டார்கள். உடனே கார் சொந்தமாக வாங்கிக் கொள்ள முடியாது.

பஸ்ஸிலோ, ஸ்கூட்டரிலோ போனால் ரசிகர்கள் மொய்த்துக் கொள் வார்கள். ஆரம்ப கட்டங்களில் இந்த அவஸ்தையை எல்லாம் ஸ்ரீகாந்த் அனுபவித்திருக்கிறார்.

திரைப்படங்களில் எவ்வளவு பிஸியாக இருந்தபோதிலும் நாடக மேடையை அவர் விடவே இல்லை. மேஜர் சுந்தரராஜனுடன் இணைந்து தூயவன் என்ற நாடகாசிரியரின் 'தீர்ப்பு' நாடகத்தில் நடித்தார். அதுவும் 100 முறைக்குமேல் மேடையேறியது.

பின்னாளில் 'அம்மா இருக்கா' என்ற பெயரில் 'தீர்ப்பு' திரைப் படமாக எடுக்கப்பட்டபோது ஸ்ரீகாந்த் வேடத்தில், படத்தில் நான் நடித்தேன். மேஜர் சுந்தரராஜன் அப்படத்தை இயக்கினார்.

கே. பாலசந்தர் அவர்களோடு மிக நெருக்கமாக இருந்தவர்களில் ஸ்ரீகாந்தும் ஒருவர். எனவே, கே.பி.யின் நாடகங்கள் 'எதிர்நீச்சல்', 'நவக்கிரகம்' படமானபோது, நாடகத்தில் நடித்த ஸ்ரீகாந்த், படத்திலும் அதே வேடத்தில் நடித்தார்.

ஜெயகாந்தன் எழுத்துக்களால் பெரிதும் கவரப்பட்ட ஸ்ரீகாந்த், அவரது நட்பைப்பெற்று, படப்பிடிப்பு இல்லாத நாள்களில் அவரோ டேயே இருந்தார். ஜெயகாந்தன், மல்லியம் ராஜகோபால், டைரக்டர் கே.விஜயன், நடிகை லட்சுமி, ஸ்ரீகாந்த் போன்றோர் ஒரு குழுவாக அவ்வப்போது சந்தித்து இலக்கிய சர்ச்சைகளில் ஈடுபடுவார்கள்.

'அக்னி பிரவேசம்' என்ற தலைப்பில் ஜெயகாந்தன் 'ஆனந்த விகட'னில் ஒரு சிறுகதை எழுதினார்.

கல்லூரி சென்றுவிட்டு, மாலை வீடு திரும்பும் ஒரு பெண், கொட்டும் மழையில் பஸ் ஸ்டாப்பில் நிற்க, பணக்கார இளைஞன் ஒருவன், காரில் அவளுக்கு லிஃப்ட் கொடுப்பதாகச் சொல்லி அழைத்துச் சென்று, அவளை அனுபவித்து விடுகிறான்.

ஒரு வேகத்தில், இளமையின் உந்துதலுக்கு ஆட்பட்டு அவனுக்கு அவள் இணங்கி விட்டபோதிலும், அநியாயமாகக் கற்பைப் பறிகொடுக்க நேர்ந்துவிட்டதே என்று வருந்தியவாறு வீடு செல்கிறாள்.



'மதன மாளிகை' – பம்பாய் ஒபராய் ஷெராட்டன் ஹோட்டல்

அங்கு அம்மா, அனைத்தையும் கேட்டுவிட்டு, 'சரி போகட்டும் இனிமேலாவது எச்சரிக்கையாய் இரு' என்று எண்ணெய் தேய்த்து மகளைக் குளிப்பாட்டி உறங்க வைக்கிறாள் என்று எழுதியிருந்தார்.

வாசகர்கள் சும்மா இருப்பார்களா..? 'கற்பு என்பது கிள்ளுக்கீரையா.., கடைச்சரக்கா..? ஜெயகாந்தன் இப்படிக் கதை எழுதி தவறு செய்யும் பெண்களுக்கு வக்காலத்து வாங்கினால், எதிர்காலத்தில் இளம் பெண்கள் இதையே உதாரணமாக்கி மேற்கொண்டு கெட்டுச் சீரழிய மாட்டார்களா? என்று விகடனுக்குப் பல்லாயிரக்கணக்கில் கடிதம் எழுதினார்கள்.

ஜெயகாந்தனுக்குள்ளிருந்த சிங்கம் சிலிர்த்தெழுந்தது! தவறு செய்த பெண்ணைத் தாய் தண்டிக்கிறாள். தாய்மாமன் ஒருவன் வீட்டுக்கு அனுப்பி வைக்கிறாள். அதன்பின் அவள் வாழ்க்கை எப்படியெல்லாம் திசைமாறிப் போகிறது என்று தினமணி கதிரில் தொடராக எழுதினார். ஓவியர் கோபுலு அதற்குப் படம் வரைந்தார்.

தமிழகமெங்கும் மிகுந்த வரவேற்பு பெற்றது அந்தத் தொடர்!

டைரக்டர் பீம்சிங், ஜெயகாந்தன் உணர்வுகளைப் புரிந்துகொண்டு, அவ்வப்போது அவரது ஆலோசனைகளைக் கேட்டு 'சில நேரங்களில் சில மனிதர்கள்' என்ற நாவலின் பெயரையே திரைப்படத்திற்கும் சூட்டி படம் எடுத்தார்.

ஸ்ரீகாந்த் அந்தப் பணக்கார இளைஞனாகவும், நடிகை லட்சுமி அந்தப் பெண்ணாகவும் நடித்தனர். பெண்ணின் தாய்மாமன், சபலபுத்தி உள்ளவனாக ஒய்.ஜி.பார்த்தசாரதி – நடிகர் ஒய்.ஜி.மகேந்திரனின் தந்தை – நடித்தார்.

நாவல் படிக்கும்போது கிடைத்த திருப்தியைப் படம் கிட்டத்தட்ட பூர்த்தி செய்தது. லட்சுமிக்கு ஊர்வசி விருது கிடைத்தது.

'நடிகை நாடகம் பார்க்கிறாள்' என்ற ஜெயகாந்தனின் இன்னொரு நாவலை அதே குழு படம் பிடித்தது. ஸ்ரீகாந்தும் லட்சுமியும் நடித்தனர். முதல்படம் அளவுக்குப் பெரிய வரவேற்பு பெறவில்லை என்ற போதிலும், வித்தியாசமான கதாபாத்திரங்கள் – ரசிக்கும்படி இருந்தன.

மூதறிஞர் ராஜாஜி அவர்களுடைய 'திக்கற்ற பார்வதி' கதை, திரைப்படமாயிற்று. காரைக்குடி நாராயணன் திரைக்கதை வசனம் எழுதினார்.

சேலம் அருகே ராஜாஜி பிறந்த தொரப்பள்ளி கிராமத்துக்கே சென்று ஸ்ரீகாந்தும் லட்சுமியும் நடித்தார்கள். அது ஒரு புது அனுபவமாக இருந்தது.

அதன்பின்னர் ஸ்ரீகாந்த் பல குணச்சித்திர வேடங்களிலும், வில்லன் கதாபாத்திரத்திலும் பல படங்களில் நடித்தார்.

தங்கப்பதக்கம், ராஜபார்ட் ரங்கதுரை, வெள்ளிக்கிழமை விரதம் – எனப் பலபடங்களில் குறிப்பிடும்படியான வில்லன் வேடங்கள் ஏற்று நடித்தார்.

'ராஜநாகம்' அவருக்குப் பெயர் வாங்கித்தந்த இன்னொரு படம். தற்போது சின்னத்திரை – தொடர்களில் நடித்து வருகிறார்.

அவரது அனுபவத்திற்கும், ஆழ்ந்த உலகளாவிய அறிவுக்கும் அவர் இன்னும் புகழுடன் வசதியாக இருந்திருக்க முடியும். என்ன செய்வது...?

''புத்தியுள்ள மனிதரெல்லாம்
வெற்றி காண்பதில்லை!
வெற்றி பெற்ற மனிதரெல்லாம்
புத்திசாலியில்லை.!''

---

30



# கற்ற வித்தைகள்

நடிப்புத் துறையில் ஈடுபடுவோருக்குக் கிடைப்பது போன்ற பல்வேறு அனுபவங்கள் மற்ற எந்தத் துறையில் பணிபுரிவோருக்கும் கிடைக்க வழியில்லை என்று தோன்றுகிறது. பலதரப்பட்ட மக்களைச் சந்தித்துப் பல்வேறு அனுபவங்களைப் பெறும்போது ஒரு குதூகலமும்,

மாணவனின் புத்துணர்ச்சியும் ஏற்படுகின்றன..! உதாரணமாக, மாட்டு வண்டி ஓட்டுவது சாதாரணமல்ல. இரண்டு மாடுகள் பூட்டிய வண்டியை ஓட்டும்போது, ஏதோ ஒரு மாடு சற்றுச் சுறுசுறுப்பு அதிகமாக இருக்கும்! அதனுடைய மூக்கணாங்கயிற்றைச் சற்று இழுத்துப் பிடித்து, மந்தமாக உள்ள மாட்டைத்தான் அடுத்ததற்கிணையாக விரட்ட வேண்டும். அதை விடுத்து, இரண்டையும் ஒரே மாதிரி அடித்து விரட்டினால், வேகமாகப் போகும் மாடு, முன்னே சென்று வண்டியை ஒரு பக்கமாக இழுத்துப் போய் பள்ளத்தில் இறக்கிவிடும்.

திரு. பாலாஜி படத்துக்காக நான் ஓட்டிய மாடுகள், குதிரைகளுக்கு இணையான வேகத்தில் வண்டியை இழுத்தவாறு, மின்னல் வேகத்தில் பாய்ந்து ஒரு பாறையைத் தாண்டிக் குதித்தபோது, மாட்டு வண்டி ஓட்டுபவருக்குக்கூட உயிருக்கு ஆபத்து நேர வழியுண்டு என்பதை உணர்ந்தேன்.

சைக்கிள் ரிக்ஷா ஓட்டுவது மட்டும் அவ்வளவு எளிதானதா? ஏறி அமர்ந்து பெடல் கட்டையை மிதிக்கும்போது வண்டி, இடது புறமோ அல்லது வலது புறமோ இழுத்துச் சென்று பக்கத்திலிருக்கும் கம்பத்தில் மோதிவிடும்.

சோழவரம் கான்க்ரீட் ஓடுதளத்தில், பந்தய வீரர்களோடு மோட்டார் சைக்கிள் ஓட்டுவது ஒரு சுகானுபவம். 150 கிலோ மீட்டர் வேகத்தில் வண்டி பறக்கும்போது திடுமென்று (டர்னிங் பாயிண்ட்) திருப்புமுனை வந்துவிடும். பிரேக்கைக் கடுமையாக மிதிக்கக்கூடாது, அதே சமயம் வேகத்தை ரொம்பவும் மட்டுப்படுத்தித் திரும்ப முயற்சித்தால், அதற்குள் அடுத்தவர் முந்திவிடுவார். இந்தப் பரபரப்பில், கும்பலாகப் பறந்து கொண்டிருக்கும் கொசு போன்ற பூச்சிகள் நம் மூக்கு, வாய்ப் பகுதிகளில் நுழைந்து கிச்சுக்கிச்சு மூட்டும்.

முப்பது வயதைத் தாண்டும் பெரும்பாலான இளைஞர்களுக்கு வருத்தத்தை அளிக்கும் விஷயம் – இடுப்பைச் சுற்றி வரும் (டயர்) சதைப் பிடிப்புத்தான். அந்த வயதுக்குள் உத்தியோகம், திருமணம், உட்கார்ந்து வேலைபார்த்தல் என்று வாழ்க்கையே சுகமாக அமைந்து விடுவதுதான் காரணம்!

இந்தச் சதைப் பிடிப்பை அகற்ற எனக்குத் தெரிந்த எளிமையான வழி – 'ஜாகிங்' செய்வதுதான், கடற்கரையில் ஓடுவது ரொம்பவும் ஆரோக்கியம். ஒரே ஒரு சிரமம் – விடியற்காலை நாலரை மணிக்கு அடிக்கும் அலாரத்தின் குரல்! அதை அமுக்காமல், குதூகலத்துடன் எழுந்து பல் துலக்கி, பாத்ரூம் போய், ஸ்போர்ட்ஸ் உடை அணிந்து ஒத்தையாகக் கடற்கரைக்குச் செல்ல ஒரு வேகம், வெறி வேண்டும். கடற்கரைக்குச் சென்றுவிட்டால் ஓடித் திரும்புகிற அந்த ஒரு மணி நேரம் சொர்க்கம்...!

தூய்மையான பிராண வாயுவை முழுமையாக இழுத்து நுரையீரலை நிரப்பி வெளியே விட்டவாறு ஓடும்போது, அகண்ட மணல் பரப்பில் எங்கோ ஒருவர் இருட்டில் சுருட்டு பிடித்தவாறு போய்க் கொண்டிருப்பார். சுருட்டின் புகை நூலிழைபோல நெடுந்தூரம் நீண்டு வந்து, நம் மூக்கினுள் புகும்போது, தவம் கலைந்த முனிவனுக்கு வரும் கோபம் நமக்கும் வரும்...!

விரைவாக இடுப்புச் சதையைக் குறைக்க, குதிரைச் சவாரி மிகவும் சிறந்த பயிற்சி...! சரி, அதையும் பார்த்துவிடலாமென்று ஒரு குதிரைக்கு ஏற்பாடு செய்து, அதிகாலையில் சாந்தோம் கடற்கரைக்குச் சென்றேன். குதிரையுமில்லாமல், கழுதையுமில்லாமல் ஒரு 'சைஸில்' இருந்தது அது! ஏறி உட்கார்ந்ததும் நாலு காலையும் அகட்டி, முதுகை வில்போல் வளைத்து, ஐந்தடி குதிரை, மூணரை அடியாகக் குறுகிவிட்டது.

பயந்து போய்க் கீழே குதித்துவிட்டேன். ''என்னங்க...? என்ன ஆச்சு இதுக்கு?'' என்றேன். ''உங்களுக்குத்தான் 'மூட்' வருமா...? இன்னிக்குக் குதிரைக்கு 'மூட்' அவுட். அவ்வளவுதான்'' என்றார். அடுத்த நாள் ஏறி உட்கார்ந்ததும், முன்னால் ஒரு அடி எடுத்து வைக்க மறுத்தது. கையில் மசால் செடியை வைத்துக்கொண்டு, கடிவாளத்தில் ஒரு கயிற்றைக் கட்டித் தரதரவென்று இழுத்துப் போனார் பயிற்சியாளர். 'ஸ்கூலுக்கு வேண்டாம் மம்மி' என்று கதறும் எல்.கே.ஜி. குழந்தையை, தாயார் இழுத்துப் போவது நினைவுக்கு வந்தது!

ஒரு பர்லாங் போய் திருப்பிவிட்டதும், குதிரை தூள் பறக்க ஓடியது! எனக்கு ஒரே ஆச்சரியம். ''வடக்கே போகும்போது மட்டும் ஏன் பிடிவாதம் பிடிக்குது?'' என்று கேட்டேன். ''தெற்கேதானே சார், அதோட வீடு இருக்கு'' என்றார் அவர்.

கொஞ்சம் பெரிய குதிரைக்கு, அடுத்து ஏற்பாடு செய்தபோது, அது மேலேயே ஏறவிடாமல் தள்ளித் தள்ளிப் போய் நின்றது. ''இதுக்கு என்ன ஆச்சு?'' என்றேன். ''கறுப்பு டிரஸ் போட்டு, இருட்டில புது ஆள் கிட்ட வர்றதினால பயப்படுது'' என்றார். அடுத்த நாள் புது வெள்ளை டிரஸில் போனேன். அதேபோல சண்டித்தனம் செய்தது. கடைசியாக மஃப்ளரைக் குதிரையின் தலையைச் சுற்றிக் கட்டி, அதன் கண்களை மறைத்து ஏற்றி விட்டார். அட்டகாசமாக ஓடியது!

பொதுவாக, 'குதிரை கீழேயும் தள்ளி, குழியும் பறிக்கும்' என்னும் பழமொழி உண்மையாகத்தான் தோன்றுகிறது. கிண்டி ரேஸில் பல தடவை குதிரை ஓட்டிய என் நண்பன் கணேஷ், திறமையான ஜாக்கி. அவன்தான் எனக்குப் பயிற்சியளித்தான். ஒருநாள் வேனிலிருந்து உடல் முழுக்க பாண்டேஜோடு ஒருவரை இறக்கினார்கள். ஓடிப்போய்ப் பார்த்

தேன். நம்ம கணேஷ்! திமிர் பிடித்த ஒரு குதிரை, அவன் எவ்வளவோ தூரம் கடிவாளத்தோடு போராடியும் அடங்காமல், முள்வேலி பக்கம் பக்கவாட்டிலேயே நடந்துசென்று, ஒரு அறுபது அடி நீளம் முள்வேலி யில் இவனைத் தேய்த்து, கிழித்து, கீழே சரித்துவிட்டுப் போய்விட்டது...!

நீச்சல் பயிற்சியை, குழந்தைப் பருவத்திலேயே துவக்கிவிடுவது நல்லது. பதினைந்து வயதுக்குப்பின் கற்றுக்கொள்ளத் துவங்கினால் பயம் வந்துவிடும். முறையாக ஒரு நீச்சல் குளத்துக்குச் சென்று நீந்தக் கற்றுக் கொண்டாலும், காட்டாற்று வெள்ளத்தில் நீந்துவதற்கும், ஆழமான கடற்பகுதியில் ஆக்ரோஷமாய் வரும் அலைகளுடன் மோதி நீந்து வதற்கும் தனிப்பயிற்சி வேண்டும்.

தமிழகத்தில், நாகர்கோயிலை அடுத்த முட்டம் கடற்பகுதி அலைகள், ரொம்பவும் ரோஷமானவை. அங்கு 'ஆனந்த ராகம்' படப்பிடிப்புக்குப் போயிருந்தேன். மீனவர் வேடம் எனக்கு. மூன்று மரங்களை ஒன்றாக வைத்து தலை, வால் பகுதிகளை இணைத்துக் கட்டியிருந்தனர். கட்டுமரம் என்று சொல்லப் படுபவை அவை. அதில் ஏறிக் கடலுக்குள் மூன்று மைல் சென்று மீன் பிடிப்பதாகக் கதை.

முதல் நாள் படப்பிடிப்பு. காமிராவுக்குக் கற்பூரம் காட்டி, தேங்காய் உடைத்தாகிவிட்டது. பலி ஆடு போன்ற உணர்வு, பாய்ந்து வரும் அலை களைப் பார்த்தபோது ஏற்பட்டது. கடலினுள் போகும் கட்டுமரங்க ளெல்லாம், செங்குத்தாக மேலே எழும்பி, அலைகளால் உந்தித் தள்ளப் பட்டு, கரைப்பக்கமே அனுப்பப்பட்டன. ''முழங்காலை மண்டியிட்டு - வஜ்ஜிராசனம் போல - கட்டுமரத்தில் உட்கார வேண்டும். அப்போதுதான் பிடிப்பு இருக்கும். இல்லாவிட்டால், கட்டுமரத்தின் மேலே அடிக்கும் அலைகள், உங்களைக் கடலுக்குள் தூக்கி எறிந்துவிடும்'' என்றார்கள். அதுசரி, அலைகளை விடுங்க, கட்டுமரம் பக்கம் போகவே நான் இன்னும் முடிவு பண்ணவில்லையே!

எனக்காவது நீச்சல் தெரியும். நடிகர் சிவசந்திரனுக்கு அப்போது நீச்சல் தெரியாது. கூட்ட நெரிசல் அதிகமாகி மேலும் பதற்றத்தை உண்டு பண்ணியது. பார்வை போன பக்கம் பளிச்சென்று ஒரு காட்சி தென் பட்டது. சுமார் எட்டு வயது மதிக்கத்தக்க ஒரு சிறுவன். தன் தந்தை பீடி பிடித்தவாறு கட்டு மரத்தில் அமர்ந்திருக்க, ஒரு சிறு மூங்கில் தப்பையை வைத்து, துடுப்புபோல இரு பக்கமும் தண்ணீரில் விட்டுத் தள்ளி, அந்தக் கட்டு மரத்தைக் கடலுக்குள் செலுத்திக் கொண்டிருந்தான்.

அந்தப் பிஞ்சுக் கரங்களின் வலுவினால் செலுத்தப்பட்ட கட்டுமரம், ஆரவார அலைகளுடன் போராடி அங்குலம் அங்குலமாகக் கடலுக்குள் முன்னேறிக் கொண்டிருந்தது. அவ்வளவுதான்..., எனக்குள் ஒரு வேகம்

பீறிட்டு வந்தது. உடனே ஒரு கட்டுமரத்தில் என்னை ஏற்றி அலைகளின் நடுவே கொண்டுபோய் விடச்சொன்னேன். பத்து நிமிடம், சுழற்றி அடிக்கும் அலைகளின் நடுவே எப்படியெல்லாம் அந்தக் கட்டுமரம் அலைக்கழிக்கப்படுகிறது என்பதை 'ஸ்டடி' செய்தேன். புரட்டிப் புரட்டி அலைகள் அடித்தபோதும், அந்தக் கட்டுமரம் குப்புறக் கவிழவே இல்லை. கடும் புயலில்தான் அது கவிழுமாம். அதன்பின்னர் மோட்டார் படகில் படப்பிடிப்புச் சாதனங்களை ஏற்றிக்கொண்டு, நானும் சிவசந்திரனும் கட்டுமரத்தைச் செலுத்தியவாறு கடல்பகுதியின் உள்ளே நான்கு மைல் தூரம் சென்று, பாடல் காட்சியைப் படமாக்கினோம். கரையைத் தாண்டி கடலின் உள்ளே போகப் போக, 'மீன் சூறை' என்று சொல்லும் ஒரு வாடை பெரும்பாலோரை வாந்தியெடுக்கச் செய்ததுடன், மயக்கமுற வைத்தது.

பெரிய அலை எழும்பும்போது, அலையின் தலைமீது பதினைந்து அடி உயரத்தில் நாங்கள் இருப்போம். ஒளிப்பதிவாளர் பிராபாகர் கீழே இருந்து படம் பிடிப்பார். அடுத்த விநாடி காமிரா உச்சிக்குப் போக நாங்கள் கீழே படகைச் செலுத்திக் கொண்டிருப்போம். அந்த 'த்ரில்'லின் சுகத்தை அனுபவித்தால்தான்(!?) புரியும்.

அன்று வெயில் சுட்டெரித்தது. மாலையில் கரைக்குத் திரும்பிய போது, உப்புக் காற்றாலும், அளவுகடந்த வெப்பத்தாலும் தாக்கப்பட்டு உடம்பு கறுத்து, கொப்புளங்கள் எழும்பி, நீக்ரோபோல ஆகிவிட்டோம். கடுமையாக உழைக்கும் மீனவ இனத்தார், ஏன் அவ்வளவு கறுப்பாக இருக்கிறார்கள் என்பதற்கான காரணத்தை அன்றுதான் தெரிந்து கொண்டேன்!

---

31



# மேதை எஸ்.எஸ். வாசன்

இவ்வுலகமெனும் நாடகமேடையில் – ஜெமினி ஸ்டுடியோவின் அதிபராகவும், கலைக்கோயிலின் பிரதானத் தூணாகவும், ஆனந்தவிகடன் ஆசிரியராகவும், ஒரு ஆன்மா போட்ட நாடகம், முடிந்து விட்டது!

ஆம் *1969*ஆம் வருடம் ஆகஸ்ட் மாதம் *26*ஆம் தேதி மேதை எஸ்.எஸ். வாசன் அமரராகிவிட்டார்.

ஜெமினி நிறுவனம் 'விளையாட்டுப் பிள்ளை' என்ற படத்தை ஏ.பி.என். டைரக்‌ஷனில் முடித்திருந்த நேரம்.

செய்தி அறிந்த நான் ஜெமினி ஹவுசுக்கு ஓடினேன். சற்று நேரம் முன்புதான் இறுதி ஊர்வலம் புறப்பட்டுச் சென்றதாக அறிந்து மயானத் துக்கு விரைந்தேன். எந்தவித ஆர்ப்பாட்டமும் இன்றி, ஒரு ஏழைப் பிராமணனுக்குச் சடங்குகள் எப்படி நடக்குமோ, அப்படி எளியமுறையில் அனைத்தும் நடந்தேறின.

திரையுலகின் பெரும் புள்ளிகள் எல்லாம் மயானத்தை அடைத்துக் கொண்டு நின்றிருந்தனர். ஆனால் இரங்கல் கூட்டம் எதுவும் நடைபெற வில்லை. செய்தித்தாள்களில் அவரது பூத உடலின் புகைப்படம் வெளியிடப்படவில்லை. அந்நாளில் ஜெமினி கலர் லாபோரட்ரி பிரபல மாக விளங்கியபோதும், நிகழ்ச்சியை யாரும் படம் பிடிக்கவில்லை.

அவ்வளவு ஏன், இரவு நேரம் இறந்ததால் யாருக்கும் உடனே தகவல் தெரிவித்துச் சிரமப்படுத்த வேண்டாம் என்று, அனைத்தும் அவரது விருப்பப்படியே நடைபெற்றது. திரையுலகின் கலங்கரை விளக்குகள் இப்படித் திடும் என்று அணையும் போதெல்லாம் என் மனத்திரையில் இருட்டு கவ்விக்கொள்ளும்.

சம்பிரதாயமாக இறுதி ஊர்வலத்தில் கலந்து கொண்டவர்கள் எல்லாம், தத்தம் காரில் ஏறிப் பறந்துவிட்டனர்.

மயானத்தில் தனியே, எட்வர்ட் எலியட்ஸ் ரோடில் நினைவுகளை அசைபோட்டவாறு நடக்கத் துவங்கினேன்.

எவ்வளவு பெரிய நிறுவனம் ஜெமினி! அஃதவிட எவ்வளவு பரந்த மனம் கொண்டவர் வாசன்!

1965ஆம் ஆண்டு கோடை விடுமுறையில் கிராமம் சென்றிருந்த எனக்கு 'மோட்டார் சுந்தரம்பிள்ளை' படத்தில் நடிக்கத் தந்தி அடித்து வரவழைத்து, 20 வயது இளைஞனான என்னை வரவேற்க, அந்த 60வது இளைஞன் வெள்ளை உடையும், வெள்ளை முடியும், கொள்ளைச் சிரிப்புமாக எழுந்து நின்று வணங்கியது இன்னும் பசுமையாக நினை வில் உள்ளது.

ஜெமினி நிறுவனம் தமிழில் 22, இந்தியில் 20, தெலுங்கில் 17 என சுமார் 60 படங்களுக்குமேல் தயாரித்துள்ளது.

1948–லேயே 40 லட்சம் ரூபாய்க்குமேல் செலவு செய்து தயாரித்த 'சந்திரலேகா' படத்தின் தமிழ் – இந்திப் படங்களுக்கு 7 லட்சம் ரூபாய்க்குமேல் விளம்பரம் செய்தார். 679 பிரதிகள் இன்று வரை எடுக்கப்பட்ட படம் அது.

தமிழ் நாட்டில் மிகச்சிறந்த ஓவியராக விளங்கிய அமரர் கே. மாதவன் அவர்களைக் கொண்டு 60 அடி உயரத்தில் கதாநாயகி ராஜகுமாரி, தலையை மட்டும் 'கட் அவுட்' ஓவியமாகத் தீட்டி, தியேட்டர் வாசலில் வைத்து, பம்பாய் மக்களை அசத்தினார்.

கல்கத்தா நகரமெங்கும், முதன் முறையாக மின்சாரக் கம்பங்களில் விளம்பரம் செய்து படத்தை வெளியிட்டார்.

மங்கம்மா சபதம் – இந்தியில் 'மங்களா' என்ற பெயரில் உரு வாகியது. பம்பாயில் வெளியாக இருந்த அப்படத்தை, அந்நாளைய மகாராஷ்டிர உள்துறை மந்திரி மொரார்ஜி தேசாய் தடைசெய்தார். வாசனின் நெருங்கிய நண்பராக இருந்தும், ''15 ஆயிரம் அடி நீளபடத்தை வெளியிட அனுமதிக்க முடியாது, மத்திய அரசின் சட்டப்படி நீளத்தைக் குறைந்தே ஆகவேண்டும்'' என்றார் மொரார்ஜி.

'இந்திய அரசினால் தணிக்கை செய்யப்பட்டுள்ள படத்தை இந்திய எல்லைக்குள் வெளியிடுவதை யாரும் தடைசெய்யமுடியாது' என்று நீதிமன்றத்தில் வழக்காடி வெற்றி பெற்றார் வாசன்!

'வாழ்க்கைப்படகு' இந்தியில் 'ஜிந்தகி' என்ற பெயரில் உருவானது. அதன் வெளியீட்டு விழாவுக்கு, கல்கத்தா சென்ற வாசன் அவர்களை, தியேட்டர் மானேஜர் அழைத்து ''புதிய இளைஞர் ஒருவர் உருவாக்கிய ஆர்ட் பிலிம் நம் தியேட்டரில் ஓடுகிறது. கூட்டமே இல்லை. நீங்கள் விரும்பினால் அப்படத்தை இன்றே எடுத்துவிட்டு நாளை 'ஜிந்தகி'யை வெளியிடலாம்'' என்றார்.

படத்தை வாசன் பார்த்தார். இளைஞனின் விலாசத்தை வாங்கிக் கொண்டார். ஜட்கா வண்டி ஒன்று பிடித்து, எங்கோ ஒரு சந்தில் மாடியில் குடியிருந்த இள்ளஞர் வீட்டு வாசலிலிருந்த 'பெல்'லை அடித்தார்.

மலங்க மலங்க விழித்தவாறு ஆறடியைக் கடந்த ஒரு இளைஞன் கதவைத் திறந்தான்.

''என் பெயர் வாசன். சென்னையிலிருந்து வருகிறேன். உங்கள் படத்தை இன்றிரவு பார்த்தேன். simply superb. இந்தப் படத்தைப் பார்க்க கடைசி ஒரு ரசிகன் வரும்வரை, என் படத்தை இந்தத் தியேட்டரில் வெளியிட மாட்டேன். இந்தியாவுக்குப் பெருமை சேர்க்கும் பெரிய கலைஞனாக விரைவில் புகழ்பெறுவீர்கள்'' என மனசார வாழ்த்திவிட்டு வந்தார்.

வாழ்த்தப் பெற்றவர் சத்யஜித்ரே! படம் – 'பதேர் பாஞ்சாலி'! ஆஸ்கார் பரிசுபெற்று, உலக ரீதியில் அவர் பெயர்பெறக் காரணமானது அப்படம்தான்.



'சந்திரலேகா – டிரம் டான்ஸ்
டிரம்களுக்குள் சிப்பாய்கள்!

ஜெமினி உருவாக்கிய ஒருபடம் முடிய ஏழு ஆண்டுகள் ஆகி விட்டது. படத்தின் கதாநாயகிக்கு ஒரு லட்சம் சம்பளம் பேசி, ஓராண்டுக் குள் படத்தை முடிப்பதாக ஒப்பந்தம்.

திட்டமிட்ட காலவரைக்குள் படம் முடியவில்லை. காலம் கடந் தாலும் மாபெரும் படைப்பாக அது உருவாகியது.

தனது அந்தரங்க செயலாளர் பி.பி. நம்பியாரை அழைத்தார் வாசன். ''ஹீரோயினுக்கு, ஓராண்டில் படம் முடிப்பதாகப் பேசி ஒரு லட்சம் சம்பளம் முடிவு செய்தோம். இப்போ, ஏழுவருஷம் ஆயிடுச்சு. அதனால நம கொஞ்சம் கூட்டி நாலுலட்சம், தருவோம்!'' என்றார்.

பேராசை பிடித்த ஹீரோயின், ''ஐயரு சொன்ன சொல் தவற மாட்டாரு! ஏழு வருஷம் வேலை செஞ்சிட்டு நாலு லட்சம் தந்தா எப்படி?'' – என்று கேள்வி கேட்டார்.

உடனே நடிகையின் விருப்பப்படி ஏழு லட்சம் தர சம்மதித்தார். ஆனால் அவர் பேராசையைக் கண்டிக்கும் வகையில், ஓராண்டு வருமானம் 7 லட்சம் என்பதுபோல் எழுதி வாங்கிக்கொண்டார்.

'வருமான வரி இலாக்காவுக்கு விபரம் தெரிந்தால், ஏழு லட்சத்தில் சுமார் 4.5 லட்சம் ரூபாய் வரியாகப் போய்விடும்' என்பதைப் பின்னர் அறிந்த நடிகை, தன் தவறுக்கு வருந்தி மன்னிப்புக் கேட்க, உடனே ஏழாண்டுக்கும் வருமானத்தைப் பிரித்து எழுதிக் கொடுத்தார்.

கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் எழுதிய 'தில்லானா மோகனாம்பாளைத்' திரைப்படமாக்கும் உரிமையை ஏ.பி.என்.னுக்குத் தந்தார் வாசன்.

அந்த உரிமைக்கு வழங்கிய பெரிய தொகை, ஜெமினிக்குப் போய்விட்டது. படைப்பாளிக்கு, தானும் ஒரு எழுத்தாளன் என்ற முறையில் மரியாதை செய்ய, கொத்தமங்கலம் சுப்பு வீட்டுக்கு ஒரு தொகையோடு சென்றார் ஏ.பி.என்.

ஆனால், இவர் செல்லுமுன்னரே, சுப்பு வீட்டுக்கு வாசன் வந்து, நாவலின் உரிமைக்கு ஏ.பி.என். தந்த மொத்தப் பணத்தையும் கொடுத்து விட்டுச் சென்ற விபரம் அறிந்து நெகிழ்ந்துவிட்டார் ஏ.பி.என்.

ஒருநாள் வாசுதேவப் பொதியாள் என்ற அந்நாளைய பேராசிரியர் ஒருவர், சிபாரிசுக் கடிதம் தாங்கி வாசனைப் பார்க்க ஜெமினி வந்திருக்கிறார்.

கடிதத்தைப் பார்த்ததும் அதிர்ந்துபோன வாசன், எழுந்து ஓடிவந்து அவர் கரங்களைப் பிடித்து வாஞ்சையோடு அழைத்துச்சென்று அமரச் செய்தார்.

''ஐயா! உங்களுக்குப் பச்சையப்பன் கல்லூரி மாணவன் டி.எஸ்.சீனிவாசனை நினைவிருக்கிறதா? பகல் உணவுக்கு வசதியில்லாமல் சிரமப் பட்ட அவனுக்கு நீங்கள் உணவளித்துப் பாடம் கற்றுக் கொடுத்தீர்களே!''

''நன்றாக நினைவிருக்கிறதப்பா.''

''அந்த சீனிவாசன்தான் நான். உங்களை எங்கெல்லாமோ தேடினேன். சென்னையை விட்டு மாற்றலாகி நீங்கள் எந்தக் கல்லூரி சென்றீர்கள், என்ன ஆனீர்கள் என்ற விபரம் கிட்டவில்லை. உங்களை இன்று சந்தித்ததில் பேரானந்தம் அடைகிறேன்'' என்று சொல்லி ஜெமினி அலுவலகத்திலேயே அவருக்கு ஒருவேலை கொடுத்துத் தன்னோடு வைத்துக் கொண்டார்.

'சந்திரலேகா' படத்துக்குப் புது மாதிரி விளம்பரம் செய்யலாம் என்று, பெஜவாடாவில் வேலை பார்த்துக் கொண்டிருந்த யாரோ ஒரு இளைஞருக்கு ஒரு 'ஐடியா' தோன்றியது.

தென்னிந்தியாவின் படத்தை வரைந்து, 40 தியேட்டர்களின் ஊரை அவற்றில் குறிப்பிட்டு, Coast to Coast என்று விளம்பரம் செய்யலாம் என்று ஜெமினிக்கு அந்த இளைஞர் தெரிவித்திருந்தார்.

அந்த 'ஐடியா'வை ஏற்றுக்கொண்டு சன்மானம் 100 ரூபாய் பெஜவாடாவுக்கு அனுப்பப்பட்டது.

வித்தியாசமான சிந்தனையுள்ள அந்த இளைஞரை ஜெமினிக்கு அழைத்து, தன்னோடு அமர்த்திக்கொண்டார். அவர்தான் 1949 முதல் 1969



ஔவையார்

முடிய வாசன் அவர்களுக்கு P.R.O. ஆகவும் அந்தரங்க செயலாளராகவும் பணியாற்றியபின், ஆனந்தவிகடனில் சமீபம்வரை பணிபுரிந்த பி.பி. நம்பியார் அவர்கள்.

ஒரு திரைப்படத்தை உருவாக்கியதும், 'ஆனந்தவிகடனில்' பணி புரிவோர், ஜெமினி பிக்சர் சர்க்யூட், ஸ்டுடியோ சிப்பந்திகள் – என மூன்று பிரிவாகத் தனித்தனியே படத்தைப் போட்டுக்காட்டுவார் வாசன்.

'மாதர்குல மாணிக்கம்' இந்தியில் உருவானபோது தமிழில் பாலாஜி கதாபாத்திரத்தை, ரெஹ்மான் இந்தியில் நடித்தார். படம் பார்த்த ஒரு

ஆனந்த விகடன் தொழிலாளி, 'நல்ல அந்த வேஷத்தை, ஆரம்பத்தில் ரெண்டு சீன் காட்டிட்டு அப்பறம் அம்போன்னு விட்டுட்டாங்களே' என்று குறிப்பு எழுதி அனுப்பியிருக்கிறார்.

அவர் விமர்சனத்தில் நியாயமிருப்பதை அறிந்து, அவருக்கு 5000 ரூ. சன்மானம் வழங்கியதுடன், படத்தில் ரெஹ்மான் பாத்திரம் பிற்பகுதியிலும் வருவதுபோல காட்சிகளை அமைத்தார்.

ஸ்டுடியோவில் பெரிய நடிகர், சின்ன நடிகர் என்ற பாகுபாடின்றி அனைவரும் ஒரே மாதிரி உபசரிக்கப்பட வேண்டும். நல்லவற்றை யார் சொன்னாலும் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

தனது கஷ்டங்கள், வேதனைகள் தன்னோடு போகட்டும். பிறரை வேதனைக்குள்ளாக்கக்கூடாது என்ற கொள்கையுள்ள வாசன் அவர்கள், தனது முடிவு பற்றி, வீட்டார் யாருக்குமே தெரியாமல், ரகசியமாக வைத்திருந்தார்.

இன்று, ஆடிய நாடகம் முடிந்து, அரிதாரம் கலைக்கப்பட்டு ஆன்மா பிரிந்து சென்றுவிட்டது.

'வெற்றுடம்புக்கு எதற்கு வீண்மரியாதைகள். எளிமையான சூழ்நிலையில் பிறந்த எனக்கு எளிய முறையில் உளமாறச் செய்யும் சடங்குகளே போதும். வீண் விளம்பரங்கள் 'வேண்டாம்' என்று அந்தத் துறவுமனம் வேண்டிக்கொண்டதன் அர்த்தம் அப்போதுதான் எனக்குப் புரிந்தது...!

---



ஓவிய மேதை திரு. K. மாதவன்

# 32



நம்பியாருக்கு ஒப்பனை... 'தாய் மூகாம்பிகை' – சிங்கப்பூர்...

## நல்ல வில்லன்கள்

**ந**டிகர் பி.எஸ். வீரப்பா அவர்களிடம் ஒரு நாள் பேசிக் கொண்டிருந்தேன். ''தொழில்தானே செய்யறோம்...! ஹீரோ, வில்லன்னு பாகுபாடு எதுக்குன்னு மன நிறைவோட வேஷங்களைப் பண்ணி, அந்தக் காலத்துல பேர் வாங்கினோம்.

''ஆனா, இப்பத்தான் தெரியுது – நாம வில்லனா நடிச்சு சம்பாதிச்ச பேரு நம்மளுக்கே இடைஞ்சலா இருக்குன்னு...! நம்ம படத்தை வெலைக்கு வாங்கறவனும் பயப்படறான்...! நமக்குப் பணம் தர்றவனும் பயப்படறான்...! வீரப்பா முரட்டு ஆசாமியாச்சே...! சமயத்தில் குறுக்கே திரும்பி மெரட்டிடுவாரோ'னு தயங்கறாங்க'' என்றார் சிரித்தவாறு.

அவர் சொன்னவிதம் வேடிக்கையாக இருந்தாலும், ஆழமாகச் சிந்திக்க வைத்தது. உண்மையைச் சொல்வதென்றால், எந்தத் திரைப்படக் கதாநாயகனையும்விட திறமையிலோ, ஒழுக்கத்திலோ, உடலைப் பேணுவதிலோ, தொழில் பக்தியிலோ, பரோபகாரத்திலோ, பொது அறிவிலோ, வில்லன் வேடமேற்ற நடிகர்கள் குறைந்தவர்களல்ல.

'அனுமனின் பலம் அவருக்கே தெரியாது என்று சொல்வார்கள். அதுபோல, வீரப்பாவின் பலம் அவருக்கே தெரியாதிருந்தபோது, கல்கத்தாவிற்கு, அந்நாளில், படப்பிடிப்புக்காகச் சென்ற அவரிடம் எதிர் பாராத விதமாக ஒரு சவால் விடப்பட்டது. ''ஒரு மூட்டை அரிசியைப் பல்லால் கடித்து ஒரு அடி உயரம் தூக்க உங்களால் முடியுமா...?'' என்று பந்தயம் கட்ட, தயங்கியவாறு ஒப்புக் கொண்டவர். மூட்டையைப் பல்லால் கடித்துத் தூக்கியபடி, நான்கு படிகள் ஏறிச் சாதனை புரிந்தாராம். பிறகு அவரே வியந்தாராம்!

ஒரு காமா பயில்வான் கிங்காங், தாராசிங் இதைச் செய்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை! ஆனால் ஒரு நடிகர், வேஷதாரி, எந்த அளவுக்கு உடற்பயிற்சி மேற்கொண்டு, கட்டுப்பாடான வாழ்க்கை நடத்தி யிருந்தால் இதைச் செய்திருக்க முடியும்!

அதேபோன்று நம்பியார் ஒரு சாதனை மன்னர்! பேரழகன். 'பெண்ணரசி' என்று அந்நாளில் ஒரு படம் வந்தது. அதில் நம்பியார் அறிமுகக் காட்சியில் சுமார் இருநூறு அடி நீளம் வரும் ஷாட்டில், ஒரு கம்பீர நடை நடந்து வந்து, அரசியான கண்ணாம்பாவுக்கு வணக்கம் செய்வார். இப்போது பார்த்ததுபோல இன்னும் கண்ணுக்குள்ளேயே இருக்கிறது! அந்நாளில் வில்லன்கள்கூட அழகாக, கவர்ச்சிகரமாக இருந் திருக்கிறார்கள். கதாநாயகனுடன் போட்டியிட்டு, நாயகியைக் காதலிக்க – அறிவு, ஆற்றல், உடல் வலிமை, ஆட்சிப் பொறுப்பை ஏற்கும் அனுபவம் அனைத்தும் வில்லனுக்கு அதிகம் இருப்பதாகக் காட்டப்பட்டு, ஒரே ஒரு விஷயத்தில் அவன் தோற்று, கதாநாயகன் உயர்ந்து நிற்பது போன்ற கதை அமைக்கப்படும்.

எனவே, 'கதாநாயகன் என்ற வீரனும், ஒரு சூரனுடன்தான் போட்டி யிட்டு வென்றான்' என்று காட்ட, வில்லன்களை அனைத்துக் கலையிலும் வல்லவர்களாக உருவாக்கியிருந்தனர்.



பி.எஸ்.வீரப்பா - ஓவியம் 1958

வாள் சண்டை, குஸ்தி, பாக்ஸிங், சிலம்ப விளையாட்டு அனைத்திலும் இவர்கள் கதாநாயகனுக்கு இணையாகத் தேர்ச்சி பெற்றிருந்தனர்!

நம்பியார் சில படங்களில் டூயட் பாடி, அடக்க ஒடுக்கமாகக்கூட நடித்திருக்கிறார், ஒழுக்கத்தின் சின்னமாக நாங்கள் மதிக்கும் பெரியவர் எம்.என். நம்பியார் அவர்கள்.

ஆர்.எஸ். மனோகர் ஹீரோவாகப் பல படங்களில் நடித்து, பின் வில்லனாகப் படங்களில் வாய்ப்புகளைப் பெற்றார். தன் திறமைக்கும், நடிப்புப் பசிக்கும் முறையான அங்கீகாரம் சினிமாவில் கிடைக்கவில்லையே என்று ஏங்கிக் கொண்டிராமல், 'நேஷனல் தியேட்டர்ஸ்' என்ற பெயரில் நாடகக் குழு துவங்கி 'இலங்கேஸ்வர'னில் தொடங்கி, ஆயிரக் கணக்கான மேடைகளில் புராண சரித்திர நாடகங்களை மேடையேற்றிப் பல்வேறு நாடுகளிலும் நடத்திக் காட்டி, 'நாடகக் காவலர்' பட்டம் பெற்றிருக்கிறார்.

சுய கட்டுப்பாடு, உடற்பயிற்சி, பிரார்த்தனை, தர்ம சிந்தனை அனைத்திலும் இவரும் சிறந்து விளங்குபவர்.

மறைந்த குணச்சித்திர நடிகர் அசோகனும் பிறருக்கு உதவும் மனம் கொண்ட பரோபகாரி. யாருக்கும் தீங்கு நினைக்காத குழந்தை உள்ளம் கொண்டவர்.

இந்த வரிசையில் நிறையப் பேரைச் சொல்லலாம். இப்படி 'அசல் வாழ்க்கையில் யோக்கியர்கள்ளாகவும் ஒரு பாவமும் செய்யாத அப்பாவிகளாகவும் இருக்கும் நல்லவர்களை, தங்கள் வீட்டு விசேடங்களுக்கோ, பள்ளி, கல்லூரி விழாக்களுக்கோ, கலந்துரையாடல் நிகழ்ச்சிகளுக்கோ, சுப காரியங்களுக்கோ' அழைத்து, மக்கள் ஏன் பெருமைப்படுத்துவதில்லை என்று பல நாள் யோசித்திருக்கிறேன்.

வீரப்பா அவர்கள் சொன்னதுதான் இதற்கான பதில். அப்பாவி மக்கள், வில்லன் வேடம் போடுபவனைக் காமாந்தகக்காரன், குடி கெடுப்போன், நய வஞ்சகன் என்று உண்மையாகவே சந்தேகப்படுகின்றனர். குறிப்பாக, பாமர மக்கள், ஏழை எளிய கிராமத்து ரசிகர்கள் நினைக்கிறார்கள்.

ஆனால், படித்த விவரம் தெரிந்த ரசிகர்களுக்கு, 'நடிப்பு வேறு, வாழ்க்கை வேறு' என்று தெளிவாகத் தெரியும். இருந்தபோதிலும், அவர்களும்கூட இவர்களை எந்தப் பொது நிகழ்ச்சியிலும் அழைக்கத் தயங்கவே செய்கிறார்கள்.

மனத்தளவில் அவர்களையும், படத்தில் பார்த்த உருவம் லேசாகப் பயமுறுத்துகிறது போலும்!

'சினிமாவில் காட்டப்படும் அத்தனையும் உண்மையில், வேஷம்! கட்டுக்கதை' என்பதை அறிவுப்பூர்வமாக மக்கள் நம்ப ஆரம்பித்து விட்டால், இன்று சினிமாவுக்கு உள்ள கவர்ச்சி அடியோடு அழிந்துவிடும். மக்களின் அறியாமை தொடரும்வரை அரசியலுக்கும் சினிமாவுக்கும் அழிவில்லை. ஆனால், இன்றைய காலகட்டத்தில் வில்லத்தனமான கதா பாத்திரங்களே மக்களிடம் பெரும் வரவேற்பைப் பெறுகின்றன. படத்தின் ஓட்டத்துக்குச் சுவை கூட்டுகின்றன.

சத்யராஜ் இன்று மக்களால் ஏகோபித்து ஏற்றுக் கொள்ளப்பட 'நூறாவது நாள்', 'காக்கிச் சட்டை', '24 மணி நேரம்', 'பகல் நிலவு' போன்ற படப் பாத்திரங்கள் காரணமாக இருந்திருக்கின்றன.

இன்று, அகில உலக அளவிலும் 'Angry Young Man', லட்சிய இளைஞனாகத் தோற்றமளிக்கிறான். போர்க்குணமே உயர்ந்த குணமாக வரவேற்கப்படுகிறது...

திரைப்படத்தில் எவ்வளவு சாதாரண வேடத்தில், ஆரம்ப காலத்தில் நடித்தாலும், எந்த ஒரு நடிகரும் கதாநாயகன் தகுதிக்கு உயரவே விரும்பு வார். காரணம், திரைப்பட மீடியத்தின் உச்ச நிலை, நடிப்பைப் பொறுத்த வரை, ஹீரோவாக அல்லது ஹீரோயினாக உயர்வதுதான்.

அந்த அந்தஸ்து பெறும்போதுதான் கதாநாயகன் பெரிதும் மதிக்கப் படுகிறான். அதிகம் பேசப்படுகிறான். வியாபாரம் அவன் பெயரைச் சொல்லி முடிவாகிறது. அவன் உருவமே அதிக விளம்பரங்களில் வெளி வருகிறது. கதையில், அவன் தரும் 'சஜஷன்' வேதவாக்காக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. அவன் வாழ்க்கை வரலாற்றை, பத்திரிகைகள் ஆர்வத் துடன் போட்டி போட்டு வெளியிடுகின்றன.

சம்பளம் கூடுகிறது...! சமுதாய அந்தஸ்தும் கூடுகிறது. எனவே, தன்னுடைய முழுமையான நடிப்பாற்றலை வெளிப்படுத்தவும், தன் விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளவும் ஒரு நடிகன் உயர்ந்தே ஆக வேண்டியது, கதாநாயகத் தகுதியை அடையத்தான்.

ஹீரோ ஆனபிறகு, ஒரு ஐந்து ஆண்டுகள் தாக்குப் பிடிக்க முடிகின்ற போது, நல்ல வேடங்கள் அவனை வந்தடைந்தே தீரும். கால ஓட்டத்தில் பழைய பாத்திரங்கள், பழைய நடிப்பு அனைத்தும் மக்களால் மறக்கப்பட்டு விடுகின்றன. நடிகன் 'வேண்டாம், வேண்டாம்' என்று ஒதுக்கினாலும், அவன் செய்யும் நல்ல வேடங்கள் மூலம் படிப் படியாக அவனுக்கு நல்ல இமேஜ் வந்து சேருகிறது.

எந்த ஒரு தொழிலை எடுத்துக் கொண்டாலும், அதில் நல்ல பெயர் பெறவே எந்த ஒரு மனிதனும் ஆசைப்படுவான்.

கதாநாயகனாக நடித்துப் பெயர் பெறுகின்றவனுக்குப் பணம் புகழுடன், 'நல்லவன்' என்ற அடைமொழியும் போனஸாக, அவன் ஏற்று நடிக்கும் வேடங்கள் மூலமாக, வந்து சேருகிறது.

இதுபோல வில்லனாக இருந்து கதாநாயகனாக உயரும் வாய்ப்பு, நமது மதிப்பிற்குரிய வில்லன் கலைஞர்களுக்கு அன்று கிடைக்கவில்லை. கிடைத்திருந்தால் சில நல்ல வில்லன்கள், நல்ல கதாநாயகர்களாகவும் விளங்கியிருப்பார்கள்.

---



குறைந்த செல்வமுடையவளைக் குறைவான செல்வம் ஆளுமை செய்யும்.
நிறைய செல்வமுடையவனை அந்தச் செல்வம்தான் ஆளுமை செய்யும்.

**நிறைந்த வளம் குறைந்த மதிப்பு... குறைந்த வளம் நிறைந்த மதிப்பு...**

– இதுதான் இவர் வாழ்க்கை.

1-1-05, வெளியீட்டு விழாவில், சுதாங்கன்

33



ஜெமினி கணேஷ் ஓவியம் – 1960

# காதல் மன்னன்

சூலூர் பள்ளியில் இறுதி ஆண்டு படித்துக் கொண்டிருந்தபோது 'பேசும் படம்', 'குண்டூசி' சினிமா பத்திரிகைகளை, நண்பர் ஆசிரியர் குமாரசாமி கொண்டு வந்து கொடுப்பார். அதில் வெளியாகியிருக்கும்

நடிகர்-நடிகையர் 'க்ளோசப்' படங்களைப் பார்த்து அப்படியே இந்தியன் இங்கில் 'லைன் டிராயிங்' வரைந்து அந்தந்த நடிக நடிகையருக்கு, சென்னை விலாசத்துக்குத் தபாலில் அனுப்பி வைப்பேன்.

சிவாஜி, எம்.ஜி.ஆர்., நாகையா, சாவித்திரி, ஜெமினிகணேஷ் போன்றோருக்கு அனுப்பியதில் ஜெமினிகணேஷ் மட்டும், அருமையான - 'பிரேம பாசம்' படத்தில் எடுத்த, கோட் - சூட் - டையுடனான 'க்ளோசப்' புகைப்படமும், எனது ஓவியக் கலைத் திறனைப் பாராட்டிக் கைப்பட கடிதமும் அனுப்பியிருந்தார்.

சிவாஜி, எம்.ஜி.ஆர். முகங்கள் ஒரு வகையான அழகு. ஜெமினி முகம் கொள்ளை அழகு. அலை அலையாகப் படிந்த சுருட்டைத் தலை முடி.., முத்துப் போல வரிசையான பற்கள்! லேசாக வளைந்த கிளி மூக்கு, படித்த இளைஞர்களுக்கு 'மிஸ்ஸியம்மா', 'பிரேம பாசம்', 'பெண்ணின் பெருமை', 'மாயாபஜார்', 'பார்த்திபன் கனவு', படங்களைப் பார்த்து விட்டு, 'டீசன்ட் ஏக்டர்னா' ஜெமினிதான் என்ற எண்ணம் வலுவாக ஏற்பட்டிருந்த கால கட்டம்.

★ ★ ★

1966இல் 'கந்தன் கருணை' படம் உருவானபோது, அப்படத்தில் சிவனாக ஜெமினி மாமாவும், பார்வதியாக சாவித்திரியும் நடித்தார்கள். அந்தப் படப்பிடிப்பில் முதல் முதலாக அவரைச் சந்தித்தேன்.

'சரஸ்வதி சபதம்' படம் ஏ.பி.என். அவர்கள் தயாரித்து இயக்கிய படம். அதன் படப்பிடிப்பின்போது ஜெமினி மாமா, இயல்பாக இம்மியளவும் பந்தா இல்லாமல் என்னோடு பேசிப் பழகினார்.

'பொம்மை' என்ற ஒரு அற்புதமான சினிமா பத்திரிகையை நாகி ரெட்டியார் 1966 ஜூலையில் வெளிக் கொணர்ந்தார். கல்கி எழுத்துக்களில் பெரிதும் மனத்தைப் பறி கொடுத்த எழுத்தாளர் ஸாரதி, பொம்மை இதழின் ஆசிரியர் பொறுப்பேற்றார்.

1966 அக்டோபர் இதழில், அழகிய புகைப்படங்களோடு எனது அறிமுகப் பேட்டி வெளியாகியிருந்தது. அதே பேட்டியில் என் முகத்தை நானே வரைந்த SELF PORTRAIT வெளியாகி இருந்தது.

எந்த ஓவியரும் ஒரு கணம் அசரும் அளவுக்கு அற்புதமாக வரைந்த ஓவியம். ஜெமினி மாமா அந்தப் படத்தைப் பார்த்துவிட்டு, நுட்பமாகத் தெரிந்த அழகை விவரித்துப் பாராட்டினார்.

அப்போதுதான், கிராமத்து இளைஞனாக இருந்த எனக்கு, அவர் வாழ்த்துக் கடிதமும் புகைப் படமும் அனுப்பிய விவரத்தைச் சொன்னேன்

கொள்ளை அழகுடன், ஆண்களே காதலிக்கும் தோற்றத்துடனிருந்த அந்தப் புகைப் படத்தைப் பாதுகாத்து, வரைந்து வைத்திருப்பதையும் அவரிடம் சொன்னேன்.

''டேய் டேய்! சிவகுமாரா, அந்தப் படத்தை எனக்குக் குடுத்திடடா'' என்று அன்றைக்கே கேட்க ஆரம்பித்தார்.

''உயிரோட நீங்க இருக்கும்போது, உயிரில்லாத அந்தப்படம் உங்களுக்கு எதுக்கு? எங்கிட்டேயே இருக்கட்டும்'' என்று சாமார்த்திய மாகப் பதில் சொன்னேன்.

1972ஆம் ஆண்டு பி.ஆர். பந்துலு அவர்கள் 'கங்கா கௌரி'– என்றொரு புராணப் படத்தை மைசூர், பிரிமியர் ஸ்டுடியோவில் உருவாக்கினார். ஜெமினி மாமா சிவனாகவும், நான் மகாவிஷ்ணுவாகவும் நடிக்க சென்னையிலிருந்து அடிக்கடி விமானத்தின் மூலம் பெங்களூர் சென்று, அங்கிருந்து மைசூருக்குக் காரில் செல்வோம். அந்த நாள்களில் ரொம்பவும் பாசமாகப் பழகினார் ஜெமினி.

விமானப் பயணத்தின்போது ஒரு தட்வை, என் கையைப் பிடித்து ரேகைகளைப் பார்த்துவிட்டு, ''மாப்ளே! பொண்ணுங்க கிட்ட ஜாக்கிரதையா இரு'' – என்று எச்சரிக்கை செய்தார்.

''ஏன் மாமா! நீங்க மட்டும் பிருந்தாவனத்து நந்தகுமாரனா ஏகப்பட்ட கோபிகா ஸ்திரீகளோடு ஜாலியா இருப்பீங்க. நர்ன் உஷாரா இருக்கணுமா? என்ன நியாயம் இது!'' என்று அவரைக் கேலி செய்தேன்.

''அப்படி இல்லடா! உனக்கு ஒண்ணு தெரியுமா? இப்ப ஃபீல்டுல இருக்கிற அத்தனை ஹீரோக்களையும்விட நான்தான் படிச்சவன். டிகிரி வாங்கினது மட்டுமில்லே. நிறைய புத்தகங்கள் வாங்கி படிச்சிகிட்டே இருக்கேன். 'அன்டர் தி சன்' எனக்குத் தெரியாத விஷயங்களே இல்லை.

''ஆனா, பகவான் பெண்கள் விஷயத்தில வீக்னஸ் வச்சுட்டான். நீ அப்படியெல்லாம் மாட்டிக்காதே. புத்திசாலித்தனமா நடந்துக்கோ'' என்றார்.

ஒரு மாணவனுக்கு ஆசிரியர் எல்லாம் படித்து அனுபவித்த ஆசிரியர் சொன்ன அறிவுரையாக அதை நான் ஏற்றுக்கொண்டேன்.

மைசூர் டவுனில் மாமாவுடைய தீவிர ரசிகர் ஒருவர் இருக்கிறார். பிரபாகரன் என்று பெயர். திருச்சி பூர்வீகம். இங்கு செட்டில் ஆகி விட்டவர். படப்பிடிப்புக்கு மாமா மைசூர் எப்போது வந்தாலும், 4 அடி உயர டிபன் காரியரில், கோழி பிரியாணி, மட்டன் ஃபிரை, பொறித்த மீன் குழம்பு, கோளா உருண்டை என்று தினந்தோறும் வீட்டில் செய்து, நாங்கள் தங்கியிருக்கும் ஹோட்டலுக்கு எடுத்துவந்து மாமாவுக்கு அன்புடன் பரிமாறுவார்.

என்னையும் சாப்பிட மாமா அழைத்தார். புராணப் படங்களில் கடவுள் வேடம் ஏற்று நடிக்கும் காலங்களில், நான் அசைவம் சாப்பிட மாட்டேன் என்று அருட்செல்வர் ஏ.பி.என். அவர்களுக்கு சத்தியம் செய்து கொடுத்திருப்பதை அவருக்கு நினைவு படுத்தினேன்.

பத்து நாள் படப்பிடிப்பு முடிந்து ஊருக்குப் புறப்படத் தயாராகிக் கொண்டிருந்தேன்.

மாமா என்னைக் கூப்பிட்டார். அவர் அறைக்குள் போனேன். ''இத்தனை நாளுந்தான் உனக்குப் படப்பிடிப்பு நடந்துச்சு. அசைவம் சாப்பிட மாட்டேன்னே...! இப்பத்தான் ஷூட்டிங் முடிஞ்சிடுச்சே, இனிமே தாராளமா சாப்பிடலாம். கை அலம்பிட்டு வா'' என்றார்.

வழக்கம்போல, அசைவ உணவு வகைகள் காரியரில் வந்து, பிரித்து வைக்கப்பட்டிருந்தது.

சாப்பிட வேறு தட்டு இல்லை.

ஜெமினி மாமா, ''என்னப்பா யோசிக்கறே...! வா, வந்து உட்காரு'' என்று தன் தட்டருகே உட்காரச் சொன்னார்.

ராமாயணத்தில் – சபரி பழங்களைச் சுவைத்துப்பார்த்து, ராம பிரானுக்குக் கொடுத்ததுபோல, நல்ல சிக்கன் பீசைச் சுவைத்துப் பார்த்து, ''இந்தா இது சூப்பர் டேஸ்ட் சாப்பிடு'' என்றார்.

பிரம்மிப்பும், திகைப்புமாக அவரைப் பார்த்தேன். ''யோசிக்காதே...! சும்மா சாப்பிடடா'' என்று கையில் கோழிக்காலைத் திணித்தார். அடுத்து 'லிவர் பீசை' எடுத்து கையால் நசுக்கிப் பார்த்து, ''இது ரொம்ப ருசியா இருக்கும் சாப்பிடு...'' என்று தந்தார்.

''மாமா உங்களுக்கு'' என்று இடைமறித்தேன். ''நான்தான் தினமும் சாப்பிடறனே... பாவம் பத்து நாளா நீ அசைவத்தை தியாகம் பண்ணிருக்கே. சும்மா சாப்பிடு!'' என்று தான் சாப்பிடும் தட்டிலேயே பேதம் பார்க்காமல் என்னை முழுக்கச் சாப்பிட வைத்தார்.

சிறுவயதில், கிராமங்களில், வீட்டுக்கு வரும் உறவினர்களோடு ஒன்றாக அமர்ந்து சாப்பிட்ட இனிய நினைவுகள் நிழலாடின.

ஜெமினி மாமா, அன்றைய காலகட்டத்தில் சிவாஜி, எம்.ஜி.ஆர்., ஜெமினி என்ற மும்மூர்த்திகளில் ஒருவர். எம்.ஜி.ஆர் அவர்களும், சிவாஜி அவர்களும் நல்ல நல்ல கதையாக – சிறந்த இயக்குநர்களாக – வசதியான தயாரிப்பாளர்களாகத் தேடித்தேடி உஷாராக நடிப்பார்கள்.

ஜெமினி மாமா அதெல்லாம் செய்யமாட்டார். ஆனால் அந்த இரண்டு ஜாம்பவான்கள் படங்களுக்கு எந்த வகையிலும் தரத்தில் குறைவில்லாத பல படங்களில் ஜெமினி மாமா நடித்திருக்கிறார்.

எம்.ஜி.ஆர்., சிவாஜி இருவரிடமும், தன் கௌரவத்தை விட்டுக் கொடுத்து படம்செய்ய வேண்டாம் என்று நினைக்கும் பல திறமைசாலி டைரக்டர்கள், ஜெமினி மாமா – ரொம்பவும் இணக்கமாக இருப்பதால் – இவரையே தன் படங்களின் ஹீரோவாக நடிக்க வைத்தார்கள்.

பதிபக்தி, பாசமலர், பார்த்தால் பசி தீரும் போன்ற படங்களில் டைரக்டர் பீம்சிங்கும், கற்பகம், சித்தி என்று டைரக்டர் கே.எஸ். கோபால கிருஷ்ணனும், கல்யாண பரிசு, மீண்ட சொர்க்கம், தேன் நிலவு, சுமைதாங்கி என்று டைரக்டர் ஸ்ரீதரும், புன்னகை, இரு கோடுகள் – காவியத் தலைவி, பூவா தலையா, வெள்ளி விழா என்று டைரக்டர் கே. பாலச்சந்தரும், வஞ்சிக்கோட்டை வாலிபன், வாழ்க்கைப் படகு என்று ஜெமினி நிறுவனமும், மிஸ்ஸியம்மா, கடன் வாங்கிக் கல்யாணம், மாயா பஜார் என்று நாகிரெட்டி, சக்கரபாணி போன்றோரும், களத்தூர் கண்ணம்மா, ராமு போன்ற படங்களில் ஏ.வி.எம். நிறுவனமும், பல புராணப் படங்களில் ஏ.பி. நாகராஜனும் ஜெமினியை ஹீரோவாக வைத்து உருவாக்கினார்கள்.

பந்தா இல்லாத தன்மையும், எல்லோரிடமும் இனிமையாகப் பழகும் குணமும், இத்தனை திறமைசாலிகளின் படங்களில் நடிக்க அவருக்குத் துணை நின்றன.

லட்சங்கள் சம்பளமாக வாங்கிக் கொண்டிருக்கும் – வெள்ளிவிழா ஆண்டு கடந்த ஒரு சீனியர் ஹீரோ, வெறும் பத்தாயிரம் ரூபாய் சம்பளம் வாங்கும் ஜூனியர் ஆர்டிஸ்ட்டான என்னை, சரிசமமாக உட்கார வைத்து, தன் பிள்ளைக்குப் பரிவோடு சோறு ஊட்டுவதைப்போல உண்ண வைத்தது, அவர்மீது மிகப் பெரிய மரியாதையை ஏற்படுத்தியது.

அதன்பிறகு மாணிக்கத்தொட்டில், தேரோட்டம் எனப் பல படங்களில் இருவரும் நடித்தோம். எந்த நிகழ்ச்சியில் என்னைப் பார்த்தாலும் ''டேய் சிவகுமாரா, என் ஓவியத்தை எப்படா தருவே!'' என்று தவறாமல் கேட்பார்.

''தர்றேன்னு, எப்பவாவது நான் சொன்னேனா?'' என்று நான் எதிர்க் கேள்வி கேட்டு, தப்பித்துக் கொள்வேன்.

சமீபத்தில் அவருக்கு 80 ஆண்டு நிறைவு விழா! சதாபிஷேகத்துக்கு அழைப்பு வந்தது. என் மகன் சூர்யா கோபித்துக் கொண்டான்.

''என்னப்பா நீங்க! ஒரு மனுஷன் இந்தக் காலத்தில் 80 வருஷம் உயிரோடு இருக்கறதே இமாலய சாதனை! அவர் இன்னும் பேரோட புகழோட, பேரம் பேத்திகளோட ஆரோக்கியமா இருக்காரு.

''இப்பக்கூட அவரு 'PAINTING' ஐ நீங்க தரலேன்னா, அது வேஸ்ட்! சதாபிஷேக நாளிலே கொடுக்கறதுக்குச் சிறந்த பரிசு இது தான்'' என்றான்.

நானும் துணைவியும் ஓவியத்தைப் பார்சல்செய்து எடுத்துக்கொண்டு கலைஞர் திருமண மண்டபத்தில் நடந்த விழாவுக்குப் போனோம். எனக்குப் பின்னால் கவிஞர் வைரமுத்து வந்தார்.

''நீங்கள் என்ன பரிசளிக்கப் போகிறீர்கள்'' என்று கேட்டார். ''அது தான் சஸ்பென்ஸ். ஜெமினி மாமாகிட்ட இதுக்குள்ளே என்ன இருக்குன்னு பார்சலைக் காட்டி கேட்பேன்.

''சரியா பதில் சொன்னா, இதை அவருக்குப் பரிசாத் தருவேன். தப்பா சொன்னா திரும்ப எடுத்திட்டுப் போயிருவேன்.''

சோபாவில் ஜெமினி மாமாவும் பாப்ஜியும் வாழ்ந்து முடித்து, பழமாய்க் கனிந்திருந்தார்கள்!

''மாமா! இதுக்குள்ளே என்ன இருக்கு சொல்லுங்க'' என்று கேட்டேன். ''வேற என்ன! என் படந்தான்'' என்றார்.

80 வயது கடந்தும் அவரது நினைவாற்றல்! என் ஓவியத்தின்மீது அவருக்கிருந்த பற்று சிலிர்க்க வைத்தது!

படத்தைப் பிரித்துக் காட்டினேன். அவர் கண்கள் பிரகாசமாயின. டாக்டர். கமலா செல்வராஜ் – ஜெமினியின் மூத்த மகள் – ஓவியத்தை வாங்கிப் பார்த்து, அப்படியே நெகிழ்ந்து போய் ''எங்கப்பா மேல இவ்வளவு மரியாதை வச்சிருக்கீங்களா! ரொம்ப தேங்ஸ்! இந்தப்படம் இனிமே என்வீட்டில்தான் இருக்கப்போகுது'' என்றார்.

''அடேய்! அங்கென்ன வேடிக்கை, கால்ல விழுடா ஆசிர்வாதம் பண்றேன்'' என்றார். நானும் துணைவியும் அவர் பாதங்களைத் தொட்டு வணங்கினோம்.

ஈ எறும்புக்குக்கூட தீங்கு நினைக்காத, எல்லோரையும் சமமாக மதித்து அன்புகாட்டுகின்ற, ஆயிரம் பிறை கண்ட அந்தக் கலைஞன் அட்சதை தூவி எங்களை ஆசிர்வதித்தார்...!

---

## 34



100 – வது படம் 'ரோசாப்பூ ரவிக்கைக்காரி'

# அவுட்டோரில் கதாநாயகன்

**"டேய்...!** டேய்...! நில்லுடா...! நீ எங்கே ஓடினாலும் உன்னைக் கூறு போடாம விடமாட்டேன். ஆட்டைக் கடிச்சு மாட்டைக் கடிச்சு, கடைசில மனுஷனையே கடிக்க ஆரம்பிச்சிட்டியா...?'' வயல் வரப்பில் வழுக்கி விழுந்து, தட்டுத் தடுமாறியவாறு உயிரைக் கையில் பிடித்துக்

கொண்டு ஒருவன் ஓட, அடுத்தவன் கையில் அரிவாளுடன் நிஜமாகவே தடுமாறிய வாறு கொலை வெறியில் அவனைத் துரத்துகிறான்.

தூரத்தில் நின்றிருந்த கூட்டம், ''என்னப்பா ரகளை அங்கே...?'' எனக் கேட்க, ''ஷூட்டிங் சம்பந்தப்பட்ட பையனொருத்தன், அவங்களுக்கு டீ போடறேன்னு சாக்குச் சொல்லி, சுப்பன் வீட்டுக்காரி மேலே கை வெச்சுட்டானாம். வேலை முடிஞ்சு வீட்டுக்கு வந்த சுப்பன், அவங்க நெருக்கமா இருக்கிறதைப் பார்த்ததும், அரிவாளைத் தூக்கி வீசியெறிஞ் சிருக்கான். சுப்பன் பொண்டாட்டி மேலே பட்டு ரத்தம் கொட்டுது. அந்தப் பையனைச் சீவாம விடமாட்டேன்னு போதையில் துரத்தறான்'' என்று பின்னால் வந்த ஒருவர் சொல்கிறார்.

''ஏதோ நடக்கக்கூடாதது நடந்து விட்டது. ஊர் கூடினால் எல்லாரு டைய உயிருக்கும் ஆபத்து. சிவா! வா, வா...! சீக்கிரம் இந்த இடத்தைக் காலி பண்ணிடுவோம்'' எனப் பதறுகிறார் டைரக்டர் தேவராஜ் (மோகன்).

என்ன இது, சோதனை மேல் சோதனை...? இரண்டு நாட்களுக்கு முன்னர் மலைப்பாதையில் வந்த வேன் தலைகுப்புறக் கவிழ்ந்து உயிர்ச் சேதம் எதுவுமில்லாமல் காயங்களோடு நடிக நடிகையர் தப்பித்தனர்...! ஒழுங்காகப் பாதையைப் பார்த்து ஓட்டினால் வேன் எப்படிக் கவிழும்...?

டிரைவரைச் சொல்லிக் குற்றமில்லை. சினிமா சம்பந்தப்பட்ட அனைத்துத் தொழிலாளர்களுக்குமே பெண்களோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு வலிய வந்து சேருகிறது. ஒப்பனையாளர், உடையலங்கார நிபுணர், உதவி இயக்குநர், ஒளிப்பதிவாளர், புரொடக்ஷன் உதவியாளர், டிரைவர்... இப்படி அனைவருமே தொழில் ரீதியாகப் பெண்களோடு பழகியே தீரவேண்டியிருக்கிறது.

நாள் முழுக்கப் பெண்களோடு அரட்டையடித்துக் கொண்டும், பார்வைகளைப் பரிமாறிக் கொண்டும், ஜாடைமாடையாக உரசிக் கொண்டும், ஸ்டூடியோவில் வாழ்ந்து பழகிவிட்டவர்களை, முப்பது நாள் நடுங்கும் குளிரில், மலைப்பகுதியில், பெண்வாடையே இல்லாமல் வேலை செய்யச் சொன்னால், பாவம்... என்ன செய்வார்கள்!

மாதக் கடைசியில், சென்னையிலிருந்து சில நடிகர்களையும் பத்துப் பதினைந்து நடிகைகளையும் வரவழைத்திருக்கிறார்கள். ஹோட்டலி லிருந்து லொகேஷனுக்கு அவர்களைக் கூட்டிவர வேன் அனுப்பப் பட்டது. உள்ளே இடமில்லை என்றபோது டிரைவர் ஸீட்டுக்குப் பக்கத்தில் இரண்டு பெண்கள் அமர்ந்து கொண்டனர்.



கதாநாயகி தீபாவுடன்

ஏற்ற இறக்கமும், மேடு பள்ளங்களும் உள்ள மலைப்பாதையில் வேன் திரும்பும் போதெல்லாம், வண்டி ஆட்டத்தில், உடல் ஸ்பரிசம் தானாக ஏற்பட்டிருக்கிறது. உடற்பசி இயற்கையான, தவிர்க்க முடியாத உபாதை! ஸ்பரிசம் ஏற்படும்போதெல்லாம் பாதையிலிருந்து பார்வையை விலக்கி, பக்கத்திலிருந்த பெண்ணை நோட்டம் விட்டிருக்கிறார் டிரைவர்!

திடும் என்று இடதுபக்கம் கால்வாய் வந்துவிட, கொஞ்சம் அதிக மாக வலது பக்கம் ஸ்டியரிங்கை ஒடித்திருக்கிறார். வலது புறத்தில் மூன்றடி உயரம் கட்டப்பட்டிருந்த சுவரில், வேனின் வலது புறச் சக்கரங் கள் ஏறி..., அப்புறம் என்ன... தலை குப்புறக் கவிழ்ந்து விட்டது...!

வேனின் ஜன்னல் வழிகள் பெரியதாக இருந்ததால் உள்ளேயிருந்து தவழ்ந்தவாறு எல்லோரும் வெளியே வந்துவிட்டனர். யாருக்கும் பெரிய அடி இல்லை.

இன்று மீண்டும் ஒரு கலாட்டா! 'பெண்மீது கை வைத்து விட்டான்' என்று மேலோட்டமாகச் சொல்லும் குற்றச் சாட்டுக்குப் பயந்து, யூனிட் மொத்தமும் ஓட்டம் பிடித்தால், குற்றம் உண்மையெனக் கொள்ளப்படும். அது நம் யூனிட்டுக்கு மட்டுமல்ல. சினிமா உலகுக்கே களங்கத்தை ஏற்படுத்திவிடும்.

நன்கு யோசித்தேன். முடிவில் காமிரா, ஒலிப்பதிவு சாதனம், மின் விளக்குகள் அனைத்தையும் 'பேக் – அப்' செய்து லொகேஷனை விட்டுக் கிளம்பச் சொல்லி விட்டு, 'நடந்த உண்மை என்னவென்று தெளிவாகத் தெரிந்துகொள்ளாமல் கிராமத்தை விட்டுப் போகக்கூடாது' என்று முடிவு கட்டி, இரவு 7 மணிவரை அந்தக் கிராமத்துப் பிரதான சாலையில் காத்திருந்தோம்.

பஞ்சாயத்துத் தலைவர், வெளியூர் போனவர் அதுவரை வரவில்லை. நடிகர் சத்யராஜ், அப்போது கௌரவத் தயாரிப்பு நிர்வாகியாகப் பணியாற்றிக் கொண்டிருந்தார். அவரிடம் ''இரவு 10 மணிவரை இங்கேயே இருந்து, தலைவர் வந்தால் ஹோட்டலுக்கு அழைத்து வாருங்கள்'' என்று கூறிவிட்டுப் புறப்பட்டோம்.

மறுநாள் தலைவரைச் சந்தித்தோம்.

''இந்தப் படத்தை உருவாக்க இந்தக் கிராமத்து ஜனங்கள் கொடுத்த ஒத்துழைப்பை மறக்க முடியாது. எங்களால வேலை வெட்டியெல்லாம் மாசம் பூரா பாதிச்சிருக்கு...! எல்லாரும் ஒரே குடும்பமா பழகினோம். நீங்க எல்லாரும் படப்பிடிப்புக்கு ரொம்பவும் உதவியா இருந்தீங்க'' என்று பாராட்டினேன். பிறகு,

''அது சரி தலைவரே! நேத்திக்கு இந்த சுப்பன் என்ன இப்படிக் கலாட்டா பண்ணிட்டாரு? பத்து இருபது நாளா, அவரு வீட்டிலதானே டீயைச் சூடு பண்ண எங்க ஆளு வந்துபோறாரு! புடிக்கலேன்னா, அப்பவே சொல்லியிருக்கலாமில்ல... திடீர்னு இப்படிப் பழியைப் போட்டா எப்படி...?'' என்றேன்.

''நீங்க ஒண்ணும் தப்பா எடுத்துக்காதீங்க ஐயா. அவன் ஒரு குடிகாரன். மப்புல ஏதோ உளறிட்டான். அவன் பொண்டாட்டி தங்கமான பொண்ணு...! அவனை எதிர்த்து ஒரு வார்த்தைக்கூடப் பேசாது. பாவம். அவளோட மண்டையை ஒடைச்சிட்டான். நீங்க இதுக்காக வருத்தப்பட வேண்டாம்'' என்றார் தலைவர்.

அந்தப் பெண்ணைப் பக்கத்திலிருந்த டவுனுக்கு அழைத்துப் போய், தையல் போட்டு மருந்து வாங்கிக் கொடுத்து அந்தப் பிரச்சினைக்கு முடிவு கட்டினோம்.

அன்றிரவு, மலைமீது பாடல் காட்சி படமாக்க முனைந்தபோது, வெடவெடக்கும் குளிரில் காமிரா கைப்பிடியிலிருந்து விரல்களைப் பிரித்து எடுக்க முடியாமல் நடுங்கினார் ஒளிப்பதிவாளர் ஆர்.என்.கே. பிரசாத்.

படப்பிடிப்பை ராசிபுரத்துக்கருகேயுள்ள, அத்தனூருக்கு மாற்ற முடிவாயிற்று. திட்டமிடாமல், கூட்டத்தினரை அனுப்பியபோது நல்ல கார்கள், வேன்களெல்லாம் அவர்களை ஏற்றிச் சென்றுவிட்டது தெரிந்தது.

காமிரா உதவியாளரும், ஒலிப்பதிவு செய்யும் நாகரா சாதனத்தின் உரிமையாளரும், ஓட்டை வேனில் காமிராவையும் நாகராவையும் ஏற்றிச் செல்ல மறுத்துவிட்டனர்.

உடனே, எனக்கு ஒதுக்கியிருந்த அம்பாஸடர் காரில், அவர்களை ஏற்றி அனுப்பிவிட்டேன்.

ஏற்காட்டில் ஓட்ட மட்டுமே அனுமதி பெற்றிருந்த அந்த ஓட்டை வேன்தான் மீதி இருந்தது. சட்டப்படி அதைச் சேலத்துக்குள் ஓட்டக் கூடாது! வேறு வழியில்லை.

புரொடக்ஷன் சாமான்கள், பெட்டி படுக்கைகளோடு என்னையும் சேர்த்துப் பதினோருபேர் அதில் பயணமானோம். ஏற்காட்டை விட்டுப் புறப்படும்போது இரவு 9 மணி இருக்கும். ஒரு சைக்கிள் போகும் வேகத்தைவிட குறைவாக வேனை ஓட்டினார் டிரைவர்.

''இன்னிக்கு ராத்திரி அத்தனூர்ல ஷூட்டிங் இருக்குப்பா...! நீ இவ்வளவு மெதுவாப் போறியே...'' என்றேன்.

''அதுக்கு மேல வேகமா போனா பிரேக் புடிக்காது சார்'' என்றார் டிரைவர்.

''நாலாயிரம் அடி உயரத்திலிருந்து கீழே போறோம். பிரேக் புடிக்காதுங்கிறியே?''

''பயப்படத் தேவையில்ல சார். எதுக்கும் பக்கத்தில் இருக்கற கதவைத் திறந்து வச்சுக்குங்க. ஒருவேளை பிரேக் சொன்னபடி கேக்க லேன்னா, சைடுல குதிச்சிடலாம் பாருங்க'' என்றார். எதிர்பார்த்தது நடக்காமல், வேறொன்று நடந்தது. மாடர்ன் தியேட்டர்ஸ் அருகே வந்த போது 'கிளட்ச் சிஸ்டம்' பாதிக்கப்பட்டது. இரவு மணி பதினொன்று. வேன் பாதையோரம் ஓய்வெடுத்துக் கொண்டது.

நானும் எனது உதவியாளர்களும் அங்கிருந்து சுமார் நான்கு மைல் தூரம் நடந்து, நாலு ரோடு சந்திப்புக்கு வந்து சேர்ந்தோம்.

ஹோட்டலில் டிபன் வாங்கி வேனிலுள்ளவர்களுக்கு அனுப்பிவிட்டு அத்தனூர் சென்று, இன்றிரவு படப்பிடிப்பை ரத்து செய்யும்படி தகவல் தர,, டாக்ஸி பிடித்து ஒருவரை அனுப்பினேன்.

அன்று ஞாயிற்றுக்கிழமை. தொழிலாளர்களுக்கு விடுமுறை நாளில் வேலை பார்த்தால், இரண்டு பேட்டா தர வேண்டும். ஞாயிறு இரவு

என்றால் மூன்று பேட்டா தரவேண்டும். ஆர்க். புரூட் என்று சக்தி வாய்ந்த மின் விளக்குகளைப் பயன்படுத்துவதால் அன்று மட்டும் பேட்டா, டீசல் செலவு எல்லாம் சுமார் 5,000 ரூபாயைத் தாண்டும்.

அத்தனூருக்குத் தகவல் செல்வதற்குள், லைட் போட்டுப் படப்பிடிப்பு வேலையைத் துவக்கி விட்டனர். ஜெனரேடரை ஆன் செய்து விளக்குகள் ஒரு தடவை எரிந்து அணைந்தால்கூட, அந்த நாள் பேட்டா பில் வந்து விடும். இனி தப்ப முடியாது.

உதவியாளர் திரும்ப ஓடிவந்து, சேலம் கோகுலம் ஹோட்டலில் தங்கியிருந்த என்னிடம் தகவல் சொல்லும்போது இரவு மணி இரண்டைத் தாண்டிவிட்டது.

உடனே, சேலத்தில் ஒரு வாடகை வேன் பிடித்து, மாடர்ன் தியேட்டர் அருகே காத்திருந்தவர்களை ஏற்றிக்கொண்டு அத்தனூர் சென்றோம். அதிகாலை நாலு மணிக்குப் படப்பிடிப்பு துவங்கியது.

முப்பத்தைந்து நாள் தாடி வளர்த்து, உடம்பெல்லாம் வெயிலில் காய்ந்து, குளிரில் விறைத்து, உதடெல்லாம் வெடித்து, அரை டிராயரும் கிழிந்த சட்டையுமாய் அகோரமாகக் காட்சியளித்த என்னைப் பார்த்து, அந்த அகால நேரத்தில் கொட்டக் கொட்ட விழித்துக் காத்திருந்த ரசிகர் ஒருவர் ஒரு 'கமெண்ட்' அடித்தார்.

''முந்தா நாள்தான் சேலத்தில் 'முதல் இரவு' படம் பார்த்தேன். அந்தப் படத்தில் இந்த ஆள் ரொம்ப அழகா இருந்தான். நேர்ல பார்த்தாத் தான் எவ்வளவு அவலட்சணமானவன்னு தெரியுது...! எல்லாம் மேக்கப் மேனோட சாமர்த்தியம்ப்பா...! நேர்ல இவ்வளவு அசிங்கமா இருக்கிற வனையே படத்தில் அவ்வளவு அழகா காட்டறாங்கன்னா, நாம நிஜமாவே நல்லா இருக்கமே...! நம்மளைப் படத்தில இன்னும் அழகால்ல காட்டு வாங்க...'' என்று என் காதில் படும்படி பேசினார்.

'ரோசாப்பூ ரவிக்கைக்காரி' படத்தில், செம்பட்டை என்ற கிராமத்து அப்பாவியாக வேடமேற்ற எனது தோற்றம் அவர்களை அப்படிப் பேச வைத்ததிலிருந்தே, அந்தப் படமும் அந்தப் பாத்திரமும் பெரிய வெற்றி பெறும் என்று திடமான முடிவுக்கு வந்தேன்.

---

35



## டைரக்டர் ஸ்ரீதர்

1959–இல் ஸ்ரீதரின் 'கல்யாணப்பரிசு' வெளியானது. அப்போது திரையுலகம் மட்டுமல்ல, தமிழ்நாடே அவரைத் திரும்பிப் பார்த்தது.

கதாநாயகன் கொடி நிரந்தரமாகப் பறந்த திரையுலகில், ஸ்ரீதர் கொடி பட்டொளி வீசிப் பறந்தது.

ஜெமினி, சரோஜாதேவி, விஜயகுமாரி மூவரையும் வைத்து முக்கோணக் காதல் கதையைப் படமாக்கியிருந்தார். பட்டுக்கோட்டையார் பாடல்கள் அத்தனையும் முத்துக்கள். 'ஆசையினாலே மனம்', 'வாடிக்கை மறந்ததும் ஏனோ', 'உன்னைக் கண்டு நானாட – என்னைக் கண்டு நீயாட – உல்லாசம் பொங்கும் இன்ப தீபாவளி'!

'காதலிலே தோல்வியுற்றான் காளை ஒருவன்' – ஏ.எம்.ராஜா இசை அமைத்து ஜெமினிக்குப் பாடிய இப்பாடல், ஏமாற்றமடைந்த இளைஞர் களின் இதயக் குரலாக எங்கும் ஒலித்தது. அந்த ஒரே படத்தில் சரோஜா தேவி கனவுக்கன்னியாகி விட்டார்.

எம்.ஜி.ஆரும், சிவாஜியும் போட்டி போட்டுக் கொண்டு சரோஜா தேவியைத் தங்கள் படங்களில் பயன்படுத்தினார்கள்.

அடுத்து 'மீண்ட சொர்க்கம்'

'மன நாட்டிய மேடையில் ஆடினேன் – கலை காட்டிய பாதையில் வாடுகிறேன்' – சுசீலா பாடல்! பத்மினியின் உருக்கம், வின்சென்ட்டின் 'மூடி லைட்டிங்' – மறக்கவே முடியாது...!

1962–இல் 'நெஞ்சில் ஓர் ஆலயம்'

கான்சர் நோயால் அவதிப்படும் முத்துராமனுக்கு அடுத்த நாள் ஆபரேஷன். பிழைக்க வாய்ப்பு ரொம்பவும் குறைவு. மனைவி தேவி காவை அழைத்து, மணப்பெண்போல அலங்கரித்து வரச் சொல்கிறார்...! ஒருமுறை அந்தக் கோலத்தில் உன்னைப் பார்க்க ஆசை'' என்கிறார்.

கண்ணதாசனிடம் இந்தக் காட்சிக்கு ஒரு பாடல் வேண்டும் என்றார் ஸ்ரீதர்.

''என்ன நினைத்து என்னை அழைத்தாயோ
ஏனிந்தக் கோலத்தைக் கொடுத்தாயோ
முன்னம் இருந்த நிலை நினைத்தாயோ
முகத்தைப் பார்த்துக் கொள்ளத் துடித்தாயோ...''

– வரிகள் வந்து விழுந்தன. விஸ்வநாதன் – ராமமூர்த்தி, தங்கள் இசையால் அவ்வரிகளுக்குள் சோகத்தைத் இழைத்தனர்.

கிளைமாக்ஸ் காட்சி...!

கல்லூரியில், கல்யாண்குமார் காதலித்த தேவிகா, இப்போது முத்து ராமனின் மனைவி! கான்சர் நோயாளியான கணவரை முன்னாள் காதலன் டாக்டர் கல்யாண்குமாரிடம் அழைத்து வருகிறார்.

வராண்டாவில் நடந்து வரும்போது பழைய நினைவுகள் மேலெழ, தேவிகாவைப் பார்த்து ''என்னை நினைவிருக்கிறதா சீதா'' – என்பார் டாக்டர்.

முன்னாள் காதலன் மனமும் சங்கடப்படக்கூடாது. இப்போது நாம் அடுத்தவன் மனைவி என்பதையும் அவருக்கு உணர்த்த வேண்டும்.

**''டாக்டர், என் வீட்டுக்காரர், உங்களைப் பத்தி ரொம்ப உயர்வா நெனைச்சுட்டிருக்கார்,''** என்பார் தேவிகா.

தமிழ்நாடெங்கும், அத்தனை தியேட்டர்களிலும் அந்த வசனத்திற்கு அப்படி ஒரு கைதட்டல்...! 10 ஆண்டுகள், ரசிகர்கள் சொல்லிச் சொல்லி ரசித்த வசனம் அது.

'நெஞ்சம் மறப்பதில்லை' படத்திற்கு ஒரு 'ஹாண்ட்டிங் டியூன்' வேண்டுமென்று ஸ்ரீதர் கேட்டார். நிமிஷத்துக்கு 4 டியூன் போடும் எம்.எஸ்.வி. கிட்டத்தட்ட 100 டியூன்கள் போட்டுக் காண்பித்தார். கடைசியாகப் போட்ட டியூன் கேட்டு ஸ்ரீதர் உற்சாகத்தில் துள்ளிக் குதித்தார்.

அதுதான் 'நெஞ்சம் மறப்பதில்லை... அது நினைவை இழப்பதில்லை' டைட்டில் பாடல்...! லதா மங்கேஷ்கர் ரசித்த பாடல் என்று எம்.எஸ்.வி. சொன்னார்.

காதலிக்க நேரமில்லை, தேன்நிலவு, சுமைதாங்கி, கலைக்கோயில், வெண்ணிற ஆடை, ஊட்டி வரை உறவு - ஒவ்வொன்றும் வித்யாசமான படங்கள்.

ஸ்ரீதர் படங்களைப் பார்ப்பது விருந்துக்குச் சென்ற மகிழ்வை ஏற்படுத்திய நாள்கள் அவை.

ஸ்ரீதர் யூனிட்டே ஒரு கலகலப்பான யூனிட்! கல்லூரி மாணவர்கள் ஐந்தாறுபேர் சேர்ந்து, வாடா போடா என்று பேசிக்கொண்டு ஜாலியாக வேலை செய்தால் எப்படி இருக்கும். அதுபோல பள்ளித்தோழன் சடகோபன் (கோபு), உறவுக்காரர் சி.வி.ராஜேந்திரன், ஒளிப்பதிவாளர் வின்சென்ட், இசையமைப்பாளர்கள் விஸ்வநாதன் - ராமமூர்த்தி, கவிஞர் கண்ணதாசன், எடிட்டிங் சங்கர், ஸ்டில்ஸ் ஆனா ரூனா, கலை கங்கா. இந்த 'டீம்' தமிழ் சினிமாவில் சரித்திரம் படைத்தது.

**ப**த்து ஆண்டுகளுக்குமுன் டைரக்டர் ஸ்ரீதர் அவர்கள் உடல் நலம் குன்றி, சென்னை அப்பல்லோ மருத்துவமனையில் சிகிச்சைபெற்று வந்த நேரம், ஒரு மாலைப் பொழுதில் அவரைப் பார்க்கப் போயிருந்தேன்...!

டாக்டர் வந்து ஸ்ரீதரைப் பரிசோதித்துவிட்டு அவருடைய நினைவாற்றல் குறைந்துகொண்டே வருகிறது. யாராவது பழைய சம்பவங்களைச் சொல்லி அவருக்கு நினைவூட்டினால், மீண்டும் நினைவாற்றலை அவர் புதுப்பிக்க வாய்ப்புண்டு என்று சொன்னார்.

உடனே எனக்குப் பள்ளி நாள்கள் நினைவுக்கு வந்தன...!

கோவை மாவட்டம் சூலூர் போர்டு உயர்நிலைப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்தபோது, ஓவியஸ்டீச்சர் திருமலைசாமி அவர்களோடு சைக்கிளில் மருதமலைக்குச் சுற்றுலா சென்றோம். உடன் படித்த செல்வராஜ், வேலுச்சாமி, ஷண்முக கணபதி, ஜெகநாதன், அப்பாசாமி வளையல்காரர் மகன் கருப்பசாமி, முத்துக்கவுண்டன் புதூர் ராமசாமி ஆகியோரும் வந்தனர்.

சூலூரிலிருந்து சுமார் 20 மைல் தொலைவிலுள்ள மருதமலையை, காலை 10 மணிக்குச் சென்றடைந்தோம்.

பின்னாளில், இந்த மருதமலை முருகன் கோயிலை - அறுபடை வீடுகளுடன் சேர்த்து ஏழாவது படை வீடாக, மக்கள் கொண்டாட வேண்டும் என்ற ஆசையில் அமரர்.சாண்டோ சின்னப்பதேவர், லட்சக் கணக்கில் செலவு செய்து மலைப்பாதை, படிகளைச் சரிசெய்து, வழி எங்கும் மின் விளக்குபோட்டு, கோயில் முன்பு மண்டபமெல்லாம் கட்டிக் கொடுத்தார்.

அன்று வானம் கருமேகங்கள் சூழ்ந்து மந்தாரமாக இருந்தது. தென் மேற்குப் பருவமழை துவங்கியதற்கு அடையாளமாக லேசான தூறல் விழுந்துகொண்டிருந்தது.

சுவாமி தரிசனம் முடிந்து வெளியே வந்தோம். நண்பர் ராமசாமி, ஒரு பாறையின் பின்னணியில் எங்களையெல்லாம் நிற்கவைத்து, தான் கொண்டு வந்திருந்த 'பாக்ஸ்' காமிராவில் படமெடுத்தார். மிக மலிவான காமிரா என்றாலும், ஸ்டுடியோக்களைத் தவிர வெளியே காமிரா கொண்டு வந்து யாரும் புகைப்படம் எடுக்காத காலம்.

அன்றைக்கு எடுத்த புகைப்படத்தை 40 ஆண்டுகள் கழித்து, பிரிண்ட் போட்டு எனக்கு அவர் அனுப்பி 'ஷாக்' கொடுத்தது தனிக்கதை.

மலையிலிருந்து 12 மணிக்கெல்லாம் கிளம்பி கோவை வந்து பகல் உணவை ஒரு ஹோட்டலில் முடித்துக் கொண்டோம்.

'அமர தீபம்' படம் டைமண்ட் தியேட்டரில் ஓடுவதை போஸ்டர் சொல்லியது. ஆசிரியரைக் கெஞ்சி டிக்கட் வாங்கி மாட்னி ஷோ பார்த்தோம்.

படத்தின் துவக்கத்தில், 'பராசக்தி' குணசேகரன் போல தலையில் தொப்பியும், நாலுநாள் தாடியுடன், அரைக்கை சட்டையும், நாலு மடிப்பு மடித்த பேண்ட்டுமாய் -

''நாணயம் மனுஷனுக்கு அவசியம் - இது
நல்லோர்கள் சொல்லிவைத்த நன்மையான ரகசியம்'' - என்று பாடி ஆடினார் சிவாஜி...

அடுத்து, ஓட்டை பஸ்ஸில் பணக்கார வீட்டுப்பெண்ணான சாவித்திரியுடன் காதல் செய்தார். மணல் மேட்டில் இருவரும் அமர்ந்து,

''தேன் உண்ணும் வண்டு – மாமலரைக் கண்டு
திரிந்தலைந்து பாடுவதேன் ரீங்காரம் கொண்டு''

என்று ஏ.எம்.ராஜா – ஜிக்கி குரலில் டூயட் பாடினார்கள்.

ஏதோ ஒரு கோபத்தில் வீட்டை விட்டு வந்த மில்முதலாளி பெண்ணான சாவித்திரி, ஒரு கட்டத்தில் திரும்பவும் வீட்டுக்குப் போய் விடுவார்.

ஒரு விபத்தில் சிவாஜி அகப்பட்டு, கடந்த கால நினைவுகள் அவருக்கு மறந்து போய்விடும். ஆஸ்பத்திரிக் கட்டிலில் சிவாஜி படுத்திருப்பார்.

திரையில் பெரிதாக இரண்டு பாதங்கள்! அவற்றின் நடுவே சிவாஜியின் முகம். 'பாண்டேஜு'டன் மெதுவாக மேலே எழுந்து உட்கார்வார். முத்துமுத்தான வியர்வையுடன், மிரளும் விழிகளுடன் சுற்றுமுற்றும் சிவாஜி பார்க்கும் அந்தப் பார்வையிலேயே, 'அவருக்கு ஏதோ ஆகிவிட்டது' என்று நமக்குப் புரிந்துவிடும்.

சாவித்திரியின் தொழிற்சாலையில் தற்காலிகமாக வேலைக்குச் சேருவார் சிவாஜி. ஒருநாள், தொழிலாளி ஒருவனை நம்பியார் அடித்து வெளியே தள்ளிவிடுவார்.

சிவாஜி அந்தத் தொழிலாளியைத் தூக்கி இரண்டு கைகளிலும் ஏந்தியவாறு நம்பியார் இருக்கும் ஆபீசுக்குள் செல்வார். ''நீயா?'' – என்று கேட்பார் நம்பியார்.

''ஆம் நான் தான் ..... தொழிலாளி!
பிறந்த நாட்டைப் பொன்னாடாக்கப் பாடுபடும் பாட்டாளி!
ஏன் விழிக்கிறீர்கள்?
நீங்களும் மனிதர்கள்தானே!
மனிதர்களை மனிதர்களாக மதிக்கும் மனப்பான்மை
உள்ளவர்கள்தானே!
குமுறும் எரிமலை, கொந்தளிக்கும் கடல்
இவைகளைத் தடுத்து நிறுத்தும் ஆற்றல்
இதுவரை எவருக்கும் இருந்ததில்லை!
குற்றம் செய்த உங்களிடம் நீதி கிடைக்கும்
என்ற நம்பிக்கையில் நான் வரவில்லை!
நீதியைப் போதிக்கவே வந்திருக்கிறேன்!

மனைவியின் பரிதாப நிலைக்காக
உங்களிடம் 10 ரூபாய் கேட்டான்!

அவனுக்கு நீங்கள் செய்தது என்ன?
உடலையும் உதிரத்தையும் உங்களுக்குக் காணிக்கையாக்கி
இரவு பகலாக உழைத்த இந்த உழைப்பாளி கண்டதென்ன?

உங்களுக்கு இருக்கும் உரிமை உணர்ச்சி
இவர்களுக்குக் கிடையாதா?

உங்களுக்கு இருக்கும் பாசம், நேசம், அன்பு எதுவும் இவர்களுக்குக் கிடையாதா?

நீங்கள் செய்திருக்கும் இந்த அக்கிரமத்திற்குக் காரணம் என்ன?

சாவித்திரி : கவலைப்படாதீங்க. நான் விசாரிக்கிறேன்.

சிவாஜி : விசாரணை செய்ய வேண்டியது நீங்கள் அல்ல. நீங்கள் அனுபவிக்கும் இந்தச் சுகத்துக்கு யார் காரணம்? நீங்கள் நடமாடும் இந்தச் சுகபோக பாதை யாரால் நிர்மாணிக்கப்பட்டது? இதற்கெல்லாம் நீதி தேவன் முன்பு நீங்கள் பதில் சொல்லும் காலம் விரைவில் வரத்தான் போகிறது.

நம்பியார் : உன்னை டிஸ்மிஸ் செய்கிறேன்!

சிவாஜி : செயற்கரிய செயல்! வேறு என்ன... உத்யோக உயர்வா எனக்குக் கொடுக்கப் போகிறீர்கள்'

– அலட்சியமாய் ஒரு பார்வை வீசிவிட்டு வெளியேறுவார் சிவாஜி.

அடுக்கு மொழி வசனம் எழுதி அண்ணாவும், கலைஞரும் புகழ் பெற்ற காலத்தில், எளிய தமிழ் நடையில் வசனம் எழுதி, ஸ்ரீதரும் எங்களைக் கவர்ந்தார்.

பட்த்தின் பிற்பகுதியில், மனநலம் பாதிக்கப்பட்ட சிவாஜி, பத்மினி, தங்கவேலு, ஈ.வி.சரோஜாவுடனான – ஒரு நாடோடி கும்பலுடன் சேர்ந்து

'நாடோடிக் கூட்டம் நாங்க தில்லேலேலோ – நாட்டில்
நல்லது கெட்டது தெரிஞ்சவங்க தில்லேலேலோ....
பாடான பாடுபட்டு தில்லேலேலோ – பாழும்
பணத்தைச் சேர்த்து வைக்காதவங்க தில்லேலேலோ...

– என்று பாடி ஆடுவார்.

ஒரு கட்டத்தில், சாவித்திரி சிவாஜியைத் தேடி, நாடோடிக் கும்பலின் கூடாரத்துக்கு வருவார். கடற்கரை, ஒட்டை பஸ், காதல் விளையாட்டை எல்லாம் நினைவுபடுத்துவார். சிவாஜி தனக்கு எதுவுமே நினைவுக்கு வரவில்லை. உங்களை நான் பார்த்ததே இல்லை என்று சொல்லி விடுவார்.

கலங்கிய கண்களோடு, ஏமாற்றமடைந்த சாவித்திரி செல்ல, வழியில் அவரைப் பத்மினி பார்த்து அதிர்ச்சியடைவார்.

சிவாஜியிடம் வந்து ''அந்தப் பெண் யார்? இங்கு ஏன் அவர் வந்தார்? உங்களுக்கும் அவருக்கும் என்ன தொடர்பு'' என்று குடைந்து எடுத்து விடுவார்.



'அமர தீபம்'...

உடைந்துபோன சிவாஜி ஓங்கிக் குரலெடுத்து,

''எந்த இடத்திற்கு வந்தால் என் வேதனை தீரும்
என்று எண்ணி வந்தேனோ, அந்த இடத்திலே
என் வேதனை அதிகமாகிவிட்டதே!
என் உள்ளத்திலே பற்றி எரியும் நெருப்பை
நீயாவது அணைப்பாய் என்று எதிர்பார்த்தேன்
ரூபா! எரியும் நெருப்பிலே எண்ணெய் வார்த்து
ஜ்வாலை விட்டெரியச் செய்துவிட்டாய்!

நான் யாரென்று எனக்குத் தெரியவில்லையே!
என் இறந்தகாலமே என் நினைவில் இல்லையே!
என் சிந்தனைச் சுவற்றில் மோதி மோதி
என் சித்தம் கலங்கிவிட்டதே!
நான் பசியால் பட்டினியால் களைத்துத்
துடித்தபோதுகூட இப்படித் துடிதுடித்ததில்லையே!
எனக்கு ஏன் இந்த வேதனை!
எனக்கு ஏன் இந்தக் கஷ்டம்...''

என்று உணர்ச்சிப்பிழம்பாய்த் துடிப்பார்!

பத்மினி அவரைச் சமாதானப்படுத்தி – 'துன்பம் சூழும் நேரம் - என்னைக் கொஞ்சம் பாரும் – இன்னல் யாவும் தீரும் – இன்பம் வந்து சேரும்' எனப் பாடுவார்...!

27 வயது ஸ்ரீதர் எழுதிய வசனம் இது...! 46 ஆண்டுகளுக்கு முன்பு பள்ளி மாணவனாய் இருந்தபோது என் மனத்தில் பதிந்தது...!

படத்தில் நினைவாற்றலை இழந்த, சிவாஜி பேசுவதற்காக எந்த வசனத்தை, அன்று ஸ்ரீதர் எழுதினாரோ, அதே வசனத்தை, இன்று ஸ்ரீதர் அவர்கள், மீண்டும் நினைவாற்றலைப் பெற ஆஸ்பத்திரியிலேயே நான் பேசிக் காட்டினேன்.

அவர் கண்களில் நம்பிக்கை ஒளி தெரிந்தது.

அடுத்து 'புனர்ஜென்மம்' படத்தில் குடிகார சிவாஜி, தன் தாயிடம் பேசும் வசனம் ஒன்று...

''அம்மா! கடவுள் ஓரவஞ்சனைக்காரர் அம்மா!''

''என்னப்பா சொல்றே?''

''எனக்கு மட்டும் நல்ல அம்மாவைக் கொடுத்த அந்தக் கடவுள் உனக்கு மட்டும் ஏன் மோசமான மகனைக் கொடுத்தார்..''

– இதைச் சொல்லி முடித்தவுடன் ஸ்ரீதர் கண்களில் நீர் சுரந்தது...! கன்னங்கள் அதிர்ந்தன. உதடு துடித்தது.

''சிவகுமார், என் டைலாக்கை எனக்கே சொல்லிக் காட்டறியா? முதல் வசனம் 'அமர தீபம்' படத்துக்காக நான் எழுதினது. ரெண்டாவது 'புனர் ஜென்மம்' படத்துக்கு நான் எழுதின வசனம். ரெண்டுமே சிவாஜி பேசின வசனங்கள்'' என்றார்.

டாக்டர் சந்தோஷப்பட்டார். துணைவி தேவசேனாவும், சி.வி.ராஜேந்திரனும், டைரக்டர் எம்.பாஸ்கரும் நெகிழ்ந்தனர். மேற்கொண்டு ஏதாவது சொல்லுங்கள் என்றனர்.

'சார்! இந்தியா – பாகிஸ்தான் சண்டை நடந்தப்போ, யுத்தப் பிரச்சார டாக்குமெண்டரி ஒண்ணு நீங்க படமாக்குனீங்க...! எல்லா நடிகர்களுக்கும் நீங்களே டயலாக் எழுதிக் கொடுத்து நடிக்கவச்சுட்டு, கடைசில, நீங்க எழுதின வசனத்தை, நீங்களே பேசி நடிக்க முடியாம, 6 'டேக்' வாங்கனீங்களே...? ஞாபகம் இருக்கா'' என்றேன். 1967-இல் நடந்த சம்பவம் இது.

''நல்லா ஞாபகம் இருக்கு...! சிவாஜி – பத்மினி, ஜெமினி – முத்துராமன்னு எவ்வளவோ பெரிய நடிகர்களுக்கெல்லாம் நான் வசனம் சொல்லிக் கொடுத்து படமெடுத்திருக்கேன்.

''ஆனா, காமிரா முன்னால, நான் எழுதின நாலுவரி வசனத்தை என்னால ஒழுங்கா பேசமுடியலே. 6 'டேக்' ஆயிடுச்சு. எனக்கே அசிங்கமாப் போச்சு...

''நான் நடிக்கறப்போ, ஸ்டார்ட் – கட் சொன்னது யார் தெரியுமா...? நடிகர் எஸ்.எஸ்.ஆர்...'' என்று தெளிவாகச் சம்பவங்களை நினைவு கூர்ந்து, பேசினார்.

தேவசேனா கண்கள் பனித்தன. 'ரொம்ப தேங்க்ஸ்ங்க' என்றார். ஸ்ரீதரை அவர் திருமணம் செய்தபோது, திரைப்படக் கதாநாயகிகளே பொறாமைப்படும் வண்ணம் செக்கச் செவேர் என்று, வாட்ட சாட்டமாக அழகும் இளமையும் ததும்பக் காட்சியளித்தவர் தேவசேனா.

செல்வமும் செல்வாக்கும் மிகுந்த ரெட்டியார் குடும்பத்தில் செல்லமாக வளர்ந்த பெண்மணி அவர்...!

ஒரு குழந்தையைக் கவனிப்பதுபோல இன்றும் ஸ்ரீதரை அவர் கவனித்துக் கொள்கிறார்.

படைப்பாளிக்குக் கிரீடம் பெற்றுத்தந்த இந்த உன்னதக் கலைஞனோடு, 'யாரோ எழுதிய கவிதை' என்ற படத்தில் நானும் பணியாற்றியதைப் பெருமையுடன் நினைத்துப் பார்க்கிறேன்.

---

# 36



## ஜென்டில்மேன் முத்துராமன்

1981 அக்டோபர் 16–ஆம் தேதி காலை மணி 6.30! ஊட்டி முழுக்க, சாம்பல் பூசியதுபோல அடர்த்தியான பனி மூட்டம். கால்ஃப் காட்டேஜில் அதிகாலை எழுந்து, குளித்து, பிரார்த்தனை முடித்து, ஒப்பனை செய்ய ஸ்டூலில் உட்காருகிறேன்.

எதிரேயுள்ள கண்ணாடி ஜன்னல் வழியே சகோதரர் முத்துராமன், முழுக்கைச் சட்டையும், ஸ்கார்ஃபும், ஃபுல் பாண்டும் ஷூவுமாக ஓட்டப்பயிற்சி செய்கிறார். கடந்த ஒரு வாரமாக எனக்கு ஓய்வு, அவருக்கு படப்பிடிப்பு. இன்று அவருக்கு ஓய்வு நாள்.

சென்னை கடற்கரையோரம், காந்தி சிலையிலிருந்து கண்ணகி சிலை வரை 'இனிமேல் விடாமல் ஓட்டப் பயிற்சி செய்து, உடம்பை அழகு படுத்த வேண்டும்' என்று அந்த ஆண்டு காந்தி பிறந்த நாளில்தான் ஓடத் துவங்கினேன்.

ஊட்டி வந்ததும், அதிகாலை, கால்ஃப் காட்டேஜிலிருந்து ஹிந்துஸ்தான் போட்டோ ஃபிலிம் தொழிற்சாலைவரை ஓடித் திரும்பினேன்! வியர்த்து விறுவிறுத்து வரும் என்னைப் பார்த்து, ''சிவகுமாரா! ஊட்டி சீதோஷ்ணத்தில் ஓட்டப் பயிற்சி பண்ணாதப்பா. மலைமேலே பிராண வாயு குறைவாயிருக்கும். இருதயத்துக்கு ரொம்ப ஸ்ட்ரெயின்! எனக்கு B.P. உண்டு. அதனால் ரூமுக்குள்ளேயே எக்சர்ஸைஸ் பண்ணிக்குவேன்'' என்றார்.

''ஊட்டிலே 'ஜாகிங்' பண்ணக் கூடாதுதான். வெயில் வந்த பிறகு மரம், செடிகள்லாம் சுவாசிக்க ஆரம்பிச்சப்பறந்தானே நான் ஓடறேன்!'' என்றேன்.

எனக்கு அட்வைஸ் பண்ணியவருக்கு என்ன தோன்றியதோ! முந்தைய இரவு காஸ்ட்யூமரை வரவழைத்து, 'எனக்கு ஜாகிங் டிரஸ் வேணும்பா' என்று கேட்டு வாங்கி மாட்டிக்கொண்டு ஓடுகிறார்.

மேக்கப் பண்ணிக் கொண்டிருக்கிறேன். இன்னும் 5 நிமிடத்தில் முடிந்து விடும்...!

அச்சமயம், ஒருவர் ஓடி வந்தார். சத்யஜோதி பிலிம்ஸ் குழுவைச் சேர்ந்தவர் அவர்.

''சார் சார்! நடிகர் முத்துராமன் ரோட்ல விழுந்து கிடக்கிறார். சீக்கிரம் வாங்க'' என்றார்.

பதறியடித்துக்கொண்டு பாதைக்கு ஓடினோம். அதற்குள் நண்பர்கள், காரில் அவரை ஏற்றிக்கொண்டு போய் டாக்டரிடம் காட்டியிருக்கிறார்கள்.

'மாரடைப்பு ஏற்பட்டு விழுந்த இடத்திலேயே உயிர் போய்விட்டது' என்றாராம் டாக்டர்.

காட்டேஜில் அவர் அறைக்குக் கொண்டுவர, காரிலிருந்து அவரைத் தூக்கி வந்தோம்! படுக்கையில் கிடத்துவதற்கு முன்னர், உட்கார்ந்த நிலையில் வைத்தோம். திடீரென்று எனக்கு அவர் லேசாக சுவாசிப்பது போலத் தோன்றியது!

''ஐயோ! அண்ணன் உயிரோட இருக்காரு! செத்துப் போயிட் டாருன்னு அவசரப்பட்டுச் சொல்லிட்டாங்க! போயி வேற டாக்டரைக் கூட்டிக்கிட்டு வாங்க! நீலகிரித் தைலம் இருந்தா வாங்கிட்டு வாங்கம்மா'' என்று கூச்சலிட்டேன்.

நெஞ்சிலும் தலையிலும் நான் தைலத்தைத் தேய்க்க, நடிகை ராதாவும் அவர் தாயார் சரசம்மாவும், உள்ளங்கைகளிலும் உள்ளங்கால்களிலும் தேய்த்தனர்.

அனைவர் கண்களிலும் நீர் முத்துக்கள் முட்டிக்கொண்டு நின்றன. திடீரென்று அவர் எழுந்து உட்கார்ந்து, வாய்விட்டுச் சிரித்து, 'உங்களை யெல்லாம் எப்படி ஏமாத்தினேன் பார்த்தீங்களா!' என்று சொல்லமாட்டாரா என்று ஒரு நப்பாசை.

'அண்ணா! கண்ணை முழிச்சுப் பேசுங்கண்ணா... ஏன் பிடிவாதம் பிடிக்கிறீங்க?' என்று உள் மனது கேட்டுக்கொண்டே இருந்தது. எல்லாமே பொய்யாகிப் போகவேண்டும் என்று வேண்டிக் கொண்டது.

கைகள் ஓயும்வரை தேய்த்தோம்!

இன்னொரு டாக்டர் வந்தார். பரிசோதித்தார். சிறு பிள்ளைகள்போல நாங்கள் செய்த முயற்சிகளைப் பரிதாபமாகப் பார்த்துவிட்டு, ''அவர் இறந்துபோய் அரை மணி நேரத்துக்குமேல ஆகுது. நீங்க செய்யற தெல்லாம் வீண் முயற்சி'' என்றார். டாக்டரின் இந்த வார்த்தைகளைக் கேட்டதும், இருதயம் ஒரு விநாடி நின்று விட்டது. நினைவும் பார்வையும் மங்கியது. கண்களை இருட்டு கவ்வியது.

இப்படி ஓர் இக்கட்டான நிலையினை இதற்குமுன் சந்தித்ததில்லை. பதற்றத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு, முத்துராமனின் ஒப்பனையாளர் பத்மனாபனை அழைத்துக்கொண்டு கால்ஃப் காட்டேஜ் ரிசப்ஷன் சென்று, சென்னைக்கு டிரங்க்கால் போட்டு, திருமதி முத்துராமனிடம் தொண்டை அடைக்க செய்தியைத் தெரிவித்தோம்.

திரும்பி அறைக்கு வருவதற்குள், செய்தி அறிந்து போலீஸ் வந்து விட்டது. காக்கி உடையில், கனத்த சரீரத்தில், இன்ஸ்பெக்டர் கேள்வி களைத் தொடர்ந்தார்.

''இந்த ரூம்ல, அவரோட்ட யார் தங்கினாங்க? நேத்து ராத்திரி, சாப்பாடு உங்க மெஸ்ஸிலேருந்து குடுத்தீங்களா? கால்ஃப் காட்டேஜ் சாப்பாடு சாப்பிட்டாரா? இன்னிக்குக் காலையில் அவருக்குக் காபி கொடுத்த பையன் யாரு? அவரு கீழே விழுந்ததைப் பார்த்தது யாரு? அவருகூட யாராவது ஓடினாங்களா?'' அவருடைய கடமையை அவர் செய்தார். பொறுமையாக பதில் சொன்னோம். ஒரு கட்டத்தில் பொறுக்க முடியவில்லை. ''சார்! ஒரு நிமிஷம் கூட வாங்க. சி.எம்.–க்குப் போன் பண்ணி முதல்ல இதைத்

தெரிவிச்சுட்டு உங்க கேள்விகளுக்குப் பதில் சொல்றேன்!'' என்று கூறி அவரை ரிசப்ஷனுக்கு அழைத்துச் சென்றேன்.

சென்னைக்குப் போன் போட்டபோது, 'சி. எம். எம்.ஜி.ஆர். பங்களூருக்குப் போயிருக்காரு' என்ற தகவல் வந்தது. அவருடைய மாம்பலம் ஆபீஸைத் தொடர்பு கொண்டோம். முதலமைச்சரின் உறவினர் குஞ்சப்பன் பேசினார். நடந்தவற்றை அவரிடம் விளக்கி, ''எம்.ஜி.ஆரிடம் தெரிவித்தால், 'பாடி'யை சென்னைக்கு எடுத்துச்செல்ல ஏற்பாடு செய்வது சுலபமாக இருக்கும்! பங்களூருக்கு போன் செய்து பாருங்கள்'' என்றேன்.

குழுவினர் அனைவரும் பச்சைத் தண்ணீர்கூட வாயில் ஊற்றவில்லை. டாக்டர் சர்டிபிகேட், போலீஸ் சர்டிபிகேட் வாங்கப் பரிதாபமாக அலைந்து கொண்டிருந்தனர். 'உடலை, ஒரு மாவட்டத்திலிருந்து அடுத்த மாவட்டத்துக்கு எடுத்துப் போக, கலெக்டரின் விசேஷ அனுமதி வேண்டும்' என்றார்கள்.

அதற்கு ஒருவர் ஓடினார். திருமதி ஜெயந்தி அலெக்ஸாண்டர் அப்போதைய நீலகிரி கலெக்டர். செய்தி கேள்விப்பட்டதும் தனது உதவியாளரை உடனே அனுப்பி, நிலைமையை அறிந்து வரச்சொல்லி சர்டிபிகேட் வழங்கினார்.

இதற்குள் ஊட்டி முழுக்கச் செய்தி காட்டுத் தீபோல பரவ, மக்கள் சாரிசாரியாக வரத் தொடங்கினார்கள். கால்ஃப் பகுதியை ஒட்டியுள்ள பெண்கள் கல்லூரிக்கு விடுமுறை விட்டுவிட, மாணவிகள் கூட்டமும் சேர்ந்துவிட்டது.

பனிச்சென்று ஆர்.எம். வீரப்பன் நினைவு வரவே, அவர் வீட்டுக்கு டிரங்க்கால் போட்டு ''சார்! எனக்கு நீங்க செய்ய வேண்டிய உதவி, ஊட்டிலே நல்ல கண்டிஷன்ல வேன் எதுவும் கிடையாது. அம்பாஸடர் காரில் உடலைக் கொண்டு வர்றது; ரொம்பவும் சிரமம். அதனால் சி.டி.சி. மினி பஸ்ஸோ, ஆஸ்பத்திரி ஆம்புலன்ஸ் வேனோ ஏற்பாடு செஞ்சு கொடுத்தீங்கன்னா, ரொம்பவும் உதவியா இருக்கும்'' என்றேன்.

''பதினைஞ்சு நிமிஷம் கழிச்சு கலெக்டரைப் போய்ப் பாருங்க. நான் அவங்ககிட்ட விவரத்தைச் சொல்றேன்'' என்றார்.

கலெக்டர் ஆபீஸுக்கு இன்னொருவர் ஓடினார். உடனே ஆம்புலன்ஸ் வேன் ஒன்றை ஏற்பாடுசெய்து அனுப்பி வைத்தார் கலெக்டர். ''வண்டியில் இன்ஜின் நல்ல கண்டிஷனில் இல்லை. மெதுவாக ஓட்டும்வரை பிரச்சினை இருக்காது'' என்றார் டிரைவர். நான்கு டயர்களும் தேய்ந்துபோய் டியூப்புகள் வெளியே தெரிந்தன.

மீண்டும் டயர் கம்பெனிக்கு வேனை அனுப்பி, புது டயர் மாற்றி எடுத்து வந்தபோது பிற்பகல் 2.15 – ஐ தாண்டிவிட்டது.



'காவல் தெய்வம்'

சத்யஜோதி குழுவினர், நண்பர் கமலஹாசன், இயக்குநர் பாலுமகேந்திரா, தயாரிப்பாளர் தியாகராஜன் மற்றும் கலைஞர்கள், மாலையணிவித்து மரியாதை செலுத்த, சோகச் சுமையுடன் வேன் புறப்பட்டது. அதைத் தொடர்ந்து எங்கள் குழுவினர் காரில் வந்தனர்...

'ஊட்டியில் படப்பிடிப்பு' என்று எப்போது தயாரிப்பாளர்கள் சொன்னாலும், உடனே 'சில்'லென்ற உணர்வு பொங்கி மனத்தைக் குளிர்விக்கும்...!

அந்தத் துயர நிகழ்ச்சிக்குப் பிறகு, எப்போது ஊட்டிக்கு வந்தாலும், மலையடிவாரத்திலே இந்தத் துயர நினைவு, விரிந்து நின்று நெஞ்சை அழுத்துகிறது...!

சேவா ஸ்டேஜின் 'வடிவேலு வாத்தியார்' நாடகம் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி சபா ஹாலில் நடக்கிறது. நடிக நண்பர் ஜெயராமன் அழைப்பில் சென்ற நான், அன்றுதான் முதன் முதலாக சகோதரர் முத்துராமனை மேடையில் பார்க்கிறேன். ஆஜானுபாகுவான தோற்றம், முறுக்கு மீசை, மிடுக்கு நடை, ஜிப்பா, அங்கவஸ்திரம், கைத்தடியுமாய் ஜமீன் வேடத்தில் ஜமாய்க்கிறார்.



திரைப்பட வாய்ப்புக்கு ஏங்கிய நாள்களில், தூத்துக்குடி கணபதி நாடார் இவருக்கு ஒரு சைக்கிள் வாங்கிக் கொடுத்து, மாதச் செலவுக்குப் பணமும் அனுப்பி, ''ஒரு சினிமா கம்பெனி விடாமல் ஏறி இறங்கு முத்துராமா! உன்னோட திறமைக்கு ஒரு நாள் நீ பெரிய ஸ்டாரா வருவே!'' என்று ஆசீர்வதித்து ஆதரித்த நிகழ்ச்சி மனத்திரையில் ஓடிற்று...!

'சகோதரி' படத்தில் ஓவியர் வேடம் அவருக்கு. ஏதோ வங்காள நடிகரோ என்று நினைக்கும் அளவுக்கு முகத்தோற்றம். கூர்மையான நாசி, ஒளிமிகு கண்கள். 'பேஸ்' வாய்ஸில் மெலிதான உச்சரிப்பு. சிக்கென மனத்தில் ஒட்டிக்கொண்டார்.

அடுத்து 'நெஞ்சில் ஓர் ஆலய'த்தில் கனமான வேடம். 'காதலிக்க நேரமில்லை' படத்தில் கலகலப்பான கிளாமர் வேடம்.

திரையில் நானும் நடிக்கத் தொடங்கியபோது, 'தாயே உனக்காக' படத்தில் எங்கள் முதல் சந்திப்பு. 'காவல் தெய்வம்' படத்தில் சிறைக் கைதிகளாக நடித்தபோது நட்பில் நெருக்கம் ஆரம்பமாயிற்று.

'எங்கம்மா சபதம்' படத்தில் அண்ணன் தம்பியாய் அட்டகாசம் செய்தோம். 'காரைக்கால் அம்மையார்', 'ராஜராஜ சோழன்' போன்ற புராண சரித்திரப் படங்களிலும் இணைந்து மகிழ்ந்து பணியாற்றினோம்.

''சிவகுமாரா! நீ கால்ஷீட் கொடுக்கறமுறை, பிடிவாதமா சில வேஷங்களை ஒதுக்கற சாமர்த்தியம்..., இதெல்லாம் என்னால் கடைப்பிடிக்க முடியலேப்பா..!'' என்று அங்கலாய்ப்பார்.

செட்டுக்குள் அவருக்கு 'வெடிச் சிரிப்பு வேந்தன்' என்று பெயர். எந்த ஜோக் சொன்னாலும் குழந்தை மாதிரி படாரென்று சிரித்து விடுவார்.

எல்லா நடிகைகளோடும் கண்ணியத்தோடு பழகி 'ஜென்டில்மேன்' என்று பெயரெடுத்தவர்.

கால் பந்தாட்டம் என்றால் உயிர் அவருக்கு. உலகக் கால் பந்தாட்ட வீரர் பீலே, கல்கத்தா வந்திருந்தபோது நேரில் போய் அறிமுகப்படுத்திக் கொண்டு அளவளாவி மெய்சிலிர்த்துப் போனார்.

எல்லா வேடமும் ஏற்று, அனைவருக்கும் பிடித்தமாதிரி நடிக்கத் தெரிந்த அந்த நல்ல மனிதருக்கும் சோதனை நாள்கள் வரவே செய்தன.

சொந்தமாகப் படம் தயாரித்தார். 'நீங்க ஹீரோவா நடிக்க வேண்டாம். நடிகர் விஜயனுக்குத்தான் இப்போ மார்க்கெட். அவரைப் போட்டுப் படம் எடுங்க' என்று விநியோகஸ்தர்கள் கூறினார்கள்.

அவர்கள் சிபாரிசு செய்த விஜயனையே போட்டு, கஷ்டப்பட்டுப் படத்தை முடித்தார். 'அந்த நடிகருக்குத்தான் இப்போ மார்க்கெட் போயிட்டுதே, அவருக்குப் பதில் நீங்களே நடிச்சிருக்கலாம்' என்று, அதே விநியோகஸ்தர்கள் திருப்பிப் பேசினார்கள். தவித்துப் போனார்.

ஏ.வி.எம். நிறுவனம், அவர் திரையுலக வாழ்வில் திருப்புமுனை ஏற்படுத்த ஒரு வாய்ப்பளித்தது. அதைத் தொடர்ந்து திருப்பூர் மணி தன்னுடைய 'ஆயிரம் முத்தங்கள்' படத்துக்கு ஒப்பந்தம் செய்து ஊட்டிக்கு அழைத்து வந்தார். வேலைக்கு வந்த இடத்தில் விபரீதம் நடந்துவிட்டது...!

வேன், முத்துராமன் வீட்டை அடைந்தபோது, விடியற்காலை ஐந்து மணி ஆகிவிட்டிருந்தது. திரையுலகினர், அரசியல் பிரமுகர்கள், போலீஸ் இலாகாவினர்... என அந்த நேரத்திலும் பெரிய கூட்டம் காத்திருந்தது.

சிரித்துக்கொண்டு, பத்து நாள்களுக்குமுன் விடைபெற்றுச் சென்றவரை, படுக்கவைத்துத் தூக்கி வந்ததைப் பார்த்ததும் மயக்கமாகி விட்டார் அவர் துணைவியார்.

அந்தச் சூழ்நிலையை விளக்க என் வசம் வார்த்தைகள் இல்லை.

நடிகர் திலகம் வந்தார். பத்திரமாகக் கொண்டுவந்து சேர்த்ததற்குப் பாராட்டினார். சோர்ந்துபோன எங்களைப் பார்த்து, ''வருத்தப்படாதேப்பா! பிறப்பும் இறப்பும் நம்ம கையில இல்லை! போர் வீரனுக்கு அழகு, போர்க்களத்தில் வீர மரணமடையறதுதான். அதுமாதிரி, முத்துராமன் படப்பிடிப்புக்குப் போன இடத்தில் உயிர்விட்டது பெரிய பாக்கியம். இன்னும் சிறப்பா சொல்லணும்னா, நடிக்கறப்போ உயிர் பிரியறதுதான் நடிகனுக்குப் பெருமை.

''நடிகர் இனத்தில் அந்தப் பெருமை நாடக நடிகர் எஸ்.எஸ். விஸ்வநாத தாஸுக்கு மட்டும்தான் கிடைச்சது. அந்த மாதிரி பாக்கியம் யாருக்குக் கிடைக்கும்'' என அவர் கூறிய வார்த்தைகள் சற்றே ஆறுதலாய் இருந்தன.

---

37



# மும்பையில் மதன மாளிகை

1976. பம்பாயில் ஒபராய் – ஷெராட்டன் நவீன ஹோட்டல் கட்டி முடிக்கப்பட்ட சமயம். முழுக்க முழுக்கப் பம்பாயிலேயே படத்தை எடுத்து முடிக்கிறாற்போல் கதை வசனம் எழுதிக் கொடுத்தார் மறைந்த கதாசிரியர், டி.என்.பாலு அவர்கள்:

இறந்துபோன மகாராஜா ஒருவரின், பிரிந்துபோன பிள்ளைகள் - எப்படி ஒன்று சேருகிறார்கள் என்பதை, பொழுது போக்கு அம்சங்களுடன் சுவைபட விளக்கியிருந்தார் பாலு. 'மதன மாளிகை' படம் கே. விஜயன் டைரக்‌ஷனில் முதலில் பதினான்கு நாள்களும், அடுத்த முப்பது நாள்களுமாக, இரண்டு ஷெட்யூலில் படத்தை முடிக்க எல்லா ஏற்பாடுகளையும் செய்தார் தயாரிப்பாளர் என்.வி. ராமசாமி.

ஒபராய் - ஷெராட்டன் ஒரு மினி சொர்க்கலோகம். உலகில் உள்ள மிகச் சிறந்த நவீன ஹோட்டல்களில் என்ன வசதிகள் இருக்குமோ அவையனைத்தும் அங்கிருந்தன.

ஹோட்டலின் ஆறாவது மாடியில் நீச்சல் குளம். காலை பத்து மணிக்கு நீச்சல் குளம் கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும்! உலகின் பல்வேறு நாடுகளிலும் பெரிய உத்தியோகம் பார்ப்பவர்கள், வசதி மிக்கவர்கள், இந்தியாவுடன் கூட்டாகத் தொழில்புரிபவர்கள் அனைவரும், அழகிய மதுக் கோப்பைகளுடன், ஆனந்தமாக நீரில் மிதப்பார்கள்.

எவ்வளவுதான் ஒப்பனை செய்து உயர்ரக உடைபோட்டாலும், தலைமுறை தலைமுறையாகச் செழித்து வளர்ந்த சூழ்நிலையில் பிறந்த அவர்கள் முன்பு, நம் செயற்கை அழகு பல்லிளிக்கும்.

ஹோட்டல் சிப்பந்திகளைப் பற்றிக் கேட்கவே வேண்டாம். எல்லோருமே செக்கச் சிவந்த நிறம். வாயிற் காவலாளியாக நிற்பவர்களின் உயரம், சுமார் ஆறடி நான்கு அங்குலமிருக்கும். அதற்குமேல் இறகு செருகிய கிரீடம் போன்ற தொப்பி! கையில் எட்டு அடி நீளத்தில் தங்க வண்ணப் பூண்போட்ட ஈட்டி!

பம்பாயில் வாடகைக் கார்களும், சொந்தக் கார்களும் நல்ல 'கண்டிஷ'னில் இருக்குமே தவிர, தோற்றத்தில் புதிது போன்றோ, சுத்தமாகவோ இராது. எங்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்ட கடமுடா டாக்ஸியில் ஒபராய் வாசலில் வந்து இறங்குவோம்.

சம்பிரதாயத்துக்காகக் காவலாளி, தன் உயரத்தை மூன்றடியாக மடித்து 'குட்மார்னிங்' சொல்லி, கார் கதவைத் திறப்பான். அந்த அழகான கார் அந்த நேரம் பார்த்து மக்கர் செய்யும். கைப்பிடியோடு அவர் போராடுவதற்குள் அடுத்த கதவைத் திறந்து, நாங்கள் கூச்சத்துடன் இறங்கி உள்ளே ஓடி விடுவோம்.

சினிமா கம்பெனிகள் தோன்றிய காலத்திலேயே வந்துவிட்ட சீதனப் பொருள்! அலுமினிய டிபன் காரியர்! உலகின் எந்த மூலையில் படமெடுத்தாலும், சந்திர மண்டலத்துக்கே போய்ப் படப்பிடிப்பு வைத்துக்

கொண்டாலும், ஃபிலிம் டப்பாவுக்கு இணையாக, அங்கும் செல்ல வல்லது இந்த அலுமினியக் காரியர்!

ஒபராய் ஹோட்டலுக்குள், எங்கள் ஆள் மூலம், இது நுழைய முயன்றபோது, காவலாளி பதறிப்போய்த் துரத்தி விட்டான்.

ஹோட்டலிலேயே சாப்பிடலாமென்றால் நான்கு இட்லி – கொத்த மல்லி சட்னி – விலை 16 ரூபாய். (இது 1976இல்) இப்போது நான்கு மடங்கு கூடியிருக்கும். அசைவ உணவு விலை கேட்கவே வேண்டாம்.

'முக்கியமான கலைஞர்கள் மட்டும் ஓட்டலில் சாப்பிடட்டும், மற்ற படி குழுவினருக்கு டிபன் தொண்டுபோயே ஆகவேண்டும்' என்ற அவசியம் நேர்ந்தபோது, ஹோட்டல் நிர்வாகத்துக்கு எப்படியோ கடுக் காய் கொடுத்துவிட்டு, எங்கள் உதவியாளர் 'சினிமாவுலக ஸ்பெஷல் இட்லி வடை பொங்கலோ'டு நீச்சல் குளத்துக்கு வந்து, ஏதோ கடத்தல் பொருள் கை மாறுவதுபோல, அந்தக் கோடீஸ்வரர்கள் கூட்டத்தில், எங்கள் குழுவினருக்குப் பரிமாறினார்.

எச்சில் இலைகளை மெனக்கெட்டுக் கீழே எடுத்துப்போக வேண்டுமா என்று அலட்சியமாகச் சிலர் ஆறாவது மாடியிலிருந்து வீசியெறிய, ஹோட்டலுக்கு வந்து இறங்கும் பெரிய புள்ளிகள் மீது அவை பறந்து வந்து உட்கார, விஷயம் வெளிப்பட்டு விட்டது! விளைவு: அதன் பிறகு ஹோட்டல் கான்டீனில், உணவருந்த அனைவருக்கும் வழி செய்யப் பட்டது.

கதாநாயகியாக ஜெயசுதாவை ஒப்பந்தம் செய்திருந்தனர். என்ன காரணத்தாலோ, கடைசி நிமிடத்தில் அவரால் பம்பாய் வந்துசேர முடிய வில்லை. உடனே பல இடங்களில் அலைந்து 'அல்கா' என்ற இந்தி நடிகையை ஒப்பந்தம் செய்தனர். துணை வேடத்துக்கு 'ஸ்மிதா' என்றொரு பெண்மணி கிடைத்தார்.

படப்பிடிப்பின் இடையிடையே அவர்களுக்கு வசனம் சொல்லித் தரும் வேலையை நானும் ஸ்ரீகாந்தும் பார்த்துக்கொள்வோம்.

'பிரசிடென்ஷியல் சூட்', 'சிங்கப்பூர் சூட்' என்று ஹோட்டலின் அழகிய பகுதிகளையெல்லாம் தன் காமிராவுக்குள் பிடித்துக்கொண்டார் ஒளிப்பதிவாளர் வெங்கட்.

'வார்சோவா' என்ற பகுதியில் அவலை இறைத்ததுபோல் ஒருவகை மீன்களைப் பல ஏக்கர் அளவுக்குக் கடற்கரையில் காயப்போட்டிருந்தனர். மனோரமா, ஸ்ரீகாந்துடன் அங்கு இரண்டு நாள் படப்பிடிப்பு.

காய்ந்த மீனின் துர்நாற்றம் வயிற்றைப் புரட்டிக்கொண்டே இருக்கும். அசைவ உணவு அருந்துபவர்களுக்கே அந்த வாடை சகிக்க முடியவில்லை. பாவம், ஸ்ரீகாந்த் பகல் முழுக்க எதுவும் உட்கொள்ளவில்லை.

இரவு ஹோட்டலுக்கு வந்து சட்டையைக் கழற்றினால், அதன் உள்ளே இருந்து வந்த மீன் சூறை வாடை இரவு முழுக்கத் தூங்கவிடாமல் செய்தது.

மொத்தமாக, நாற்பத்தைந்து நாள் படப்பிடிப்பில் எங்களை ரொம்பவும் கவர்ந்தது, பம்பாய் – பூனா பாதையில், 100 கிலோ மீட்டர் தொலைவில், 'நெரில்' ரயில் நிலையத்தையொட்டியுள்ள 'மாத்ரன்' மலைப்பகுதி தான்! சுமார் மூவாயிரம் அடி உயரமுள்ள அந்த மலைப் பிரதேசம் சுற்றுலாப் பயணிகள் மொய்க்குமிடம்.

மலையுச்சிக்குக் கார், பஸ், மோட்டார் சைக்கிள் எது செல்லவும் பாதை கிடையாது. மினி ரயில்கள் நாள் ஒன்றுக்கு மூன்றுமுறை மேலே செல்லும். மாத்ரன் பிரதேசத்தின் அமைப்பு, 'ஆக்டபஸ்' என்ற நீரில் வாழும் பிராணிபோல, அதன் மலைப் பகுதிகள் வால் வாலாகப் பலவாறு நீண்டு முடியும்.

ஒரு வால் பகுதியின் நுனிக்கு வந்து பார்த்தால், கீழே பள்ளத்தாக்கு! அதைத் தொடர்ந்து சமவெளி! அங்கிருந்து உயரும் அடுத்த வால்போன்ற மலைப்பகுதி! இயற்கையின் விசித்திர அழகு சிலிர்ப்பை உண்டாக்கியது.

'எவ்வளவு வேண்டுமானாலும் சாப்பிடுங்கள். ஆனால், உணவுப் பண்டங்களை வீணாக்காதீர்கள்' என்ற அறிவிப்புடன், அங்குள்ள அசோகா ஹோட்டலில் சாப்பிட்டது போன்ற அறுசுவை சைவ உணவை, இதுவரை எங்கும் நான் சாப்பிட்டதில்லை.

இரண்டு நாளில் படப்பிடிப்பை முடித்துக்கொண்டு பம்பாய் திரும்பினோம். அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் விஷமல்லவா...? சேர்ந்தாற்போல் ஒரு மாதம் பம்பாயில் தங்கி, தினமும், ஊர் எழுமுன் நாங்கள் எழுந்து, ஊர் துயில் கொண்டபின் உறங்கி உழைத்ததில், தொழில் மீதே இனம் புரியாத வெறுப்பு ஏற்பட்டது!

பம்பாய், லக்ஷ்மி கடாட்சம் பெற்ற நகரம்தான்! செல்வம் கொழிக்கும் பூமிதான். எங்குத் திரும்பினாலும் அழகின் வடிவமாகப் பெண்கள் கூட்டம் உண்டுதான்!

ஆனால், எதையோ தொலைத்துவிட்டு, மற்றவர்கள் கண்ணில் அது தென்படுவதற்குள், நாமே அதை எடுத்துவிட வேண்டும் என்று தேடுபவர்களைப்போல், அதிகாலை மூன்று மணியிலிருந்து இரவு ஒரு மணிவரை மக்கள் ஓடிக்கொண்டே இருக்கிறார்கள்! மீளமுடியாத சோகம் ஒன்று அவர்கள் முகத்தில் தவழ்கிறது! இதயத் துடிப்பை அதிகமாக்கும் பதற்றம் அவர்களிடம் தென்படுகிறது. ஆனால், அதிகமாக நடக்கும் பம்பாய் வாசிகளுக்கு மாரடைப்பு வருவதில்லையாம்!

குழந்தைகளுக்கு அப்பா யாரென்றே தெரியாது! நாற்றிருபது மைல் தொலைவில், பூனாவிலிருந்து பம்பாய்க்கு அதிகாலை 4 மணிக்கு எழுந்து புறப்பட்டு வந்து வேலை செய்து விட்டு, இரவு 11 மணிக்கு வீடு திரும்பும் அப்பாவை, குழந்தைகள் பார்க்க வழி ஏது? சனி ஞாயிறு நாள்களில் ஓவர் டைம் செய்தால், அதிகப் பணம் என்றால், அதையும் விடுவதில்லை.

அபூர்வமாகத் தீபாவளி – பொங்கலன்று, அப்பா வீட்டிலிருக்க நேர்ந்தால், ''ஏம்மா! உங்கூட சிரிச்சுச் சிரிச்சுப் பேசறாரே, அந்த அங்கிள் யாரும்மா?'' என்று குழந்தைகள் அப்பாவைக் காண்பித்துக் கேட்பதில் ஆச்சரியமில்லை!

கறுப்பு வெள்ளைப் படமெடுக்கவே யோசிக்கும் அக்காலத்தில், வண்ணப்படம் முழுக்க பம்பாயில் எடுத்து முடிக்கத் தயாரிப்பாளர் ஒருவர் கிடைக்கும்போது, அவருக்கு நம்மாலான உதவிகள் செய்ய வேண்டும். என்று நாங்கள் அனைவரும் சாதாரண ஹோட்டலில் தங்கி இருந்தோம்.

எங்கள் துரதிர்ஷ்டம் எங்கள் விடுதியை ஒட்டி மின்சார ரயில் பாதை இருந்தது. தினமும் பதினைந்து மணி நேரம் அலைந்து, வியர்த்து நடித்து ஒய்ந்து வந்து, அறையில் அப்போதுதான் சாய்வோம். உறக்கம் இறுக்கமாக அணைக்கும் வேளை. தலையை இரண்டாகப் பிளந்துவிட்டது போல, மின்சார ரயிலின் சக்கரங்கள் கிறீச்சிடும் ஓசையும், சைரன் ஓசையும் உலுக்கிவிடும்! அதன் பிறகு தூக்கமே பிடிக்காது...!

இப்படி எத்தனையோ இரவுகள்... யாருக்கும் தெரியாமல் பம்பாயை விட்டு ஓடிவிடலாமா என்றுகூடச் சில வேளை வெறி வந்துவிடும். திருமணமான புதிது. முதல் குழந்தை பிறந்து மூன்று மாதம்கூட ஆக வில்லை. முப்பது நாள்கள் அவர்கள் முகத்தைப் பார்க்க வழியில்லை.

சினிமா நடிகனுக்குச் சில சிக்கல்கள் உண்டு. மனைவியிடம் அன்பாக நாலு வார்த்தை அதிகமாகப் பேசிவிட்டால் 'என்ன சினிமா வசனமா' என்று கேட்டுவிடுவாள்; குறைந்தபட்சம் மனத்துக்குள் நினைக்கவாவது செய்வாள். அவளோடு பேசாமல் இருந்துவிட்டாலோ, 'நம்மையெல்லாம் நினைக்க அவருக்கு நேரமேது...? எல்லாக் கவர்ச்சியுந்தான் சினிமா உலகத்தில இருக்கே' என்று நினைத்து விடுவாள்.

இந்தச் சங்கடங்கள் போதாதென்று சென்னையிலிருந்து போன். மின்தடை காரணமாக, லாபோரெட்ரியில் ஆயிரம் அடி நெகடிவ், கழுவும் போது வீணாகிவிட்டது! பம்பாயில் அக்காட்சிகளை எடுக்க நடிக, நடிகையர் கால்ஷீட் கிடைக்கவில்லை. பிறகு, ஒருவாறாகச் சென்னை எண்ணூரில் எடுத்து இணைத்தோம்.

இவையனைத்தையும் மிஞ்சும் பேரிடியாக எங்கள் தலையில் இறங்கியது, எமர்ஜென்ஸி காலத்தில் இந்திரா காந்தி கொண்டுவந்த கடுமையான தணிக்கை விதிகள்.

ஜுஹு கடற்கரையில் துவங்கி ஆரி பால்பண்ணை, துளசி ஏரி, போரிவில்லி, கோட்பந்தர் கோட்டை என்று பம்பாய் முழுக்க நான்கு நாள்கள் படமாக்கின சண்டைக் காட்சிகள் குதறி எறியப்பட்டன. முகத்தில் கைபடக்கூடாது. ரத்தக் கறை கூடாது. ஆளைத் தூக்கி அடிக்கக்கூடாது. கற்பழிப்பு கூடாது என்று தீவிரமாகக் கத்தரி விளையாடியபோது, எங்கள் உழைப்பு விழலுக்கிறைத்த நீராகிவிட்டது. பல லட்சங்கள் செலவழித்து எவ்வளவோ கஷ்டப்பட்டு எடுத்த படம், படுதோல்வியடைந்தது. இது போல் சினிமாக் கலைஞர்கள் நெஞ்சில் எத்தனையோ ஈட்டிகள் பாய்ந்து உதிரக் கசிவை ஏற்படுத்துகின்றன. எப்போதோதான், ஒரு பூ மாலை வந்து அந்த ஈட்டிமீது விழுந்து எங்களுக்கு ஆறுதல் தருகிறது.

---



ஒரு சங்கீத வித்வான் இன்னொரு வித்வானை மனசாரப் பாராட்டமாட்டான். ஒரு எழுத்தாளன் இன்னோர் எழுத்தாளனைப் பாராட்டமாட்டான்.

ஆனால் சிவகுமார் நடிப்புத் துறையில் ஈடுபட்டிருந்த பலர் - தனக்கு நிகரான பல வெற்றிகளைப் பெற்ற பலர், முத்துராமன் - ரவிச்சந்திரன் - ராஜன் - ஜெய்சங்கர் மற்றும் சிவாஜி - எம்.ஜி.ஆர். என்று எல்லோருக்கும் மிகப்பெரிய கௌரவத்தையும் பாராட்டையும் கொடுத்து எழுதியிருக்கிறார்.

1-1-05, வெளியீட்டு விழாவில், சோ

# 38



நாகேஷ் ஓவியம் 1970

## நகைச்சுவை மன்னன் நாகேஷ்

**வ**ல்லவனுக்குப் புல்லும் ஆயுதம் என்பார்கள்.

குண்டும் குழியுமாக, இண்டும் இடுக்குமாக உள்ள மிகச் சாதாரண முகத்தை வைத்துக்கொண்டு, பெரிய ஹீரோக்கள் செய்தற்கரிய சாதனைகளைச் செய்துகாட்டியவர் அன்பிற்குரிய நாகேஷ்.

திறமையின் அடிப்படையில், நான் சிரம்தாழ்த்தி வணங்கும் கலைஞர்களில் நாகேஷும் ஒருவர். நடிப்பாற்றல் மிக்க அவரை, சிவப்புக் கம்பளம் விரித்து, திரையுலகம் அப்படியொன்றும் எளிதாக ஏற்றுக்கொண்டு விடவில்லை.

நண்பர் பாலாஜி பிரபல நடிகராக இருந்த நாள்களில், கிட்டத்தட்ட 'காட்ஃபாதர்' போல துணை நின்று, நாகேஷுக்குத் திரைப்பட வாய்ப்புகள் பெற சிரமப்பட்ட சம்பவங்கள் ஏராளம்...!

''இவரு என்னோட நண்பர். நல்ல நடிகர்...! என்னோட நாடகக் குழுவில் சிறந்த நகைச்சுவை ரோல்களைச் செய்யறார். நான் ஹீரோவா நடிக்கற இந்தப் படத்தில, இவருக்கு ஒரு சான்ஸ் குடுங்க. என் சம்பளத்தை வேணும்னா கொஞ்சம் குறைச்சிட்டு. அவருக்கு ஏதாவது தாங்க'' என்பார் பாலாஜி.

ஆனால், படத் தயாரிப்பாளரோ, அம்மை வார்த்துப் பள்ளங்கள் விழுந்துபோன நாகேஷ் முகத்தையும், ஒடிசலான உருவத்தையும் அலட்சியமாகப் பார்த்துவிட்டு, ''பாலாஜி! உங்களுக்கு வேணும்னா இன்னும் பத்தாயிரம் சேர்த்துக் குடுத்திடறோம். இவருக்கு ரோல் தர்றதுக்கில்லே'' என்று நிர்த்தாட்சண்யமாகப் பதிலளித்துவிட்டுப் போய் விடுவார்.

அப்படியெல்லாம் அவமானப் படுத்தப்பட்ட போதிலும், இடைவிடாது நாடகங்களில் நடிப்பதையும், திருமண விசேஷங்கள், அலுவலகப் பார்ட்டிகள் என்று எங்கு கூட்டம் கூடினாலும், நீலப் படுதாவைப் பின்னால் கட்டிவிட்டு முக்கால் மணி நேரமோ, ஒரு மணி நேரமோ தன் நடிப்புத் திறமையால் அந்தக் கூட்டத்தினர் மனத்தில் இடம் பிடிக்கும் சந்தர்ப்பங்களை அவர் நழுவவிட்டதே இல்லை.

திறமைசாலிக்கு அதிர்ஷ்டமும் துணை நின்றால் கேட்கவும் வேண்டுமா? பின்னாளில், எவ்வளவு லட்சங்கள் செலவு செய்து தயாரிக்கும், எத்தனை பெரிய படமாக இருந்தாலும் நாகேஷ் அதில் நிச்சயம் இருப்பார்! தாயாரிப்பாளரும், ஹீரோவும் ஒதுக்க நினைத்தாலும் விநியோகஸ்தர்கள், ஜாடையாக, ''அவரைப் போட்டுக் கொள்ளுங்கள், பணம் வேணும்னா கூடத் தருகிறோம்'' என்பார்கள்.

தியேட்டரில் படம் துவங்கி டைட்டிலில் நாகேஷ் பெயர் போட்டால், விசில் சத்தம் காதைப் பிளக்கும். படத்தில் அறிமுகக் காட்சியிலேயே ஏதாவது குறும்பு செய்து, கைதட்டல் வாங்கிவிடுவார். வெளியூர் படப்பிடிப்புகளுக்குப் போனால், வேடிக்கை பார்க்க வரும் பல்லாயிரக் கணக்கான ரசிகர்களை, இயற்கையாக தான் அடிக்கும் 'ஜோக்'குகள் மூலம் கவர்ந்து தன் பக்கம் இழுத்துக் கொள்வார். கூட்டம் அவர் பக்கமே செல்வதைப் பார்த்த ஒரு ஹீரோ, நாகேஷ் தோளில் கைபோட்டு இறுக்கிப்

பிடித்து அவரைத் தனியே விடாமல் தன்னோடு வைத்துக்கொண்ட சம்பவங்கள் பல உண்டு!

எந்த வேஷத்தையும் அனாயாசமாகக் கையாளும் ஒரு நடிகர் கிடைத்து விட்டால் திரைக் கதாசிரியர்களுக்குக் கொண்டாட்டம். அந்த நடிகரை மனத்தில் வைத்துக்கொண்டு புதுப்புது வேஷங்களையெல்லாம் கற்பனை செய்து, சுவைபட எழுதித் தள்ளுவார்கள்.

'திருவிளையாடல்' தருமி வேடமும், ஏ.பி.என். கற்பனையில் அப்படிச் சுவைபடத் தோன்ற, நாகேஷின் நடிப்பாற்றல்தான் காரணம்.

கே. பாலசந்தரின் நாடகங்களிலும், படங்களிலும் ஆரம்ப காலத்தில் நாகேஷ் காட்டிய திறமை, ஹாலிவுட் நடிகர்களுக்கே சவால் விடும் விதத்தில் இருந்தது.

'அஷ்டகோணலாக முகத்தையும், உடலையும் ஒடித்து நடிக்க வேண்டுமா, அறுபதடி உயரத்திலிருந்து குதிக்க வேண்டுமா, யாரும் செய்யாத நடன மூவ்மெண்டை Gracefulஆகச் செய்ய வேண்டுமா, அறுநூறு அடி நீள பிலிமில் ஒரே ஷாட்டில் உணர்ச்சிவசப்பட்டு நடிப்பை வெளிப்படுத்த வேண்டுமா – தன்னுடைய அபரிமிதமான நடிப்புத்திறமை மூலம், நடிகருக்கு அழகான முகம் அவசியமே இல்லை' என்று நிரூபித்த நகைச்சுவை நாயகர் நாகேஷ்!

நகைச்சுவை நடிகருக்கு வசனங்களை வெவ்வேறு விதமான ஏற்ற இறக்கத்துடன் 'டைமிங் சென்ஸுடன்' பேசும் ஆற்றல் அடிப்படைத் தேவை. அதில் நாகேஷ் 'மாஸ்டர்' என்று சொல்லலாம்! ஒரே வசனத்தைப் பத்து விதமான 'மாடுலேஷ'னில் (குரலின் ஏற்ற இறக்கத் தொனிகள்) வெவ்வேறு அர்த்தம் தொனிக்கிறாற்போல் சொல்லிக் காட்டுவார்.

ஒரு மனிதனுக்கு நல்ல நேரம் வரும்போது, அவனை நோக்கி அதிர்ஷ்டக் காற்று அடிக்கும் காலத்தில், அவன் சாதனைகள் புரிவான். அவன் திறமை பற்றி ஊரே பேசும் என்றுதான் கேள்விப்பட்டிருக்கிறோம்.

ஆனால், நாகேஷைப் பொறுத்த மட்டில் சோதனைகளின் உச்சத்தில், வேதனையின் விளிம்பில், எரிமலையின் சிரசில் இந்தச் சாதனைகளைப் புரிந்திருக்கிறார் என்றுதான் சொல்ல வேண்டும்.

வேறொரு மனிதனின் வாழ்க்கையில் இப்படிப்பட்ட நிகழ்ச்சிகள் நடந்திருக்கும் பட்சத்தில், நடைப்பிணமாகத்தான் காலத்தைக் கடத்தியிருக்க முடியும்.

1966இல் நட்சத்திரக் கிரிக்கெட்டும், விளையாட்டுப் போட்டியும் நேரு ஸ்டேடியத்தில் நடந்தது. ஓட்டப் பந்தயத்தில் முத்துராமன், ஏ.வி.எம்.ராஜன், பார்த்திபன், நாகேஷ் ஆகியோருடன் நானும் கலந்து கொண்டேன்.

கடைசிவரை நாகேஷ் என்னை முந்த நான் விடவில்லை. 'போட்டோ ஃபினிஷ்'ல் நாகேஷ் வென்றார். உடனே என்னைக் கட்டிப்பிடித்து, ''அழகுப் பையா! என்னப்பா இந்த ஓட்டம் ஓடறே?'' என்றார். ''இள ரத்தம், இந்த வயசிலகூட ஓடலேன்னா எப்படிங்க?'' என்றேன்.

வீடு திரும்பும்போது-முத்துராமன் பழைய மாடல் ஃபியட் வைத்திருந்தார்-அதில் மூவரும் ஏறிக் கொண்டோம். நாகேஷும் முத்துராமனும் நெருங்கிய நண்பர்கள். கார் கடற்கரைச் சாலை வழியே சென்றது. திடுமென்று அடைமழை பிடித்துப் பாதையே தெரியாத அளவுக்கு மழைத் துளிகள் அடர்த்தியாக விழுந்தன.

கொட்டும் மழையில் தொப்பலாக நனைந்தவாறு, காரை நிறுத்தி விட்டுக் கடல் அலைகளைக் காண நடந்து சென்றோம். அது ஒரு புது அனுபவம்! நான்கு கிலோ மீட்டர் நீண்ட அந்த மணல் பரப்பில் நாங்கள் மட்டுமே இருந்தோம்.

'ஃப்ளாஷ் பேக்' சொல்வதற்கு இப்படியொரு ரம்மியமான சூழ்நிலை யாருக்கு அமையும்...? ரயில்வேயில் பணிபுரிந்தவாறே திரைப் படங்களில் அரையும், குறையுமாக நாகேஷ் சந்தர்ப்பங்கள் பெற ஆரம்பித்து, கொஞ்சம் வருமானமும் கூட ஆரம்பித்த காலம்...!

தாராபுரத்திலுள்ள அம்மாவுக்குக் கடிதம் எழுதினார். 'இன்னும் சிரமப்பட்டுக் கொண்டுதானம்மா இருக்கிறேன். எந்த முன்னேற்றமும் இல்லை' என்று. பிறகு, மடமடவென்று கம்பெனிகளில் வரும் காசைச் சேர்த்தார். திடீரென்று ஒரு நாள் அம்பாஸடர் காரும், ஐம்பதாயிரம் பணமுமாக ஊர் சென்று அம்மாவை அதிரச் செய்ய வேண்டும் என்பது திட்டம்.

நினைத்தபடியே ஐம்பதாயிரமும், அம்பாஸடரும் அவரிடம் வந்த போது அம்மா இறந்துபோய் விட்டார்!

பணத்தையும் காரையும் எடுத்துக்கொண்டு தாராபுரம் நோக்கிப் பறந்தார். பழனி – தாராபுரம் பாதையில் ஊரையொட்டிக் கிழக்கு மேற்காக ஒரு பர்லாங் நீளத்தில் ஒரு பாலம் இருக்கிறது. மணி பதினொன்று... பையன் வருவான் வருவான் என்று பார்த்தவர்கள் ஏமாற்றத்துடன் அடுத்த வாரிசைக் கொண்டு தாயின் சடலத்துக்குத் தீ மூட்டினார்கள்.

பாலத்தின் ஒரு புறம் நாகேஷ். மறுபுறம் சுடுகாட்டில் தாயின் உடல் எரிகிறது. வேகமாக ஓட்ட வழியின்றி, பாலத்தின் நீளம் முழுக்க வைக்கோல் போர் வண்டிகள் வந்து கொண்டிருக்கின்றன.

''என் வாழ்க்கையில் மீள முடியாத சோகத்தைக் கொடுத்தது இந்தச் சம்பவம்தான்'' என்றார் நாகேஷ்.

பிறகு சென்னை வந்தவர், பதினேழு நாள்கள் படுக்கைக்குச் செல்லாமல், ஆம், ஒருநாள்கூட உறங்கச் செல்லாமல், எல்லாக் கம்பெனிகளுக்கும் கால்ஷீட் கொடுத்து இரவு பகலாக, பேய் பிடித்தவர்போல் ஒரு வெறியில் நடிக்க ஆரம்பித்தார்.

நிறையப் பணம் குவிந்தது. ஆனால், நிம்மதி மட்டும் வரவே இல்லை. தினமும் ஒரு படத்துக்கு இரண்டு மணி நேரம் வீதம், ஏழு அல்லது எட்டு படங்களுக்கு வேலை செய்வார்.

விடியற்காலை 3 மணிக்குப் படப்பிடிப்பு முடிந்தால், நேராகக் காரைக் கடற்கரைக்கு விடச்சொல்லி, கதவுகளைத் திறந்து வைத்து ஒரு மணி நேரம் ஓய்வெடுப்பார். அப்படியே வீடு சென்று குளித்துவிட்டு 6 மணிக்கெல்லாம் ஏதோ ஒரு ஸ்டூடியோவுக்குப் போய் விடுவார். பல சமயம் ஸ்டூடியோவிலும் குளிப்பார்...!

ஒரு வேதனையைக் காலம் மறக்கடிக்க முயன்றபோது, அடுத்து ஒரு சோதனை வந்தது. துரதிருஷ்டவசமாகக் கொலை வழக்கு ஒன்று குடும்பத்தையே உருக்குலைத்துச் சின்னாபின்னப்படுத்தியது.

வீட்டில் இருந்தால், அதன் நினைவுகளே தன்னைச் செல்லரிக்கச் செய்துவிடும் என்று படப்பிடிப்புத் தளங்களிலேயே வாழ்க்கையை ஓட்டினார்.

'தில்லானா மோகனாம்பாள்' படத்தில் ஷூட்டிங்குக்கான அனைத்து ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருந்தன. நாகேஷின் திறமையில் சொக்கி, மனத்தைப் பறிகொடுத்த ஏ.பி.என். ''வைத்தி வேஷத்துக்கு நாகேஷை புக் பண்ணிட்டு வாங்க'' என்று சொல்லியிருக்கிறார்.

''சார் அந்தக் கொலை வழக்கு விஷயமா நாகேஷ்கூட கைது ஆவாரோன்னு ஒரு பேச்சு அடிபடுது'' என்றார் தயாரிப்பு நிர்வாகி.

''அதனாலென்ன! அப்படி ஏதாவது அசம்பாவிதம் நடந்தா, நாகேஷ் வெளியே வந்ததுக்கப்புறம் அவர் 'போர்ஷனைப்' படமாக்குவோம். வைத்தி வேஷத்துக்கு நாகேஷ் இல்லாம படமெடுக்கறதா? போங்கய்யா'' என்றாராம் ஏ.பி.என்.

இதை நாகேஷ் சொன்னபோது, ஏ.பி.என்.னின் பெருந்தன்மையை நினைத்து நெகிழ்ந்து போனார்!

தன் வாழ்க்கையில் என்ன அவலங்கள் இருந்தாலும், தன் மனத்தில் எத்தனை சோகச் சுமையிருந்தாலும் அதையெல்லாம் மறைத்து, தன் நகைச்சுவையால் மக்களை விலா நோகச் சிரித்து மகிழச் செய்பவர்தானே மிகச் சிறந்த நகைச்சுவை நடிகர்!

---

39



# ஆச்சி மனோரமா

**ப**த்மஸ்ரீ மனோரமா... நகைச்சுவைக் கலைஞர்களில், அதுவும் ஒரு பெண்மணி, 'பத்மஸ்ரீ' பட்டம் பெற்றது உண்மையிலேயே பெரிய சாதனை! மனோரமா ஒரு 'ஆல்ரவுண்டர்'! பெண் சிவாஜி...! அடிப்படையில் நகைச்சுவை நடிகையாக இருக்கிறாரே தவிர, அவர் நாடகங்களிலும், திரைப்படங்களிலும் ஏற்காத வேடங்களே இல்லை

என்று சொல்லலாம். உயிர் மூச்சு அடங்கும்வரை நடித்துக்கொண்டே இருக்கவேண்டும் என்ற அர்ப்பணிப்பு அவர் வெற்றியின் ரகசியம்!

இந்தப் பட்டங்களையும் கௌரவங்களையும் பெறுவதற்காக அவர் சந்தித்த போராட்டங்கள், ஏக்கங்கள், சோகங்கள், ஏமாற்றங்கள் சொல்லி மாளாது.

விதை மண்ணுக்குள்ளே ஆழமாகப் புதைக்கப்பட்டாலும், வீறு கொண்டு முளைத்து எழுந்து, பூமிக்கு மேலே ஓங்கி வளர்ந்து விருட்சமாவது போல, மிகவும் ஏழ்மையான குடும்பத்தில் பிறந்து, லட்சிய வெறியுடனும், தளராத மனஉறுதியுடனும் கடுமையாக உழைத்து, கலையுலகில் சாதனை படைத்த பெண்மணிகள் வரிசையில் இவரும் முக்கியமானவர்.

'கொடிது கொடிது வறுமை கொடிது. அதனினும் கொடிது இளமையில் வறுமை' என்ற வரிகளின்படி, இளமையில் ஏக்கங்கலந்த துன்பங்களோடு வாழ்வைத் துவங்கி, சாரீர பலத்தால், கோயில் திருவிழாக்களிலும், மேடைகளிலும், சினிமாப்பாடல்களை உச்ச ஸ்தாயியில் பாடி, ஊர் மக்களைக் கவர்ந்து, வயது வருமுன் மேடைகளில் நடிக்கத் துவங்கி, வாலிப வயதில் திரைப்பட வாய்ப்புத் தேடி, வயதான தாயாருடன் சென்னையில் கால் பதித்தவர்...!

அவசரக் கோலத்தில் துவங்கிய இல்லற வாழ்விலும் புயல் வீசி விட்டது! குலக்கொழுந்தாகப் பிறந்த பிள்ளையை, உடன் வைத்துக் கொஞ்ச முடியாமல் ஊட்டியில் அனுப்பிப் படிக்க வைத்தார்.

படிப்பை முடித்துப் பட்டணம் வந்த அவன் வாழ்விலும் சோதனைகள்! இப்போது, சொந்தத்தில் மகனுக்கு மணம் முடித்து, ராஜராஜன் – அபிராமி மீனாட்சி என்ற செல்வங்களுக்கு, செல்லப் பாட்டியாக இருக்கிறார்...!

அந்த நாள்களில் நகைச்சுவை ஜோடிகளாக ரசிகர்கள் ஏற்றுக்கொண்ட காளி.என்.ரத்தினம் – சி.டி.ராஜகாந்தம், என்.எஸ்.கே. – மதுரம், தங்கவேலு – சரோஜா போல, நாகேஷ் – மனோரமா ஜோடி ஒரு கால கட்டத்தில் திரையுலகில் கொடிகட்டிப் பறந்தனர்..

நாகேஷ், மனோரமா, வி.கே.ராமசாமி குழுவுக்கு திரு. சின்னப்பா தேவர் நிரந்தரமாகத் தன் படங்களில் இடம் ஒதுக்கித் தந்தார்...!

நாகேஷுக்கு – ஒரு 'திருவிளையாடல்' தருமி...!

மனோரமாவுக்கு – ஒரு 'மோகனாம்பாள்' ஜில்ஜில் ரமாமணி! அருட்செல்வர் ஏ.பி.நாகராஜனின், கலையுலக வாரிசுகளாக, மனோரமாவும் நானும் மதிக்கப்பட்டோம்..

ஏ.பி.என். தயாரித்த எல்லாப் படங்களிலும் மனோரமா கட்டாயம் இடம் பெறுவார். 'திருமலை தென்குமரி' படம் திருப்பதி, திருத்தணி, மைசூர், குருவாயூர், மதுரை, கன்யாகுமரி ஆகிய திருத்தலங்களில், ஒரே மாதத்தில், அனைவரும் பஸ்ஸில் பயணம் செய்து, உருவாக்கப்பட்டது.

நாடகக் கலைஞர்கள்போல, ஒரே குடும்பமாக, ஒரேவிதமான மரியாதையுடன் அனைவரும் பழக அந்தப் படம் வாய்ப்பளித்தது.

'கண்காட்சி' படத்தில் நானும் குமாரி பத்மினியும் ஹீரோ - ஹீரோயின் என்றாலும் 9 வேடங்களில், மனோரமாவும் சுருளிராஜனும் துப்பறியும் அதிகாரிகளாக அற்புதமாக நடித்தனர்.

'கதாநாயகியாக நடிக்கமுடியவில்லையே' என்ற அவர் ஏக்கத்தை 'கொஞ்சும் குமரி' படத்தில் அவரை ஹீரோயினாக்கித் தீர்த்து வைத்தவர் மாடர்ன் தியேட்டர்ஸ் அதிபர், அமரர் டி.ஆர்.சுந்தரம் அவர்கள்...!

மனோரமா என்னுடைய படங்கள் பலவற்றில் நடித்திருக்கிறார். படத்தின் வெற்றிக்குத் துணை நின்றிருக்கிறார்.

1982 இல் இலங்கையில் 'தோட்டத் தொழிலாளர் மாநாடு' - நுவராலியாவில், அன்றைய அதிபர் ஜெயவர்த்தனே தலைமையில் நடைபெற்றது. அமைச்சர் - தமிழர் - தொண்டைமான் எங்களை அழைத்திருந்தார்.



'எங்கம்மா சபதம்' - படத்தில்



இலங்கையில் பாரதி வேடமேற்று மனோரமாவுடன் நடித்த போது...

'இந்தியா டுடே' என்ற தலைப்பில் கவிஞர் வாலி எழுதிய நாடகத்தின் ஒரு பகுதியை நானும் மனோரமா அவர்களும் மேடையில் நடித்தோம்.

நான் பாரதியாகவும் அவர் பூக்காரி கண்ணம்மாவாகவும் நடித்த பகுதி பார்ப்போரைப் பரவசம் கொள்ள வைத்தது.

என்ன திறமை இருந்தென்ன – கதாநாயகியாகப் புகழ்பெற ஏற்ற தோற்றப்பொலிவு, தனக்கு இல்லையே என்ற ஏக்கம் அவரது அடிமனத்தில் இருந்தது.

'கதாநாயகிகள் வாழ்வு, காலையில் மலர்ந்து மாலையில் வாடும் மலரைப் போன்றது. 10 வருடங்கள் நிலைத்து நின்றாலும், அந்தப் பத்து ஆண்டுகள் ஓடியதே தெரியாது! நீங்கள் சிரஞ்சீவி நடிகை' என்று அடிக்கடி சொல்வேன்!

ஆமாம்! இன்று, நான்கு தலைமுறைகளைக் கடந்து, ஆயிரம் படங் களைத் தாண்டிய ஆச்சியாக – தளராத நடைபோட்டுக் கொண்டிருக் கிறார் சகோதரி மனோரமா.

---



சிவகுமார் நடிகர் மட்டுமல்ல, சிறந்த ஓவியர். சுவாரஸ்யமாக பேசக்கூடிய மேடைப் பேச்சாளர். அபாரமான ஞாபகசக்தி மிக்கவர். இப்படியெல்லாம் பல முகங்களைக் கொண்ட சிவகுமார் இன்றையிலிருந்து ஒரு சிறந்த எழுத்தாளர் என்ற அங்கீகாரத்தையும் பெறுகிறார்.

1-1-05, வெளியீட்டு விழாவில், **அல்லயன்ஸ் ஸ்ரீநிவாஸன்**

# 40



## நடிகனும் பட்டதாரியும்

**20** ஆண்டுகளுக்குமுன், ஒட்டன் சத்திரத்தில், சித்ரா மருத்துவமனை திறப்பு விழா...! சகோதரர்கள் சின்னசாமி, தங்கவேலு இருவருமே டாக்டர்கள். இரு டாக்டர்களுக்கும் எனக்கும் முன் அறிமுகம் ஏதும் கிடையாது. ஆனால், இந்த மருத்துவமனையைக் கட்டும்போதே

'சிவகுமாரை வைத்துத் திறப்பு விழா செய்ய வேண்டும்' என்று முடிவு செய்திருந்தார்கள்.

' கட்டட வேலை முடிந்து, திறப்பு விழாவுக்காகச் சுமார் ஆறுமாத காலமாகக் காத்திருக்கிற செய்தி அறிந்து, உடனே தேதி கொடுத்தேன். பொள்ளாச்சி, உடுமலை, பழனி, திண்டுக்கல் உள்ளிட்ட எல்லாக் கிராமங்களிலும் போஸ்டர்கள் மூலமாகவும், பஸ்களில் தட்டி விளம்பரங்கள் செய்தும், திறப்பு விழா பற்றிய செய்தி வெளியே தெரியும்படி செய்திருந்தனர்.

பழனி சென்று குடும்பத்துடன் முருகனைத் தரிசித்துவிட்டு, காரில் ஒட்டன்சத்திரம் போனேன். ஊர் எல்லையில் மக்கள் திரளாக விழாவுக்குச் சென்று கொண்டிருந்தனர்.

ஊருக்குள் நுழைந்து சிறிது தூரம் செல்வதற்குள் கூட்டம் என்னை அடையாளம் கண்டுகொண்டது! இனி காருக்குள் இருந்தால் ஆபத்து என்று மடாரெனக் கீழே இறங்கி, அனைவரையும் கைகூப்பி வணங்கி விட்டு மக்கள் வெள்ளத்தில் நீந்த ஆரம்பித்தேன்.

கன்னத்தில் முத்தமிடுவோர், கன்னத்துத் தசையைக் கிள்ளிப் பரிசோதிப்போர், கைகுலுக்குவதாகச் சொல்லி, இறுக்கிப் பிடித்துக் கொள்ளும் விடாக்கண்டர்கள், அலாக்காகத் தூக்கித் தோளில் உட்கார வைத்துக் கொள்ள முயற்சிக்கும் முரட்டு ரசிகர்கள்!!

கூட்டத்தின் நடுவே அவதிப்பட்டாலும் பொக்கை வாய்ச் சிரிப்பு உதிர்க்கும் பாட்டிகள்! மாடிமீது நின்று நம் அவதியைப் பார்த்து ரசிக்கும் ஆண்கள், பெண்கள், குழந்தைகள்!

வெள்ளை வெளேர் உடையில் மடிப்புக் கலையாமல் வந்த நான் – கசங்கி, தலைமுடி கலைந்து, மூச்சு முட்ட மேடையில் ஏற்றப்பட்டேன்.

என்னோடு வந்த நண்பர்கள் சோமனூர் சுப்ரமணியம், கோவை பழனியப்பன், டாக்டர் வீரண்ணன் போன்றோரை மேடையேற்ற ஒரு போராட்டமே நடந்தது. தஞ்சை மருத்துவக் கல்லூரி முதல்வர், வாழ்த்துரை வழங்க 'மைக்' அருகே வந்தார். கூட்டம் 'ஓ'வென்று கூச்சல் போட்டது. எத்தனையோ கல்லூரி விழாக்களில், மாணவர்களின் ஆரவாரக் கூச்சல் களைக் கட்டுப்படுத்திய அனுபவம் உள்ளவர் என்றபோதிலும், அவரைப் பேசவே விடாமல் மக்கள் ஒரு முகமாகக் கூக்குரலிட்டனர்.

உடனே நான் மைக்கை வாங்கி, ''சகோதர சகோதரிகளே! இது நர்சிங்ஹோம் திறப்பு விழா நிகழ்ச்சி! தான் படித்த கல்லூரி முதல்வரின் ஆசியைப் பெற்றுத் தொழிலைத் துவங்க, உங்க ஊர் டாக்டர்கள் ஆசைப்

பட்டு, அவரை அழைத்து வந்திருக்கிறார்கள். அவர் அழைத்ததால்தான் உங்களையெல்லாம் பார்க்கும் சந்தர்ப்பம், எனக்கு இன்று கிடைத்திருக்கிறது. நீங்கள் இப்படிக் கூச்சல் போட்டால், என்னை அழைத்து வந்தது இடைஞ்சலாகப் போய்விட்டது என்று கருதுவார்கள். வாழ்த்துரை வழங்க நீங்கள் அவரை அனுமதித்தால், அதன்பின் எவ்வளவு நேரம் வேண்டுமானாலும் நான் உங்களுக்காகப் பேசுவேன்'' என்றேன்.

சலசலப்புக் குறைந்து, கொஞ்சம் அமைதி நிலவியது. உடனே வாழ்த்துரையை முடித்து, திறப்பு விழா நிகழ்ச்சிகள் மடமடவென நடந்தேறின. அதைத் தொடர்ந்து பலதரப்பட்ட மக்களின் கேள்விகளுக்குச் சளைக்காமல் மேடையில் பதிலளித்து, அவர்களின் விருப்பத்தை நிறைவேற்றினேன்...!

விழா முடிந்து திரும்பிய அந்த வேளையில், நடந்த நிகழ்ச்சியை மனசு அசை போட்டது...!

படித்துப் பட்டம் பெறும் டாக்டர்கள், வழக்கறிஞர்கள், இஞ்ஜினியர்கள், பேராசிரியர்கள், ஐ.ஏ.எஸ். அதிகாரிகள், இவர்களோடு நடிகர்களை ஒப்பிடலாமா? நடிகர்கள் அந்த அளவு உயர்ந்தவர்களா? இல்லை, படிப்புதான் மேலானதா...

கல்விக்கு என்றும் முதல் மரியாதை உண்டு. கற்றோர்க்குச் சென்ற இடமெல்லாம் சிறப்பு உண்டுதான்! கம்ப்யூட்டருடன் போட்டி போடும் மூளையுள்ள இளைஞர் சமுதாயம், ஒழுக்கத்தை உயிரினும் மேலாகப் போற்றும் சான்றோர் ஆகியோர் அறிவியல், மருத்துவம், விஞ்ஞானம் போன்ற துறைகளில் உலகப் புகழ் பெற்று நம்மோடு வாழ்கிறார்கள் என்பதையும் நாம் மறுக்க முடியாது. அப்படியானால் நடிப்புக்கலை சாதாரணமானதா? யாரும் எளிதில் செய்து பெயர் பெற்றுவிடக் கூடியதா...

எந்தக் கல்லூரியில் ஒருவன் இடம் பிடித்து விட்டாலும், எதிர் காலத்தில் ஏதாவது ஒரு பிரிவில் பட்டம் பெற்றுப் பட்டதாரியாகி, ஒரு தொழிலில் நிலைக்க வாய்ப்பிருக்கிறது.

திரையுலகில் நுழைபவர் அத்தனை பேருக்கும், தொழில் உத்தரவாதம் இருக்கிறதா? ஆறு கோடி மக்கள் வாழும் தமிழகத்தில், எத்தனை பேர் கதாநாயகனாகத் தாக்குப் பிடிக்க முடிகிறது? கோடிக்கு ஒருவரைக் கூடச் சொல்ல முடியவில்லையே!

எங்கோ ஒரு மூலையில், யாரோ ஒரு தம்பதிக்குப் பிறந்த ஒரு இளைஞனின் நடிப்பை, பல கோடி மக்களும் பார்த்து, தங்களை மறந்து கைதட்டி வரவேற்பது அவ்வளவு சுலபமாக நடக்கக்கூடியதா?

ஒரு நடிகன் பிரபலமாகும்வரை அவன் படும் கஷ்டங்கள், மனப் போராட்டங்கள்தான் எத்தனை! முன்னணிக்கு வந்தபின் தனி மனித சுகங்கள் அவனிடமிருந்து பிரிக்கப்பட்டு விடுகின்றன.

ஒரு தயாரிப்பாளரைக் கோபமாகப் பேச முடியுமா? நடிப்புத் தெரியாமல் காமிராமுன் முழிக்கும் புதுமுகத்திடம் எரிச்சலைக் காட்ட முடியுமா? ஒரு பத்திரிகை நிருபரை அலட்சியம் செய்யமுடியுமா? சுதந்திரமாய்த் தெருவிலே போய் ஆசைப்பட்டதை வாங்கித் தின்ன முடியுமா?

குளிர்சாதன வசதியுடன் வீடு இருக்கிறது என்ற பெருமைதான் மிஞ்சும். கொதிக்கிற வெயிலில் கோவூர் வயல் பகுதியில் நாள் முழுக்கக் கலப்பை பிடித்து உழ வேண்டும்!

கோட்டு, சூட்டு மாட்டிக் கொண்டு, உள்ளே வியர்த்து ஒழுக, மே மாதக் கொளுத்தும் வெய்யிலில், வெளியே ஊட்டியில் இருப்பதுபோல கற்பனை செய்துகொண்டு, உற்சாகமாகப் பாடி ஆடவேண்டும். காற்றுப் புகாத ஸ்டூடியோ தளங்களுக்குள், எரிக்கும் மின்சார வெப்பத்தில் அவிய வேண்டும்!

உயிர் நீத்த உடன் பிறப்புக்கு, உரிய சடங்குகளை முடித்த கையோடு, முதல் இரவுக்காக உறவு கொள்ளும் காட்சியில் நடிக்க வேண்டும்!

உத்தியோகமும் ஊதியமும் படித்தவர்களுக்கு நிச்சயமாகக் கிடைக்கிறது. நடிப்பை முழுக்கப் புரிந்து கொண்டவனுக்கு நடிப்புத்துறை, எந்த நேரமும் 'டாடா' காட்டிவிடக் கூடிய அபாயம் உண்டு.

நடிகனின் வாழ்க்கையில் எல்லாக் காலமும் வசந்த காலமாய் இருப்பதில்லை. குறிப்பிட்ட அந்தக் குறுகிய காலத்தில் சம்பாதிப்பதைச் சேர்த்து வைக்கவும் முடிவதில்லை. பினாமியாகச் சேர்த்தால், பின்னால் பட்டை நாமம் போட்டு விடுகிறார்கள். வருமானத்துக்கேற்ற செலவும் தொல்லையும் கூடிக்கொண்டே போகிறது.

எல்லாம் இருந்தும், எதையும் அனுபவித்து, உடலையும் மனத்தையும் தளரவிட்டு விடாமல் பார்த்துக் கொள்ளவேண்டியுள்ளது.

எந்தச் சுகத்துக்கும், எந்தக் கெட்டப் பழக்கத்துக்கும் அடிமையாகி விடாமல், கருவிபோல் செயல்படும் நிலைக்கு உடலையும் மனத்தையும் கட்டுப் பாட்டில் வைத்திருக்க வேண்டும். மாறுகின்ற தலைமுறைக்கு ஈடு கொடுத்துத் தொழிலில் நிலைக்க வேறு எதுவும் வழியில்லை.

'கவிக்குயில்' என்ற படத்துக்கு வளசரவாக்கம் பகுதியில் அப்போது திலீப் குமாருக்குச் சொந்தமாக இருந்த தோட்டத்தில் படப் பிடிப்பு நடைபெற்றது.

கதாநாயகன் தன் ஆசைக் காதலியை மணந்துகொள்ள அனுமதிபெற வேண்டி, அவள் அண்ணனைத் தேடி வருகிறான். வழியில் பலத்த காற்றும் மழையும் பிடித்துக் கொள்கிறது.

மலைச்சாரலில் அவன் நடந்து வரும்போது, ஒரு மரத்தின் கிளை ஒடிந்து விழுந்து, மலைச்சரிவில் உருண்டு வந்து, கதாநாயகனின் தலையைப் பதம்பார்த்து விடுகிறது. அடி பலமாகப் பட்டதில் நினைவிழந்து கீழே விழுந்து விடுகிறான் - படமாக்க வேண்டிய காட்சி இது. மின்சார வசதியில்லாத அந்தப் பகுதியில், இரவு படப்பிடிப்பை வைத்துக்கொள்ள ஜெனரேட்டர் ஏற்பாடு செய்திருந்தனர்.

மாமரங்களும் ஈச்சமரங்களும் கல்லும் முள்ளுமாய்ப் புதர்போல் காட்சியளித்த அந்தப் பகுதியையொட்டிய புறம்போக்கு நிலத்தில் குடிசை போட்டு ஐம்பது, அறுபது குடும்பங்கள் வசித்து வந்தன.

விமான இறகுகள் போன்ற மின்விசிறிகளை (ப்ரொபெல்லர்) பயன் படுத்தி, புயல் காற்று வீசுவது போலவும், தூசும் தும்புமாக அடிக்கும் காற்றில் நான் தடுமாறி வருவதும் முதலில் படமாக்கப்பட்டன.

அந்தத் தோட்டத்திலிருந்த பயன்படுத்தப்படாத கிணற்று நீரிலிருந்து வந்த முடைநாற்றத்தைக் கட்டுப்படுத்த பினாயில் பாட்டில் ஒரு டஜன் வாங்கி ஊற்றினோம். அடுத்து, தீயணைக்கும் படையினரின் உதவி கொண்டு கிணற்று நீரை எடுத்து வானத்தில் பீய்ச்சி அடிக்க வைத்தோம். சுமார் 40 அடி உயரம் சென்ற நீர், மழைத்துளி போல் நிலப்பரப்பில் விழுந்தது. லைட்டிங் வேலை முடித்ததும், காமிரா ஓட, நான் மழையில் நனைந்தவாறே ஓடுவது படமாயிற்று. அடுத்து, மரங்களின் நடுவே நடந்து செல்லும்போது, ஒரு கிளை ஒடிந்து வந்து தலையில் விழ வேண்டிய காட்சியும் எடுத்தாகி விட்டது.

கடைசியாக, மயங்கிய நிலையில் நான் தரையில் விழுந்து கிடப்பது படமாக்கப்பட வேண்டும்.

ஏற்கெனவே முழுக்க நனைந்து போயிருந்த நான், தரையில் படுத் தேன். படத்தின் காமிராமேன் ஆர்.என்.கே. பிரசாத், முகத்துக்கு லைட்டிங் செய்தார். ஷாட் எடுக்க ஆரம்பிக்கும்முன், என் மூக்கு அருகில் ஏதோ கெட்ட வாசனை வீசியது.

இரண்டு மணி நேரம் அசல் மழை பெய்ததுபோல், தீயணைக்கும் படையினர் அந்த நிலப்பரப்பில் நீர் பாய்ச்சியிருக்கிறார்கள். நான் படுத்திருந்தது தாழ்வான பகுதி. எனவே, மேட்டுப் பகுதியில் தேங்கிய நீர் தாழ்வான பகுதிக்குத் தாவி ஓடி, என் உடம்பை நனைத்தவாறு சென்று கொண்டிருந்தது.

அங்குள்ள குடிசைவாசிகளுக்குக் காலைக் கடன் முடிக்கத் தனியாகக் கழிப்பிடம் எதுவும் கிடையாது போலும். அந்தத் தோட்டத்து நிலத்தை அதற்குப் பயன்படுத்தி வந்திருக்கிறார்கள். மாதக்கணக்கில், வருடக்கணக்கில் இலவசமாக அந்த நிலத்துக்கு உரம்போடும் நற்பணியை அவர்கள் செய்துவந்தது இப்போது எனக்கு மட்டும் இடையூறாகப் போய்விட்டது. மனிதக் கழிவில் பழையதும், புதியதுமாக என் முகத் தருகே மிதந்து சென்றன!

டைரக்டர் தேவராஜ் (மோகன்) வந்தார். நிலைமையை விளக்கினேன். ''ஐயாயிரம் ரூபாய் செலவு செய்து ஆர்க், பூரூப், தீயணைக்கும்படை, ப்ரொபெல்லர் எல்லாவற்றுக்கும் தயாரிப்பாளர் கே.என். சுப்பு ஏற்பாடு செய்திருக்கிறார். மிஞ்சிப் போனால் இன்னும் ஒரு மணிநேரம் 'தம்' பிடித்துப் படுத்துக்கொள். சீக்கிரம் வேலையை முடித்து விடுகிறேன்'' என்றார்.

உடம்பையும் உள்ளத்தையும் மரக்கட்டையாக்கிப் படுத்துக்கொண் டேன். படப்பிடிப்பு முடிந்து வீடு திரும்பியபோது அதிகாலை 5–30 மணி. வாசலிலேயே குளித்து உடை மாற்றிக்கொண்டு 6–30 மணிக்குப் பிருந்தாவன் எக்ஸ்பிரஸ் பிடித்துப் பெங்களூர் சென்று, அன்று மாலை ரவீந்திர கலாட்சேத்ரா ஹாலில் நடைபெற்ற நாடகத்தில் பங்கு பெற்றேன்.

சுகம் மின்னலைப் போலவும், துக்கம் யுகம் அளவு நீண்டும் இருப்பதே வாழ்க்கை.

---

# 41



## டாக்டர் கலைஞர்

**த**மிழ் சினிமா இப்போது எப்படி இருக்கிறது?

தமிழில் பெயர் வைப்பதையே கேவலமாக, அநாகரிகமாக நினைக்கிறார்கள். 'லவ் டு டே', 'யூத்', 'கிங்', 'ப்ரண்ட்ஸ்' 'வின்னர்', 'த்ரீ ரோஸஸ்', 'ஒன் டூ த்ரீ', 'ஐ லவ் யுடா' – இப்படித் தடுக்கி விழுந்தால் ஆங்கிலப் பெயரில் படங்கள்...!

இன்றைய ஒரு தமிழ்ப்படத்தின் மொத்த வசனத்தையும் ஒரு முழுத் தாளில் எழுதி விடலாம். அதிலும் வாக்கியங்கள் குறைவு – வார்த்தைகள்! சில வார்த்தைகளில் ஒரு காட்சி முடிந்து விடுகிறது...! அவைகளும் பெரும்பாலும் ஆங்கில வார்த்தைகள்...!

''என்னய்யா... படத்தில் வசனமே குறைவாக இருக்கிறது'' என்று கேட்டால் ''இது 'மூவி', 'டாக்கி' அல்ல! பார்க்கும் படம் இது, பேசும் படமல்ல. பக்கம் பக்கமாக வசனம் பேசியது அந்தக் காலம்! எல்லா உணர்ச்சிகளையும் நாங்கள் கண்கள் மூலம், முகபாவம், கையசைவு மூலம், ஒளிப்பதிவு மூலம் காட்டி விடுகிறோம்'' என்று புத்திசாலித் தனமாகப் பதில் வருகிறது.

பாடல் வரிகள் சொல்லவே, வேண்டாம்...! மதுபானக்கடையில், போதையில் இருப்பவனுக்கு மேலும் போதை ஏற்றும் வரிகள். கவிஞர் களைக் கேட்டால், ''எனக்குப் பிடிச்சதை தயாரிப்பாளர் ஏத்துக்கமாட்டேங் கிறாரு! அதனால அவரு கேக்கறதை நான் எழுத வேண்டியிருக்கு – என்கிறார்கள்...

'வர்றவங்களுக்கு எது பிடிக்குதோ, அதைத்தான் நாங்க தர்றோம்' என்று விலைமாது சொல்வதற்கும் இதற்கும் என்ன வேறுபாடு?... அரசியல்வாதிகளுக்கும் கலைஞர்களுக்கும் எழுத்தாளர்களுக்கும் சமுதாயப் பொறுப்பு இருக்கிறது! மக்களுக்கு நல்லதைச் சொல்ல வேண்டிய தார்மீகப் பொறுப்பு அது.

இன்று, எல்லாப் பிரிவுகளிலும் பொதுநலம் மறைந்துபோய் சுயநலம் மிகுந்து விட்டது.

காவல் துறை மீதும் ஆட்சியாளர்கள் மீதும் ஏன், நீதித் துறை மீதும்கூட மக்களுக்கு அவநம்பிக்கை வந்துவிட்டது!

இதையே சாக்காக வைத்துக்கொண்டு கதாநாயகனை அநீதியை எதிர்த்து ஆயுதமேந்துபவனாகச் சித்திரிக்கிறார்கள். சாதிக் கொடுமையை எதிர்த்து, வர்க்க பேதத்தை எதிர்த்து ஊழல் ஆட்சியை எதிர்த்துப் போராடும் கதாநாயகனாக – வெட்டு, குத்து, கொலை – என்று தியேட்டர் திரைகளிலேயே ரத்தம் கசியும் அளவுக்கு வன்முறைக் காட்சிகள்!

படம் பார்த்துவிட்டு, கொட்டகையை விட்டு மக்கள் வெளியேறும் வேகத்தில் என்ன படம் பார்த்தோம், என்ன சொன்னார்கள், எந்தக் காட்சி மனத்தைத் தொட்டது என்று அவர்களால் சொல்ல முடிவதில்லை. காதல் என்பது இருமனங்களுக்கிடையே ஏற்படும் அந்தரங்கமான உணர்வு! அதைக் கண்கள் மூலமாகவும், கைவிரல்களின் சேர்க்கை மூலமாகவும்,

எப்போதோ ஒருமுறை அறிந்தும் அறியாமலும் இரு உடல்கள் உரசிக் கொள்வது மூலமாகவும் காட்ட வேண்டிய கவித்துவமான விஷயம்.

ஆனால் இன்றைய படங்களில், இரண்டு பேர் காதல் பாட்டு பாடுகிறார்கள் என்றால், பின்னணியில் 50 ஆண்கள், 50 பெண்கள் ஆடுகிறார்கள். கூடவே பாடுகிறார்கள்...! இந்தச் சூழ்நிலையில் அவர்களுக்குக் காதல் உணர்வு எப்படி வரும்?

டெர்மினேட்டர், ஜுராசிக் பார்க் – என்று 'ஹைடெக்' படங்களை வீடியோவில் பார்த்து, அப்படியே செட் போட்டு, கோடிகளை அதில் தொலைக்கிறார்கள்.

இன்றைய கணிப்பொறி யுகத்தில் அம்மாவுடன் அப்பா பேச நேரமில்லை! பிள்ளைகளைக் கொஞ்ச பெற்றோருக்கு நேரமில்லை! தாத்தா பாட்டிக்கு வீட்டில் இடமே இல்லை! வசதி படைத்தவர்கள்கூட தம் பெற்றோர், முதியோர் இல்லத்தில் இருப்பதே தமக்கு வசதி என்று நினைக்கிறார்கள்.

50 ஆண்டுகளுக்கு முந்தைய வாழ்க்கை எவ்வளவு அற்புதமாக இருந்தது! கூட்டுக் குடும்பங்கள் அன்றைய மனிதர்களுக்கு எவ்வளவு பாதுகாப்பையும் பாசத்தையும் கொடுத்தன?

அன்றைய திரைப்படங்களும் அண்ணன் – தங்கை பாசத்தையும், குடும்ப ஒற்றுமையையும், ஒருவருக்கொருவர் செய்யும் தியாக உணர்வையும், தேச பக்தியையும், எளிமையையும், உண்மையுமான வாழ்க்கையையும் எவ்வளவு அழகாகப் பிரதிபலித்தன?

தேனினும் இனிய தமிழ்மொழி, திரைப்படங்களில் எப்படி நடமாடியது என்று நினைக்கும்போது, ஏக்கம் நெஞ்சுக்குழியை அடைக்கிறது! பாகவதரும், பி.யு. சின்னப்பாவும், கே.பி. சுந்தராம்பாளும், டி.ஆர். மகாலிங்கமும் நடித்த படங்களில் அவர்களுடைய இசை ஞானத்தை, சாரீர பலத்தை வெளிப்படுத்தும் வகையில் 20 பாடல், 50 பாடல்கள் என்று இடம்பெற்றன.

60 ஆண்டுகளுக்கு முன்பே 'தணிகாசலம்' என்ற இயற்பெயர் கொண்ட இளங்கோவன், 'கண்ணகி' படத்தில் அடுக்கு மொழியில் வசனங்கள் எழுதிப் பாராட்டு பெற்றார். பி.யு. சின்னப்பா பிரமாதமாகப் பாடியிருந்த போதிலும், தன் அழகிய தமிழ் உச்சரிப்பால் தனித்துப் பெயர் பெற்றார்.

அவரைத் தொடர்ந்து அறிஞர் அண்ணா, 'ஓர் இரவு', 'வேலைக்காரி', 'சொர்க்க வாசல்' போன்ற படங்களில் கங்கை பிரவாகம் எடுத்தது போன்று, தங்கு தடையில்லா அடுக்கு மொழி வசனங்களைத் தீட்டி, தமிழ்ச் சினிமாவில் தமிழின் கொடி பறக்கச் செய்தார். அண்ணாவின் வழித்



கே.பாலசந்தரின் 'அரங்கேற்றம்' - 100வது நாள் விழா

தோன்றல் கலைஞர் அவர்கள், அதே அடுக்கு மொழி வசனங்களில் மின்சாரத்தைப் பாய்ச்சினார்.

''கோயிலிலே குழப்பம் விளைவித்தேன் - பூசாரியைத் தாக்கினேன் - குற்றம் சாட்டப்பட்டிருக்கிறேன் - இப்படியெல்லாம்! கோவிலிலே குழப்பம் விளைவித்தேன், கோவில் கூடாது என்பதற்காக அல்ல; கோவில் கொடியவர்களின் கூடாரமாக இருக்கக்கூடாது என்பதற்காக! பூசாரியைத் தாக்கினேன், அவன் பக்தன் என்பதற்காக அல்ல; பக்தி பகல் வேஷமாகி விட்டதைக் கண்டிப்பதற்காக'' இப்படிச் சாட்டையடி வசனங்கள்!

பர்மாவிலிருந்து தாயகம் திரும்பிய ஒரு இளைஞன், 15 ஆண்டுகளுக்குப் பிறகு பரிதாபமான நிலையில் தங்கையைப் பார்க்கிறான்...! அதை எப்படி விளக்குகிறார்? ''முத்து எடுக்கப்போய் கிளிஞ்சல் பொறுக்கிய கதையாக முடிந்துவிட்டது. தங்கையின் வீட்டிலே மகிழ்ச்சி தவழும், உற்சாகம் ஊஞ்சலாடும், களிப்பு பொங்கும் என்றெல்லாம் கனவு கண்டேன். ஆனால் அங்கே வேதனை விளையாடியது. என் தங்கையிடம்

நான் யாரென்று சொல்லி அவள் வாழ்வை வேதனைப் படுத்தக்கூடாது, அவள் அழுதது போதும்! இனியும் அழ வேண்டாம் என்று நினைத்தேன். ஆனால் என் அன்புத் தெய்வம் கல்யாணி, என் கண்களுக்கு அப்பால் வெகு தூரம் சென்றுவிட்டாள். தேடுகிறேன், தேடுகிறேன் தேடிக்கொண்டே இருக்கிறேன்! என்னே சோகம் இழையோடும் வரிகள்! 'பராசக்தி' படத்தைத் தூக்கி நிறுத்திய எழுத்துக்கள் அல்லவா அவை!

ராஜ குடும்பத்திலே பிள்ளை பிறந்தால் எப்படியெல்லாம் சீரும் சிறப்புமாகக் கொண்டாடுவார்கள் என்பதை 'மனோகரா' தர்பார் காட்சியில் ஒரு இடத்தில் கலைஞர் விளக்குவார்.

மனோகரன் சங்கிலியால் கட்டப்பட்டு, சபைக்கு இழுத்து வரப் படுகிறான். மன்னன் கேட்கிறான்.

புருஷோத் : ''என் கட்டளையைத் தெரிந்து கொண்டிருப்பாய் நீ?''

மனோகரன் : ''கட்டளையா இது! கரைகாண முடியாத ஆசை!

பொன்னும் மணியும் மின்னும் வைரமும் பூட்டி மகிழ்ந்து, 'கண்ணே! முத்தே! தமிழ்ப் பண்ணே!' என்றெல்லாம் கொஞ்சிக்குலவி, தந்தத்திலான கட்டிலிலே, சந்தனத் தொட்டிலிலே 'வீரனே! என் விழி நிறைந்தவனே! தீரர் வழி வந்தவனே' என்றெல்லாம் யாரைச் சீராட்டிப் பாராட்டினீர்களோ, அவனை – அந்த மனோகரனை – சங்கிலியால் பிணைத்துச் சபை நடுவே நிறுத்தி, சந்தோஷம் கொண்டாட வேண்டும் என்ற தங்கள் தணியாத ஆசைக்குப் பெயர் கட்டளையா தந்தையே?'' என்று கேட்பான் மனோகரன்.

2500 ஆண்டுகளுக்கு முன்பு, கிரேக்க நாட்டின் தலைநகரம் ஏதென்ஸில், பகுத்தறிவுப் பிரச்சாரம் செய்த சாக்ரடீஸ் பேசும் வரிகள்...

''ஏற்றமிகு ஏதென்ஸ் நகரத்து எழில்மிக்க வாலிபர்களே! நாற்ற மெடுத்த சமுதாயத்திலே நறுமணம் கமழ்விக்க இதோ சாக்ரடீஸ் அழைக் கிறேன். ஓடி வாருங்கள்! ஓடி வாருங்கள்! பச்சை ரத்தம் பாய்ந்தோட கச்சை கட்டிக் களம் செல்லும் காளையர்களே! நான் இங்கு தருவது அறிவாயுதம்! வீரம் விலை போகாது, விவேகம் துணைக்கு வராவிட்டால்! நீட்டிய வாளும் தினவெடுத்த தோள்களிலே தூக்கிய ஈட்டி மட்டும் போதாது தீரர்களே! நான் தரும் அறிவாயுதத்தையும் ஏற்றுக் கொள்ளுங்கள். அறிவு! அறிவு! அகிலத்தின் அணையாத ஜோதி! அதைத் தேடிப்பிடிக்க என் உயிரினும் இனியோர்களே ஓடி வாருங்கள்...''

தன் பிரச்சாரத்தின் மூலம், இளைய தலைமுறையின் சிந்தனையில் விஷத்தைக் கலந்துவிட்டார் சாக்ரடீஸ் என்றும் அவர் விஷம் அருந்திச் சாக வேண்டும் என்றும் நீதிமன்றம் தீர்ப்பளிக்கிறது.

இறக்கும் முன் ஏதாவது செய்தி சொல்லும்படி சீடர்கள், கிரீட்டோ போன்றோர் கேட்கிறார்கள். அப்போது,

"புதிதாக என்ன சொல்லப் போகிறேன்!
உன்னையே நீ அறிந்து கொள்! எதையும்
'ஏன்..., எப்படி... எதற்காக...' என்று கேள்,
அப்படிக் கேட்டதால்தான், இந்தச் சிலை
வடிக்கும் சிற்பி, சிந்தனைச் சிற்பியாக மாறினேன்.

அவர் சொன்னார், இவர் சொன்னார் என்று நம்பி அறிவிழந்து தடுமாற்றம் அடைய வேண்டாம். எவர் சொன்ன சொல்லானாலும், அதை உன்றன் இயல்பான பகுத்தறிவால் எண்ணிப் பார்ப்பாய்! இதையே உனக்கும் இவ்வுலகுக்கும் கூற விரும்புகிறேன்!"

கலைஞர், பணத்துக்காக மட்டும் பேனா பிடிக்காமல், அதில் பகுத்தறிவுப் பிரச்சாரமும் செய்தார். 'ராஜகுமாரி', 'மருதநாட்டு இளவரசி', 'மந்திரி குமாரி', 'பராசக்தி', 'திரும்பிப் பார்', 'மனோகரா', 'மலைக் கள்ளன்', 'ராஜா ராணி', 'அரசிளங்குமரி', 'பூம்புகார்' போன்ற எண்ணற்ற படங்களில் இவரது பேனா நர்த்தனமாடி ரசிகர்களை ஈர்த்தது.

தமிழ் சினிமாவில், உயர்ந்த தமிழ் ஓசை கேட்க, பேனா பிடித்தவர் களில் கலைஞர் அவர்கள் மிக முக்கியமானவர்.

படத்தை இயக்கியவரின் பெயரைவிட, 'கதை வசனம் மு. கருணாநிதி' என்ற எழுத்துக்கள் படத்தின் டைட்டிலிலும் போஸ்டர்களிலும் பாட்டுப் புத்தகங்களிலும் பெரிதாகப் போடப்பட்டன.

படத்தின் கதை வசனத்தை, புத்தக வடிவில் வெளியிடக் காரணமாய் இருந்தவை கலைஞர் அவர்களின் எழுத்துக்கள்.

உலகப் புகழ்பெற்ற நடிகர்களில், விரல் விட்டுச் சொல்லக்கூடிய ஒரிருவரில், நடிகர் திலகம் சிவாஜி கணேசன் முதன்மையானவர்! அவரது நடிப்பு, துவக்க காலத்திலேயே தமிழ் ரசிகனின் ஆழ்மனத்தில் பதிவதற்கு உறுதுணையாக இருந்தவை கலைஞரின் வசனங்கள்!

198 படங்கள், கடந்த 40 வருடங்களாக, நான் நடித்து வெளிவந்திருப் பினும், இளம் வயதில் என் மனத்தில் இடம் பிடித்த கலைஞரின் வசனங்கள்தான், நான் பள்ளியில் படித்த பாடங்களைவிட ஆழமாகப் பதிவாகியுள்ளன.

நடிப்புக் கலையைப் பொறுத்தவரை, சிவாஜி நடிப்பு என்னை எப்படி ஈர்த்ததோ, அதேபோல கலைஞர் அவர்களின் வசனங்கள் என்னை வெகுவாக ஈர்த்தன.

அரசியலில் ஈடுபடும் எண்ணம் எனக்கு எப்போதும் இருந்ததில்லை என்ற போதிலும், அந்த நாளில் அண்ணாவும், கலைஞரும் சென்னையில் எங்கு பேசுவதாகத் தெரிந்தாலும் தவறாமல் ஆஜராகி விடுவேன்.

இரும்பைக் காய்ச்சும்போது, எப்படிப் படிப்படியாய்ச் சூடேறி, அது ரத்தச் சிவப்பாய் மாறுகிறதோ, அதுபோல, கேட்போரைப் படிப்படியாக உணர்ச்சிவசப்பட வைத்து, கொந்தளிக்கச் செய்யும் ஆற்றல் கலைஞரின் பேச்சுக்கு உண்டு...!

அவரது புதல்வி கனிமொழியின் விருப்பத்திற்கிணங்க, என் ஓவியங் களைப் பார்க்கக் குடும்பத்தோடு ஒருநாள் எங்கள் இல்லம் வந்தார்.

ஒரு குழந்தைபோல ஓவியங்களைப் பார்த்து ரசித்தார்.

விடைபெற்றபோது, நான் எழுதிய 'இது ராஜபாட்டை அல்ல' நூலின் முதல் பதிப்பைக் கொடுத்து, ''படித்துவிட்டு ஒரு வரி எழுதுங்கள்'' என்று கேட்டுக்கொண்டேன்.

ஒரு வாரத்தில் அவரிடமிருந்து கடிதம் வந்தது...!

''இதில் அத்தனை வரிகளும் ஐவரி'' – கருணாநிதி

இதுதான் கலைஞர்!

---

# 42



## பீஷ்மர் கே.பி.

**ஹை**தராபாத் விபச்சார விடுதி...!

ராணுவத்தில் பணியாற்றும் ஹீரோ, விடுமுறையில் வந்தவன், விபச்சாரவிடுதிக்கு வருகிறான். கண்ணாடிமுன் தலையை வாரிக் கொண்டிருந்த பெண், 'ஏஸ்...கம் இன்' என்று குரல் கொடுத்தவாறு திரும்புகிறாள்.

பெண்ணுக்கு அதிர்ச்சி...! ராணுவ வீரனுக்கும் அதிர்ச்சி...! நிதான மடைந்தவன், ''லலிதா! நீ, இங்கதான் இருக்கியாம்மா...! அப்பா, அம்மா சௌக்கியமா? நான் வர்றேம்மா...'' இரண்டடி எடுத்து வைத்தவன் திரும்பி, ''ஒரு உண்மையைச் சொல்லலேண்ணா, என் இதயமே சுக்கல் சுக்கலா வெடிச்சிடும்!... விலைமகள் வீட்டுக்கு வழி கேட்டேன்... இந்த வீட்டைக் கையைக் காட்டிட்டாம்மா ஒரு பாவி...''

''அவன் பாவி இல்லே தங்கவேலு! பழக்கப்பட்டவன் தான்!'' அவன் அதிர்ச்சியோடு அவளைப் பார்க்கிறான்.

''நானும் உண்மையைச் சொல்லலேண்ணா, என் இதயமும் சுக்கல் சுக்கலா வெடிச்சிடாதா தங்கவேலு! நாட்டைக் காப்பாத்தறதுக்காக நீ உன் உயிரையே தியாகம் பண்றே! ஆனா நான், ஒரு பொண்ணு எதைக் காப்பாத்தணுமோ அதை வெலை பேசிக்கிட்டிருக்கேன்.''

''வெலைபோக வேற எந்தப் பொருளுமே கிடைக்கலையா உனக்கு?''

''வேற எதுவுமே அவ்வளவு சுலபத்தில் வெலை போறதில்லையே! இவ்வளவு பெரிய ஹைதரா்பாத் சிட்டில, நீ வெலை குடுத்து வாங்க நெனைச்சதும் இதைத்தானே தங்கவேலு! ஏன் இப்படி ஆயிட்டே? என் கதை என்னன்னு கேக்க நெனைக்கறே! கதைக்கு மதிப்புள்ள கால மில்லப்பா இது...! சதைக்குத்தான் மதிப்பு...'' நெருப்பைப்போல சுடும் வசனங்களோடு, இப்படி ஒரு புரட்சிப் படம் எடுத்த பிராமணரான அவரை, பிராமண சமுதாயமே எதிர்த்துக் குரல் கொடுக்க நேர்ந்தது. படத்தின் பெயர் 'அரங்கேற்றம்'. 1973 இல் வெளியாயிற்று. நானும் பிரமீளாவும் அந்தக் காட்சியில் நடித்தோம்.

என் அன்பிற்குரிய கே.பி., ரொம்பவும் உணர்ச்சி வசப்படக்கூடியவர். ஆரம்பத்தில் 'செயின் ஸ்மோக்கர்' பதற்றப்படும் போதெல்லாம் நகங் களைக் கடித்து, நகங்கள் விரலை விட்டு வெளியே வரவே அஞ்சின.

கதை விவாதத்தில்கூட, திடும் என்று ரத்தக் கொதிப்பு ஏற்படும் அளவுக்குக் கூச்சலிடுவார். நல்ல காட்சி ஒன்றை உருவாக்கப் பல பிரசவ வலிகளை அனுபவித்தவர்.

'சொல்லத்தான் நினைக்கிறேன்' – அவர் இயக்கத்தில் முழு ஹீரோவாக நான் நடித்த முதல் படம். மூன்று பெண்கள் கதாநாயகிகள். மூன்று பேருமே என்னைக் காதலிப்பார்கள். படம் முடிவில் யாருமே எனக்குக் கிடைக்கமாட்டார்கள். மூன்று பெண்களுக்கும் திருமணத்தை முன்நின்று நடத்தி வைத்த தியாகியாகி விடுவேன்.

'குமுதம்' பாலச்சந்தருக்கு வயது 16 என்று விமர்சித்திருந்தது! இப்போது பார்த்தாலும், இளமையும் குறும்புமாகப் படம் பார்ப்போரைச் சிலிர்க்க வைக்கும் படம் அது!

கவிஞர் அவினாசி மணி, டைரக்டர் ப.நீலகண்டன் அவர்களிடம் பல படங்கள் பணிபுரிந்தவர்.

சொல்லத்தான் நினைக்கிறேன் படத்தைப் பார்த்துவிட்டு, நீண்ட பாராட்டுக் கடிதம் ஒன்று எழுதியிருந்தார். அதில்,

'எம்.ஜி.ஆர். என்னும் மகா கலைஞனை, மக்கள் மனத்தில் நிரந்தரமாக இடம்பெறச் செய்ய, அவர் நடிக்கும் ஒவ்வொரு படத்திற்கும் கதை வசனம் எழுதுவோர், இரவுபகலாக உட்கார்ந்து, மூளையைக் கசக்கி ஒவ்வொரு காட்சியிலும் அவர் 'இமேஜ்' தூக்கலாக இருக்கும்படி பார்த்துப் பார்த்து எழுதுவோம்.

'பாலசந்தர் என்கிற மேதை, சிவகுமார் என்கிற இளைஞரை, இந்த ஒரே படத்தில், அவருக்குக் கொடுத்த பாத்திரத்தின் மூலம், இமய மலையின் உச்சியில் உட்கார வைத்துவிட்டார்' என்று எழுதியிருந்தது இப்போதும் பசுமையாக நினைவில் இருக்கிறது.

'சொல்லத்தான் நினைக்கிறேன்' என்று தொடங்கும் பல்லவியுடன் எம்.எஸ்.வி. அவர்கள் பாடும் அந்தப் பின்னணிப் பாடலைப் படமாக்கிய அழகே ஒரு கவிதை. மூன்று பெண்களும் என்னை அடைய முயற்சிப் பார்கள். ஆனால் யாருக்கு நான் கிடைப்பேன் என்பதைப் பாடல் முடிவில் 'சஸ்பென்ஸாக' விட்டிருப்பார்.

திரு.கமல்ஹாசன் விடலைப் பையனாக, டீன்ஏஜ் பெண்களின் ரோமியோவாக, 'கல்யாணம், கச்சேரி... கொண்டாட்டம்... எல்லாமே...' என்ற பாடலுக்கு அற்புதமாக ஆடியிருப்பார்.

பூர்ணம் விஸ்வநாதன் அவர்கள், பருவமங்கையை இரண்டாந் தாரமாக மணந்துகொண்டு – கார்கள் மீதே தன் காதலை வெளிப் படுத்துவார்.

ஜெயச்சித்ரா, ஸ்ரீவித்யா, சுபா – மூன்று பெண்களின் தந்தையாக பெரியவர் எஸ்.வி.சுப்பையா நடித்தார். சீனியர் நடிகருக்கு மரியாதை செய்ய வேண்டும் என்று, பட டைட்டிலில் எஸ்.வி.சுப்பையா பெயரை முதலில் கே.பி. போட்டார். மறக்க முடியாத படம் அது.

அடுத்து 'அக்னி சாட்சி'.

புதுக்கவிதையில் நாட்டமுள்ள, சிறுவயதில் மனத்தில் காயமேற்பட்ட கண்ணம்மா என்பவள் கதாநாயகி. அவளை நேசிக்கும் அற்புத மனிதன் அரவிந்தன்.

'என் தலைவா!

உன் பெயரை, ஒரு பேப்பரில் எழுதித் தடவிப் பார்! அதில் ஈரப்பசை இருக்கும்...! ஏனெனில், உன் திரு நாமம், என் உதட்டு எச்சில்களால், ஒரு நாளைக்கு ஆயிரம் முறைகளுக்குமேல் குளிப்பாட்டப்பட்ட தல்லவோ...!' என்று அரவிந்தன்மீது, தான் கொண்டுள்ள அன்பை வெளிப்படுத்துவாள்.

கண்ணம்மா கருத்தரிப்பாள்...! வயிற்றுக்குள் வளரும் குழந்தைக்கு ஒரு கவிதை எழுதுவாள்...!

'அன்புக் குழந்தையே! அம்மா எழுதுகிறேன்..., தாய்ப்பால் வரு வதற்கு முன்பு – தபால் வருகிறதே என்று பார்க்கிறாயா...!' என்று துவங்கும் பாடலைப் படமாக்கும்போது, சரிதா, அளவு கடந்த களைப்பு காரணமாக கே.பி. எதிர்பார்த்தபடி செய்யவில்லை...

வந்தது பாருங்கள் அவருக்குக் கோபம்.

''இந்த சீன் படத்தில வரவே வராதுன்னு நெனைச்சு இப்படி நடிக்கிறியா?'' என்று சீறினார். அந்தக் கோபத்தின் உக்கிரம் தாங்காமல் சரிதா மயக்கமாகி விட்டார். அப்படியும் அவர் விடவில்லை. தண்ணீர் தெளித்து எழுப்பி, நடிக்க வைத்தார்...

படத்தின் க்ளைமாக்ஸ்..., சரிதா பிரசவத்தில் இறந்து போவது கதை. ''ஒரு 'பிரேம்'கூட சரிதா பிரசவ வேதனைபடுவதைக் காட்டமாட்டேன்...! உன்மூலம் ஆஸ்பத்திரியில் அவள் முடிவைச் சொல்லப்போகிறேன்'' என்று சொல்லி, பிரமாதமாக அந்தக் காட்சியைப் படமாக்கினார்.

பின்னணி இசை (ரீ–ரிகார்டிங்) சேர்க்காமல் படத்தை மேனா தியேட்டரில் கே.பி. அவர்களும் நானும் சரிதாவும் பார்த்தோம்.

படத்தின் உச்சகட்டக் காட்சியைப் பார்த்து நான் கேவிக்கேவி அழுதேன். சரிதா கிட்டத்தட்ட மூர்ச்சையடைந்து விட்டார். அவ்வளவு அழுத்தம். கே.பி.தான் எங்களைத் தேற்றினார்.

அப்படி இழைத்து இழைத்து அவர் உருவாக்கிய படம், எதிர்பார்த்த வெற்றி பெறவில்லை. பல மாதங்கள் டைரக்டர் படுத்து விட்டார்.

மல்யுத்த மேடைதானே திரையுலகம்...! மீண்டும் சிலிர்த்து எழுந்தார்! 'சிந்து பைரவி' படம் உருவாக்கினார். கர்நாடக சங்கீதமும், நாட்டுப் புறப்பாடலும் மோதுகின்ற தெலுங்கு கீர்த்தனைகளை – பாரதி பாடல் களை... விவாதிக்கிறார்.

சிந்து – பைரவி! இசையில் ஒருத்தி மயக்குகிறாள். இல்லறத்தில் ஒருத்தி மயங்குகிறாள். நடுவிலே ஜே.கே.பி என்றொரு அற்புதமான பாத்திரம் எனக்குக் கொடுத்தார்.

கிட்டத்தட்ட 200 படங்கள் செய்துவிட்ட எனக்கு, அகில உலகிலும் கௌரவத்தைப் பெற்றுத் தந்த படம் 'சிந்து பைரவி'.

இளையராஜா இசையும் ஜேசுதாஸ் அவர்களின் குரலும் ஜே.கே.பி.யை முழுமையான கலைஞனாக மக்கள்முன் காட்ட பெரிதும் உதவின.

கே.பி. அவர்கள் ACTORS DELIGHT. அவர் படங்களில் நடிப்பது சுகானுபவம்...! காட்சிகளை அவர் கற்பனை செய்வதும், அதற்குக் குறும்பும் புத்திசாலித்தனமும் கலந்து வசனங்களை எழுதுவதும் அவரைத் தனித்துக்காட்டும்...!

100 படங்களுக்கு ஒரு படைப்பாளி, கதையோ – திரைக்கதையோ – வசனமோ – இயக்கமோ – ஏதோ ஒரு வகையில் தன்னை அர்ப்பணிப்பது சாதாரண விஷயமல்ல...!

கலையுலகில் அவர் ஒரு பீஷ்மர். அடையாறு ஆலமரம் போன்றவர். சாய்ந்தாலும் எழுந்து மீண்டும் வேர் விட்டு நிலைப்பார்.

---

# 43



## பத்திரிக்கையாளர்களுடன்

கதாநாயகனாக உயருவதற்குமுன் இரண்டாம் பட்ச வேடங்களில் நன்றாக நான் நடித்திருந்தும், விமர்சனங்களில் என் பெயர் குறிப்பிடப்படாதபோது நான் ரொம்பவும் வேதனைப்பட்டிருக்கிறேன். பின்னாளில், இவர்கள் மதிக்கிற அளவுக்கு நாம் உயரவேண்டும் என்ற வெறி, உத்வேகம் தோன்றுவதற்கு இந்த விமர்சனங்கள் காரணமாக

அமைந்தன. பத்திரிகையில் திரைப்பட விமர்சனம் எழுதுபவர்களும் மனிதர்கள் தான். விருப்பு வெறுப்புக்கு அப்பாற்பட்டவர்களல்லர். தங்கள் மனத்துக்கு, தங்கள் கொள்கைக்கு, தங்களது சுபாவத்துக்குப் பிடித்துப்போன இயக்குநர், நடிக – நடிகை பற்றி விமர்சித்து எழுதும்போது அவர்களை அறியாமலே சில வார்த்தைகள் தூக்கலாக வந்து விழக்கூடும்.

பத்திரிகைகளுக்குப் பேட்டிதர ரொம்பவும் சாமர்த்தியம் வேண்டும். நாம் என்னதான் கொள்கைப் பிடிப்பு உள்ளவராக இருந்தாலும், மனத்தில் உள்ளதைத் தெளிவாக எடுத்துச் சொல்லும் ஆற்றல் இருந்தாலும், கேள்விகளைப் போட்டுக் குடைந்து, அவர்கள் விருப்பத்துக்குப் பேட்டியை மாற்றிக் கொள்ளும் சாமர்த்தியம் உள்ள நிருபர்கள் பலர் இருக்கின்றனர்.

அத்துடன் 'முதன் முதலாகக் காமிராமுன் நின்ற அனுபவம் எப்படி...? திரையுலகில் மறக்கமுடியாத சம்பவம் என்ன...? உங்களுக்குப் பிடித்த நடிக – நடிகையர் யார்...?' என்று யுக யுகமாக இதே 'ரெடிமேட்' கேள்விகளைக் கேட்டு நம்மை அலுப்பூட்டும் நிருபர்களும் இருக்கவே செய்கின்றனர்.

காமிராமுன் முதன் முதலாக நான் தலையைக் காட்டத் துவங்கி முழுதாக இரண்டு நாள்கூட ஆகவில்லை. ஒரு நிருபர் என்னிடம் பேட்டி கண்டார். ''ஏன் சார்! புதுமுகம் ரேவதியை (இன்றைய ரேவதி அல்ல) 'காக்கும் கரங்கள்' படத்தில் கட்டிப் புடிச்சு நடிக்கறீங்களே! உங்களுக்குக் கூச்சமா இல்லையா...?''

''இல்லை...''

''ஏன் இல்லை...? கல்யாணமாயிடுச்சோ?''

''இல்லை...''

''பல பெண்களோடு முன்பரிச்சயம் உள்ளவரா...?''

''நிச்சயமாக இல்லை...''

''அப்புறம் ஏன் வயசுப் பொண்ணைத் தொடறப்போ ஏற்படற சிலிர்ப்பு உங்களுக்கு ஏற்படவில்லை...?''

''சார்! அதுவந்து... ஓவியக் கல்லூரியிலே பல பெண்களை நிர்வாணமா போஸ் பண்ண வெச்சு ஓவியங்கள் தீட்டி நான் பழக்கப் பட்டவன்.''

''அவங்களுக்கு என்ன வயசிருக்கும்...?''

''25 வயசு இருக்கும். எல்லோருமே குழந்தை பெத்தவங்க...''

''அதுசரி, தாய்மார்களைப் பார்க்கும்போது உணர்ச்சிவசப்பட வழியில்லை! வயசுப் பொண்ணைப் பார்க்கறப்பவும் உங்களுக்குக் கிளுகிளுப்பு ஏற்படலேன்னா, நீங்க என்ன மரக்கட்டை நடிகரா...?''

பேட்டி இப்படிப் போக..., எனக்கு வியர்த்துவிட்டது! வந்த எரிச்சலில் 'நடிப்புத் தொழிலும் வேண்டாம், இப்படி ஏடாகூடமான பேட்டியும் வேண்டாம்' என்று தோன்றியது. நல்லவேளை, எனக்கு அதிர்ச்சி வைத்தியம் செய்துபார்க்கக் கேட்ட கேள்விகள்தான் அவை. பத்திரிகையில் வெளிவரவில்லை!

வாரப்பத்திரிகை ஒன்றில், முதன் முதலாக எனது பேட்டி வெளிவந்தது...! முதல் பேட்டி, முதல் படம், முதல் பட்டம், முதல் வெளிநாட்டுப் பயணம், முதல் இரவு – எல்லாமே, 'த்ரில்லிங்' அனுபவம் தானே! பேட்டி வெளியானால் சுமார் பத்து லட்சம் பேராவது என்னைப் பற்றித் தெரிந்துகொள்வார்கள் என்று பூரித்துப் போனேன். பத்திரிகை வெளிவந்த மூன்றாவது நாள், ஏ.எல்.எஸ். புரொடக்ஷன்ஸ் மானேஜர் வீரய்யா வந்தார். ''தம்பி! ஏ.பி.என்.னும், ஏ.எல்.எஸ்.ஸும் போன்ல பேசிக்கிட்டாங்க. ரெண்டு பேருக்கும் உங்கமேல ஏதோ கொஞ்சம் வருத்தம் இருக்கும் போல...! அப்படியே ஜாடையா அவங்களைப் பார்த்து என்ன விஷயம்னு தெரிஞ்சு, அதைச் சரி பண்ணிடுங்க'' என்றார்.

எல்லாம் பேட்டியின் 'மகிமை'தான்! ''கே.எஸ்.ஜி. என்னை மூன்று படங்களுக்கு ஒப்பந்தம் செய்திருக்கிறார். அதன் பிறகு சிறப்பான எதிர்காலம் அமையும். ஏனென்றால், 'பழையன கழிதலும் புதியன புகுதலும் திரையுலகுக்கும் பொருந்துமல்லவா!'' – பேட்டியில் இப்படிச் சில வரிகள்.

இந்த வரிகளினால் சிக்கல் வரும் என்று யாராவது நினைக்க முடியுமா...?

ஏ.பி.என். பேட்டியைப் படித்துவிட்டு வருத்தப்பட்டிருக்கிறார். என்னை அழைத்து, ''கலைஞனுக்கு ஒரு 'இமேஜை' உண்டாக்குவதே பத்திரிகைகள்தான். அதனால் பேட்டி தரும்போது எச்சரிக்கையா வார்த்தைகளை ரொம்பவும் கவனமாகப் பயன்படுத்தணும். 'பழையன கழிதலும் புதியன புகுதலும்' என்று ஒரு வரி இருக்கே, அதைப் படிச்சா பெரிய கலைஞர்களெல்லாம் என்ன நினைப்பாங்க தெரியுமா...? 'அஞ்சு வயசிலேருந்து வீட்டை விட்டு வெளியேறி, எத்தனையோ நாள் பட்டினி கிடந்து, நல்ல வேஷங்களுக்குக் காத்திருந்து, நாடக ஆசான்கிட்ட அடி உதை வாங்கி, இப்பதான் சினிமாவுல நொழைஞ்சு, ஏதோ கொஞ்சம்

பேரெடுத்திருக்கோம். ஒரு கஷ்டமும் படாம, நடிப்பைப் பத்தி ஒண்ணும் தெரியாம நேத்திக்கு நொழைஞ்ச பசங்க நம்மை விரட்ட நினைக்க றாங்களே' என்று நினைக்க வழியிருக்கு...'' என்று நீண்ட அறிவுரை வழங்கினார்.

ஏ.எல்.எஸ்.ஸுக்கும் வருத்தம். அந்த நாளில் 'கந்தன் கருணை'யில் முருகன் வேடம் எனக்குக் கிடைத்தது பெரும் பாக்கியமாகப் பேசப் பட்டது. நீண்ட பல பரீட்சைகள் வைத்து, பலபேரைப் பரிசோதித்துப் பார்த்து, கடைசியாக நான் தேர்ந்தெடுக்கப்பட்டேன். அந்தப் படம் பற்றியோ, அதிர்ஷ்டவசமாகக் கிடைத்த முருகன் வேடம் பற்றியோ பேட்டியில் ஒரு வரிகூட இல்லை என்றபோது ஏ.எல்.எஸ். 'என்ன இது! எவ்வளவு பெரிய வேஷம் குடுத்திருக்கோம். அதைப் பத்தி ஒரு வரிகூடப் பேட்டியில் இல்லை!' என்று போனில் ஏ.பி.என்.னிடம் கூறி வருந்தியிருக்கிறார்.

'எனது முதல் பேட்டி இது. இப்படியெல்லாம் நான் எதுவும் சொல்லவில்லை. இதில் நிருபரின் கைவண்ணமும் உண்டு!' என்று விளக்கினேன்.

திரையுலகினர் ஒன்றும் தேவதூதர்கள் அல்லர். தவறுகளுக்கு அப்பாற்பட்டவர்களும் அல்லர். ஆனால், நான்கு சுவர்களுக்குள் அமர்ந்து கொண்டே, தன் மனத்துக்குத் தோன்றும் கற்பனைகளை நிஜமென வாசகனை நம்ப வைக்கப் பேனா பிடிக்கும் அன்பர்களைப் பார்த்து நான் அனுதாபப்படுவதுண்டு.

பிரபல வார இதழ் ஒன்றில், தொடர்ந்து சுமார் பத்து ஆண்டுகள், எனக்குப் பாதகமான செய்திகளே வந்து கொண்டிருந்தன. 'சிவகுமாருக்கு முன் பல் மூன்றும் ஒட்டுப் பல்', 'படங்கள் இல்லாதபோது ஓவியங்களை விற்றுச் சாப்பிடுகிறார்'. 'இந்தப் படம் அடிபட்டதற்குச் சிவகுமாரின் உருவமே காரணம்', 'சிவகுமார் கதாநாயகனாக நடித்து வெளிவரும் படம் நம்பர் 3. படத்தின் எண்ணிக்கை கூடுகிறதே தவிர, நடிப்பில் எந்த முன்னேற்றத்தையும் காணோம். சென்னையில் சம்பாதிக்கும் பணத்தைக் கோவைக்குக் கொண்டு செல்வதிலேயே குறியாக இருக்கிறார்.'

'வண்டிச் சக்கரம்' – இது சுத்தாது. 'ஆணிவேர்' – இந்த வேர் ஆடி விட்டது. இப்படி விமர்சனங்க்ள்...! எதிர்மறையாக எழுதுவதென்றே சத்தியப் பிரமாணம் செய்து கொண்ட விமர்சனங்கள்...!

அந்தப் பத்திரிகை ஆசிரியருக்கு, எனது பக்கத்து வீட்டுக்காரர் நெருங்கிய நண்பர். ஒவ்வொரு தடவை அந்தப் பத்திரிகையால் நான் தாக்கப்படும் போதும், அவர் ரொம்பவும் சங்கடப்படுவார். ''சார்! என்

கூட வாங்க. பத்திரிகை ஆசிரியரை மீட் பண்ணிடலாம். உங்களைப் பத்தி ஏதோ தப்பா நெனைச்சுக்கிட்டிருக்காரு. அதை விளக்கிச் சொல்லிட்டா அப்புறம் இப்படியெல்லாம் எழுதமாட்டாங்க...'' என்பார்.

''அவராக என்னைப் பத்தித் தப்பா நெனைச்சு எழுதினார்னா, அவரே ஒரு கட்டத்தில் சரியாப் புரிஞ்சுக்கிட்டு அதுக்கப்புறம் அப்படி எழுதறதை நிறுத்திடுவாரு. நான் எதுக்கு இப்ப விளக்கம் தரணும்...?'' என்றேன்.

சில நாள் கழித்து, அப்பத்திரிகையில் வெளியிடப் பேட்டி ஒன்று எடுக்க அதன் நிருபர் வந்தார். ''உங்க ஆசிரியருக்கு என்னைப் பத்தி எனக்குத் தெரிஞ்சதைவிட அதிகமாகவே விஷயம் தெரிஞ்சிருக்கு. பத்து வருஷமா விடாம எழுதறாரு..., அவருக்கு என்னைப் பத்தித் தெரியாத விஷயத்தை நான் என்ன பெரிசா சொல்லிடப் போறேன்...? அவரையே எழுதிக்கச் சொல்லுங்க...'' என்று திருப்பி அனுப்பிவிட்டேன்.

ஒரு மாத இடைவெளியில் அதே நிருபர் வந்தார். ''சார்! எங்க எடிட்டரோட மகனுக்குத் திருமணம்'' என்று பத்திரிக்கை வைத்தார். அந்தத் தேதி, மாலையில் நான் ஃப்ரீயாக இருந்ததால், ''அவசியம் வருகிறேன்'' என்றேன். குழைவான சிரிப்புடன், ''எங்க எடிட்டர் இந்தத் திருமணத்துக்கு உங்களை ஆவலோடு எதிர்பார்க்கிறார். நீங்க எதையும் மனசுல வெச்சுக்காம வரணும்'' என்றார் நிருபர்.

''நான் வரேன்னு சொன்னா கண்டிப்பா வருவேன். உங்க பத்திரிகையில் எழுதறதுக்கும், கல்யாணத்துக்கு வரதுக்கும் சம்பந்தமில்லை'' என்று சொல்லி அனுப்பி வைத்தேன்.

திருமண வரவேற்பில், வாசல்வரை வந்து, அந்த எடிட்டர் என்னை அழைத்துச் சென்றார். அன்றுதான் இருவரும் நேரில் சந்தித்துக் கொண்டோம். முகமெல்லாம் மலர, மணமக்களை அறிமுகப்படுத்தி வைத்தார். தன் துணைவியையும் வரவழைத்துப் புகைப்படம் எடுத்துக்கொண்டார். விடைபெறும்போது ''உங்க பொன்னான நேரத்தை ஒதுக்கிக் கல்யாணத்துக்கு வந்ததில் ரொம்ப மகிழ்ச்சி'' என்றார்.

''பெரியவங்ககிட்ட இது மாதிரி பெரிய வார்த்தைகளைப் பயன் படுத்துங்க. எனக்கு அது அவசியமில்லை'' என்று கூறி விட்டுப் புறப் பட்டேன்.

எடிட்டர் அடுத்த நாள் ஆபீஸ் போனார். உதவி ஆசிரியர்கள், நிருபர்கள் அனைவரையும் அழைத்தார். ''ஏம்பா...! சினிமாவுலகத்தில் எத்தனை சிவகுமார் இருக்காங்க...?'' என்று கேட்டார்.

' ஒருத்தர்தான் சார் இருக்காரு. நேத்திக்குக் கல்யாணத்துக்கு வந்தாரே அவர்தான்.''

''நாம இத்தனை நாளா 'கிரிடிசைஸ்' பண்ணி எழுதினது இவரைத் தானா?''

''ஆமா சார்...?''

''இவரைப் போய் ஏன் கேவலப்படுத்தி இவ்வளவு காலம் எழுதினோம்...?''

ஒவ்வொருவரும் அடுத்தவர் முகத்தைப் பார்த்தனர். யாருக்கும் காரணம் விளங்கவில்லை.

''ஏன்னு காரணம் தெரியலை சார்...!''

''எனக்கும் தெரியலை'' என்றார், அனைவரும் சிரித்தனர். அன்றோடு அர்த்தமற்ற தாக்குதல்கள் நிறுத்தப்பட்டன.

பத்திரிக்கையாளர்களுடன் இப்படி பல வித்தியாசமான அனுபவம் எனக்கு உள்ள போதிலும், பொதுவாக எல்லாப் பத்திரிக்கையாளர்களை யும் நான் 'மிகவும் நேசிப்பவன்'.

---



கலையுலகில் கறை படியாமல் ஒரு மனிதன் 40 ஆண்டு காலத்திற்கு மேல் வாழ முடியும் என்றால் இந்த நாட்டில் தாஜ்மகாலைவிட பெரிய அதிசயம்.

1-1-05, வெளியீட்டு விழாவில், தமிழருவி மணியன்

44



# துணிவுக்குப் பெயர் ஜெயலலிதா

1965 ஆம் ஆண்டு சென்னை ஓவியக் கல்லூரியில் நான் கடைசி வருடம் படித்துக் கொண்டிருந்தபோது டெல்லி, ஆக்ரா கலாச்சார சுற்றுப் பயணம் செய்தோம்.

டெல்லி – கன்னாட் பிளேஸில் ஒரு புத்தகக் கடையில் 'பேசும்படம்' தொங்கிக் கொண்டிருந்தது. வழக்கத்துக்கு மாறாக அட்டையில் வெள்ளை 'பேக்ரவுண்டில்' – பக்கவாட்டில் ஒரு இளைஞன் உருவமும்,

கீழேயிருந்து மேலே பார்ப்பது போல ஒரு அழகிய பெண்ணின் படமும் அழகாக 'கம்போஸ்' செய்து, கீழே ஸ்ரீதரின் 'வெண்ணிற ஆடை' என்று எழுதப்பட்டிருந்தது.

ஸ்ரீதர் அவர்கள், முழுக்க புதுமுகங்களையே, பிரதான வேடங்களில் நடிக்க வைத்து உருவாக்கிய படம்...! ஜெயலலிதா அவர்களும் நண்பர் ஸ்ரீகாந்தும் இணையாக நடித்த படம். ஏப்ரல் 14 – அன்று சென்னை ஆனந்த் தியேட்டரில் படம் வெளியாயிற்று.

எம்.ஜி.ஆர். அவர்களும், திரு. சிவாஜியும் புகழின் உச்சியில் இருந்த காலகட்டம். அவர்களின் புகழ் ஒளி முன்பு, ஸ்ரீதர் என்ற படைப்புக் கலைஞன், பட்டொளி வீசிப் பறந்த நாள்கள்...!

கல்யாணப் பரிசு, காதலிக்க நேரமில்லை, நெஞ்சில் ஓர் ஆலயம், போலீஸ்காரன் மகள் – என்று வித்தியாசமான வெற்றிப்படங்களைத் தமிழ் ரசிகர்களுக்கு வழங்கி, தமிழக இளைஞர்கள் அத்தனை பேரின் பார்வை யையும் ஒட்டுமொத்தமாகத் தன் பக்கம் அவர் ஈர்த்து வைத்திருந்த நேரம்...

திருவிழாபோல தியேட்டர் வாசலில் கட்டுக்கடங்காத இளைஞர் கூட்டம்...! மனோநிலை பாதிக்கப்பட்ட அழகிய இளம்பெண்ணாக ஜெயலலிதா. படம் பார்த்தோர் மனத்தில் பளிச்சென்று பதிந்திடும் விதத்தில் அவரது பாடல்கள், நடனம், நடிப்பு சிறப்பாக அமைந்திருந்தது.

திடும் என்று ஒரு கூட்டம் எழுந்து, ஸ்ரீகாந்த் – கதாநாயகியை 'ஷோபா' என்ற பெயரிட்டுக் கூப்பிட்டதும், ''ஆமா சோபா, நாற்காலி கிழிங்கடா'' – என்று கூச்சலிட்டு, கொண்டு வந்திருந்த பிளேடுகளாலும் கத்திகளாலும் சோபாக்களைக் கீறி, குஷன்களைப் பிய்த்து எறிந்து, தியேட்டரைப் போர்க்களமாக்கிவிட்டனர்.

ஸ்ரீதரின் வெற்றியைச் சகித்துக் கொள்ளாத கூட்டம், படம் பார்க்க வந்த அத்தனை பொதுமக்கள் வயிற்றெரிச்சலையும் கொட்டிக் கொண்டு சென்றனர்.

செல்வி. ஜெயலலிதாவுடன், ஸ்ரீகாந்த், வெண்ணிற ஆடை நிர்மலா, ஷைலஸ்ரீ, மூர்த்தி – எல்லாருக்கும் அறிமுகப்படம். ஒளிப்பதிவாளர் பாலகிருஷ்ணாவும், இசையமைப்பாளர் விஸ்வநாதன் ராமமூர்த்தியும் முத்திரை பதித்த படம்.

* * *

1966 இல் கவியரசு கண்ணதாசனின் மூத்த சகோதரர் ஏ.எல்.சீனிவாசன் அவர்கள் 'கந்தன் கருணை' படத்தைத் தயாரித்தார். அருட்செல்வர் ஏ.பி.நாகராஜன் திரைக்கதை வசனம் எழுதி இயக்கிய படம் அது.



'கந்தன் கருணை' - 'திருப்பரங்குன்றத்தில் நீ சிரித்தால்'? - பாடல் படப்பிடிப்பின் போது

முருகனாக நான் நடிக்க, வள்ளி – தெய்வானை வேடங்களில் செல்வி. ஜெயலலிதா அவர்களும் திருமதி. கே.ஆர். விஜயாவும் நடித்தனர். அந்தப் படப்பிடிப்பின்போதுதான் செல்வி. ஜெயலலிதாவை நான் நேரில் பார்த்தேன்.

சிவந்த மேனி, தெளிவான முகம், அழகிய கண்கள், ஆங்கிலத்தில் புலமை, நடனத்தில் தேர்ச்சி, நடையில் கம்பீரம், நினைவாற்றலில் புலி...!

முதல்படத்திலேயே முழுக் கதாநாயகியாகி, எம்.ஜி.ஆர். அவர்களுடன் ஆயிரத்தில் ஒருவன், கன்னித்தாய், சந்திரோதயம், தனிப்பிறவி, முகராசி படங்களில் நடித்துப் பிரபலமாக விளங்கினாலும், 'கந்தன் கருணை' – செட்டில், உடன் படிக்கும் மாணவ மாணவிகளுடன் பழகுவதுபோல அவ்வளவு இனிமையாகப் பழகுவார்.

பெரும்பாலும் தாயார் சந்தியா அவர்கள் உடன் வருவார்.

''முருகப்பெருமான், எனக்கு முன்னே, தெய்வயானையை மணந்து கொண்ட விவரத்தைச் சொல்லாமல், ஏமாற்றி விட்டார்'' – என்று, வீரபாகு சிவாஜியிடம் வள்ளி முறையிட, ''அப்பன் சிவபெருமானே தலையில் கங்கையை ஒளித்து வைத்திருப்பவன்தான்'' என்று வீரபாகு சொல்ல, ரெண்டு பெண்டாட்டிக்காரர்களை வள்ளி சாடும் காட்சியில், ஜெயலலிதா அவர்களின் கணீரென்ற குரலும், தெளிவான உச்சரிப்பும், கம்பீரத் தோற்றமும் படப்பிடிப்பைக் கவனித்துக்கொண்டிருந்தோரைப் பெரிதும் கவர்ந்தது.

'குறிஞ்சியிலே பூ மலர்ந்து குலுங்குதடி – தன்னாலே' எனத் தினைப் புனத்தில் மனோரமா போன்றோருடன், அவர் ஆடிப்பாடியதும், வள்ளியாகவும் குறி சொல்லியாகவும் அவரே நடித்து, வடிவேலன் வந்து மணக்கப் போகும் செய்தியை ஆடிப்பாடி விளக்குவதும் படத்தில் முக்கிய காட்சிகள்.

நான்கு பக்க வசனமானாலும், ஒரு தடவை தெளிவாகப் படிக்கச் சொல்லிக் கேட்டு, மனத்தில் அப்படியே பதியவைத்து, பதற்றமில்லாமல், தெளிவாக உச்சரித்து நடிப்பார்.

நடனக் காட்சிகளில், எவ்வளவு பெரிய அடவு ஆனாலும் சரி, டான்ஸ் மாஸ்டர் ஆடிக்காட்டுவதை ஓரக்கண்ணால் பார்த்துவிட்டு, உடனே ஆடிவிடுவார்!

* * *

1972 இல் 'கிருஷ்ண லீலா' என்றொரு படத்தை சிவாஜி பிலிம்ஸ் சீனிவாசன் தயாரித்தார். பின்னாளில் இது கை மாறி, உமயாம்பிகை செட்டியார் படத்தை முடித்து வெளியிட்டார்.



'கிருஷ்ண லீலா' பாமாவாக ஜெ...

ஏ.பி. நாகராஜன் அவர்கள் திரைக்கதை வசனம் எழுதி இயக்கினார். படம் முடியும்முன் அவர் இறந்துவிட்டார்.

கிருஷ்ணனாக நானும், பாமாவாகச் செல்வி. ஜெயலலிதா அவர்களும் ருக்மணியாக ஸ்ரீவித்யாவும் நடித்தோம்.

செல்வச் செழிப்பில் பிறந்தவள் பாமா. பேரழகி, பார்ப்போரை வசீகரிக்கும் அழகும், பேச்சாற்றலால் கண்ணனையே மிரட்டிப் பணிய வைக்கும் சாமார்த்தியமும்; ஆடல் பாடல்களில் தேர்ச்சியும் மிக்கவள். நாரதன் கொண்டு வந்த பாரிஜாத மலரை, கிருஷ்ண பரமாத்மா, ருக்மணி தலையில் சூட்டப்போய், பாமா, ''அவருக்கு இரண்டாந்தாரமெனில், இரண்டாம் தரமாகப் போய்விட்டாளா – வரட்டும் அவர்'' என்று கடுங்கோபத்துடன் காத்திருந்து, கிருஷ்ணனுடன் சண்டையிட்டு, கடைசியில் 'கிருஷ்ணன், தனக்கு மட்டுமே சொந்தமானவனாக இருக்க வேண்டும்; அதற்கு என்ன வழி' என்று நாரதரிடம் கேட்க அவர், ''பிரமச்சாரிக்கு, கிருஷ்ணனை தாரைவார்த்துக் கொடுத்து விடுங்கள். பின்னர், எடைக்கு எடை பொன் கொடுத்து அந்தப் பிரமச்சாரியிடமிருந்து, கிருஷ்ணனை விலைக்கு வாங்கிக் கொள்ளுங்கள்'' என்று யோசனை

சொல்ல..., அப்படியே செய்யப்போய், துலாபாரத்தில் எத்தனை ஆபரணங்கள் வைத்தும், கிருஷ்ணன் தட்டு மேலே வராதபோது கலங்கித் தவிக்க, ருக்மணி வந்து, ''பொன், பொருளால் பரமாத்மாவை விலை கொடுத்து வாங்கிவிட முடியாது'' என்று கூறி ''கிருஷ்ணார்ப்பணம்'' என்று ஜபித்துத் துளசி இலை ஒன்றைத் தட்டில் வைக்க, இருதட்டும் சமமாகி விடுகிறது.

இந்தக் கதைப் பகுதியில், பாமாவாகச் செல்வி. ஜெயலலிதா அவர்களைத் தவிர வேறு யாராலும் இவ்வளவு சிறப்பாக நடித்திருக்க முடியாது. நடிப்பிலே இலக்கணம் வகுத்ததாகச் சொல்பவர்கள்கூட, பாமா வேடத்தில் அவரது தோற்றத்தையும் நடிப்பையும் குரலின் ஆளுமையையும் பார்த்தால் மிரண்டு விடுவார்கள்.

'மேஜர் சந்திரகாந்த்', 'முத்துச்சிப்பி', 'எங்கிருந்தோ வந்தாள்' எனப் பல படங்களில் அவரது நடிப்பு பளிச்சிட்டது.

'எங்கிருந்தோ வந்தாள்' படம், ஒரு ரசிகனாக அவர் நடிப்பைப் பார்த்து நான் நெகிழ்ந்த படம்.

மனநிலை பாதிக்கப்பட்டு, பைத்தியமாகிவிட்ட சிவாஜியைக் கவனித்துக்கொள்ள அவர் வீட்டுக்கு ஜெயலலிதா வருவார். தான் என்ன செய்கிறோம் என்று அறியாத நிலையில், சிவாஜி அவரைக் கெடுத்து விடுவார்.

ஒரு கட்டத்தில் சிவாஜி குணமடைந்து விடுவார். ஆனால், ஜெயலலிதாவைக் கெடுத்த விஷயம் அவர் நினைவுக்கு வராது. நடந்த விஷயங்களை சிவாஜி நினைவுக்குக் கொண்டுவர, ஜெயலலிதா முயற்சிப்பார். நினைவுக்கு வந்துவிட்டதுபோல் 'பாவம்' காட்டும் சிவாஜி முகத்தைப் பார்த்து, ஆனந்தத்தில் மிதப்பதும், அடுத்த வினாடி, ''எனக்கு ஞாபகமில்லை'' என்று சிவாஜி சொல்லும்போது, நொறுங்கிப்போய் கண்ணீரில் கரைவதுமாக – அழுது, சிரித்து நடித்த அந்த க்ளைமாக்ஸ் காட்சி, இன்றும் என் கண்முன்னே நிற்கிறது...

நூறு படங்களைத் தாண்டி தமிழ், தெலுங்கு, கன்னடம், ஆங்கிலம் எனப் பலமொழிப் படங்களில் நடித்தவரை, அரசியல் ஒரு கட்டத்தில் ஈர்த்தது. முற்றிலும் புதிய துறை. எத்தனையோ திமிங்கிலங்களும் சுறாமீன்களும் வாழும் கடல் போன்றது அரசியல் உலகம்.

அதிலே நுழைந்து எவ்வளவோ அவமானங்கள், ஓரங்கட்டல்கள், முதுகில் குத்தல்களையெல்லாம் தாங்கி, தாண்டி, இன்று தமிழக மக்களின் பேராதரவைப் பெற்ற தலைவர்களில் ஒருவராக விளங்குகிறார்.



முதல்வர் ஆனபின்

அவரது தனிச் சிறப்பாக நான் கருதுவது, அவரது அசாத்தியத் துணிச்சல். உடனுக்குடன் தன்னிச்சையாக முடிவெடுக்கும் திறன்; அந்த முடிவு தனக்குச் சாதகமாக அமைந்தாலும், பாதகமாக அமைந்தாலும் இரண்டுக்கும் தானே பொறுப்பு என்று சொல்லும் தைரியம்.

'நிமிர்ந்த நன்னடை – நேர்கொண்ட பார்வையு'மாய், பாரதி கண்ட புதுமைப் பெண்ணாக, ஆணாதிக்கம் உள்ள இந்த உலகில் ஒரு பெண் மணி தலைமைப் பொறுப்பில் அமர்வது அசாதாரணமான செயல்!

அவ்வப்போது எனக்குள்ளே ஒரு ஏக்கம். 'இவருக்குத் தாயும் தகப்பனும் உயிருடனிருந்து, சகோதரன் குடும்பமும் உடன் இருந்து, ஒரே குடும்பமாக வாழும் வாய்ப்பு அமைந்திருந்தால் எவ்வளவு நிம்மதியாக, சந்தோஷமாக, இருந்திருப்பார்' என்று!

கலையுலகைச் சேர்ந்த ஒரு சகோதரி, அரசியல் உலகிலும் புகழ்க் கொடி பறக்கவிட்டிருப்பதில், என் போன்றோர் எப்போதும் பெருமையும் மகிழ்ச்சியும் கொள்கிறோம்!

---



திருமண பந்தத்தில் நம்பிக்கையே இல்லாம கல்யாணம் வேண்டான்னு நான் சொல்லிக்கிட்டிருந்தேன். ஒரு நாள் என்னைக் கூப்பிட்டு திருமணம்ங்கறது எவ்வளவு அற்புதமான அனுபவம்னு பேசி என்னை 'கன்வின்ஸ்' பண்ணினாரு கல்யாணத்துக்குப் பொண்ணு பாத்தாச்சு. சினிமாக்காரன்னவுடனே, அவங்க தயங்கினாங்க. அப்போ, நான் பொண்ணு வீட்டுக்காரங்ககிட்ட கேட்டேன், "உங்களுக்கு நல்லது எதுவுமே கண்ணுல படாதா? சிவகுமார்னு ஒரு அப்பன் எனக்கு அங்க இருக்காரு. நான் எப்போ சினிமாவுக்குப் போனேனோ அப்பவே என்னை தத்து எடுத்துக்கிட்டாரு.

"அவருகிட்ட போங்க - பேசுங்க. அதுக்கப்புறம் நிச்சயமா எனக்குப் பொண்ணு குடுக்க தயங்க மாட்டீங்க"ன்னு சொன்னேன்.

அதே மாதிரி சிவகுமார் சாரைப் பார்த்துப் பேசி, சந்தோஷமா எனக்குக் கல்யாணம் பண்ணி வச்சாங்க."

1-1-05, வெளியீட்டு விழாவில், பாலா

## 45



ஹீரோவுக்குப் பதில் சிங்கத்தோடு சண்டையிட்ட
தயாரிப்பாளர் – இயக்குநர் எம்.எஸ்.கோபிநாத்

# ஸ்டண்ட் வீரர்கள்

புராண வேடங்களிலும் சமூகப் பட ஹீரோ வேடங்களிலும் நடிக்க அதிக வாய்ப்புகள் வந்தபோது, சண்டைப் படங்களிலும் நடித்துப் பெயர் பெற ஆசைப்பட்டேன்.

ஒளிப்பதிவாளர் எம். கர்ணன் அவர்கள் அந்நாளிலேயே சண்டைக் காட்சிகளைப் படமாக்குவதில் முதல்தரமானவராக விளங்கினார். கறுப்பு

வெள்ளைப் படங்கள் காலத்தில், மேகம் சூரியனை மூடினால் உடனே காமிராவை மூடி வைத்து விடுவார்கள். நல்ல வெயில் நடிக நடிகையர் மீது மட்டுமல்ல, சுற்றிலுமுள்ள வீடுகள்மீதும் மலைப் பகுதியிலும் அடித்தால்தான் படப்பிடிப்பைத் தொடருவார்கள்.

ஆனால், கர்ணன் மழை தூறிக்கொண்டிருக்கும் போதும் தைரியமாகக் காமிராவைச் சுழல விடுவார். கடுமையான பயிற்சியினால் பெற்ற அனுபவத்தில், மீட்டர் வைத்துச் சூரிய ஒளியையும், ஸ்டூடியோ வெளிச்சத்தையும் அளந்து பார்க்கும் பழக்கத்தைக்கூடக் கைவிட்டு, கண்ணாலேயே பார்த்து, முடிவெடுத்து, காமிராவில் 'அப்ரச்சரை' கட் பண்ணுவார்.

அவரது கனத்த சரீரத்தைப் பார்த்தவர்கள், அவரால் கீழே உட்கார முடியுமா என்று சந்தேகப்படுவார்கள். ஆனால், அவரோ அம்பாஸடர் டிக்கிக்குள் காலை விட்டு, இரண்டு பேரைக் கால்கள்மேல் உட்கார வைத்துப் பிடிக்கச் சொல்லிவிட்டு, இடுப்புப் பகுதியிலிருந்து தலைப் பகுதிவரை காருக்கு வெளியே நீட்டி, கையில் காமிராவைப் பிடித்துக் கொண்டு 60 கிலோ மீட்டர் வேகத்தில் கார் போகும்போது, பின்னால் குதிரையில் வரும் கதாநாயகனைப் படம் பிடிப்பார்.

இப்போது 'வாக்குவம் பேஸ்' (Vacuum Base) என்ற ஒரு கருவி வந்துவிட்டது. அதைக் காரின் கதவில் பக்கவாட்டில் பொருத்தி, காமிராவை அதில் இணைத்துவிட்டுச் சிரமமில்லாமல் படமெடுக்கலாம். ரயில் இன்ஜின் முன்னால் பொருத்தலாம். விமானத்தில்கூட அதன் உதவியால் காமிராவை வெளியே மாட்டி, காமிராமேன் இன்றிப் படமாக்கலாம்.

இந்த வசதியில்லாதபோதே, இரண்டு குதிரைகள் பாய்ந்து செல்லும் போது, அவற்றின் இடையில் ஊஞ்சல்போல் வலை அமைத்து, அதைக் குதிரைகள் மீதுள்ள இருக்கையுடன் இணைத்து, அந்த வலை ஊஞ்சலில் தலைகீழாகப் படுத்துக்கொண்டு படமாக்கும் திறமையும் தைரியமும் அன்று அவரிடம் இருந்தது.

ஒரு பிரபல ஹீரோவுக்கு மோட்டார் சைக்கிள் ஓட்டத் தெரியாது. ஆனால், படத்திலோ அவர் மோட்டார் சைக்கிள் சாம்பியன்! படத்தில் ஏதாவது ஒரு காட்சியிலாவது, மோட்டார் சைக்கிள் பந்தயத்தில் அவர் ஓட்டுவதுபோல் காட்டியாக வேண்டும்.

கர்ணன் பிரத்யேகமாக அழைக்கப்பட்டார். Back Projection முறையில்லாமல், ஹீரோ மற்ற வீரர்களுடன் பந்தய மைதானத்தில் மோட்டார் சைக்கிள் ஓட்டுவதுபோல், ஒரு கட்டத்தில் மற்றவர்களை ஹீரோ முந்திச் செல்வதுபோல் படமாக்கிக் கொடுத்தார். எப்படி எடுத்துக் கொடுத்தார் என்பதை இங்கே விளக்குவது தொழில் நாகரிகமில்லை!

அப்படிப்பட்ட திறமைசாலி, சொந்தமாக டைரக்ட் செய்து தயாரித்த ஒரு படத்தில் நானும் நடித்தேன். முழுக்க முழுக்க சண்டைக் காட்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து உருவான அந்தப் படத்தில் Action Heroவாக என்னை மக்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. அதோடு "Cow Boy" படங்கள் வந்து பெரும் வெற்றி பெற்ற காலகட்டமாதலால், 'கிளிண்ட் ஈஸ்ட்வுட்போல்' எனக்குச் செய்திருந்த ஒப்பனை, செயற்கைத் தலைமுடி பொருந்தவில்லை. அதுவும் ஒரு காரணம்!

ஒரு படத்தின் வெற்றி தோல்வி, அது வெளிவந்த பின்தானே தெரிகிறது. ஆனால், அதைப் படமாக்கும்போது பெறுகின்ற அனுபவம் புதுமையானது. பிற்காலத்துக்குத் தேவையானது.

சண்டைப் படங்களில் நடிக்கின்றவர்களுக்கு உடல் சொன்னபடி வளைய வேண்டும். நடனப் பயிற்சி செய்திருந்தால் சண்டைக் காட்சியில் நடிப்பது மிக எளிது. இதிலும் நடனம்போல எல்லாமே 'டைமிங்' அடிப்படைதான். எத்தனை தடவை இரண்டு கைகளாலும் முகத்தில் குத்த வேண்டும்; பிறகு வயிற்றில் குத்த வேண்டும்; எப்படிக் கையை மடக்கி, முதுகுப் பக்கம் திருப்பித் தூக்கி அடிக்க வேண்டும் என்று கணக்கு பண்ணிக்கொள்ள வேண்டும்.

அதேபோல கத்திச் சண்டைக்கும் பாடங்கள் உண்டு. எத்தனை ஒத்திகை பார்த்தாலும், வேகமாகச் செய்யும்போது ஒரு விநாடி பாடம் தப்பினால் கத்தி க்ண்ணைக் குத்திவிடும்; அல்லது வாயைக் கிழித்துவிடும். பதற்றப்படாமல், வேறு சிந்தனையின்றி ஒத்திகை பார்த்தபடி செய்தால் தான் உண்டு.

நான் இடது கைப் பழக்கம் உள்ளவன். கத்திச் சண்டையில் பயிற்சி பெற்ற பெரும்பாலோர் வலது கைப் பழக்கமுள்ளவர்கள். எதிரெதிரே நின்று சண்டை செய்யும்போது வலது கை வாளும், அடுத்தவரின் வலது கை வாளும் சந்தித்தால்தான் பார்க்க அழகாக இருக்கும்.

அதுபோல, இடது கையில் என்னோடு சண்டை போட, ஒருவரைக் கஷ்டப்பட்டுப் பழக்கினார்கள். ஸ்டண்ட் மாஸ்டர் ஹயாத், கர்ணன் எப்படி நினைக்கிறாரோ அப்படிச் சண்டைக் காட்சிகளை அமைத்துக் கொடுப்பார்.

எவ்வளவு திறமைசாலியாக இருந்தாலும், உயிருக்கு ஆபத்து விளைவிக்கும் ஷாட்களுக்கு 'டூப்' போட்டாக வேண்டும்.

சண்டைக் காட்சிகளில், நித்தம் நித்தம் செத்துப் பிழைக்கும் மாவீரர்கள், 'டூப்' போடும் கலைஞர்கள்தான்.

எனக்கு சுப்பையா என்ற இளைஞரும், ராஜு என்பவரும் உயிரைப் பணயம் வைத்துச் சில காட்சிகளில் நடித்தனர்.

உடம்பில் எலும்பு முறிவு ஏற்படுவது, ரத்தக் காயங்கள் உண்டாவது பற்றி மனத்துக்குள் வேதனை இருப்பினும், வேலை முடியும்வரை சிறிதும் வெளிக்காட்டாமல் சிரித்துக்கொண்டே தைரியமாக இருப்பார்கள்.

நான்கு குதிரைகள் பூட்டிய ரதம் ஒன்றில், கையும் கால்களும் கட்டப் பட்டவாறு, தரையில் உருண்டுகொண்டு காடு மேடெல்லாம் பாயும் குதிரைகளின் வேகத்துக்குக் கல்லிலும் முள்ளிலும் அடித்துக் கிழிபட்டு அந்தக் கலைஞர் நடித்தது நெஞ்சை நெகிழ வைத்தது.

இன்னொரு கட்டத்தில் மலைமீது சண்டை செய்தவாறு இருவரும் இருபது அடி கீழே குதிக்கும்போது கால் இடறிப் பக்கவாட்டில் விழுந்த தில், கன்னத்தில் ஓட்டை விழுந்து அதன் வழியே நாக்கு எட்டிப் பார்த்தது. அந்த நிலையிலும் எழுந்து சிரித்தவாறே, அந்த வீரன் ஆஸ்பத்திரி சென்று தையல் போட்டு வந்தான்.

ஓடும் குதிரைகள் முதுகின்மீது நின்றவாறு கடிவாளத்தைப் பிடித்துச் சவாரி செய்ய முடியுமா! ராஜு என்ற 50 வயது இளைஞர் செய்து காட்டிப் பெரும் கைதட்டல் பெற்றார். கரவொலி அடங்குமுன் தடாரென்று 'கான்கிரீட்' ஓடுதளத்தில் ஓடும் குதிரை மீதிருந்து விழுந்தார். அநேகமாக முடிந்து விட்டார் என்று நினைத்தேன். பலத்த அடிபட்டு வெளியே காட்டிக் கொள்ளாமல் நொண்டிக்கொண்டே எழுந்து வந்தார்.

இந்த வீரர்களுக்குச் சண்டைக் காட்சி போர்க்களம். போரில் காயம் படுவதற்காக எந்த வீரனும் அஞ்சுவதில்லை. ராணுவ வீரனுக்குக்கூட என்றோ ஒரு சில நாள்களே சண்டைபோட நேரிடுகிறது. இவர்களுக்கோ தினந்தோறும் யுத்தம்!

ஹீரோவும், 'டூப்' நடிகருமே சிங்கத்துடன் சண்டையிடப் பயப்பட்ட போது, வேறு வழியின்றி, டைரக்டரே துணிந்து சிங்கத்துடன் நடித்துப் படத்தை முடித்த சம்பவம் ஒன்றுண்டு.

தனது படம் கிட்டத்தட்ட முழுமை பெற்று, வெளியிடும் தேதி அறிவித்து, தியேட்டர்களெல்லாம்கூட ஒப்பந்தமாகிவிட்டன. உச்சகட்டக் காட்சி திருப்பதி – திருத்தணி பாதையிலுள்ள மலைப்பகுதியில் படமாகிக் கொண்டிருந்தது. கதாநாயகன் சிங்கத்தோடு போராடுவது போன்ற காட்சி. 'டூப்' நடிகர் கோதாவில் இறங்கினார்.

பொதுவாக, படப்பிடிப்புக்குக் கொண்டு வரப்படும் சிங்கங்கள், பல நாள் பட்டினி போடப்பட்டோ, 'மார்ஃபியோ' ஊசி குத்தப்பட்டோதான் வரும். அன்று வந்த சிங்கமும் அதே நிலையில்தான் இருந்தது!

மயக்க நிலையிலிருந்த சிங்கத்தைக் கிளப்பி, முகத்தில் ஓங்கி ஒரு குத்து விட்டார் 'டூப்' நடிகர். சிங்கம் அப்படியே சாய்ந்ததுதான், எழுந்திருக்கவே இல்லை. மேல் உலகம் போய்ச் சேர்ந்து விட்டது.

சிங்கத்தின் சொந்தக்காரர் இதைக் கண்டதும் தன் வாழ்க்கையே இருண்டு போனதுபோல் கூப்பாடுபோட ஆரம்பித்துவிட்டார். அவரைச் சமாதானப்படுத்திவிட்டு பம்பாய், டில்லி, கல்கத்தா, ஹைதராபாத் என்று எல்லா நகரங்களுக்கும், டிரங்க்கால் போட்டுத் தேடி, கடைசியாகப் பூனாவிலிருந்த சர்க்கஸ் சிங்கம் ஒன்றை விலைக்கு வாங்கிக்கொண்டு வந்தனர்.

மீண்டும் படப்பிடிப்பு. ஒரு சிங்கத்தைக் கொன்ற மமதையில், நடிகர் ராஜகம்பீரமாக நுழைந்து, கையை ஓங்குவதற்குள் இந்தச் சிங்கம் தமாஷாக ஒரு அறை விட்டது. அவ்வளவுதான்! திரும்பிய கடைவாயுடன் 'டூப்' நடிகர் மாயமாய் மறைந்து விட்டார்.

அனைத்தையும் பார்த்த ஹீரோ, சொல்லாமல் ஏ.சி. காரில் புறப்பட்டுப் போய்விட்டார். தயாரிப்பாளரும், இயக்குநருமான அந்த மனிதருக்கு மானப்பிரச்சினை உயிரைவிட மேலாகத் தோன்றியது.

ஹீரோவின் 'விக்'கை மாட்டிக்கொண்டு கோதாவில் இறங்கினார். பத்தடி உயரத்திலிருந்து பாய்ந்த சிங்கத்தைத் தாங்கிப் பிடித்து, கீழே இறக்கி, கட்டிப் புரண்டார். சிங்கத்தின் சுமை தாளாமல் முதுகெலும்பின் கீழேயுள்ள இரண்டு எலும்புகள் முறிந்து விட்டன.

அவர் விடவில்லை. வேதனையோடு சிங்கத்துடன் போராடி, படப்பிடிப்பை வெற்றிகரமாக முடித்து, சொன்ன தேதியில் படத்தை வெளியிட்டு விட்டு, மூன்று மாதம் எலும்பு முறிவுக்குச் சிகிச்சை பெற்றுக் கொண்டார். அவர் தான் எம்.எஸ். கோபிநாத் – நடிகர் சுரேஷின் தகப்பனார்.

---

46



சுஜாதாவுடன் 'உன்னை நான் சந்தித்தேன்'

# என் கதாநாயகிகள்

திரைப்படங்களில் இதுவரை கிட்டத்தட்ட நூறு நடிகைகளுடன் இணையாக நடித்திருப்பேன் என்று நினைக்கிறேன்! இவர்களில் கிட்டத்தட்ட ஐம்பது, அறுபது நடிகைகளுக்கு (?) அறிமுகமாகி ஒன்றிரண்டு படங்களோடு திரையுலக வாழ்க்கை முடிந்து விட்டது. எவ்வளவோ முயன்று பார்த்தும் இத்துறையில் நிலைக்க அவர்களுக்குப் பிராப்தம் இல்லை.

எனக்குப் பின்னர் திரைப்படங்களில் அறிமுகமாகி, எனக்கு ஜோடியாக அதிகப் படங்களில் நடித்தவர்கள் லட்சுமி, ஜெயசித்ரா, ஸ்ரீப்ரியா, சுஜாதா, சரிதா, அம்பிகா, ராதிகா ஆகியோர். மூன்று நான்கு படங்களில் இணையாக நடித்துள்ளவர்கள் ஸ்ரீவித்யா, ஜெயசுதா, ஸ்ரீதேவி, ராதா, சுஹாசினி ஆகியோர்.

கதாநாயகியாக வளர்ச்சி பெறும் கட்டத்தில் 'கவிக்குயில்', 'சாய்ந் தாடம்மா சாய்ந்தாடு', 'மச்சானைப் பாத்தீங்களா' என்ற மூன்று படங்களில் ஸ்ரீதேவி எனக்கு ஜோடியாக நடித்தார். துரதிர்ஷ்டவசமாக மூன்றுமே வெற்றி பெறத் தவறி விட்டன.

பொதுவாக, வலுவான கதாபாத்திரங்களில் இரண்டு, மூன்று படங் களில் சிறப்பாக நடித்திருந்தாலும், வியாபார ரீதியில் அப்படங்கள் தோல்வியைத் தழுவும்போது, அதனால் நல்ல வாய்ப்புகளை இழந்த நடிகைகள் பலர் உண்டு. அதுபோன்ற சந்தர்ப்பங்களில் அவர்கள் சில மாதங்கள் வீட்டில் உட்கார்ந்து நல்ல வேடங்களுக்காகக் காத்திருப்பார்கள். அது வாராதபோது மேலும் காத்திருந்தால், வாய்ப்புகளை அடுத்த நடிகைகள் தட்டிக்கொண்டு போய்விடக்கூடும். அத்துடன் ஆறு மாதங்கள் படம் வெளிவரவில்லையென்றால், அந்த நடிகைக்கு மார்க்கெட்டே இல்லை என்று 'டமாரம்' அடித்து, நிரந்தரமாக வீட்டிலே உட்கார வைத்து விடுவார்கள்.

எனவே, விருப்பப்பட்ட பெரிய வேடங்கள் வராதபோது, வருகின்ற சுமாரான வாய்ப்புகளை அவர்கள் தட்டிக் கழிக்க முடியாது. இப்படி, புயலில் சிக்கிய படகுபோல் சிலரின் வாழ்க்கை, இலக்கைவிட்டு எங்கோ அடித்துச் செல்லப்படுவதும் உண்டு.

சில பேர், உடலமைப்பைச் சீராக வைத்துக்கொள்ளாமல் வாய்ப்பு களை இழந்து விட்டனர். சிலர், வந்ததை வரவில் வைப்போம் என்று கண்ட படங்களில் எல்லாம் நடித்துப் பெயரைக் கெடுத்துக் கொண்டனர். சிலர், வாழ்க்கையையே முடித்துக் கொண்டனர்.

அப்போதிருந்த இளம் நடிகைகளில் ராதிகா, சுஹாசினி, ராதா போன்றவர்கள் திறமையும், திரைப்படத்திற்கேற்ற தோற்றமும் உள்ள வர்கள். 'மீண்டும் ஒரு காதல் கதை'யில் ராதிகாவும், 'நெஞ்சத்தைக் கிள்ளாதே', 'சிந்து பைரவி' படங்களில் சுஹாசினியும், 'முதல் மரியாதை' யில் ராதாவும் முத்திரை பதித்துள்ளனர்.

தன்னுள் எவ்வளவு ஆற்றல் புதைந்து கிடக்கிறதோ, அதையெல்லாம் வெளிக்கொணர்ந்து, பல்வேறுபட்ட குணச்சித்திரங்களைத் திரைப்

படங்களில் கையாண்டு பெருமை பெற்றவர்கள் என்று பார்த்தால் லட்சுமி, சுஜாதா, சரிதா, ராதிகா ஆகியோரைச் சொல்லலாம்.

என்னோடு அதிக படங்களில் கதாநாயகியாக நடித்தவர் லட்சுமி. மிகுந்த தைரியசாலி. சொந்த வாழ்க்கையில் பல சோதனைகளை, ஏமாற்றங்களைச் சந்தித்தாலும் அவற்றால் துவண்டுவிடாமல், தன் நடிப்பாற்றலைக் கொண்டு இவ்வுலகில் வெற்றிகரமாக வாழ்ந்து காட்டுபவர். புத்தகம் படிக்கும் ஆர்வம் உள்ளவர். பொதுவாக, வாயாடி! யாருடனும் பேசாமல் – செட்டில் இவர் 'சீரியஸாக' அமர்ந்து நான் பார்த்ததில்லை.

நன்றாகச் சமைக்கத் தெரிந்தவர். உடற்பயிற்சி, யோகாசனங்கள் செய்வதுடன், வீட்டு வேலைகளைத் தானே செய்வதன் மூலமும், திட்டமான உணவுப் பழக்கத்தின் மூலமும் உடலை ஒரே சீராக வைத்திருப்பவர்.

நிறைய விஷயங்கள் பேசும்போது, விளையாட்டாக மற்றவர்கள் மனம் புண்படும்படி படபடவென்று பேசி விடுவார். அதுபோன்ற சமயங்களில் எங்கள் இருவருக்கும் வாய்ச்சண்டை வந்துவிடும்.

'நமக்கு அதிக விஷயங்கள் தெரியும் என்பதை மற்றவர்கள் உணர வேண்டுமே தவிர, நாமாக நமது மேதாவித்தனத்தைக் காட்டிக் கொள்ளக் கூடாது' என்பது எனது கொள்கை.

'சில நேரங்களில் சில மனிதர்கள்' படத்தில் அவர் ஏற்ற வேடம், அவரது அன்றைய வயதுக்கும் அனுபவத்துக்கும் மீறிய ஒன்று. ரொம்பவும் 'மெச்சூர்டாக' அந்தப் பாத்திரத்தில் நடித்து 'ஊர்வசி' அவார்டை வாங்கினார்.

உணர்ச்சிமிக்க காட்சிகளில், எல்லையைத் தொடும் இதே லட்சுமி தான், அவருடைய முதல் படமான 'ஜீவனாம்சம்' உருவானபோது, ''கண்ணீர் விடறது எப்படி...? எனக்கு அழுகையே வராதே...! நான் எதுக்கும் அழுததே இல்லை. இப்போ தற்கொலை செய்யறதுக்கு முன்னாடி நான் அழணும், எப்படி ஸீனை எடுக்கப் போறீங்க...?'' என்று கேட்டார்.

தமாஷாகச் சவால் விட்டார். வேறு வழியில்லாமல் ஒரு 'பாட்டில்' கிளிசரினை அவர் கண்ணுக்குள் பிழிந்து விட்டோம்! அப்போதும் கிளிசரின்தான் வழிந்து வந்ததே தவிர, கண்ணீர் வரவே இல்லை. அந்தக் காட்சியை ஒழுங்காக எடுத்து முடிக்கப் பெரும் சிரமப்பட்டார் மல்லியம் ராஜகோபால்.

சுஜாதா, தமிழ்த் திரைக்கு அறிமுகமாகும்போதே தோற்றத்தில் 'மெச்சூரிட்டி' இருந்தது. அதனால் குடும்பத்தலைவி, வக்கீல், டாக்டர், பழி வாங்கத் துடிக்கும் நடுத்தர வர்க்கத்துப் பெண்... என்று குணச்சித்திர வேடங்கள் அவருக்கு ரொம்பவும் கை கொடுத்தன. நானும் அவரும் பல படங்களில் நடுத்தர வர்க்கத்தில் காணப்படும் நல்ல தம்பதியாக நடித்திருக்கிறோம்.



ஸ்ரீபிரியாவுடன் 'பட்டிக்காட்டு ராஜா'

தொழிலில் அலட்சியம் என்பது சுஜாதாவின் அகராதியில் இல்லாத வார்த்தை. உணர்ச்சிகரமான காட்சிகளில் நீண்ட தமிழ் வசனங்களைச் சுத்தமான உச்சரிப்புடன் பொரிந்து தள்ளுவதில் வல்லவர்.

'டப்பிங்' பேசும்போது, திரையில் வரும் தன் உருவத்தைப் பார்த்து உருகி, கண்ணீர் விட்டுக்கொண்டே குரல் கொடுக்கும் அளவுக்கு 'எமோஷனல்' டைப். பத்திரிகையாளருடனும் படத்துறை சம்பந்தப் பட்டவர்களுடனும், பாசத்துடனும் நட்போடும் களங்கமில்லாமல் பழகுவார். மரியாதை குறைவாக யாரேனும் எதுவும் செய்தால், அவர் எவ்வளவு பெரிய மனிதராயினும் சரி, நேருக்கு நேர் பொங்கி வெடித்து விடுவார்!

திருமணமானவராயினும் சரி, ஆகாதவராயினும் சரி, இந்தத் தொழிலில் புகழின் உச்சத்தை அடைந்த பெரும்பாலான நடிக, நடிகை யருக்குக் குடும்ப வாழ்க்கையில் நிம்மதி கிடைப்பதில்லை. சந்தேகம்,

அதிருப்தி, சண்டை, பிரிவு என்று உடன்பிறப்புகளோடும், வாழ்க்கைத் துணையுடனும் பெரும் போராட்டத்தைச் சந்திக்க நேருகிறது. இது ஒரு சாபக்கேடு.

சுஜாதாவுக்குப் பெரும் புகழைத் தேடித்தந்த படம் 'அன்னக்கிளி'. அதன் வெள்ளிவிழா தமிழகமெங்கும் விமரிசையாகக் கொண்டாடப் பட்டபோது, அப்படத்தில் அற்புதமாக நடித்ததற்காகச் சந்தோஷப்பட வேண்டிய முதல் நபர் சுஜாதாதான். ஆனால், எந்த ஊர் விழாவுக்கும் நிறைந்த மனத்தோடு அவர் வந்து கலந்துகொள்ள முடியவில்லை. ஒவ்வொரு ஊர் செல்லும்போதும் ஒரு பிரச்சினை. வாழ்க்கையில் எவ்வளவோ சோதனைகளுக்குப் பிறகு, நடிப்பதற்கு ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்து, அந்தப் படமும் 'ஓஹோ' என்று ஓடும்போது அதை அனுபவிக்க முடியாமல் அவஸ்தைப்பட்ட அவருக்கு, 'நிம்மதியான வாழ்க்கையை அமைத்துக் கொடு' என்று அந்த நாளில் நான் ஆண்டவனை வேண்டியதுண்டு.

இன்று, காதலித்தவரையே கரம் பிடித்து, அன்புக் குழந்தைகள் பெற்று, நல்ல குடும்பத் தலைவியாகவும் விளங்குகிறார். திருமணத்துக்குப் பின்னும், வற்றாத நடிப்புத் திறனால் தனக்கென்று ஓர் இடத்தை நிலை நிறுத்திக்கொண்ட சாமர்த்தியசாலி சுஜாதா.

சரிதா ரொம்பவும் திறமைசாலியான நடிகை! அவர் கண்களே ஆயிரம் கதை பேசும். நடிப்பின் அடிப்படைகளை அறிந்துகொள்ளும் முன்னரே 'தப்புத் தாளங்கள்', 'மரோசரித்ரா' படங்களில் நடிப்பில் சரித்திரம் படைத்தவர். எந்த மொழியாயினும் சரி, ஒரு வார இடை வெளிக்குள் தானே கற்றுக்கொண்டு, சொந்தக் குரலில் பேசி நடிக்க வல்லவர்.

'வண்டிச் சக்கரம்', 'ஆணிவேர்', 'அக்னிசாட்சி' போன்ற படங்களில் நாங்கள் இணைந்து நடித்தோம். 'ஆணிவேர்' படத்தில் பண்ணையாரைக் கொன்ற குற்றத்துக்கு, அந்த இளம் பிராயத்திலேயே சிறை சென்று, ஆயுள் தண்டனை அனுபவித்து விடுதலையாகி வருவான் ஹீரோ ராமன்.

சிறைச்சாலையிலிருந்து வெளியே வந்து, ஐ.ஏ.எஸ். படித்து கலெக்ட ராக உயர்ந்துள்ள முறைப்பெண் அருக்காணியை முதன் முதலாகப் பார்ப்பான்.

அதிர்ச்சி, ஆனந்தம், அழுகை மூன்றும் சங்கமித்த உணர்வில் குழந்தை போல் கேவிக்கேவி அழுவான். ரொம்பவும் 'க்ளோஸப்'பில் கண்கள் மூக்கு வாய்ப் பகுதி மட்டும் திரை முழுக்கத் தெரிகிறாற்போல அழுகை யைப் படமாக்கினார் டைரக்டர் விஜயன்.



வண்டிச்சக்கரம்

இந்த ஷாட்டில் நான் நடிப்பதைப் பக்கத்தில் நின்று பார்த்துக் கொண்டிருந்த சரிதா 'அப்செட்' ஆகிவிட்டார். பக்கத்திலிருந்த பூர்ணம் விஸ்வநாதன் அவர்களிடம் ''ஒரு ஆர்ட்டிஸ்ட் எமோஷனலா நடிக்கறப்போ, நாம அதைப் பார்க்கக்கூடாது சார்! இப்போ அவர் அழுததைப் பார்த்ததும் எனக்குக் கஷ்டமாய்ப் போயிடுச்சு! படத்திலே அவரு வில்லேஜ்மேன். படிக்காதவன் பாத்திரத்தில் நடிக்கிறார். ஃபிரீயா அழுது நடிக்கலாம். நான் படிச்ச பொண்ணு, நாகரிகம் தெரிஞ்சவ. எனக்கும் அதே அளவு வருத்தமும் மகிழ்ச்சியும் உண்டு. ஆனா, அவரைப் போல வெளிப்படையா என் உணர்ச்சிகளைக் காட்டி நடிக்கக்கூடாது. Subtle ஆக நடிக்கணும். அதே சமயம் அவர் பர்ஃபாமென்ஸைவிட கம்மியாகவும் போயிடக்கூடாது'' என்றாராம்.

ஆனால், படம் பார்த்தவர்களுக்குத் தெரியும். சரிதா அந்தக் காட்சியில் எவ்வளவு நாசூக்காக, உணர்ச்சிகளை அடக்க முடியாமல் கஷ்டப்பட்டு அடக்குவதுபோல் அற்புதமாக நடித்தார் என்பது!

---

47



# முக்தா சகோதரர்கள்

திரைப்படத் துறையில் நான் மதிக்கும் மூத்த இயக்குநர்களில் முக்தா சீனிவாசன் அவர்களும் ஒருவர். டைரக்ஷன் துறையில், கிளாப் பாய் வேலையிலிருந்து அனைத்தையும் நிதானமாக, முறையாகக் கற்று உயர்ந்தவர்.

எழுத்திலே வேகமும் விவேகமும் உள்ள இளம் எழுத்தாளர்களை இனங்கண்டு, ஆரம்ப காலத்திலேயே அவர்களைத் தன் படங்களுக்குப் பயன்படுத்துவதில் சூரர் முக்தா சீனிவாசன்.

தெளிவான கதையும் வசனமுமே ஒரு படத்தின் வெற்றிக்கு அடிப் படை என்பதைப் புரிந்துகொண்டு, ஆறு மாதங்களுக்கு முன்னரே கதை, வசனத்தை எழுதத் துவங்கி, பல முறை படித்துப் பார்த்து, விவாதித்து, வசனங்களைக் குறைத்து மெருகேற்றி, அதன் பின்னரே ஸ்டுடியோ தளத்துக்குள் நுழைவார். நகைச்சுவை உணர்வு இவர் படங்களில் சற்றுத் தூக்கலாக இருக்கும்.

'இத்தனை ரோல்கள் நெகடிவ்தான் பயன்படுத்த வேண்டும், இவ்வளவு நாள்களுக்குள் படப்பிடிப்பை முடித்துவிடவேண்டும்' என்று திட்டமிட்டு, குறிப்பிட்ட தேதிக்கு முன்னதாகவே பதற்றமில்லாமல் படப்பிடிப்பை முடித்து விடுவார். நடிக, நடிகையரிடம் கால்ஷீட் வாங்கி விட்டால், எந்தக் காரணம் கொண்டும் அதை வீணாக்கமாட்டார்.

படப்பெட்டியை விநியோகஸ்தர்கள் கையில் கொடுப்பதோடு தன் கடமை முடிந்து விட்டதென்று நினைக்காமல், குறைந்தது, பத்து வாரங் களுக்கு, வாரம் ஒரு முறை பேப்பர் விளம்பரம் தரத் தயங்கமாட்டார்.

பொதுவாக, தனது படம் நூறு நாள் ஓடினால் விழா எடுக்க வேண்டு மென்று எந்தத் தயாரிப்பாளரும் ஆரம்பத்தில் நினைப்பார். நாலைந்து வெற்றிப் படம் கொடுத்த பின்பு, விழாவுக்கு ஆகும் செலவைக் கணக்குப் போட ஆரம்பிப்பார். குறைந்தபட்சம் விழாச் செலவு ஐம்பதாயிரமாவது ஆகிவிடும்; இது வீண் செலவு என்று தோன்றும்.

பல படங்கள் எடுத்து, பணம் சேர்ந்த பின்புதான் இதை மிச்சம் பிடிக்க வேண்டும் என்ற கஞ்சத்தனம் தோன்றும்! விழா எடுக்கும்போது, அந்தப் படத்தில் பணியாற்றிய அத்தனை கலைஞர்களுக்கும் தொழில் நுட்பக் கலைஞர்களுக்கும், ஏதோ ஒரு திருவிழாவில் கலந்துகொண்ட குதூகலமும், மகிழ்ச்சியும், பாராட்டப்படும்போது மேலும் கடுமையாக உழைக்க வேண்டும் என்ற புத்துணர்ச்சியும் போனஸாகக் கிடைக்கிறது என்பதை ஏனோ தயாரிப்பாளர்கள் உணர்வதில்லை.

முக்தா பிலிம்ஸார், தங்களது படம் நூறு நாள் ஓடும்பட்சத்தில், விழா கொண்டாடாமல் விட்டதே இல்லை. டைரக்டர் முக்தா சீனிவாச னுக்கு முதுகெலும்பாகவும், வலது கரமாகவும் இருந்தவர் அவரது மூத்த சகோதரர் ராமசாமிதான்.

படத்தின் கதை – வசனம் – டைரக்ஷன் மட்டுமே சீனிவாசன் பொறுப்பில் இருக்கும். தயாரிப்புச் செலவு, நிர்வாகம் இரண்டையும்

ராமசாமி அண்ணாதான் பார்த்துக் கொள்வார். திபெத்தில், 15 ஆம் தேதி படப்பிடிப்பு என்றால் 10 ஆம் தேதியே அரிசி, பருப்பு வகையறாக்களுடன் சமையல்காரர் திபெத்தில் இருப்பார். அதே சமயம் அநாவசியமாக ஒரு பைசா செலவாவதை அனுமதிக்கமாட்டார்.

மகாபலிபுரம் பாதையிலுள்ள Temple bay பயணிகள் விடுதியில், நானும் லட்சுமியும் சம்பந்தப்பட்ட ஒரு பாடலுக்கான படப்பிடிப்பு நடைபெற்றது. பாதி பாடலை இங்கு முடித்து விட்டு, மறுநாள் மீஞ்சூர் சென்று மறு பாதியை முடிக்கத் திட்டம்.

இங்குப் படப்பிடிப்பு துரிதமாக நடந்ததில் பகல் ஒரு மணிக்குப் பாதி பாடல் முடிந்து விடவே, மீதியையும் இந்த விடுதியைச் சுற்றியுள்ள பூங்காவிலேயே முடித்து விடலாமா என்று அபிப்பிராயப்பட்டோம்.

விஷயம் ராமசாமி அண்ணா காதுக்கு எட்டியது. நேரே எங்களிடம் வந்து சீனிவாசனைத் தனியே அழைத்துச் சென்று, ''என்ன நீ! நெனைச்சு நெனைச்சு பிளான் பண்றே? நேத்திக்கே நான் மீஞ்சூர் போய் காலை டிபன், பகல் உணவு தயார் செய்ய, அரிசி, பருப்பெல்லாம் வாங்கிக் கொடுத்து, சமையல்காரருக்கு அட்வான்ஸ் வேறு கொடுத்துட்டு வந்திருக்கேன். நீ திடும்னு புரோக்ராம்மை மாத்தினா அந்த நஷ்டத்தை யார் ஏத்துக்கறது?'' என்று வாங்குவாங்கென்று வாங்கி விட்டார். உடனே மீஞ்சூருக்கு ஆள் அனுப்பி, சமையல்காரருக்குக் கொடுத்த பணம் தவிர, மற்ற பொருட்களையெல்லாம் எடுத்து வரச் செய்தார்.

இதைப் படிப்போருக்கு, 'இப்படியும் ஒரு கருமியா?' என்று தோன்றும். ஆனால் அவர் கடைப்பிடிக்கும் வழிதான் மிகச் சிறந்தது என்பதற்கு வேரூன்றி நிற்கும் அவர்கள் நிறுவனமே சான்று. அநாவசியமான, ஆர்ப்பாட்டமான செலவுகளை இதுபோல் ஆரம்பத்திலிருந்தே கட்டுப்படுத்தியிருந்தால், இன்னும் எத்தனையோ தயாரிப்பு நிறுவனா ள் நிலைபெற்று நின்றிருக்கும்.

ராமசாமி அண்ணாவுக்கும் எனக்கும் ஏற்பட்ட அறிமுகமே வேடிக்கையானது. 'அவன் – அவள் – அது' படத்தில் நடிக்க என்னை ஒப்பந்தம் செய்ய வந்தார். நான் அப்போது வாங்கும் சம்பளத்தைச் சொன்னேன். அதில் மூன்றில் ஒரு பாகம் குறைத்து அவர் சொன்னார். நான் மறுத்தேன்.

''இல்லே சார்! உங்களுக்கு இன்ன சம்பளம், லட்சுமிக்கு, ஸ்ரீப்ரியாவுக்கு, காமிராமேனுக்கு என்று எல்லோருக்கும் தோராயமா ஒரு சம்பளம் போட்டு, படத்தை உருவாக்க ஆகற செலவைக் கணக்கிட்டு, சின்ன லாபம் வெச்சு எல்லா ஏரியாவுக்கும் வித்துட்டேன்'' என்றார்.

''என் சம்மதமில்லாம, நான் நடிக்கறதா நீங்களே முடிவு பண்ணி, ரேட் வேற ஃபிக்ஸ் பண்ணி, வியாபாரத்தை முடிச்சிட்டீங்களா? வேடிக்கை தான்!'' என்றேன்.

''நீங்க மறுக்கமாட்டீங்கங்ற நம்பிக்கைதான்...!''

''சரி, இப்ப நான் மறுக்கறேன். உங்க படத்தில் நடிக்க முடியாது.''

''அப்படி உங்களை நான் விடமுடியாது. நாளைக்கு வந்து பேசறேன்.''

போய் விட்டார். மறுநாள் வந்து, அதே தொகையில் நின்றார். சரியான விடாக்கண்டன். கடைசியாகச், சிறிது அசைந்து கொடுத்து, ஒப்பந்தத்தை முடித்துக் கொண்டார்.

பொதுவாக, ஒரு படத்துக்குத் தேதி எழுதிக்கொடுத்து விட்டால், தலையே போவதானாலும் அதை என் வகையில் மாற்றமாட்டேன். துரதிர்ஷ்டவசமாக, அவர்களது முதல் நாள் படப்பிடிப்பன்று வெளி நாட்டில் மாட்டிக் கொண்டேன்.

டோக்கியோவிலிருந்து கால் போட்டு, டைரக்டர் சீனிவாசனிடம் பேசினேன். ''இரண்டு நாள் விட்டுக் கொடுத்தால் ஹாங்காங் வேலையை முடிக்க வசதியாக இருக்கும்'' என்றேன்.

''உங்க பிரச்சினையை நீங்க சொல்றீங்க, எனக்கு முதல் நாள் படப் பிடிப்பு. ரெண்டு நாள் 'அப்செட்' ஆனா எல்லாப் புரோக்கிராமும் அடி படும். லட்சுமி, ஸ்ரீப்ரியா தேதிகள் வேற கெடைக்காது'' என்றார்.

''முதலும் கடைசியுமா இந்த ஒரு முறை பொறுத்துக்குங்க. லட்சுமி, ஸ்ரீப்ரியாகிட்ட வேணும்னா நானே கேட்டுத் தேதி வாங்கித் தர்றேன்'' என்றேன்.

வேண்டா வெறுப்பாக, மறு பதில் சொல்ல முடியாமல் சம்மதம் தெரிவித்தார்.

சென்னை திரும்பியதும், நேரே படப்பிடிப்பு நடந்த வீட்டுக்கு ஓடி, முக்தா சீனிவாசனிடம் மன்னிப்புக் கேட்க அவரைத் தேடினேன். திடீ ரென்று ஒரு கை, என்னை வழிமறித்துத் தன் பக்கம் இழுத்தது. ராமசாமி அண்ணா! ''நல்லபடியா வந்து சேர்ந்தீங்களா, சந்தோஷம், இந்தாங்க, இந்த ஷெட்யூலுக்கு உங்களுக்குச் சேரவேண்டிய பணம். இந்த வவுச்சர்ல ஒரு கையெழுத்தைப் போடுங்க'' என்றார்.

''அண்ணா! ரெண்டு நாள் நான் லேட்டா வந்திருக்கேன். இன்னும் நடிக்கவே ஆரம்பிக்கலே...''

''அதெல்லாம் எனக்குத் தெரியாது. அது உங்கபாடு, டைரக்டர் பாடு! இதை நீங்க வாங்கிட்டா என் வேலை முடிஞ்சிடும்...'' பலவந்தமாகப் பணத்தைத் திணித்துவிட்டு மறைந்து விட்டார்.

திட்டமிட்டபடி பதற்றமில்லாமல் படத்தை முடித்துவிட்டனர். இன்னும் ஒரு மாதம் படம் வெளிவர அவகாசமிருந்தது. ராமசாமி அண்ணா போன் செய்தார்.

''சம்பள பாக்கியைக் குடுத்திடறேனே!''

''ஒண்ணும் அவசரமில்லே, அப்புறமா வாங்கிக்கறேன்.''

''எனக்குக் கணக்குத் தீரணும். வாஹினி 'ஏ' தியேட்டர்லே ரீ–ரிக்கார்டிங், அந்தப் பக்கமா வர்றீங்களா...?''

''அதுக்கென்ன வந்துட்டா போச்சு...'' இரண்டு நாள் நான் போக வில்லை. மூன்றாவது நாள் விஜயா கார்டனில் 'ராமன் பரசுராமன்' படத்தின் உச்சகட்டக் காட்சி படமாகிக் கொண்டிருந்தது. கொளுத்தும் வெயிலில் லெதர் ஜெர்கின் போட்டு வியர்த்து உருகி, மண்ணில் புரண்டு கொண்டிருந்தேன்.

ராமசாமி அண்ணா வந்தார். ''ரெண்டு நாளா வருவீங்கன்னு பார்த்தேன். ஏமாத்திட்டீங்க...'' அருகே வந்தவர், மீதி சம்பளத்துக்கான செக்கை ஒரு கவரில் வைத்து, ஜெர்கின் பாக்கெட்டில் செருகிவிட்டு, திரும்பிப் பார்க் காமல் போய்விட்டார்.

சொல், செயல் இரண்டிலும் நாணயத்தைக் கடைப்பிடிக்கும் அந்தப் பெரியவர் சென்ற பக்கம் கையெடுத்துக் கும்பிட்டு மானசீகமாக வணங்கினேன்.

இவரைப் போலவே அத்தனை தயாரிப்பாளர்களும் கறாராகச் சம்பளம் பேசி, படம் வெளிவருமுன் நிச்சயமாகத் தந்து விடுவார்களேயானால், உலகிலேயே திரைப்படத் துறையைப் போன்ற சிறந்த தொழில்துறை எதுவுமே இருக்க முடியாது.

பேசும் சம்பளத்தில் கொஞ்சம் பிடித்துக்கொண்டு தருவோரும் உண்டு. நஷ்டத்தைச் சொல்லி, பாதியாகச் சம்பளத்தைக் குறைத்துத் தருவோரும் உண்டு. முழுசாகச் சம்பளம் தரும் தயாரிப்பாளர் நூறு பேரில் பத்துப் பேர் இருந்தால் பெரிய விஷயம்!

இதில் அன்பாகப் பேசி, பண்பாக நடந்து, முழுசாகச் சம்பளத்தை ஏப்பம் விடும் பெருந்தன்மையினரும் உண்டு.

அப்படி ஓர் அனுபவம் எனக்கு உண்டு. முழுசாக அறுபது நாள்கள் கால்ஷீட்டை விழுங்கிய படத்தை அந்தப் பெரியவர் தயாரித்தார். அவர்

திரைப்படத் துறையில் ஒரு பிரிவில் பணியாற்றுபவர். மற்ற கலைஞர் களுக்கெல்லாம், படப்பிடிப்பின் போதே கொஞ்சம் கொஞ்சமாகச் சம்பளத் தைக் கொடுத்து விட்டார். எனக்கு அட்வான்ஸ் தொகையோடு சரி. ''சார்! உங்க சம்பளத்தை மட்டும் படம் முடிஞ்சு வியாபாரமானதும் தர்றேன்'' என்றார்.

படம் முடிந்தது. கதையும் படமாக்கப்பட்ட விதமும் பழையபாணி என்பதால், வியாபாரமாகச் சிரமப்பட்டது. கடைசியில் எப்படியோ ஆட்களைப் பிடித்து விற்று விட்டார். லாபம் பெரிதாய் இருந்திருக்க முடியாது என்பது எனக்குத் தெரியும்! ஒரு படத்தின் பெட்டி தியேட்டருக் குப் போய்விட்டால், நடிகனுக்கும் தயாரிப்பாளருக்கும் உள்ள உரிமைகள் போய்விடும்.

தயாரிப்பாளர், முதலில் வெளியூர்களில் படத்தை வெளியிட்டு விட்டார். அதன் பின்னர் சென்னையில் ரிலீஸ் செய்தார். படம் சரியாக ஓடவில்லை. பணம் கேட்க எனக்கு உரிமையும் இல்லை. படம் வியாபார மாகாததில், சரியாக ஓடாததில் நமக்கும் ஒரு பங்கு உண்டு என்ற எண்ணத்தில் அதை மறந்து விட்டேன்.

அந்த ஆண்டு தமிழக அரசு அந்தப் படத்துக்கு ஒரு லட்ச ரூபாய் பரிசுத் தொகை வழங்கியது. 'ஆகா! உங்க சம்பளப் பணம் வரப்போகுது' என்று வீட்டார் குதூகலித்தனர். தயாரிப்பாளர் வந்தார், ஆளுயர மாலை போட்டு, நாலு சொட்டுக் கண்ணீர் விட்டார். ''நீங்க மட்டும் ஒத்துழைக்க லேன்னா படமே வந்திருக்காது'' என்று கூறி விடைபெற்றார்.

''என்னங்க, இந்தப் படத்துக்குச் சம்பளம் நாலு சொட்டுக் கண்ணீர் தானா?'' என்றாள் என் மனைவி.

''சும்மா இரு! இப்பத்தானே அறிவிச்சிருக்காங்க. ஒரு மாசத்தில குடுத்துடுவாங்க. அப்புறம் பணம் தானே வரும்'' என்றேன் நான்.

ஆண்டுகள் பல உருண்டோடி விட்டன. அவர் இன்னும் வருகிறார். வந்துகொண்டே இருக்கிறார்.

இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் நண்பர்கள் என்னை 'ஏமாளி' என்று கேலி செய்வார்கள். நான் மௌனமாக அந்தப் பட்டத்தை ஏற்றுக் கொள்வேன்.

எப்படியோ! ஏமாற்றப்பட்ட எனக்குத் தொடர்ந்து தொழில் செய்யும் வாய்ப்பை ஆண்டவன் நல்கியிருக்கிறான்.

ஏமாற்றியவர்கள் திரும்பப் படமே எடுக்க முடியவில்லையே...!

---

## 48



# கலைஞானி

பாரதிராஜாவின் 'சிகப்பு ரோஜாக்கள்'. படத்தைப் பழனியப்பா தியேட்டரில் ரசிகர்களுடன் அமர்ந்து பார்த்தேன். ஆங்கிலப் படத்துக்கு இணையான காட்சிகளும், சஸ்பென்ஸ் கதைக்கேற்ற ஒளிப்பதிவும் அப்படியே நெஞ்சில் நிலைத்து விட்டன.

கடைசிக் காட்சியில், உயிரைக் காப்பாற்றிக்கொள்ள வீட்டை விட்டு வெளியே ஓடும் ஸ்ரீதேவியைப் பிடிக்க, வாசல் பக்கமுள்ள கதவின்மீது கமல் பாய்ந்து, ஒருகை பலத்தில் 'பல்டி' அடித்துக் கதவின் வெளிப்புறம் இறங்கி, துரத்தியோடும் ஆவேசம்... அனைத்தும் பிரமிப்பை ஏற்படுத்தின.

படம் முடிந்து வீடு திரும்பும் வழியில் மனத்துக்குள் ஒரு கேள்வி எழுந்தது. மிகச் சிறந்த ஒரு வாய்ப்பை நான் நழுவவிட்டு விட்டேனா?

'பதினாறு வயதினிலே' முடிந்த கையோடு, நண்பர் பாரதிராஜா ஒரு நாள் இந்த, 'சிகப்பு ரோஜாக்கள்' கதையை என்னிடம் சொன்னார். திரைக்கதை முழுக்க உருவாகாத நேரம் அது...!

கதையைப் பாரதிராஜா என்னிடம் சொன்னபோது, பல பெண்களைக் கற்பழித்துக் கொலை செய்து மகிழும் பாத்திரம் எனக்குப் பொருத்தமாக இருக்குமா என்பதில் இருவருமே சந்தேகப்பட்டோம். நம் விருப்பம் வேறு, ரசிகனின் விருப்பம் வேறு. இந்த நடிகன் இந்த வேஷத்தில் நடித்தால்தான் நன்றாகவிருக்கும் என்று ரசிகன் முடிவு செய்து வைத்திருக்கிறான். சிவகுமார் பல பெண்களைக் கற்பழித்துக் கொலை செய்வது ரசிகர்களுக்குப் பிடிக்காமல் போனால்? மனத்துக்குள் ஒரு பயம்.

'இமேஜ்' வலைக்குள் சிக்காத கலைஞனே இருக்க முடியாது. 'நல்ல தத்துவங்களும், போதனைகளும் அடங்கிய, இனிய பாடல்கள் தன் படத்தில் இடம் பெறவேண்டும். தானாக வலியச் சென்று ஹீரோயினைக் காதலிப்பதாகக் காட்சிகள் இருக்கக்கூடாது...! அவர்கள்தான் முதலில் ஹீரோ மீது காதல் கொள்ள வேண்டும். படத்தின் முடிவில் சத்தியமும், தர்மமும் வெல்வதாகவும், அக்கிரமக்காரர்கள் ஒடுக்கப்பட்டுத் தண்டிக்கப்படுவ தாகவும் கதை இருக்க வேண்டும்' என்ற கொள்கையுடன் படங்களில் நடித்தவர் எம்.ஜி.ஆர்.

'பாசம்' என்ற படத்தின் முடிவில் அவர் இறந்து விடுவதாகக் காட்டப்பட்டதை ரசிகர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. 'இனிப் படங்களின் முடிவில் மரணமடையும் காட்சியில் எம்.ஜி.ஆர். நடித்தால், படத்தைப் பார்க்க மாட்டோம்" என்று ஆவேசமாகக் குரல் கொடுத்தார்கள். அதன் பிறகு எந்தப் படத்திலும் அப்படி ஒரு முடிவை எம்.ஜி.ஆர். தரவில்லை.

'பாசமல'ரில் சிவாஜியையும் சாவித்திரியையும் உடன் பிறப்பாகவே கருதி ஏற்றுக்கொண்ட ரசிகர்கள், அந்த நினைவு மறைவதற்குள் 'எல்லாம் உனக்காக' படத்தில் இருவரும் ஜோடியாக வந்ததை உடனே ஏற்றுக் கொள்ளவில்லை.

தான் வணங்கும் தெய்வமான 'ராகவேந்திர'ராக தனது நூறாவது படத்தில், விரதமிருந்து ரஜினிகாந்த் நடித்திருந்தார். தமிழகமெங்கும்

உள்ள அவரது ரசிகர்கள் மட்டும் பார்த்திருந்தால்கூட அந்தப் படம் நூறு நாள்கள் ஓடியிருக்கும்! ஓடவில்லை.

வடக்கே இருபத்தைந்து சென்டர்களில் வெள்ளிவிழா கொண்டாடிய படம் டைரக்டர் கே.பாலசந்தரின் 'ஏக் துஜே கேலியே'.

அதே இயக்குநரின் 'வறுமையின் நிறம் சிவப்பு', 'அபூர்வ ராகங்கள்' தமிழில் வெற்றி பெற்றாலும் அவற்றின் இந்திப் பதிப்புகள் வரவேற்கப் படவில்லை. முதல் படத்தில் கமலஹாசன் பெற்றிருந்த 'கிளாமர் ஹீரோ' இமேஜ் இந்தப் படங்களில் அவர் செய்த குணச்சித்திர வேடங்களை ஏற்க முடியாமல் செய்துவிட்டது.

இந்த அடிப்படையில், 'சிகப்பு ரோஜாக்கள்' படத்தில் நான் நடித் திருப்பின், அது தோல்வியுறவும் வாய்ப்பிருக்கிறது! காரணம் ஒவ்வொரு நடிகனின் தோற்றமும், நடிக்கின்ற பாணியும் வேறு. ஒருவருக்கு மிகவும் சிறப்பாகப் பொருந்துகிற வேடம், அதேபோல அடுத்த நடிகருக்கும் பொருந்தும் என்று சொல்ல முடியாது.

'அரங்கேற்றம்', 'சொல்லத்தான் நினைக்கிறேன்', 'பட்டிக்காட்டு ராஜா', 'தங்கத்திலே வைரம்', 'மேல்நாட்டு மருமகள்' உட்பட எட்டுப் படங்களில் நானும் கமலஹாசனும் இணைந்து பணியாற்றியிருக்கிறோம்.

'சொல்லத்தான் நினைக்கிறேன்' படத்தில் கமலுக்கு வாலிபப் பெண்ணைக் கவர்ந்திழுக்கும் வனப்பும், அந்த வயதுக்கே உரிய குறும்பும் ஒருங்கிணைந்த ஒரு வேடம். 'கல்யாணம், கச்சேரி, கொண்டாட்டம் எல்லாமே' என்று துவங்கும் பாடலுக்கு அவர் ஆடியுள்ள நடனம், அப்போதிருந்த அவரது உடலமைப்பு, வாலிபர்களையே காதல் கொள்ள வைக்கும்.

ஆரம்பத்தில் பல படங்களில், ஒன்று டான்ஸர் வேடம் அல்லது வில்லத்தனம் கலந்த இரண்டாம் கதாநாயகன் வேடங்களே அவருக்குக் கிடைத்தன.

நண்பர் கமலஹாசன் உடற்பயிற்சி, நடனப்பயிற்சி இவ்விரண்டிலும் மிக இளவயதிலேயே அதிகக் கவனம் செலுத்தி அசுரசாதகம் செய்தது, பின்னாளில் திரைப்படங்களில் பல்வேறு பரிமாணங்களை அவர் வெளிப் படுத்தப் பெரிதும் உதவியது.

'சட்டம் என் கையில்' படத்தில் சுமார் அறுபது அடி உயரம் உள்ள டவரில் இருந்து கீழே குதிக்கும்போது, இடையில் ஒரு கரணம் அடித்துத் தரையைத் தொடுவார். ஸ்லோமோஷனில் அந்தக் காட்சி எடுக்கப் பட்டிருக்கும். கொஞ்சம் தவறினால் கழுத்து எலும்பு ஒடிய வாய்ப்பிருக்கிறது.

டைரக்டர் ஸ்ரீதர் தனது படத்தை 'மீண்டும் ஒரு சூரியோதயம்' என்ற பெயரில் துவக்கியபோது, பெங்களூரில் நடந்த அதன் படப்பிடிப்பில் கமலஹாசன் குதிரைச் சவாரி செய்த சமயம் ஒரு விபத்து ஏற்பட்டது. அது பற்றிக் கமலிடம் விசாரித்தபோது, ''ராமராவ், நாகேஸ்வரராவ் எல்லாம் சவாரி பண்ணின குதிரைன்னு சொன்னாங்க. மேலே ஏறி உட்கார்ந்ததுக் கப்புறந்தான், இதிலே அவங்க நிச்சயம் சவாரி பண்ணியிருக்க மாட்டாங் கன்னு புரிஞ்சுது. அவ்வளவு முரடு...! அப்புறம் என்ன? காங்கிரீட் தளத்தில் குதிரை வழுக்கிப் பக்கவாட்டில் விழுந்து சரிந்தவாறே இருபதடி தூரம் போய் நிற்க, இடையிலே மாட்டிக்கொண்ட என் பாதத்தின் எலும்பு கள் நொறுங்கி விட்டன!'' என்றார்.

'அலாவுதீனும் அற்புத விளக்கும்' படப்பிடிப்பின்போது சிங்கத்துடன் மோதி அறை வாங்கியதில் வாய்க்குள் காயம்!

'டூப்' போடாமல், உண்மையிலேயே பலமாதிரி சண்டைகளைப் படங்களில் செய்யக் கூடியவர் இவர்தான்.

ஆரம்பத்தில் புதுமை மிக்க கருத்துக்களோடு, அறிவு ஜீவிகள் ஏற்றுக் கொள்ளும் படங்களில் நடிப்பதே சிறந்தது என்று கருதினார். பின்னாளில் படம் பார்ப்போரில் அதிகப்படியானவர்கள், உண்மையான அன்பைப் பொழிபவர்கள், பாமர மக்கள் என்பதை உணர்ந்துகொண்டு, அவர்களை மகிழ்விக்க மசாலாப் படங்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து நடித்தார்! ஆனால், கோடிக்கணக்கில் செலவழித்து உருவாக்கப்பட்ட மசாலாப் ப்டங்களுக்கான வரவேற்பு பின்னர் ஆரோக்கியமாக இல்லை.

தமிழ்ப்பட ரசிகர்கள் வேடிக்கையானவர்கள். எந்த ஒரு நல்ல நடிகன் கொடுக்கும் நல்ல படத்தையும், அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள் என்று சொல்ல முடியாது...! அந்த நடிகனே, விருப்பப்படாமல் நடித்த ஒரு படத்தை ஒதுக்கி விடுவார்கள் என்றும் சொல்லமுடியாது!

வெற்றி, தோல்வி என்பது எல்லாக் கலைஞர்களும் சந்தித்தே ஆக வேண்டியவை.

ஒரு படம் நன்றாக ஓடும்போது, 'நடிப்பின் எல்லையை இந்தப் படத்தில் தொட்டு விட்டார்! இவரை மிஞ்சி இன்று நடிகரே இல்லை' என்று பாராட்டுவார்கள்.

படம் தோல்வியைத் தழுவினாலோ, 'இவனைப் போட்டுப் படம் எடுத்தா 'குளோஸ்'! இனிமே இவனோட ஆட்டமும் குளோஸ்' என்று மட்டம் தட்டுவார்கள்.

போற்றலிலும் உண்மையில்லை. தூற்றலிலும் உண்மையில்லை. நாம் யார், நம் திறமை என்ன, நாம் சாதித்தது என்ன என்ற உண்மை நமக்கு மட்டுமே தெரியும்!

இவர்கள் புகழ்கிற அளவுக்கு நாம் எதையும் சாதிக்கவில்லை என்பதும், இகழ்கிற அளவுக்கு நாம் கேவலமானவன் இல்லை என்பதும், நம்மால் உணர முடிகிறபோது, இரண்டு நிலைகளிலும் பதற்றப்படாமல் கடமையைச் செய்யமுடியும்...!

வாழ்க்கை பற்றிய அணுகுமுறை, ஒரு நடிகன் எவற்றை மக்களுக்குச் சொல்லலாம், எவற்றைச் சொல்ல வேண்டிய அவசியமில்லை... போன்ற விஷயங்களில் நானும் கமலும் மாறுபட்ட கருத்தை உடையவர்கள். ஆனால், அவரின் சிறந்த நடிப்பாற்றலுக்கு என்றுமே நான் ரசிகன்!

'அபூர்வ சகோதரர்கள்', 'அவ்வை சண்முகி', 'குணா', 'மகாநதி', 'இந்தியன்', 'பம்மல்.கே.சம்பந்தம்' என – நடிக்கும் ஆர்வமுள்ள இளைஞர்களுக்கு இன்று, ஒரு அகராதி ஆகிவிட்டார் கமல்.

தனிமனித வாழ்க்கையில், பல புயல்களை எதிர்கொண்ட போதும் துவண்டுவிடாமல், கலையுலகில் எந்த நடிகனும் முயன்று பார்க்க முடியாதபடி விஷயங்களைத் திரையில் முடித்துக் காட்டுகிறார்...!

'மகாநதி' படம் பார்த்துவிட்டு, அவரைச் சந்தித்தபோது – குழந்தைகள் மீது அவருக்கு ஏற்பட்டிருந்த பாசம் வியப்பூட்டியது.

இன்றைய இளைய தலைமுறைக் கலைஞர்களுக்குக் கலங்கரை விளக்கமாக விளங்கும் கமல், என்றுமே எனக்கு 'வெள்ளித்திரையின் தங்கப்பையன்' தான்...!

---

49



## கனவு – கணவன் – கண்ணீர்

திருமணங்கள் மனித வாழ்வில் ஒரு திருப்புமுனை!

சுதந்திரமாக – நினைத்தபோது உண்டு, நினைத்தபோது தூங்கி, ஓடி ஆடி வாழ்ந்த பிரமச்சாரியின் வாழ்க்கை, திருமணத்துக்குப் பிறகுதான் அர்த்தமுள்ளதாக மாறுகிறது.

சுமைதாங்கிபோல, குடும்ப பாரத்தைச் சுமப்பதும் சுகமாகி விடுகிறது.

ஒரு நடிகன் நடிக்க வருமுன் திருமணம் செய்து கொள்வதிலோ, நண்பர்கள் வீட்டில் பெண் எடுப்பதிலோ பிரச்சினை ஏதும் இல்லை.

பிரபலமானபின், தன் இனத்தில் பெண் பார்த்து முடிக்க வேண்டும் என்னும்போதுதான் பிரச்சினை பூதாகாரமாக உருவெடுக்கிறது.

நடிகையின் திருமணமோ, பெரும்பாலும் கேள்விக்குறியாகவே முடிகிறது. மனோதிடமும், தன்னால் இவ்வுலகில் தனித்து வாழ முடியும் என்ற நம்பிக்கையும் வசதியும் உள்ள ஒரு சில நடிகைகள் மட்டுமே, தான் விரும்பும் ஆடவனை மணம் முடித்துக் கொள்கின்றனர்.

ஆனால், பலர் நிலைமை...?

கான்வென்டில் பத்தாவது படிக்கும் 'டீன் – ஏஜ்' மாணவியை, ஒரே நாளில் காளையரின் கனவுக் கன்னியாக்கி விடுகிறார் பிரபல டைரக்டர்.

உடன் படித்த பெண்களெல்லாம், ஏக்கப் பெருமூச்சு விடும் அளவுக்கு உயர்ந்த புகழும் பொருளும் அவளை வந்தடைகின்றன.

''ஏம்மா! இந்தப் புதுப் படத்துல உங்க ஜோடி யார்?'' நிருபர் கேட்கிறார்.

''என்னோட யார் நடிக்கிறாங்க, எது நடிக்குது (ஆடா, மாடா, குரங்கா?) என்பதைப் பத்தியெல்லாம் நான் கவலைப்படறதில்லை...! என் காரெக்டர் படத்தில் பிரதானமா இருக்காங்கறதுதான் எனக்கு முக்கியம்!'' என்று பேட்டி தரும் அளவுக்கு அந்தப் பிஞ்சு மனத்தை, சினிமா நஞ்சாக்கி விடுகிறது.

'அதிர்ஷ்ட ஜோடி' என்று ரசிகர்களால் முத்திரை குத்தப்பட்டு, அவளுடன் பல படங்களில் ஒருவன் இணைந்து நடிக்கிறான்.

'தங்கள் மகள் புத்தி தடுமாறி எங்கே அவன் பக்கம் சாய்ந்து விடுவாளோ?' என்று பெற்றோர் துப்பறியும் வேலையைத் தொடர்கின்றனர்.

'பாடிகார்டாக' அவள் பின்னால் சுத்த ஒருவர் நியமிக்கப்படுகிறார். பாத்ரூம் போனாலும், படுக்கப்போனாலும் அவர் நிழலாய்த் தொடருகிறார்.

அவளோ, அனைவர் காதிலும் பூ சுற்றிவிட்டு, ஒப்பனை அறையில் உள்ள போனிலோ, தோழி வீட்டு போனிலோ, சங்கேத பாஷை பேசி, ஆசை நாயகனுடன் அளவளாவி, மனத்தைப் பறிகொடுக்க ஆரம்பிக்கிறாள்.

வளரவேண்டிய கட்டத்தில் காதல் வசப்பட்டுவிட்ட இவ்விருவரின் நலம் விரும்பிகள், 'பெறப்போகும் பெரும் புகழுக்கு, விடலைக் காதல் இடையூறாகி, எதிர்காலத்தை இருட்டாக்கி விடும்' என்று எச்சரிக்கின்றனர்.

பக்கவாட்டில் திரும்பிப் பார்த்தால், தொழிலில் போட்டி போட்டுப் பாய்ந்து வரும் சக நடிக நடிகையர் கூட்டம்! திருமண எண்ணத்தை இருவருமே கைவிடுகின்றனர்...!

ஒரு நாள் திடுமென்று ஹீரோவுக்கு அவரது வீட்டார் வெளியே பெண் பார்த்து நிச்சயித்து விடுகின்றனர்.

'உயிரும் நீதான், என் உடலும் நீதான்' என்றவன், தன் உயிரையும் உடலையும் வேறொருத்திக்குச் சாசுவதமாக்கி விடுகிறான்.

காதல் து'ரோகம் அவளை நிலைகுலையச் செய்கிறது! படப்பிடிப்பை ரத்து செய்துவிட்டு, படுக்கையறைக்குள் தாளிட்டுக் கடந்த கால நினைவு களைக் கண்ணீரில் கரைத்துவிட்டு, மனத்தைக் கல்லாக மாற்றிக் கொள்கிறாள். பிறகு இயந்திரமயமாக எண்ணற்ற படங்களில் நடிக்கத் துவங்குகிறாள்.

எண்ண முடியாத பணம், பங்களாக்கள், நிலபுலன்கள், நகைநட்டுக்கள் எனச் சொத்துக்கள் குவிகின்றன.

'தங்கச்சி கால்ஷீட் வேணும்னா, அவரோட தம்பியைச் சரிக்கட்டணும்' என்கிற தாரக மந்திரத்தைத் திரையுலகம் புரிந்துகொள்கிறது.

வீதி வீதியாக, வெறி நாயைப்போல காரை எடுத்துக்கொண்டு வேட்டையாட அலைகிற சகோதரனுக்கு வீடு தேடி சொர்க்கம் வருகிறது.

விரும்பிய பாட்டில்கள், ஆசைப்பட்ட பதுமைகள்!! அவன் தேவை பூர்த்தி செய்யப்படுகிறது. தயாரிப்பாளரின் தேவையான கால்ஷீட் அதன் பின் பூர்த்தியாகிறது.

இரவு பகலாக, ரத்தத்தை உறிஞ்சும் மின் ஒளியில் நடித்து ஓய்ந்து வீடு வந்து படுக்கையில் சாயும் அவளுக்கு, பக்கத்து அறையில் கிளு கிளுப்பும் கும்மாளமுமாய்ச் சகோதரனின் விளையாட்டுச் சத்தம் காதில் விழுகிறது.

தன் உணர்வுகளைக் கொன்றுவிடப் பழகுகிறாள். இல்லறத்தில் நடிகை ஈடுபட வேண்டிய தருணத்தில், தன் இல்லற சுகத்தைப் புதுப் பித்துக்கொள்ள அவள் அன்னை ஆசைப்படுகிறாள்.

'கருப்பனோ, சிவப்பனோ அம்மாவின் அடுத்த புருஷனை அப்பா என்றழைப்பதா...? சித்தப்பா என்றழைப்பதா...? வயதில் குறைந்த அவனை அண்ணா என்றழைப்பதா...?' என்று குமைகிறாள்.

இருக்கின்ற குடும்பத்தின் அளவு போதாதென்று புதிதாய் தம்பி, தங்கைகளின் எண்ணிக்கையைப் பெருக்குகிறாள் அன்னை...!

பிரியமாகப் பழகிய சகோதரி, 'தானும் பிரபலமாக என்ன வழி?' என்று தேடி அலையத் தொடங்குகிறாள்.

அப்பாவுக்கு அறுபது நாழிகையும் மதுவில் நீந்தவும், களிப்பில் தூங்கவுமே நேரம் சரியாகப் போய்விடுகிறது.

அனைத்தும் இருக்கிறது. அனைவரும் அவளைச் சுற்றி இருக்கின்றனர். ஆனாலும் அவள் தனிமரம்...!

அவளது சுகத்தையோ, துக்கத்தையோ, அவளது தேவைகளையோ அன்புடன் விசாரிக்க அந்த வீட்டில் யாருமில்லை...!

வீட்டில் தங்கும் நேரம் வீடியோவைப் போட்டு, விதியை மறக்கப் போராடுகிறாள்.

காலச்சக்கரம் அவள் வனப்பில் வரிகளைப் போடுகிறது. இப்போது அவள் கௌரவமாக அனைவராலும் 'அம்மா' என்று அழைக்கப்படுகிறாள்.

ஆனால், அவள் உண்மையாகவே தாய் ஆகவேண்டும், அவளுக்கென்று ஒரு வாழ்க்கை வேண்டும் என்று அக்கறையுடன் முயற்சி செய்வோர் யாருமில்லை.

'மற்றவர்களுக்காக மெழுகுவர்த்தியாய் எரிந்து உருகி வீணானது போதும், நமக்கென்று ஒரு குடும்பம், நம்மீது பரிவு காட்ட ஒரு மனிதரை நாமே தேர்ந்தெடுத்துக் கொள்வோம்' என்ற முடிவுக்கு வருகிறாள்.

வாலிப வயதில் ஆள் தேடினால், அவன் சொத்தை மட்டுமே குறியாக வைத்து வருகிறான். சொத்து தன் விருப்பத்துக்குக் கிடைக்கவில்லை என்றால் மிரட்டுகிறான்.

சொத்து தீர்ந்து விட்டாலோ போயே விடுகிறான்.

தன் உள்ளத்தைப் புரிந்துகொண்டவர், தன்னோடு பல ஆண்டு தொழில் புரிந்தவர், தன் வேதனைகளுக்கும் சோதனைகளுக்கும் அவ்வப்போது வடிகாலாக இருந்தவர் தன்னோடு நடிக்கும் அந்த ஹீரோ...! 'ஆம்! அவர்தான் என் கணவர். அவருக்கு மனைவி, குழந்தைகள் உண்டுதான். அவர்களுடன் மோதி, அவர்களுக்கு நாம் இடையூறு செய்ய வேண்டாம்.

'சமுதாயத்தில் நானும் ஒரு பெண் – மனைவி – தாய் என்ற அந்தஸ்தை வழங்கிய அவர்தான் என் கணவர்' என்று முடிவெடுக்கிறாள்.

அந்தப் பாவியும் பல நாள் பழகியபின், படுக்கையில் ஒன்றாகப் புரண்டபின் 'மக்களுக்கு நம் உறவு தெரிய வேண்டாம். மர்மமாகத் தொடர்வோம் இதை' என்றபோது, இடிந்து நொறுங்கித் தூக்க மாத்திரையில் சரண்புகுந்து, நிரந்தரத் துயில் கொண்டு விடுகிறாள்.

இது, ஒரு நடிகையின் கதையல்ல...! நீண்ட ஒரு சோக வரலாற்றின் உண்மைத் தொகுப்பு...!

---

50



# அஷ்டாவதானி சோ

விவேகா பைன் ஆர்ட்ஸ் என்ற தனது நாடகக்குழு மூலம் 'சரஸ்வதியின் சபதம்' ,'மனம் ஒரு குரங்கு' 'Is God Dead', 'முகம்மது பின் துக்ளக்', 'நேர்மை உறங்கும் நேரம்', 'யாருக்கும் வெட்கமில்லை' என்று பல சமுதாய விழிப்புணர்வு நாடகங்களை, சிந்திக்கத் தூண்டும்

நாடகங்களை, நகைச்சுவை கலந்து எழுதி, மேடையேற்றிச் சென்னை மாநகரை திரு.சோ கலக்கிக் கொண்டிருந்த காலம்.

ஓவியக் கலையில் தேர்ச்சிபெற்ற நான், சம்பந்தமே இல்லாத திரைப் படத்துறையில் கால் பதித்த நேரம். துறை மாறி வந்தது தவறோ என்று எண்ணும் வண்ணம், நாடக உலகிலும் திரையுலகிலும் பல மேதைகள் தங்கள் திறமையால் என்னை மிரட்டினார்கள்.

அவர்களில் நண்பர் சோவும் ஒருவர். திருவல்லிக்கேணி என்.கே.டி. கலா மண்டபம் திறந்தவெளி அரங்கம். சிமெண்ட் படிக்கட்டுகள் அமைந்த காலரியில் ஒரு கோடியில் அமர்ந்து 'சரஸ்வதியின் சபதம்' நாடகம் பார்த்தேன். சுழலும் மேடையில் ஒவ்வொரு காட்சிகளையும் அவர் அமைத்த விதமும், அவரது நையாண்டி வசனமும், பார்வையாளர்களைப் பரவசப்படுத்தி ஐந்து நிமிடத்திற்கு ஒருமுறை கரவொலி எழச் செய்தன.

'இந்த ஜென்மத்தில், மேடையேறி இப்படியெல்லாம் நடித்துப் பாராட்டுப்பெற முடியுமா?' என்று ஏங்கினேன்.

அந்த வெறிதான் அடுத்த 10 ஆண்டுகளில் மேஜர் சுந்தர்ராஜன் அவர்களுடன் இணைந்து 850க்கும் மேற்பட்ட நாடகங்களில், இந்தியா முழுக்க நடிக்கக் காரணமாயிருந்தது.

இதே என்.கே.டி.கலா மண்டபத்தில் என்.எஸ்.என். தியேட்டர்ஸின் நாடகக்குழு உருவாக்கிய 'அப்பாவி' நாடகத்தில் நான் அப்பாவியாக நடித்து, சிவாஜிகணேசன் அவர்களால் பாராட்டப்பட்டேன். நாடகக் குழுவின் 1000வது நாடகமாக அது நடைபெற்ற அன்று, அந்த நாடகத்தைப் பார்த்து வாயார வாழ்த்திய சிவாஜி, ''சிவகுமார் ஏற்று நடித்த 'அப்பாவி'- வேடத்தைத் திரைப்படத்தில் செய்ய நான் ஆசைப் படுகிறேன்'' என்று அறிவித்தார். அந்த எண்ணம் நிறைவேறாமல் போனது வேறு விஷயம்...

சஃபையர் தியேட்டர், அந்த நாள்களில் ஆங்கிலப் படங்கள் வெளியாகும் பிரபலமான தியேட்டர். கிளியோபாத்ரா, சவுண்ட் ஆஃப் மியூசிக், வெய்ட் அன்டில் டார்க், மை ஃபேர் லேடி, விசிட், என்று ஹாலிவுட்டை கலக்கிய படங்கள் சென்னையில் வெளியாகும் தியேட்டர். தமிழ்ப் படங்கள் போடவே மாட்ட ர்கள்.

அப்படிப்பட்ட சஃபையர் தியேட்டரில் சோ அவர்களின் 'முகம்மது பின் துக்ளக்' காலைக்காட்சிகளாக சனி, ஞாயிறுகளில் நடைபெறும். முகம்மது பின் துக்ளக்கின் கிறுக்குத்தனமான நடவடிக்கைகள் – வரலாற்றை அடிப்படையாக வைத்து – சுவை குன்றாமல் எழுதப்பட்டிருக்கும்.



'துக்ளக்' - படத்தில்

நாடகத்தில் நடிக்கும் அம்பி, நீலு, சுகுமாரி போன்றவர்கள் சினிமா ஹீரோக்களைவிட பிரபலமாக இருந்தனர்.

கால மாற்றத்தில் சோ அவர்களுடன் ஹீரோவாகப் படங்களில் நடிக்கும் வாய்ப்பு வந்தது. உலக அரசியல் அறிவும், உயர்படிப்பும், சிந்திக்கும் ஆற்றலும், பேச்சாற்றலும் மிக்க சீரியஸான ஒரு மனிதர், என் போன்ற ஹீரோக்களுடன், கோமாளியாக, முட்டாளாக நடித்தது கொடுமையாக இருந்தது.

'யாருக்கும் வெட்கமில்லை' என்ற அவரது நாடகத்தை அவரே திரைப்படமாக இயக்கியபோது, அம்பி அவர்கள் நாடகத்தில் நடித்த ஹீரோ வக்கீல் வேடத்தில், நான் நடித்தேன். செல்வி.ஜெயலலிதா கதாநாயகி. பெங்களூரில் படப்பிடிப்பு நடைபெற்றது.

படங்களில் நடிக்கும் காலகட்டங்களில் அவரோடு நெருங்கிப் பழகும் வாய்ப்பு கிட்டியது. மிகவும் எளிமையானவர். தன்னிடமுள்ள



ஹிந்தி நடிகை ரேகாவின் சகோதரர் பாப்ஜி டைரக்ட் செய்து வெளிவராத படத்தில்

அறிவுக்காகச் சிறிதும் கர்வமில்லாதவர். எல்லோரையும் சமமாக மதிப்பவர். மனத்தில் பட்டதை மறைக்காமல் பேசக்கூடியவர். தான் சொல்வதோ – செய்வதோ தவறாக இருப்பின், வாட்ச் மேனிடம்கூட மன்னிப்பு கேட்கும் உயர்ந்த குணம் உள்ளவர்.

ஒரு கட்டத்தில், ''சினிமாவில் நடிப்பதை நிறுத்திவிடப் போகிறேன்'' என்று என்னிடம் சொன்னார். காரணம் கேட்டேன்.

''இந்தியாவிலிருந்து வெளிவரும் ஆங்கில ஏடுகள் மட்டுமல்ல, வெளிநாடுகளிலிருந்து வெளியாகும் பத்திரிகைகள் உள்பட அனைத்தையும் விடாது படித்து 'துக்ளக்' இதழில் அரசியல் கட்டுரை, கேள்வி பதில் – தலையங்கம் எழுதுகிறேன். 50 ஆயிரம் ரூபாய் அதற்கு மாதச் சம்பளம் கிடைத்தாலே அதிகம்.

''சினிமாவில் கோணங்கி சேஷ்டைகள் செய்து, குதர்க்கமாக நாலு டைலாக் பேசினால் 4 நாளைக்கு 40 ஆயிரம் சம்பளம் தருகிறார்கள். என் மனச்சாட்சி இடம் தர மறுக்கிறது. இந்த வருமானம் நியாயமானதாக எனக்குத் தோன்றவில்லை. விரைவில் திரைப்படங்களில் நடிப்பதை நிறுத்தி விடுவேன்'' என்றார்.

அப்போது, இவரது தாத்தாவைப்பற்றிய செய்திகள் நினைவுக்கு வந்தன. சட்டக் கல்லூரியில் முதன்மையாகத் தேர்ச்சிபெற்று வெளியே வந்த தாத்தாவிடம் ஒரு கொலையாளி வந்து, ''எப்படியாவது இந்த வழக்கிலிருந்து என்னைக் காப்பாற்றி விடுங்கள், எவ்வளவு லட்சம் வேண்டுமானாலும் தருகிறேன்'' என்றானாம்.

'ஒரு கொலைகாரனைக் காப்பாற்றத்தான் நான் படித்த சட்டக் கல்வி பயன்படப் போகிறதா?' என்று ஒரு கணம் யோசித்தவர், கருப்புக் கோட்டை தூக்கி எறிந்துவிட்டு, சாகும்வரை நீதிமன்ற வாசல் ஏறாமல், சட்டப் புத்தகங்கள் மட்டுமே எழுதி வாழ்க்கையை ஓட்டினாராம்.

திரு.சோ பிறந்து ஓராண்டு நிறைவு பெற்றதையொட்டி ஊரை அழைத்து, குழந்தையின் பிறந்த நாளை வெகு விமரிசையாகக் கொண்டாடி னார்களாம்.

தொட்டிலில், வெல்வெட் துணிமீது குழந்தையைப் படுக்கவைத்துத் தாலாட்டுப்பாட, குரல்கேட்டு வீட்டினுள் கால்வைத்தவர் – ஆடம்பரத்தையும், படாடோபத்தையும் பார்த்து அதிர்ந்து, 'தெரியாமல் அரண்மனைக்குள் கால் வைத்துவிட்டேன். மன்னியுங்கள்' என்று கூறி வீட்டைவிட்டு வெளியேறி விட்டார். சமாதானப்படுத்தி வீட்டிற்கு அழைத்துவரப்பட்ட அவர், பல ஆண்டுகளுக்குப் பிறகு காசிக்குப் போய் துறவியாக வாழ்ந்தாராம்.

தாத்தா இப்படி வித்தியாசமான மனிதர் என்றால், அப்பாவும் ஒரு அதிசய மனிதர். சிறந்த கல்விமான். மண்ணில் பிறந்த அனைவருக்கும் எழுத்தறிவிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் கல்விக் கூடங்கள் நிறுவி அதிலேயே மூழ்கியவர்.

வெளி உலகத் தொடர்பு குறைவு. அதைவிட சினிமா உலகம் பற்றி எதுவுமே தெரியாது.

சோ வீட்டுத் திருமணம் ஒன்றிற்கு, சிவாஜியை அழைத்திருந்தார்கள். திருமணத்திற்கு வந்த சிவாஜியை, சோ, தகப்பனாருக்கு அறிமுகப்படுத்த ''ஆமாமா! நீ கூட என் பையன்கூட ஒரு படத்தில் நடிச்சிருக்கேல்ல. அந்தப் படத்தை நானும் பார்த்தேன்'' என்றாராம்.

சிவாஜி புகழின் உச்சியில் இருந்த நாள்கள் – 'பார் மகளே பார்' படத்தில் இரண்டு பெண்களின் தந்தையாகப் பிரமாதமாக நடித்திருப்பார். சோ அந்தப் படத்தில்தான் அறிமுகம். இவர் நாலு சீன் வந்தால் அதிகம்.

நான்கு சீனில் நடித்த மகனை உயர்த்தி, படத்தின் ஹீரோவைத் தாழ்த்திப் பேசுகிறோமே என்றெல்லாம் அவர் நினைத்திருக்க மாட்டார். காரணம் சினிமா உலகம் பற்றி அவருக்கு எதுவும் தெரியாது.

அப்படிப்பட்ட குடும்பத்தில் பிறந்த ஒருவர்தானே கதை வசனம் எழுதி, இயக்கி நடித்து, நாடக உலகிலும் திரையுலகிலும் பிரபலமாவதும் சிரமமான காரியமே!

தமிழகத்தில், தங்கள் கட்சியின் தலைமைப் பதவியை ஏற்கும்படி இரண்டு பெரிய தலைவர்கள் அவரை வற்புறுத்தினர். ஒருவர் இந்திரா காந்தி. மற்றவர் மொரார்ஜிதேசாய். 'தேர்தலில் நின்று வென்று பொறுப் பேற்றுக் கொள்ளுங்கள். உங்களைப்போல் படித்தவர்கள், அரசியல் அறிவு உள்ளவர்கள், நாட்டு நலனில் அக்கறை உள்ளவர்கள் அரசியலுக்கு வர வேண்டும்' என்று வற்புறுத்தினார்கள்.

ஏனோ இவர் அதற்கு இசையவில்லை. நோய்க்கு மருந்தாகும் வாய்ப்பைத் தவிர்த்து, நோய் காட்டும் தர்மா மீட்டராகவே இருந்து விட்டார்.

'நேர்மை உறங்கும் நேரம்' என்றொரு நாடகத்திற்கு அழைத் திருந்தார். படித்தவர்கள், நேர்மையானவர்கள், தன்னலம் கருதாதவர்கள், நாட்டின் மீது அக்கறையுள்ளவர்கள் அரசியலில் இறங்காமல் ஒதுங்கி ஒடுங்கிப் போவதால்தான், படிக்காதவர்களும் குண்டர்களும் சமூக விரோதிகளும் சுயநலமிகளும் அரசியலுக்குள் நுழைந்து விடுகிறார்கள் என்ற கருத்தை வலியுறுத்தும் நாடகம் அது.

''உங்கள் மனச்சாட்சி உங்களுக்குக் கூறிய அறிவுரையை அழகாக நாடகமாக்கி விட்டீர்களே'' என்று கூறினேன்.

அவருடைய அரசியல் கருத்துகளுக்கு மாற்றுக் கருத்து இருக்கலாம். பருவநிலை மாறுவதுபோல, முன்பு பாராட்டிச் சொன்ன தலைவரையே பின்பு சகட்டுமேனிக்குக் கடுமையாக விமர்சனம் செய்யத் தயங்க மாட்டார். ஏன் என்று கேட்டால், 'நல்லதைச் செய்தபோது பாராட்டினேன், அவர் தவறு செய்யும்போது சுட்டிக் காட்டுகிறேன்' என்பார்.

தன்னுடைய அரசியல் யூகங்கள் தவறாகும்போது தயங்காமல் அதையும் ஒப்புக் கொள்வார்.

ராஜ்யசபா எம்.பி.ஆன அவருக்கு, தொகுதி மேம்பாட்டுக்குத் தரும் 2 கோடி ரூபாயையும், அந்த ஆண்டு எந்த ஊருக்கு, என்ன நலத் திட்டத்துக்குப் பயன்படுத்தினார் என்பதைப் புள்ளி விவரங்களுடன் வெளியிட்டு விடுவார்.

'எங்கே பிராமணன்' என்ற நூலை 20 ஆண்டுகளுக்கு முன்பு அவர் எழுதினார்.

பிறருக்காக வாழ்ந்து, சமூகத்தின் மேம்பாட்டுக்காகக் கடவுளை வணங்கி, தான் எந்தவித சுகத்தையும் தேடிச் செல்லாமல் கிடைத்த உணவைப் புசித்து, சத்தியம் தவறாமல் வாழ்ந்து, வேதங்களைக் கரைத்துக் குடித்து, எறும்பிலிருந்து ஈசன்வரை சகல ஜீவராசிகளையும் சமப் பார்வையில் வைக்கக்கூடியவனே பிராமணன்...!

அப்படிப்பட்ட உன்னதமான மனிதன் இப்போது எங்கே இருக்கிறான்?

நமது புராணங்களில் சொல்லப்பட்ட நாலுவகைகளில் எந்த வகையிலுமே சேராத புதுமனிதர்கள்தான் இன்று இருக்கிற நாம் அனைவருமே!

நம்மில் யாரும் க்ஷத்திரியர்களுமல்ல. பிராமணர்களுமல்ல, வைசியர்களுமல்ல, சூத்திரர்களுமல்ல...!

ஒவ்வொரு வகையிலும். கொஞ்சம் கொஞ்சம் சேர்ந்த கலவையாக, ஒரு புதிய வாழ்க்கை முறையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டவர்கள்தாம் நாம் அனைவரும்!

– என்ற கருத்தினை வலியுறுத்தும் அற்புதமான நூல் அது. அதைப் படித்தபின்பு, சோ மீது நான் வைத்திருந்த மதிப்பு பல மடங்கு உயர்ந்து விட்டது.

இலக்கியத்துறையில் அவர் ஆற்றிய பணியில் தலையாய பணியாக நான் கருதுவது 'ராமாயணம்', 'மகாபாரதம்' இரண்டு காவியங்களுக்கும் அவர் எழுதியுள்ள விளக்கம்.

வழக்கமாகக் கம்பராமாயணத்திற்குத்தான் எல்லோரும் உரை எழுது வார்கள். சோ அவர்கள் வடமொழி அறிந்தவராதலால் வால்மீகி ராமா யணத்தை முதன்மையாக எடுத்துக்கொண்டு கம்பராமாயணம், துளசி தாசர் ராமாயணம் ஆகியவற்றுடன் ஒப்பிட்டு, அவற்றிலுள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விரிவாக விளக்கியிருப்பது புதிது.

'துக்ளக்' இதழில் தொடராக வெளிவந்த 'மஹாபாரதம் பேசுகிறது' என்ற பெயரில் வியாசபாரதத்தையும் நூலாக வெளியிட்டிருக்கிறார்.

புராணங்களை நம்புவது, நம்பாதது வேறு விஷயம். அதற்குமுன் அந்தப் புராணங்களை ஓரளவு விரிவாக அறிந்துகொள்ள இந்த நூல்கள் பெரிதும் உதவும்.

அல்லயன்ஸ் கம்பெனிதான் சோ அவர்களின் அனைத்து நூல்களை யும் நாடகங்களையும் நாவல்களையும் ராமாயண மகாபாரத நூல் களையும் வெளியிட்டிருக்கிறது.

இந்த நூல்களின் ராயல்டி தொகையை அவர் தனக்கென வைத்துக் கொள்ளாமல் தன் பத்திரிகையில் பணியாற்றுபவர்களுக்குப் பிரித்துக் கொடுத்தது அவருடைய உயரிய பண்பைக் காட்டுகிறது.

அவர் மிகவும் மதிக்கும் ஒருசில திரைக்கலைஞர்களில் நானும் ஒருவனாக இருப்பதில் பெருமை கொள்கிறேன்.

---

## 51



# காவியக் கவிஞர் வாலி

★ **ஞா**யிறு என்பது கண்ணாக –
திங்கள் என்பது பெண்ணாக
செவ்வாய் கோவைப் பழமாக..

★ திருநாள் வந்தது – தேர் வந்தது
ஊர்வலம் வருகின்ற நாள் வந்தது
ஓட முடியாமல் தேர் நின்றது.

★ அல்லித் தண்டுக் காலெடுத்து
அடிமேல் அடியெடுத்து
சின்னக் கண்ணன் நடக்கையிலே
சித்திரங்கள் என்ன செய்யும்..

ஏ.வி.எம். நிறுவனம் உருவாக்கி, தமிழ்த் திரையுலகில் என்னை அறிமுகப்படுத்திய 'காக்கும் கரங்கள்' படத்திற்கு திரு. வாலி எழுதிய பாடல்கள் இவை...!

★ அந்த நாள் ஞாபகம்
நெஞ்சிலே வந்ததே
நண்பனே. நண்பனே. நண்பனே..
இந்த நாள் அன்றுபோல்
இன்பமாய் இல்லையே – அது
ஏன்.. ஏன் நண்பனே....

★ வெள்ளிக் கிண்ணந்தான்
தங்கக் கைகளில்... முத்துப் புன்னகை அந்தக் கண்களில்.

★ நாளை இந்த வேளை பார்த்து
ஓடி வா நிலா..

★ என் கேள்விக் கென்ன பதில்....

'உயர்ந்த மனிதன்' படத்திற்கு வாலி எழுதிய பாடல்கள் அத்தனையும் ஹிட்..

★ அழகன் முருகனிடம் ஆசை வைத்தேன் – பஞ்சவர்ணக்கிளி

★ அவளுக்கென்ன அழகிய முகம் – சர்வர் சுந்தரம்

இந்தப் பாடல் ஒலிப்பதிவையெல்லாம் AVM ரிக்கார்டிங் தியேட்டரிலேயே கேட்டு மகிழ்ந்திருக்கிறேன்.

கவிஞர் வாலி அவர்கள்மீது எனக்குக் கொஞ்சம் அதிகமாகவே வாஞ்சை ஏற்படக் காரணம், அவரும் ஒரு ஓவியர். நான் பயின்ற ஓவியக் கல்லூரியில் எனக்கு முன்பே – ஓராண்டு மட்டும் – எங்கள் ஆசிரியர் திரு. கிருஷ்ணா ராவிடம் கமர்ஷியல் ஆர்ட் கற்றவர்.

பேசாப் படங்களை வரைந்து பெறமுடியாத பேரையும் புகழையும் பேசும் படங்களால் அவர் பெற வேண்டுமென்பது விதி.

அதனால்தான், பிரஷ் பிடித்த கையில் இறைவன் அவருக்குப் பேனாவைக் கொடுத்து விட்டான்.

ஓவியர் மாலி போல இவர் பெயர் எடுக்க வேண்டும் என்று பள்ளித்தோழன் பாபு, வாலி என்ற பெயரைச் சூட்டினான்.

'வாலில்லாத நீ எப்படி வாலி என்று பெயர் வைத்துக் கொண்டிருக்கிறாய்?' என்று தமிழ் வாத்தியார் தேசிகர் கேள்வி கேட்க –

'வாலில்லை என்பதனால் வாலியாகக் கூடாதா?

காலில்லை என்பதனால் கடிகாரம் ஓடாதா' – என்று சொல்லி ஆசிரியரின் பாராட்டை அப்போதே பெற்றவர்!

நாலாயிரத் திவ்வியப் பிரபந்தத்தைச் சிறு வயதிலேயே நெட்டுருப் போட்டவர்.

'ஊக்கு விக்க ஆளிருந்தால்
ஊக்கு விக்கும் ஆள்கூடத்
தேக்கு விப்பான்' – என்று தட்டிக் கொடுக்க ஆள் தேடியவர்.

சினிமாவில் பாடல் எழுதவேண்டும் என்பதற்காகச் சென்னை வந்து பல ஆண்டுகள் படாதபாடுபட்டு – நொந்து நூலாகிப் போயிருக்கிறார்.

மாம்பலம் கிளப் ஹவுஸில் நண்பர்கள் நாகேஷ் – ஸ்ரீகாந்துடன் தங்கி வாடகை கொடுக்கவும், வயிறு கழுவவும் திண்டாடியிருக்கிறார்.

1958 இல் 'பாதை தெரியுதுபார்' – என்ற படம் தயாரிக்கப்பட்டது. இசையமைப்பாளர் திரு.எம்.பி.சீனிவாசன் வாலியை, டைட்டிலுக்குப் பாட்டெழுதச் சொல்லி, திருப்தியில்லை என்று அனுப்பிவிட்டார்.

அதே பாடல் 1967 இல் 'படகோட்டி'க்குப் பயன்பட்டது.

'கொடுத்ததெல்லாம் கொடுத்தான் – அவன்
யாருக்காகக் கொடுத்தான்..
ஒருத்தருக்கா கொடுத்தான் – இல்லை
ஊருக்காகக் கொடுத்தான்...'

பின்னாளில் இப்பாடல் ஹிட் ஆனதும் அதே எம்.பி.சீனிவாசன் வருத்தம் தெரிவித்தாராம்.

நோட்டுப் புத்தகத்தில் இவர் எழுதி வைத்திருந்த பாட்டுக்களுடன், ஸ்கூட்டரில் இவரை அமர்த்தி, ஒவ்வொரு தயாரிப்பாளரிடமும் அழைத்துச் சென்று – சலிக்காமல் 'சிபாரிசு' செய்தவர் நண்பர் – நடிகர் வி. கோபால கிருஷ்ணன்.

ஒரு முறை நோட்டுப் புத்தகத்திலுள்ள இவரது பாடல்களைப் படித்துப் பார்த்த ஒரு இசையமைப்பாளர் ''பாட்டு சுமார்தான். படிச்ச பையனா இருக்கார். பேசாமல் ஊருக்குப் போய் வேறு வேலையைப் பார்க்கச் சொல்'' என்று கோபியிடம் சொன்னார்.

அவர்தான் பின்னாளில், வாலி பெற்ற பேருக்கும் புகழுக்கும் வாழ்வுக்கும் வளத்துக்கும் அடித்தளம் அமைத்த மெல்லிசை மன்னன்

எம்.எஸ்.விஸ்வநாதன் அவர்கள். 'இது அவர் போட்ட பிச்சை. இந்த வேருக்கு நீர் வார்த்த கொண்டல் அவர்' என்று புகழ்கிறார், வாலி.

தோல்விப் புயலில் சிக்கித் தவித்தவரைக் கரை சேர்த்த புண்ணியத்தைக் கண்ணதாசன் பாடல் ஒன்று தேடிக் கொண்டது.

'மயக்கமா கலக்கமா
மனதிலே குழப்பமா
வாழ்க்கையில் நடுக்கமா...'

''வாழ்க்கையென்றால் ஆயிரம் இருக்கும் – வாசல் தோறும்
வேதனை இருக்கும் வந்த துன்பம் எதுவென்றாலும் – வாடி
நின்றால் ஓடுவதில்லை... எதையும் தாங்கும் இதயம் இருந்தால் –
இறுதிவரைக்கும் அமைதி இருக்கும்''

வாலிக்கு மட்டுமல்ல. வாழ்க்கையில் அன்றாடம் போராடிச் சலிக்கும் மாந்தர் அனைவருக்கும் பொதுமறை அந்த வரிகள்...

நீண்ட வாழ்க்கைப் போராட்டத்தில், மகன் வெற்றிபெற எந்தத் தாய்தான் ஆசைப்பட மாட்டாள்?

''எனக்கு வேலை வெட்டி கிடைக்க வேண்டுமென்று
அம்மா! வேண்டாத தெய்வமில்லை..
எந்தத் தெய்வமும், ஏறிட்டுப் பார்க்காமலும்
ஏனென்று கேட்காமலும் இருந்ததால்
ஒரு நாள்!
என் அம்மா, தானே தெய்வமாகி
என்னைத் தூக்கி விட்டாள்...''

ஹுமாயுன், நோயிலிருந்து நலம்பெற பாபர் உயிரை விட்டது போல், பிள்ளையின் வாழ்வுக்குத் தாய், தன் இன்னுயிரைப் பணயம் வைத்திருக்கிறார்...!

வாழ்க்கை திசை மாறியது. *1963* ஜனவரி *1* ஆம்தேதி முக்தா பிலிம்ஸில், தயாரிப்பாளர், இயக்குநர் சீனிவாசன் அவர்கள் முன்பு, மெல்லிசை மன்னர் டியூனுக்கு அவர் எழுதிய பாடல் வரிகள் –

'பூவரையும் பூங்கொடியே! பூ மாலை போடவா
பூமகளே வாழ்க வென்று பாமாலை பாடவா...'
ஜனவரி *1* இல் சோற்றுக்கு வழியில்லை
ஜனவரி *31* இல் சோறு தின்ன நேரமில்லை
மனிதனுக்கு வறுமை வந்தாலும் வரிசையாக வருகிறது!
வாழ்வு வந்தாலும் வரிசையாக வருகிறது...!

இந்த இடைப்பட்ட காலத்தில் அவர் சும்மா இருக்கவில்லை.

★ கற்பனை என்றாலும் கற்சிலை என்றாலும்
கந்தனே உனை மறவேன்...

★ ஓராறு முகமும் ஈராறு கரமும்
தீராத வினை தன்னைத் தீர்க்கும்... துன்பம்
வாராத நிலை தன்னைச் சேர்க்கும்...

– இப்படிப் பல தனிப் பாடல்களை எழுதி, திரு. T.M. சௌந்தரராஜன் போன்றோரின் வளமான குரலில் பதிவு செய்து தமிழகக் கோயில் களிலெல்லாம் ஒலிக்கச் செய்தார்.

தமிழ்த் திரைப்படங்களுக்குக் கிட்டத்தட்ட 7500 பாடல்களுக்குமேல் எழுதியுள்ளார். திரு. எம்.ஜி.ஆர் படங்கள் 61, திரு. சிவாஜி படங்கள் 60 இவற்றில் அடங்கும்.

ஸ்டுடியோவுக்குப் பாடல் எழுத வரும் வாலி எப்போதும் விபூதி குங்குமம் நெற்றியில் இட்டுக்கொண்டு வருவார். வைணவராய்ப் பிறந்த போதிலும் தமிழ்க் கடவுள் முருகவேள்மீது மாறாத பக்தி கொண்டவர்.

தி.மு.க. தலைவர்களில் சிலர், ''கட்சிக் கொள்கைக்கு மாறாக விபூதி குங்குமம் இட்டு வரும் வாலிக்கு ஏன் சந்தர்ப்பம் தருகிறீர்கள்?'' என்று கேட்க, திரு. எம்.ஜி.ஆர். மெதுவாக வாலி காதில் விஷயத்தைப் போட்டிருக்கிறார்.

''அண்ணே! நான் தீவிரமான முருக பக்தன். என்னை உங்களோட இணைச்சதே அந்த முருகன்தான். அப்படியிருக்க என்னால விபூதியை விட முடியாது. என்னால உங்களுக்கு தர்ம சங்கட நிலைமை வேண்டாம். நானே ஒதுங்கிக்கறேன்'' என்று நெஞ்சை நிமிர்த்திப் பேசியவர்.

★ மூன்றெழுத்தில் என் மூச்சிருக்கும் – அது
முடிந்த பின்னாலும் பேச்சிருக்கும்..

★ கொடுத்ததெல்லாம் கொடுத்தான் – அவன்
யாருக்காக கொடுத்தான்...
ஒருத்தருக்கா கொடுத்தான் – இல்லை
ஊருக்காகக் கொடுத்தான்..

★ நான் செத்துப் பொழைச்சவண்டா – எமனைப்
பார்த்து சிரிச்சவண்டா..

★ நான் ஆணையிட்டால் – அது
நடந்து விட்டால் – இங்கு
ஏழைகள் வேதனைப் படமாட்டார்...

இந்த வரிகள் எம்.ஜி.ஆர். மீதுள்ள அபிமானத்தில் எழுதியவையே. அவர் இப்படி எழுதும்படி ஒரு போதும் வற்புறுத்தவில்லை என்கிறார்.

★ அழகு தெய்வம் மெல்லமெல்ல
அடியெடுத்து வைத்ததோ...
இளநீரைச் சுமந்திருக்கும்
தென்னை மரம் அல்ல...
மழை மேகம் குடை பிடிக்கும்
குளிர் நிலவும் அல்ல...
இங்கும் அங்கும் மீன் பாயும்
நீரோடை அல்ல...
இதற்கு மேலும் இலக்கியத்தில்
வார்த்தை ஏது சொல்ல...

'பேசும் தெய்வம்' படத்தில் வாலியின் இவ்வரிகளை, சிவாஜி எப்போதும் சிலிர்ப்புடன் பாடிக் காட்டுவார். படங்களுக்குப் பாடல் எழுதுவதுடன் 17 படங்களுக்கு கதை – வசனமும் எழுதியிருக்கிறார். சில படைப்புகளை இயக்கியும் இருக்கிறார்.

சிட்டுக்குருவி, பெண்ணைச் சொல்லிக் குற்றமில்லை, சாட்டை இல்லாத பம்பரம் உள்பட அவரது வசனங்களை நானும் பல படங்களில் பேசி நடித்திருக்கிறேன்.

'இந்தியா டுடே' என்ற தலைப்பில் சென்னையில் மனோரமா – 'நாயர்' ராமன் நடித்த நாடகத்தை இலங்கையில், மனோரமா அவர்களுடன் பாரதி வேடம் தாங்கி நான் நடித்தேன். நுவராலியா மலைப்பகுதி நகரில், 1982 இல் தோட்டத் தொழிலாளர் மாநாட்டில் அன்றைய அதிபர் ஜெய வர்த்தனே முன்னிலையில் அந்நிகழ்ச்சி நடைபெற்றது.

இட ஒதுக்கீடு பற்றிய, நியாய அநியாயங்களைத் தர்க்க ரீதியாக விவாதித்து – யார் மனதும் புண்படாத வகையில், 'ஒரே ஒரு கிராமத் திலே' படத்தில் வாலி சொல்லியிருக்கிறார். அந்தப் படத்திற்கு ஜனாதிபதி விருதும் கிடைத்தது.

பல சமயங்களில், கண்ணதாசன் பாடல் எது, வாலி எழுதிய பாடல் எது என்று திரையுலகில் உள்ளவர்களே இனம் காண முடியாதபடி தரத்தில் இருவரும் ஒரே நிலையில், ஒரு கட்டத்தில் எழுதினார்கள்.

★ காற்று வாங்கப் போனேன் – ஒரு கவிதை வாங்கி வந்தேன்
அதைக் கேட்டு வாங்கிப் போனாள் –
அந்தக் கன்னி என்ன ஆனாள்..

★ கண் போன போக்கிலே கால் போகலாமா
கால் போன போக்கிலே மனம் போகலாமா...

★ நிலவு ஒரு பெண்ணாகி – உலவுகின்ற அழகோ..

போன்ற பாடல்கள் வாலி எழுதியவை. ஆனால் கண்ணதாசன் எழுதிய தாகப் பலர் தவறாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள்.

அவ்வளவு ஏன் 'அந்த நாள் ஞாபகம் நெஞ்சிலே வந்ததே' உயர்ந்த மனிதன் படத்துக்கு வாலி எழுதிய பாடல். அப்பாடலுக்கு இசையமைத்த மெல்லிசை மன்னரே, அது கண்ணதாசன் எழுதிய பாடல் என்று ஒரு பேட்டியில் தவறாகக் கூறிவிட்டார்.

தமிழைத் தாம் வளர்ப்பதாகச் சிலர் தம்பட்டம் தட்டுகிறார்கள்!

'இவர்கள் வளர்ப்பதற்கும் வழிப்பதற்கும் தமிழென்ன தாடியா? மீசையா – எங்கேனும்,

மகவால் வளர்ந்த தாயுண்டா – மலரால் வளர்ந்த தருவுண்டா,

நகத்தால் வளர்ந்த விரலுண்டா – நிழலால் வளர்ந்த உடலுண்டா' – இப்படி விளாசித் தள்ளுகிறார்... வாலி!

'ஜனனீ.. ஜனனீ.. ஜகம் நீ! அகம் நீ' என்று எழுதிய கைகள் 'சிக்கு புக்கு ரயிலே எழுதலாமா' என்று ஒரு ரசிகர் சீறுகிறார். 'நான் பாரத மாதா மாதிரி! அசோக் மேத்தாவும் என் பிள்ளை. ஹர்ஷத் மேத்தாவும் என் பிள்ளை. பேரும் வேண்டும் பணமும் வேண்டுமல்லவா' என்கிறார்.

கவியரங்க மேடைகளில் அவர் வரிகளுக்கு, அரங்கம் முழுக்க எழும் கரவொலி அடங்க வெகுநேரமாகும்.

ஆடு, மாடு, நாய், நரி இன்ன பிற பிராணிகளெல்லாம்
இனச் சேர்க்கைக்கு பருவம் பார்க்கின்றன.
மனிதன் மட்டுமே இதை மலஜலம் கழிப்பதுபோல்
அன்றாட வேலை யாக்கி விடுகிறான்...

அதனால்தான் ஆச்சார்ய ரஜினீஷ் அலறுகிறார்...
முதலில் அந்த வேலையை அலுத்துப் போகும் வரை செய்து முடி.
பிற வேலைகளைப் பிறகு பார்க்கலாம் என்று...

அப்படியானால்...

புலனடக்கம் என்பது சவ அடக்கத்திற்குப் பிறகுதானா?

தினவெடுத்த மனத்திற்குத் தீனிபோட, இளமையை யாசகம் வாங்கினான் யயாதி!

என்ன ஆயிற்று?

'மாறாப் பசிதான் மனத்தின் வியாதி' – என்று
ஆடி அலுத்து அறிந்தான் யயாதி!

ஆதி சங்கரர் சொல்படி –
'ஆசையை அயல் நிறுத்தி அழி' – அல்லது
ஆச்சார்ய ரஜ்னீஷ் சொல்படி–
'ஆசையை அரவணைத்து அழி' – ஆக
எதுவாயினும் ...
'ஆசையை அறுமின்... ஆசையை அறுமின்'
இல்லையேல்...
ஆன்மா, அடுத்தடுத்து சட்டையை மாற்றுமேயன்றி
உன் அலறலைச் சட்டை செய்யாது...

– நெஞ்சு நிறைய கண்ணதாசன் பாராட்டிய வரிகள் இவை. அவரென்ன, அகிலமே பாராட்டும் வரிகள் அவை...! சந்தேகமில்லை.

★ ★ ★

இவர் எழுதிய 'பொய்க்கால் குதிரை' – தொகுப்பிலிருந்த புதுக் கவிதைகளை 'அக்னி சாட்சி' படத்தில் அப்படியே பயன்படுத்தினார் இயக்குநர் கே.பி.

'நம்மைக் கொண்டு, ஆயிரம் சிலுவைகளை உருவாக்க முடிந்த
இந்த மனிதர்களால்' – தம்மைக் கொண்டு
இன்னொரு ஏசுவை உருவாக்க முடியவில்லையே'

– என்று மரங்கள், ஒன்றொடொன்று பேசிக் கொள்வதாக எழுதிய வரிகள் என்னை மிகவும் கவர்ந்தவை!

ஆயிரம் திரைப்படப் பாடல்கள் அவர் எழுதினாலும், அவதார புருஷர்கள் பற்றி வசன கவிதை வடிவில் அவர் எழுதும் பணிக்கு அவை ஈடாகா...

**ராமாயணத்தில் ராமன் பிறப்பைச் சொல்கிறார்...**

★ பேசருந் தெய்வம் – பரப்பிரம்மம்
கோசலை வயிற்றில் குழந்தையாய்ப் பிறந்து
ராமன் என்று நாமம் கொண்டது...

**குழந்தை ராமனுக்குக் கோசலை அமுதூட்டும்போது...**

★ நிலவைப் படைத்த நாயகன் – தாயிடம்
நிலவைப் பிடித்துத் தா எனக்கேட்டான்
அழகு நிலாவை இடுப்பில் ஏந்தி –
அழகு நிலாவை அழைத்தாள் கோசலை...

**மிதிலை சென்று ஜனகர் வில்லை உடைத்து**
**சீதையை ராமன் கரம் பற்றியதை**

★ கை வீசி வந்த வைகாசி நிலவை – விழியில்
மை பூசி வந்த தைமாச மலரை...
வலக்கையால் மெல்லப் பற்றி
வலம் வந்தான் தீயைச் சுற்றி...

– என்று எழுதுகிறார்.

**ராவணன் சீதையைக் கவர்ந்து சென்ற அவலத்தை...**

★ வான் பிரிக்காத உறவை – நெடுங்
கான் பிரிக்காத உறவை–ஒரு
மான் பிரித்தது...
அறம் தோற்று மறம் சிரித்தது'...

என்கிறார்.

**சீதை சிறைப்பட்டதற்கு ராவணன் புதுக்காரணம் சொல்கிறான்...**

★ சீதையே! நீ சிறைப்பட்ட காரணம்
நான் மட்டுமல்ல – நான் அனுப்பிய
மாய மான் மட்டுமல்ல – நீயும் தான்
என்னுள்ளே நீ எழுப்பிய
ஆசைத் தீயும் தான்...

படிக்கப் படிக்கத் தெவிட்டாத வரிகள்...

அவதார புருஷன் – என்ற பெயரில் ராமாயணத்தையும்
பாண்டவர் பூமி – என மகாபாரதத்தையும்
ராமானுஜ காவியம் – என மகான் ராமானுஜர் வரலாற்றையும்
கிருஷ்ண விஜயம் – என்ற தலைப்பில் கண்ணன் பிறப்பு
வளர்ப்பையும்

அவர் எழுதும் அழகு – அதில் விளையாடும் தமிழ்நடை, தமிழ்த் திரை உள்ளவும், தமிழ்மொழி உள்ளளவும், தமிழ்மண் உள்ளளவும் அவர் பெயரைச் சொல்லிக் கொண்டே இருக்கும்...!

52



'இனி ஒரு சுதந்திரம்' தியாகியாக

## மணிவண்ணன் – ஆர். சுந்தரராஜன்

1980களில் இளைய தலைமுறை இயக்குநர்களில் பல பேருடன் இணைந்து நான் பணியாற்றியிருக்கிறேன். படத்துக்குப் படம் மாறுபட்ட கதைக் கருவைத் தேர்ந்தெடுத்து வெற்றி கண்டவர்களில் கதாசிரியர், டைரக்டர் மணிவண்ணனும், ஆர். சுந்தரராஜனும் குறிப்பிடத்தக்கவர்கள்.

நண்பர் சுந்தரராஜனும் எந்த இயக்குநரின் கீழும் உதவியாளராக இருந்து பயிற்சி பெற்றவரல்லர். கதை விவாதங்களில் சில சமயம் கலந்து கொண்டிருக்கிறார் என்பதைத் தவிர, ஸ்டூடியோவுக்குள் சென்றோ, அனுபவப்பட்டவர்கள் பணிபுரிவதைப் பார்த்தோ தொழிலைக் கற்றுக் கொண்டவரல்லர். படங்களைப் பார்த்தது மட்டுமே அனுபவம்!

இவர் இயக்கிய 'பயணங்கள் முடிவதில்லை', 'நான் பாடும் பாடல்', 'வைதேகி காத்திருந்தாள்', 'அம்மன் கோயில் கிழக்காலே' ஆகிய படங்கள் வசூலில் சாதனை புரிந்தவை! ஆனால், இந்தப் படங்களுக்கு மட்டுமல்ல, இவருடைய மற்ற திரைப்படங்களுக்கும் இவர் திரைக்கதை வசனத்தை எழுதி ஃபைலில் வைத்துக்கொண்டு படப்பிடிப்பை நடத்தி நான் பார்த்த தில்லை.

ஒரு முறை சுந்தரராஜனிடம், ''ஏன் சார், கதை வசனத்தையெல்லாம் முன்னாலேயே எழுதி, படிச்சுப் பார்த்து முடிவு செய்யற பழக்க மில்லையா?'' என்று கேட்டேன்.

''இத பாருங்க! இருபத்துநாலு மணி நேரமும் கதையைப் பத்தித் தான் சிந்திச்சுக்கிட்டிருக்கிறேன். ராத்திரி பன்னிரண்டு மணிக்குத் தூக்கத் திலே எழுப்பிக் கதையைக் கேட்டாலும் என்னால் காட்சிகளைத் தெளிவா சொல்லமுடியும்'' என்றார்.

''சரி, வசனங்களையாவது முன்னால எழுதிப் பார்த்துட்டு வரக் கூடாதா?'' என்று கேட்டேன்.

''பலதடவை வீட்டில எழுதிக்கிட்டு வந்தேன். செட்டுக்கு வந்து சூழ்நிலையைப் பார்த்தவுடனே புதுசாகவும், இன்னும் அழகாகவும் வார்த்தைகள் கற்பனையில் வந்து விழுந்தன. 'டேக்' எடுக்கும்போது பார்த்தா, ராத்திரி எழுதிக்கிட்டு வந்ததுக்கும், இப்ப படமெடுக்கிற வசனத்துக்கும் சம்பந்தமே இல்லை. அப்படி இருக்கறப்போ, விடிய விடிய கண்ணில் விளக்கெண்ணெயை விட்டுக்கிட்டு எழுதிக்கிட்டு வர்றது வீண்தானே'' என்றார்.

கோயம்புத்தூரை யொட்டிய பாப்பநாய்க்கன் பாளையத்தில் தனக்குச் சொந்தமான பேக்கரியில் உட்கார்ந்துகொண்டு, வருவோர் போவோரின் சுபாவங்கள், பேசும் விஷயங்கள் இவற்றையெல்லாம் உன்னிப்பாகக் கவனித்து, மக்களிடையே இயல்பாக நகைச்சுவை உணர்வு எப்படி யெல்லாம் வெளிப்படுகிறது என்பதைப் புரிந்துகொண்டு, ஓய்வு நேரங் களில் நண்பர்களிடம் அதைச் சொல்லிக் காட்டிச் சிரிக்க வைப்பாராம்.

தனது படங்களில் பெரும்பாலும் இவர் கையாண்டுள்ள அத்தனை நகைச்சுவைக் காட்சிகளும் வசனங்களும், இவர் அனுபவத்தில் கண்டவை என்று கூறினார்.

ஒரு காட்சி படமாகும்போது ரொம்பவும் இயல்பாக, இது போன்ற சந்தர்ப்பங்களில் மக்கள் எப்படிப் பேசுவார்களோ அதை வாய்மொழியாகச்

சுந்தரராஜன் சொல்வார். அதில் கொஞ்சம் அழுத்தம் போதவில்லை என்றாலோ, நீளம் தேவை என்றாலோ ஒரு விநாடி யோசித்து, வேறு வார்த்தைகளைச் சொல்வார். இப்படி ஐந்தாறு முறை திரும்பத் திரும்ப பேசும்போது, வசனங்கள் மாறும். முழு வடிவமும் பெறுவதற்கு முன்னர், நடிகர் வசனங்களை மனப்பாடம் செய்து விட்டால், இது இயக்குநர் தவறல்ல; அதன்பின் முடிவான வசனத்தை மீண்டும் புதிதாக மனப்பாடம் செய்து நடிக்க வேண்டும்.

ஷாட் முடிந்த கையோடு உதவி டைரக்டர் ஓடிவந்து, ''சார்! சார், நீங்க என்ன வசனம் பேசினீங்க? அப்படியே சொல்லுங்க'' என்று கேட்டுத் தாளில் எழுதிக்கொள்வார்! 'படமெடுக்கும்போது உடனுக்குடன் ஒலிப் பதிவும் செய்துகொள்வதில்லையா?' என்று கேட்கலாம். 1975 வரையிலும் ஸ்டூடியோவுக்குள் படமாக்கப்படும் காட்சிகளுக்கு நேரடி ஒலிப்பதிவு செய்யப்பட்டு வந்தது. அதாவது, நடிகர் உணர்ச்சிகரமாகப் பேசி நடிக்கும் போது ஒலியும் பதிவுசெய்யப்படும் – காமிரா மூலம் ஒளிப்பதிவும் ஒரே சமயத்தில் செய்யப்படும். இப்போது பெரும்பாலும் ஒலிப்பதிவை அப்படி ஒரே சமயத்தில் பதிவு செய்து, அதைப் படங்களில் இணைக்கும் பழக்கம் போய்விட்டது. நூறு சதவீதம் ஸ்டூடியோவுக்குள் படமாக்கி னாலும் சரி, அவுட்டோரில் படமாக்கினாலும் சரி, குரல் தனியே பதிவு செய்யப்படுகிறது.

புது இயக்குநர்கள், சவுண்ட் நெகடிவ்வை வீணாக்க வேண்டாம் என்பதற்காக, படமாக்கப்படும்போது டேப்ரிக்கார்டர்களில் ஒலிப்பதிவு செய்து, அவற்றின் மூலம் வசனங்களைக் கேட்டு, பிரதி எடுத்து, 'டப்' செய்யும்போது நடிகர்களுக்குக் கொடுத்து உதவுவார்கள்.

இப்படிச் சில பிரச்சினைகள் இருந்தபோதிலும் சுந்தரராஜன் போன்ற படைப்பாளிகள் வெற்றிப் படங்களைத் தந்து கொண்டிருக்கும்வரை யாரும் இவற்றையெல்லாம் பெரிதுபடுத்த மாட்டார்கள். எப்படிப் படம் எடுக்கிறார்கள் என்பது முக்கியமல்ல. எந்த அளவு அது மக்களின் வர வேற்பைப் பெறுகிறது என்பதுதானே முக்கியம்.

நண்பர் மணிவண்ணன் சற்றே வித்தியாசமானவர். ஆழமான கருத்து களைச் சொல்ல வேண்டும் என்ற ஆர்வமுள்ளவர். காதல், நகைச்சுவை, திகில் உணர்வு, சமூகப் பிரச்சினை, நாட்டுப்பற்று – இப்படிப் பல்வேறு அம்சங்களைத் தனது படங்களில் கருப்பொருளாகக் கொண்டு திரைப் படங்களை உருவாக்குபவர்.

நாவல் எழுதுவது போல், திரைப்படமாக்கப் போகும் கதையை முதலில் மொத்தமாக எழுதி விடுவார். சந்தேகம் வரும்போது மட்டும் அதைச் சரிபார்த்துக் கொள்வார். மற்றபடி வசனம், இவரைப் பொறுத்த மட்டில் குற்றாலஅருவிபோல வந்து விழுந்துகொண்டே இருக்கும்!

கதையின் வடிவம் கேட்டு நான் சமீபத்தில் கண்ணீர் வடித்தது, 'இனி ஒரு சுதந்திரம்' படத்தின்போதுதான். படத்தின் முடிவில், பரிதாபமாகக் கலெக்டர் அலுவலகம்முன் தியாகி பிணமாகக் கிடப்பது போலவும், பேரக் குழந்தை அழுது கதறுவது போலவும் கூட்டத்தினரின் கால்களுக்கு அடியில் பெரியவரின் சடலத்தைத் தூரத்தே இருந்து கலெக்டர் பார்ப்பது போலவும் இறுதிக் காட்சியை எழுதியிருந்தார். அதைக் கடைசியில் மாற்றிக் கொண்டோம்.

சிலர் அழகாகக் கதை சொல்வார்கள், ஆனால், படமாக்கும்போது அந்த அழுத்தம் குறையாமல் திரைவடிவம் தர அவர்களால் முடியாது. காமிரா வழியே கதை சொல்லத் தெரிந்திருப்பது ஒரு கலை. பாரதி ராஜாவிடம் பல படங்களுக்குப் பணிபுரிந்து பெற்ற பயிற்சி, மணி வண்ணனின் கற்பனைகளைத் திறம்படத் திரையில் வெளிப்படுத்தப் பெரிதும் உதவியாக உள்ளது.

ஒரு லொகேஷனைப் பார்க்கும்போதே, மனத்திலுள்ள காட்சியை இங்கு எப்படிப் படமாக்கலாம் என்பது பற்றி, பளிச்சென்று முடிவு செய்துவிடுவார். ஒரு ஸ்பாட்டில் நின்றுகொண்டு காமிராவை எங்கு வைக்கலாம், எப்படி ஷாட்டை எடுக்கலாம் என்ற விஷயங்களில் மணி வண்ணன் திணறி நான் பார்த்ததே இல்லை.

'இனி ஒரு சுதந்திர'த்தில் ஜீப் அருகே, தியாகியைப் போலீஸார் அடித்து நொறுக்குவதையும், கையில் குழந்தையுடன் சிறுவன் கதறுவதை யும் டிராலியில் பலமுறை காமிராவை ஓடவிட்டுப் படமாக்கி இவர் இணைத்துள்ள விதம், பூகம்பம் வெடிக்கும்முன் ஏற்படும் மன உணர் வைப் படம் பார்ப்போரிடம் ஏற்படுத்தியது.

படப்பிடிப்பைத் துவங்கவோ, முடிக்கவோ இவர் நேரம், காலம் பார்ப்பது கிடையாது. காலை ஐந்து மணிக்குப் படப்பிடிப்பு துவங்கினால், இரவு, இரண்டு, மூன்று மணி வரைகூட இடைவிடாமல் வேலை செய்வார்.

பகல் உணவு, இடைவேளை என்பது, வானத்தில் மேகங்கள் சூழ்ந்து கொண்டாலோ, மழை பெய்தாலோ மட்டும் உரிய நேரத்துக்கு விடப் படும். இல்லாவிட்டால், சாதாரணமாக மூன்று அல்லது நான்கு மணி ஆகிவிடும்.

வேலை செய்யும்போதுதான் மரியாதை, கண்டிப்பு என்பதெல்லாம். படப்பிடிப்பு முடிந்துவிட்டால் பெரியவர், சின்னவர் என்ற பேதமே இல்லாமல், கல்லூரி மாணவர்கள்போல் வேடிக்கையும் கலாட்டாவுமாகப் பொழுது கழியும்.

'இனி ஒரு சுதந்திரம்' படத்தில், குழந்தைகளுக்கு வெல்லக் கட்டித் துண்டுகள் கொடுத்துக் கருங்காபி சாப்பிடும் காட்சி, பலரைக் கவர்ந்த ஒன்று. அது மணிவண்ணன் வாழ்க்கையில் அனுபவித்த வேதனைதான். தொழிற்சாலையில் கொஞ்ச காலம் பணிபுரிந்தபோது பொதுவுடமைக் கட்சியின் அனுதாபியாக இருந்திருக்கிறார். அன்று பெற்ற அனுபவங்கள் பல, இன்று திரைவடிவம் பெறுகின்றன.

'மனுஷனை நாடி பிடிச்சுப் பார்க்கிற வைத்தியனைவிட, மண்ணை நாடி பிடிச்சுப் பார்க்கற என் கணக்குத் தப்பினதில்லே.'

'பெத்தது என்ன குழந்தைன்னு தெரியாம அவ தூங்கறா...! ஆனா, அதை யாருக்குப் பெத்தான்னே தெரியாம அவஸ்தைப் படற இந்த ஜீவன் நிலைமையைப் பார்த்தியாம்மா.'

'ஒரு வீட்ல நெறைய இருக்கும், பல வீடுகள்லே ஒண்ணுமே இல்லாம இருக்கே, அதுக்குப் பேருதான் இந்தியா...' – இப்படிப் படத்தில் வரும் ஆழமான வசனங்கள், படப்பிடிப்பின்போது தெறித்து விழுந்தவை.

அபார கற்பனைத் திறனும் அசுர வேகத்தில் படமாக்கும் ஆற்றலுமுள்ள மணிவண்ணன், தவிர்க்க முடியாமல் ஒரே சமயத்தில் பல படங்களை ஒப்புக்கொண்டு, இரவு பகலாக நியாயமான ஓய்வின்றி வேலை செய்கிறார். இடையில் தொழிலில் ஏற்படும் தொய்வு அவரை மட்டுமல்ல, யாரையுமே பயமுறுத்தக் கூடியதுதான். அது போன்ற சந்தர்ப்பங்களில், நாலைந்து படங்கள் கைவசம் இருந்தால், ஒன்றிரண்டு அடி பட்டாலும் மூன்றாவதில் எழுந்து நின்றுவிட வாய்ப்பு உண்டு என்பது உண்மைதான்.

சந்தர்ப்பம் நமக்குச் சாதகமாக வரும்போது அதைப் பயன்படுத்திக் கொள்வதில் தவறில்லை. காரணம், இன்றைய பெரும்பாலான ரசிகர்களும் நிரந்தரமாக யார்மீதும் பற்று வைப்பதில்லை.

காசு வாங்கிக்கொண்டு ஒரு கட்சிக்குக் கோஷம் போட்டு விட்டு, அடுத்த விநாடியே இன்னொரு கட்சிக்குக் காசு வாங்கிக்கொண்டு கோஷம் போடும் ரெடிமேட் தொண்டர்கள் போல், வேகமாக அனைத்தும் மாறும் காலம் இது.

இருப்பினும், தன்னம்பிக்கையும் திறமையும் மிக்க மணிவண்ணனைப் போன்ற இயக்குநர்கள், தீவிரமாகக் கவனம் செலுத்தி ஒரு படத்தை முடித்துவிட்டு, அடுத்த படம் பற்றிச் சிந்திக்கச் செல்லும் பட்சத்தில் இவர்களின் வெற்றிக்கு உத்தரவாதம் அதிகம் இருக்கும் என்று தோன்றுகிறது.

---

53



## துணைவி

1988 செப்டம்பர் 7 ஆம் தேதி! அதுதான் என் வாழ்க்கைத் துணை நலத்தின் – என் மனைவியின் 37வது பிறந்த நாள். 'துணைவி என்றொருத்தி இருக்கிறாள், அவளுக்கு மனசு என்று ஒன்றிருக்கும், அதில் ஆசை என்று ஒன்றிருக்கும், அவளும் மனிதப் பிறவிதான். அவளை நாம்



மணமேடையில் அட்சதை போட வரமுடியாத அம்மாவிடம் மாலை நேரத்தில் ஆசிபெற்றபோது

நேசிக்க வேண்டும், நாம் நேசிப்பது அவளுக்குத் தெரிய வேண்டும்' என்று நான் உணர்ந்த நாள்...!

இந்த ஞானோதயம் பிறந்ததற்கு அடையாளமாக ஏதாவது செய்ய வேண்டாமா? பிறந்த நாளுக்கு ஒரு பட்டுப்புடவை பரிசளிக்கலாம் என்று தீர்மானித்து, காஸ்ட்யூமரை வரவழைத்து, ராதா சில்க் ஹவுஸிலிருந்து பத்து, பதினைந்து புடவைகளை வரவழைத்து, அதில் நானே ஒன்று தேர்வு செய்து, புடவைக்கு மேட்சாக ஜாக்கெட் தைக்க, முந்தைய நாளே மனைவியின் ஜாக்கெட் ஒன்றைத் திருடி, அளவு கொடுத்து, பிறந்த நாளன்று பிரமாதமாகப் பார்சல் செய்து வாழ்த்துக் கூறி வழங்கினேன்...!

ஒரு நிமிடம் அதைப் பார்த்துத் திகைத்தவள், ''என்ன இது?'' என்று கேட்டாள். ''பிறந்தநாள் பரிசு'' என்றேன்.

''என் பிறந்தநாள் எனக்கே தெரியாது. இதெல்லாம் கொண்டாடக் கூடிய பிறந்தநாளா? **ஏன் பிறந்தோம் என்று நினைக்கும் நாளைப் பற்றி நான் என்றுமே நினைத்ததில்லை** என்றாள்.

''அதனால்தான் நானே உன் ஜாதகத்தைத் தேடி எடுத்து, பிறந்த தேதி கண்டுபிடித்து வாங்கி வந்தேன். இந்தா பெற்றுக் கொள்'' என்றேன்.

''என்ன திடீர்னு என் மேல பாசம்? உண்மையிலேயே பாசமா? இல்லை, புதுசா ஏதாவது தப்புப் பண்ண ஆரம்பிச்சு, அதை மறைக்கற துக்கு இப்படி மனைவிக்கு 'ஐஸ்' வைக்கறீங்களா?'' என்று கேட்டாள்.

'பாடாத தேனீக்கள்' படப்பிடிப்பு சமயம் அது. தயாரிப்பாளர் முரசொலி செல்வம் அப்போதே சொன்னார். ''பல வருஷமா செய்யாமல் இப்ப திடீர்னு அன்பளிப்பு கொடுத்தா, வீணான சந்தேகமெல்லாம் வரும் யோசிச்சு செய்யுங்க'' என்றார்.

நான் கேட்கவில்லை. இப்போது வசமாக மாட்டிக் கொண்டேன். ''அதெல்லாம் 'எந்தத் தப்பும் நான் பண்ணலை. வாங்கிக்க'' என்றேன். மௌனமாக, அதே சமயம் பிடிவாதமாக மறுத்தாள். வற்புறுத்தத் தொடங் கியதும், அவள் கண்களில் நீர் கரைகட்டியது.

'என்னடா இது? பிறந்த நாளும் அதுவுமா அழவச்சிட்டோமே' என்று மனம் பதைபதைத்தது.

''ஏங்க, நமக்கு 1974 இல் கல்யாணமாச்சு. இந்தப் பதினாலு வருஷத்தில் ஒரு நாளாவது, என் மொகத்தை உத்துப் பார்த்திருக்கீங்களா? என் காதுல என்ன கம்மல் போட்டிருக்கேன், கழுத்துல என்ன செயின் போட்டிருக் கேன், என்ன கலர் புடவை கட்டியிருக்கேன், நான் சந்தோஷமா இருக்கே னான்னு என்னிக்காவது ஒரு தடவையாவது கேட்டிருக்கீங்களா?''

அவள் உள் மனம் உடைந்து உணர்ச்சிகள் பிரவாகமெடுத்து ஓடின...! வார்த்தைகளும் வடித்த கண்ணீரும் நெருப்பாய் என்னைச் சுட்டன. யோசித்துப் பார்த்தேன். தீவிரமாக, தெளிவாக நினைவுபடுத்திப் பார்த்தேன். அவள் கேட்ட எதையுமே நான் ஒரு தடவைகூடச் செய்யவில்லை. ஒரு விநாடி, என் இதயத்துடிப்பு நின்றுவிட்டது. என்ன மனிதன் நான்?

**கோ**வை மாவட்டத்தில், குடிக்கும் தண்ணீருக்கே, குடமெடுத்து நாலு கி.மீ. தூரம் நடந்துபோய்க் கொண்டுவரவேண்டிய குக்கிராமத்தில் பிறந்து, பள்ளிப் படிப்புக்குத் தினமும் பல கி.மீ. நடந்துசென்ற நான்; குடும்பத்தைக் கரைசேர்க்க வேண்டிய தலையாய பொறுப்பில் இருந்தேன்.

பெற்றவரும், உடன் பிறந்தவர்களும் அடுத்தடுத்து மரணமடைந்து விட்டனர். உருப்பட்டே ஆகவேண்டும் என்று பதினைந்து வயதிலேயே உறுதி எடுத்துக்கொண்டேன்.

காதல் என்ற வார்த்தை, அன்று என் அகராதியில் சுட்டெரிக்கப்பட்ட வார்த்தை. 'புலனடக்கம் செய்யாமல், போக வேண்டிய இடத்தை அடைய முடியாது' என்பது என் வேதம்.

**உடம்பில் ஓர் உறுப்பு உபாதை கொடுத்தால், அதை வெட்டி எறிந்து விடவேண்டும்** என்று, லட்சிய வேட்கையின் தீவிரம் காரணமாக, - உண்மையிலேயே முடிவெடுத்திருந்தேன்.

முறைப்பெண்ணை மணந்துகொள்ள அபிப்பிராயம் கேட்டபோது, 'ஏதோ ஒரு வெறியுடன், சிந்தனையுடன் போய்க் கொண்டிருக்கிறேன். சென்றடையுமிடம் சோலையாக இருந்தால் திருமணம் பற்றி யோசிப்பேன். வெறும் கானல் நீராயிருக்கும் பட்சத்தில், தாடி வளர்த்துக் காட்டுக்குப் போய் விடுவேன். என்னை நம்பி யாரும் பெண்ணை வளர்க்கக்கூடாது' என்று பதில் சொன்னேன்.

சென்னை வந்து புதுப்பேட்டையில் தங்கியிருந்தபோது ஒண்டுக் குடித்தனத்தில், உடன் இருந்த வக்கீலும், ஓவியர் ஒருவரும், அதே வீட்டுப் பெண்களைக் காதலித்து மணக்க நேரிட்டபோது, என் எச்சரிக்கை உணர்வால், எந்தப் பெண்ணிடமும் மாட்டிக் கொள்ளாததை நினைத்துப் பெருமிதம் கொண்டேன்.

சாந்தி நிகேதன்போல, சர்வ சுதந்திரமும், சமமாகப் பழகும் வாய்ப்பும் கிடைத்த ஓவியக் கல்லூரியில், ஓவியம் போன்று பல மொழி பேசும் பாவையர் உடன்பயின்ற போதும், அதீத கட்டுப்பாடு காரணமாக, வகுப்பறையில் அவர்களை ஓவியமாகத் தீட்டினேனேயொழிய, ஒருநாள் கூட கேன்ட்டீனுக்கோ, ஹோட்டலுக்கோ அவர்களுடன் சென்றதில்லை.

திரையுலகின் பக்கம் வாழ்க்கை திசைமாறியதும், திரும்பிய பக்க மெல்லாம் சிறிசுகளும் பெரிசுகளும், தங்களை அழகுபடுத்திக் காமிரா முன்பு வண்ண வண்ணமாகக் காட்சி தந்தனர்.

துவக்கத்தில், பெரும்பாலும் என்னைவிட மூத்த பெண்களோடு ஜோடியாக நடிக்கும் நிலை, அல்லது என்னைவிடப் பிரபலமான நடிகை களுடன் நடிக்கும் நிலை.

பத்துப் படங்களுக்குப் பின்னரே, என் வயதுக்கும் தோற்றத்துக்கும் பொருத்தமான பெண்கள் இணையாக நடிக்கும் சூழ்நிலை ஏற்பட்டது. வயசுப் பெண்கள் நிறைய பேர் நெருங்கி நடிக்கும் சூழல் ஏற்பட்ட போது, ஒரு விஷயத்தை அவர்களிடம் தெளிவுபடுத்திவிட்டேன்.

'சினிமாவிலும் நல்லொழுக்கம் மிக்கவர்கள் இருக்கிறார்கள். வெளி யுலகிலும் ஒழுக்கம் கெட்டவர்கள் நிறைய பேர் இருக்கிறார்கள். ஆனால், நான் வெளியுலகில்தான் பெண் தேடித் திருமணம் செய்தாக வேண்டும். எனவே, மனத்தில் கற்பனைகளை வளர்த்துக் கொள்ள வேண்டாம்' என்று சொல்லிவிட்டேன்.

31 வயதை அடைந்தபோது, லட்சியம் கொஞ்சம் கிட்டத்தில் இருப்பது போன்ற நம்பிக்கை ஏற்பட்டது. 40 படங்களில் நடித்து, 'இனிமேல் ஹீரோவாக தாக்குப்பிடிக்க முடியும்' என்ற எண்ணம் வலுப்பட்டபோது மனசும் தெளிவடைந்தது.

சிறுவனாக இருந்து, பிரமச்சாரியாக வளர்வது, குடும்பஸ்தனாக உயர்வது, வாழ்வின் தொடர்ச்சியான நிலைகள். சிறுவனாகவே எப்போ தும் இருந்துவிட முடியாது - கூடாது. அதுபோல் ஆயுள் முழுவதும் பிரமச்சாரியாக, அதன் உண்மையான பொருளுடன் - பெண்களையே தீண்டாமல், மனத்தளவிலும் சோரம் போகாமல் இருக்க முடியாது! ரிஷிகளே ரிஷி பத்தினிகளுடன் வாழ்ந்திருக்கிறார்கள். எனவே திருமணம் செய்துகொள்வது என்று முடிவுசெய்து நண்பர்களிடம் பெண் பார்க்கச் சொன்னேன்.

நாமே நேரில் போய் ஒவ்வொரு பெண்ணையும் பார்ப்பதாக வைத்துக் கொள்வோம். சில சமயம், ஒரு பெண்ணை நமக்குப் பிடிக்கும்; இன்னொரு சமயம், வேறொரு பெண்ணுக்கு நம்மைப் பிடிக்கும். ஏதோ ஒரு காரணத் தால் திருமணம் நடைபெறாவிடில், அந்தப் பெண் வேதனைப்பட வாய்ப்பு ஏற்படும். எனவே பெண் பார்த்து முடிவு செய்யும் வேலையைக் குமாரசாமி, குமரேசன் என்ற நண்பர்களிடம் ஒப்படைத்தேன்.

கொங்கு நாடு முழுவதும் அவர்கள் வேட்டையாடினார்கள். நடிகனுக்குத் துணிந்து பெண் தரும் அளவுக்கு நம் நாட்டு மக்களுக்கு

இன்னும் நம்பிக்கை வரவில்லை. போகும் இடங்களிலெல்லாம், இரண்டு பெண்டாட்டி கட்டிய நடிகர்களின் பட்டியலை எடுத்து நீட்டி, 'உங்க ஆள் இன்னொரு கல்யாணம் பண்ணிக்க மாட்டான்னு என்ன க்யாரண்டி?' என்று கேள்விக்கணை தொடுத்தனர்.

ஒரு வழியாக ஒன்றரை ஆண்டு சுற்றி அலைந்து, நண்பர்கள் விரித்த வலையில் இந்த மீன் மாட்டிக் கொண்டது. திருமணத்திற்கு முன்பு, சிவகுமார் என்ற நடிகன் படத்தை இவள் பார்த்ததுமில்லை; என் பெயரைக் கேள்விப்பட்டதுமில்லை. அதனால் வசதியாகப் போயிற்று. லட்சணமான, அப்பாவித்தனமான ஒரு புகைப்படத்தை அனுப்பி ஒரே அமுக்காக அமுக்கிவிட்டோம்.

திருமண விழாவுக்கே மொத்தம் நான்கு நாள்கள் மட்டுமே லீவு எடுக்க முடிந்தது. தாலி கட்டி வந்ததிலிருந்து, இரவு பகலாகப் படப் பிடிப்பு. அதோடு மாதத்தில் 28 நாள்கள் நாடகம். பொழுது விடிந்தால் ஒப்பனை, நாள் முழுக்க ஸ்டூடியோ – நாடகக் கொட்டகை. உடம்பையும் மனத்தையும் சக்கையாகப் பிழிந்துவிட்டு வீட்டுக்கு அனுப்புவார்கள். படுக்கையில் விழுந்தால், கனவிலும் படப்பிடிப்பு!

தனிமையில் சிந்திக்கவோ, ஓரிரு நாள் மனைவியுடன் வெளியே சென்று வரவோ வாய்ப்புமில்லை. அது எனக்குத் தோன்றவுமில்லை.

இது என் குடும்பம். இவள் என் மனைவி. என்னில் ஓர் அங்கம். அவளைத் தனியாகக் கவனிக்க வேண்டுமா? அவள் ஆசாபாசங்களை அறிய வேண்டுமா என்ற யோசனையே எழவில்லை.

இதே பரபரப்பில், எப்படியோ மூன்று குழந்தைகள் பிறந்து, அவர்கள் பாட்டுக்கு ஜாலியாக வளர ஆரம்பித்துவிட்டார்கள். வீட்டு நிர்வாகம், பீரோ சாவி எல்லாம் அம்மாவிடம், அல்லது மனைவியிடம். அதுபற்றி நான் கண்டுகொள்ளவில்லை.

**ப**தினான்கு ஆண்டுகள் இப்படி ஓடிவிட்டன...! பிறந்த நாளன்று அவள் கேட்ட கேள்விகள் என்னைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்தி விட்டன. இந்த நீண்ட காலகட்டத்தில், அவள் முகத்தை நேருக்கு நேர் நான் ஒரு தடவைகூட உற்றுப் பார்க்கவில்லை.

அவள் ஏக்கங்களை ஆசைகளை அறிய முயற்சிக்கவில்லை. என் மனத்துக்குள் என் பக்கம் நியாயமிருப்பதாகத் தோன்றியது. அந்தக் கேள்வி களை அனாயாசமாக அவள் முறியடித்தாள்.

''பீரோ சாவியே உன்னிடம்தானே இருக்கிறது. வேண்டியதை வாங்கிக் கொள்ள வேண்டியதுதானே?'' என்று கேட்டேன்.

''பேங்க் கேஷியர், கோடிக்கணக்கான ரூபாய்களுடன் தினமும் புழங்குகிறார். அதற்காக அந்தப் பணமெல்லாம் தன்னுடையது என்று உரிமை கொண்டாட முடியுமா?'' என்று பதில் சொன்னாள்.

'ஒருநாள் பிரியமா, தனியா, சினிமாவுக்கோ பீச்சுக்கோ கூட்டிக்கிட்டு போயிருக்கீங்களா? ஆசைப்பட்டதை வாங்கிக் கொடுத்திருக்கீங்களா? அன்பா நாலு வார்த்தை, ஆர அமர உட்கார்ந்து எங்ககூட பேசியிருக் கீங்களா?' என்ற அவள் கேள்விக்கு 'தினமும் கண்ணே, மணியேன்னு காதல் வசனம் பேசி, காடுமலையெல்லாம் துரத்தி, டூயட் பாடி, ஓய்ந்து போய் வரும் நான், வீட்டிலும் அதே வசனம் பேசி, விருப்பப்பட்டதை வாங்கித் தந்தால், செயற்கையாக இருக்காதா?' என்று எண்ணினேன்.

மனைவி அமைவதெல்லாம் இறைவன் கொடுத்த வரம். பட்டுச் சேலை சரசரக்க பதவிசாக நடந்து வந்து, ஒரு டம்ளர் காபியைக் கையில் கொடுத்துவிட்டுப் போகும் சில நொடிகளில், ஒரு பெண்ணின் குணாதிச யத்தைப் புரிந்துகொண்டுவிட முடியுமா? ஆரம்பத்தில் அமைதியாய் இருப்பவர்கள், பின் அடங்காப்பிடாரிகளாக மாறிவிடுவதில்லையா? நாம் நடந்து கொள்வதைப் பொறுத்துத்தானே அது இருக்கிறது?

எனவே, என் நண்பர்கள், எல்லாத் தகுதிகளையும் நடுநிலை நின்று, பொருத்திப் பார்ப்பார்கள் என்ற எண்ணத்தில், 'பெண்ணை உறுதிசெய்யும் வரை நான் அவளைப் பார்ப்பதில்லை' என்று முடிவு செய்திருந்தேன்.

ஆனால், 'வாழ்நாள் முழுவதும் உடனிருந்து வாழப் போகிறவளை நேரில் பார்த்துப் பேசி, நீங்களே முடிவு எடுக்காமல், சந்தையில் விற்கப் படும் பொருளை ஆள் விட்டு வாங்கிவருவதுபோல, உங்கள் நண்பர் களை விட்டுத்தானே என்னைத் தேர்வு செய்தீர்கள்?...' என்று ஒரு பெண் நினைக்கக்கூடும் என்று எனக்குத் தோன்றவில்லை!

சிவாஜி அண்ணன் ஆரம்பத்திலேயே சொன்னார்: ''டேய் சிவா! வயசில கல்யாணம் பண்ணிக்கோ. 30 வயசு தாண்டினா, அப்புறம் பொண்டாட்டிமேல பெரிய பிடிப்பு இருக்காது. 'பாதி வயது தனியா வாழ்ந்திட்டோம். இவ இல்லாட்டிகூட, மீதி வயசும் இப்படியே வாழ்ந் திட முடியும்'னு தோணும்.

''குடும்ப வாழ்க்கை சுவையா இருக்கணும்னா, ஒருத்தர் இல்லாமல் இன்னொருத்தர் வாழ முடியாதுங்கற எண்ணம் வலுவா இருக்கணும். சிறு வயசில கல்யாணம் பண்ணினாத்தான் அப்படிப்பட்ட எண்ணம் தோணும்'' என்றார்.

அது எவ்வளவு பெரிய தீர்க்க தரிசனம் என்பதை நான் பலமுறை உணர்ந்திருக்கிறேன். 30 ஐத் தாண்டி, கல்யாணம் செய்யும் என்னைப்

போன்றோருக்கு, நல்ல மனைவி அமையும்பட்சத்தில், 40 வயதுக்குப் பின்னரே அவள் அருமை புரிகிறது.

சரி! நடந்தது நடந்துவிட்டது. நாம் வேண்டா வெறுப்பில் திருமணம் செய்து கொள்ளவில்லை! விரும்பித்தான் தாலி கட்டினோம். ஒரே ஒரு தவறு செய்துவிட்டோம். அதாவது, நம் அன்பை நம் மனத்துக்குள்ளேயே வைத்துக் கொண்டிருந்துவிட்டோம். அதை வெளிப்படுத்திக் காட்டி யிருக்க வேண்டும்.

அன்பு, பரஸ்பரம் வெளிப்படுத்த வேண்டிய ஒன்று! தாயிடம் மகளிடம் காதலியிடம் மனைவியிடம் தவறாது நாம் அன்பை வெளிப் படுத்திட வேண்டும்.

இதற்குப் பிராயச்சித்தம் தேட ஒரு சந்தர்ப்பத்துக்காகக் காத்திருந்தேன். 1992 இல் அந்த வாய்ப்பு கிடைத்தது.

உலகெங்கும் வாழும் தமிழறிஞர்கள், சான்றோர்கள், கலைஞர்கள் கலந்து கொள்ளும் 5 வது உலகத் தமிழ்ப் பண்பாட்டு மாநாடு – ஆஸ்தி ரேலியாவிலுள்ள சிட்னி நகரில் நடக்கவிருந்தது.

கலைத்துறை சார்பில் என்னை அழைத்திருந்தார்கள். இரண்டு விமான டிக்கெட் அனுப்பியிருந்தார்கள். மனைவியை வரும்படி அழைத்தேன். எப்போதும்போல என் அழைப்பை ஏற்க மறுத்தாள். என்னைவிட குழந்தைகள் மீது அவளுக்கு ஒட்டுறவு அதிகம். தொப்புள் கொடி உறவு வலுவானது என்பதை உணர்ந்து, பிள்ளைகளிடம் விளக்கிக் கூறி, 'உங்கம்மாவும், நானும் 18 வருஷங்கள்ல தனியா எங்கேயும் போன தில்லை' என்று கூறியபோது அவர்கள் அதிர்ந்து போய்விட்டார்கள்.

அம்மாவை விடாப்பிடியாக மூட்டைகட்டி என்னோடு அனுப்பி வைத்தார்கள்.

மெல்பர்ன் சிட்டியில் கால் பதித்த எங்களை டாக்டர் சத்யநாதன் தம்பதியும், செந்தூரன் தம்பதியும் இன்முகத்துடன் விமான நிலையத்தில் வரவேற்றனர். ஆங்கில மொழி பேசும் அழகுச் சிறுமி அபிராமி பூங் கொத்துக் கொடுத்து எங்களை வரவேற்றார்.

அன்றிரவு கலை அரங்கில் துவங்கவிருந்த கலை நிகழ்ச்சிக்குக் குத்து விளக்கேற்றி, விழாவைத் துவக்கி வைக்கும் பெருமையை என் துணை விக்கு அளித்தது மெல்பர்ன் தமிழ்ச் சங்கம்.

சிட்னியில், மாநாட்டு அரங்கத்தில் உலகின் பல்வேறு நாடுகளி லிருந்தும் வந்து கலந்துகொண்ட 2000 க்கும் மேற்பட்ட தமிழ்ச் சான்றோர்

முன்னிலையில், கலையுலகின் வரலாறு பற்றியும் இக்கலைக்குப் பெருமை சேர்த்த மாபெரும் கலைஞர்கள் பற்றியும் 45 நிமிடங்கள் பேசினேன்.

பேச்சினூடே, ''எந்த ஒரு கலைஞனும் ஒன்றை இழந்துதான் ஒரு பெருமையைப் பெறமுடிகிறது. தமிழ்நாட்டில் எங்கோ ஒரு குக்கிராமத்தில் பிறந்த நான் ஓவியனாக, நடிகனாக 30 ஆண்டுகளைக் கடந்து மக்கள் மனத்தில் வாழ்ந்து கொண்டிருக்க, என் குடும்பமும் தியாகம் செய்திருக்கிறது. அதில் என் துணைவியின் பங்கு மகத்தானது.

''கலைத்துறைக்கு என் வாழ்நாளின் பெரும்பகுதியைச் செலவழிக்க, அவள் தன்னுடைய சுகங்களை, சந்தோஷங்களைத் தியாகம் செய்திருக்கிறாள்.

''பாசமுள்ள கணவனாக, அன்பான தந்தையாக என் குடும்பத்தாரின் விருப்பங்களை மட்டும் நான் நிறைவேற்றிக் கொண்டிருந்திருந்தால், இன்று உங்கள் முன் ஒரு கலைஞனாக மேடையில் நின்றிருக்க முடியாது.

''தன் சந்தோஷத்தைத் தியாகம் செய்து எனக்கு வழிவிட்டிருக்கிறாள் என் துணைவி.

" 'Behind every successful man, there is a woman' " என்று முத்தாய்ப்பாகச் சொன்னபோது, என் துணைவியின் கண்களில் முத்துக் கோர்த்து மின்னியது.

---



சினிமா புகழ் என்பது கொடைக்கானல் மேகம் போல என்று ஒரு இடத்தில் எழுதுகிறார். இதை விட அற்புதமாக எவரும் சினிமாப் புகழை வர்ணித்து விட முடியாது.

1-1-05, வெளியீட்டு விழாவில், கே. பாலசந்தர்

## 54



'தண்டிக்கப்பட்ட நியாயங்கள்'

# டைரக்டர் எம். பாஸ்கர்

**பொ**துவாக, மற்றவர்கள் ஒப்பந்தம் செய்யும் ஹீரோவுக்கு அல்லது ஹீரோயினுக்கேற்ப கதை பண்ணுவதிலும், கதையைத் தேர்வு செய்வதிலும்தான் ஈடுபடுவார்கள். பிரதான கதாசிரியர் அல்லது தயாரிப்பாளரைச் சுற்றிப் பத்து வசனகர்த்தாக்கள், பல மாதங்கள்

பிரபல ஹோட்டல் ஏ.ஸி. அறைகளில் தங்களை அடைத்துக்கொண்டு, புகையிலும் போதையிலும் சிக்கனின் பல வடிவங்களிலும் தங்களை மெய்மறக்கச் செய்து, அவ்வப்போது கதையில் புதுப் புது 'ஐடியா' கொடுப்பார்கள். பலரின் கூட்டு முயற்சியில் கதை முடையப்படும்.

சுமார் ஆறு முதல் எட்டு மாதங்கள்வரை திரைக்கதைக்கும் பின்னர் வசனம் எழுதி முடிக்கவும் உடம்பையும் மூளையையும் (சிகரெட் பற்ற வைத்து) வதைத்துக்கொண்டு – எனக்குத் தெரிந்து சிந்தனை செய்யும் கதாசிரியர், இயக்குநர், தயாரிப்பாளரான நண்பர் எம். பாஸ்கர்தான்!

பாஸ்கரைப் பொறுத்தவரை ஒரே மூச்சாக அனைத்தையும் முடித்து அதன் பின்னர்தான் முழு ஸ்கிரிப்டையும் நண்பர்களிடம் படித்துக் காட்டு வார். லாஜிக்கலாக ஏதாவது இடித்தால் அதைப் பிறகு சரிசெய்து விடுவார்.

'சஸ்பென்ஸ்' கதைகளில் 'சென்டிமெண்ட்ஸ்' இணைத்து எழுது வதில் ரொம்பவும் கெட்டிக்காரர். 'தீர்ப்புகள் திருத்தப்படலாம்' என்ற படத்தின் கதை – வசனத்தை முழுமையாக எழுதி முடித்துக் கொண்டு வந்து என்னைச் சந்தித்தார். ''இந்தக் கதையில் உண்மையான குற்றவாளி யார்? ஏன், எப்படிக் கொலை செய்திருப்பார் என்று ஊகித்துச் சொல்லி விட்டால் நான் இக்கதையைப் படமாக்கும் திட்டத்தைக் கைவிட்டு விடுகிறேன்'' என்று சவால்விட்டுப் படித்துக் காட்டினார்.

அதேபோல் 'பௌர்ணமி அலைகள்' திரைக்கதை – வசனத்தைப் படித்தபோதே, இது எல்லாத் தரப்பினரையும் நிச்சயம் கவரும் என்ற நம்பிக்கை வந்துவிட்டது.

சுதந்திர தினத்தன்று கொடியேற்றும் பெரிய மனிதர் சிவசந்திரனை ஆயிரம் குழந்தைகளுக்கு நடுவில் மின்னல் வேகத்தில் ரேவதி சுட்டு விட்டு, போலீஸில் சரணடைந்து விடுவார். மாமனார் – சீனியர் லாயர். மனைவி – அரசுத் தரப்பு வக்கீல். இவ்விருவராலும் அழுத்தி வைக்கப் பட்டு அவமானப்படுத்தப்பட்ட கதாநாயகன், யாருமே எடுத்து நடத்தப் பயப்படும் இந்த வழக்கை ஏற்றுக் கொள்வான். வழக்குக்குத் தேவையான தடயங்களைச் சேகரிப்பான் ஹீரோ.

'பௌர்ணமி அலைகளில்' நேர்மையாகவும் உண்மையுடனும் நடந்து பல சோதனைகளை, அவமானங்களைத் தாங்கிக் கொண்டு ஹீரோ, தான் எடுத்துக்கொண்ட வழக்கில் வெற்றி பெறுவதாகக் கதை சொன்ன விதம், மக்களுக்குத் தன்னம்பிக்கையை வளர்க்க உதவிற்று.

எம்.ஏ. பட்டதாரியான பாஸ்கர், சட்டப் படிப்பை முழுமையாகப் படித்து முடிக்கவில்லையென்றாலும், முதலாண்டுவரை படித்தவர்.

எனவே, சட்டப் புத்தகங்களை நன்கு படித்து, காட்சிகளுக்கேற்ப கிரிமினல் சட்டங்களின் தன்மையை அலசி, வசனங்களை எழுதியிருந்தார்.

நீதிமன்றம் சம்பந்தப்பட்ட காட்சிகளை எழுதி முடித்து, நீதிபதி ரத்னவேல் பாண்டியனிடம் ஸ்கிரிப்டைக் கொடுத்துப் படித்துப் பார்க்கச் சொல்லியிருந்தார். சுவையாகவும் அறிவுப்பூர்வமாகவும் வசனங்கள் எழுதப் பட்டிருப்பதை அறிந்து அவர் பாராட்டுகளைத் தெரிவித்தார்!

பொதுவாக, அனுபவப்பட்ட எந்த ஒரு நடிகரும், பத்து முதல் பதினைந்து வரி வசனங்களையெல்லாம் செட்டில் உதவி இயக்குநரையோ, கதை – வசனகர்த்தாவையோ படிக்கச் சொல்லி, மனப்பாடம் செய்து நடிப்பது வழக்கம். இந்தப் படத்தின் முக்கிய காட்சிகளில் அப்படி மேலோட்டமாக நடித்தால் சரியாக இராது என்று தோன்றிற்று.

படப்பிடிப்பு நாள்களில் அதிகாலையில் எழுந்து, நீண்ட அந்த வசனத்தை மனப்பாடம் செய்து, எப்படிப்பட்ட ஏற்ற இறக்கங்கள் வாக்கியங்களுக்கு அழகூட்டும் என்று பேசித் தீர்மானித்த பின்னரே ஸ்டுடியோவுக்குச் சென்றேன்.

செட்டுக்குள் போவதற்குமுன் வசனங்களை மனப்பாடம் செய்து தயார் நிலையில் போவது கேவலமில்லை. ஆயிரம் பேர் மத்தியில், காமிரா ஓடும்போது, அலட்சியமாக நடித்து ஃபிலிம் சுருளை வீணாக்கி, தயாரிப்பாளர், டைரக்டர் கோபத்துக்கும் வயிற்றெரிச்சலுக்கும் ஆளாகி அவமானப்படுவதைவிட, மல்யுத்தத்துக்குப் புறப்படுபவன் வீட்டி லேயே உடற்பயிற்சி செய்து தயாராகச்செல்வது போல, எடுக்கப் போகும் காட்சிக்கு நம்மைத் தயார் செய்து கொண்டு போவது, காட்சி எதிர் பார்த்ததைவிடச் சிறப்பாக அமையப் பெருமளவில் உதவியாக இருக்கும்.

படம் வெளியானபோது தமிழகத்தின் பல முக்கிய ஊர்களில் ரசிகர் களோடு அமர்ந்து தியேட்டரில் படம் பார்த்தேன். சுமார் ஐந்நூறு அடி நீளத்துக்கு, எந்தக் கதாபாத்திரத்தின் குறுக்கீடும் இல்லாமல், நான் வாதம் செய்து பேசி நடித்த அந்தக் காட்சியை மக்கள் வெகுவாக ரசித்ததோடு, 'கதாநாயகி விடுதலை' என்று நீதிபதி தீர்ப்பளித்தபோது, ரசிகர்கள் ஏதோ தன் உடன்பிறப்புக்கு விடுதலை கிடைத்தது போன்ற உற்சாகமும் குதூ கலமும் அடைந்து, ஒரு முகமாக உணர்ச்சி வசப்பட்டுக் கைதட்டினார்கள். இந்த நேரத்தில், படத்தில் ஈடுபட்ட கலைஞர்களுக்கு ஏற்படும் மகிழ்ச்சி, மன நிறைவே அலாதிதான்!

ஒரு சர்ஜனின் வாழ்க்கையை அடிப்படையாகக் கொண்டு, 'தண்டிக்கப் பட்ட நியாயங்கள்' படத்தை உருவாக்கும்போது, அரசினர் மருத்துவ மனையிலிருந்து தேர்ந்த ஒரு டாக்டரை வரவழைத்து, மூளைத் தண்டில் வரும் கட்டி, அதற்கு அறுவை சிகிச்சை செய்யும் முறை, அதற்கு

எக்ஸ்-ரே எடுக்க வேண்டிய வழிமுறைகள், சாப்பிட வேண்டிய மாத்திரை, போட வேண்டிய ஊசி, மருந்தின் பெயர் அனைத்தையும் தெளிவாகக் கேட்டறிந்து, ஒரு டாக்டரை அருகில் வைத்துக்கொண்டே காட்சிகளைப் படமாக்கினார் பாஸ்கர்.

திரையுலகின்மீது கொண்ட மோகத்தில் டைரக்டர் ஸ்ரீதரின் உதவி யாளராகச் சேர்ந்து, செட்டில் நடிகைகளின் செருப்பை எடுத்து ஓரமாகப் போடும் வேலை முதல், அனைத்துக் காரியங்களையும் முறைப்படி செய்து தொழில் கற்றவர்.

எதிர்காலம் கேள்விக்குறியாக இருந்தபோதே, திருமணம் செய்து கொண்டு, குழந்தைக்கு 'அமுல்' வாங்கித்தர அவஸ்தைப்பட்டவர். சோதனையான பல ஆண்டுகளையும் தாண்டி, நம்பிக்கையான எதிர் காலத்தை நோக்கி நடை பயின்றவர்.

ஒரு படம் வெற்றிகரமாக ஓடும்போது, உடனே அடுத்த படத்துக்குப் பூஜை போட்டு வியாபாரத்தை முடித்து லாபக் கணக்கு பார்க்கும் சினிமா உலகில், அடுத்தவன் பணத்துக்கு அலையாமல், விநியோகஸ்தர்கள் இவரை மறந்து போனாலும் பரவாயில்லை என்று கதை தயாரானபின் படத்தை ஆரம்பிக்கும் பிடிவாதம் உள்ளவர்.

நடிப்பவர்கள் வசனங்களை மாற்றிப் பேச லேசில் அனுமதிக்க மாட்டார். ஒவ்வொரு காட்சியிலும் என்ன மாதிரி உடைகள் அணிய வேண்டும் என்று தீர்மானித்து, நடிக நடிகையருக்குத் தேவையான துணி களை அவரே துணிக்கடைக்குச் சென்று வாங்குவார்.

ஓர் உடை எந்த எந்தக் காட்சிகளுக்கு அணிவிக்கப்பட வேண்டும் என்று சட்டை காலரில் காட்சி நம்பர்களைக் குறித்து விடுவார்.

கண்டிப்பானவர். ஒப்புக்கொண்ட தேதிக்குப் படப்பிடிப்புக்கு வராத கலைஞர்களுக்கு வக்கீல் நோட்டீஸ் அனுப்புவார்!

படப்பிடிப்புத் தேதியில் தன் வீட்டில் திருமணம் என்றால், திருமணத் தேதியைத்தான் தள்ளி வைப்பார். படப்பிடிப்பை ரத்து செய்யமாட்டார்.

பல தனித்தன்மைகள் கொண்ட இவரது ஒரே பலவீனம் – முயற்சித் தால் கைவிட்டு விடக்கூடிய பலவீனம் – முன்கோபம்.

சட்டதிட்டங்கள், கண்டிப்பு இவற்றின் துணைகொண்டு அனைத் தையும் சாதிப்பது சரிதான். அத்துடன் அன்பு, விட்டுக் கொடுத்தல் இவற்றின் துணைகொண்டு அவற்றைச் சாதிப்பது மேலானது. இதை மட்டும் அவர் கடைப்பிடித்தால், தான் நினைப்பதுபோலப் படமெடுத்து நிரந்தர வெற்றிகள் பல பெற முடியும்!

---

55



# ரஜினி என்னும் காந்தம்

பெங்களூரில் 1977 ஜனவரி 9ஆம் தேதி முன்னாள் முதல்வர் தேவராஜ் அர்ஸ் தலைமையில், கவிஞர் கண்ணதாசனுக்கு நடந்த பாராட்டுவிழா ஒன்றில் கலந்துகொள்ள, சிக்மகளூரில் படப்பிடிப்பி

லிருந்து நானும் அப்போதைய புதுமுகமான நண்பர் ரஜினிகாந்தும் ஒன்றாக நீண்ட தூரம் காரில் பயணம் செய்யும் வாய்ப்புக் கிடைத்தது. நிறைய விஷயங்களைப் பரிமாறிக் கொண்டோம். பொதுவாக, அதிகம் பேசுவதைவிட, மற்றவர்களிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொள்வதில் அப்போது ஆர்வம் மிக்கவராக இருந்தார் ரஜினி. ரொம்பவும் சாதுவாகவும், மெலிதான குரலில் அளவாகப் பேசுபவராகவும் காணப் பட்டார்.

பெங்களூரில் விழா மேடையை நாங்கள் சென்றடைந்தபோது இருட்டி விட்டது. விழா துவங்கி நண்பர் கமலஹாசன், மனோரமா போன்றவர்கள் வாழ்த்திவிட்டுப் போய்விட்டதாகச் சொன்னார்கள். என்னைப் பேச அழைத்தார்கள். எழுந்து மைக் அருகே சென்று கூட்டத்தை நோட்டமிட்டேன். சுமார் பதினையாயிரம் பேர் இருந்தும், ஊசி விழும் சத்தம்கூடக் கேட்கும் அளவுக்கு அமைதி காத்தனர்.

நான் மேடைப் பேச்சைத் தொழிலாகக் கொண்டவனல்ல. அழகுத் தமிழில் பேசும் ஆற்றல் மிக்கவனுமல்ல. ஆனால், எத்தனை லட்சம் பேர் இருந்தாலும் அவர்கள் முன்னே தடுமாற்றமின்றி நின்று, மனத்தில் நினைப்பதைத் தெளிவாகப் பேசும் தைரியத்தை 'நாடகத் தாய்' எனக்கு வழங்கியிருந்தாள்.

கவிஞரோடு எனக்கேற்பட்ட அனுபவங்களையும், அவர் எழுதிய வசனங்களில் சில வரிகளையும், அவர் பாடல்களைப் பிறப்பிக்கும் அழகை யும் நினைவுபடுத்தி, சுமார் பத்து நிமிடங்கள் பேசினேன். கைதட்டல் மேடையையே அதிரச் செய்தது. என் பேச்சுக்கு எழுந்த கரவொலி என்பதைவிட, நான் சொன்ன விஷயங்களுக்குக் கவிஞர் எவ்வளவு பொருத்தமானவர், எவ்வளவு உயர்ந்த மனிதர் என்ற உணர்வுகள் அனைவர் மனத்திலும் பொங்கி எழுந்ததன் பிரதிபலிப்பே அவை!

விழா முடிந்ததும் ரஜினி என்னைப் பார்த்து, ''ஏன் சார்! எங்க ஊர்ல வந்து இவ்வளவு பெரிய கூட்டத்தில், இவ்வளவு அழகாய்ப் பேசிக் கை தட்டல் வாங்கிட்டீங்களே! உங்களைப் பார்த்தா பொறாமையா இருக்கு'' என்றார்.

நான் சிரித்துக் கொண்டேன். ''ரஜினி! நீங்க மெட்ராஸ்ல அரசியல் மீட்டிங் எதுவும் கேட்டதில்லேனு நினைக்கிறேன். அண்ணா, கலைஞர் போன்றவர்களின் மேடைப் பேச்சுக்கு அந்த நாளில் நான் அடிமை. மகுடிக்குக் கட்டுப்பட்ட பாம்பு மாதிரி, கேட்பவர்களைச் சொக்க வைக்கும் ஆற்றல் அவர்களுக்கு உண்டு.

அவங்க திறமைக்கு முன்னால என்னையெல்லாம் நினைச்சே பாக்க முடியலே...! இப்போதெல்லாம் மேடைப் பேச்சு சாதாரணமாயிடுச்சு'' என்றேன்.

இந்த நிகழ்ச்சிக்குப் பிறகு சரியாக ஒன்பது மாதங்கள் உருண்டோடின. அதே ஆண்டு அக்டோபர் 16ஆம் தேதி செங்கல்பட்டில் ஒரு பள்ளி மைதானத்தில், சரேலென ரஜினியின் புகழை மேலே ஏற்றிய, 'புவனா ஒரு கேள்விக்குறி' படத்தின் வெற்றியையொட்டி ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பாராட்டு விழாவில் கலந்துகொண்டேன். விழாவில் ரஜினிகாந்த், டைரக்டர் எஸ்.பி. முத்துராமன், சுமித்ரா, ஜெயா, ஒளிப்பதிவாளர் பாபு போன்றவர்களும் கலந்துகொண்டார்கள். பள்ளி வளாகத்துக்குள் ரஜினி நுழைந்தபோதே இளைஞர்கள் பெருத்த ஆரவாரம் செய்தனர். கோடிக் கணக்கான மக்களிலிருந்து, மற்றுமொரு புதிய கலைஞன் பிறந்துவிட்ட மகிழ்ச்சி அது!

மேடையில் டைரக்டர் முத்துராமன் தலைமையேற்று முதலில் என்னைப் பேச அழைத்தார். கூட்டத்தின் உணர்ச்சியை, ஆவலைப் புரிந்துகொண்டு, ''நான் பேசுவதற்குமுன் நண்பர் ரஜினிகாந்த் பேசுவார்'' என்றேன். பலத்த கைதட்டல்களுக்கிடையே ரஜினி எழுந்து 'மைக்' அருகே வந்தார். ரசிகர்களின் அன்பு வெள்ளத்தில் திக்குமுக்காடிப் போனார். உணர்ச்சிவசப்பட்டுக் கண்கலங்க, ''எனக்கு மேடை புது அனுபவம். இந்தப் படத்தில் இப்படி ஒரு வேஷத்தில் என்னை நடிக்க வெச்சுப் பேர் வாங்கிக் கொடுத்த முத்துராமன் சாருக்கு நன்றி. உங்க எல்லோரோட அன்புக்கும் நன்றி'' எனக் கூறி உட்கார்ந்து விட்டார்.

நாவலாசிரியர் மகரிஷி எழுதிய 'புவனா ஒரு கேள்விக்குறி' நாவ்லில் நல்லவன்போல் தோற்றமுள்ள பெண் பித்தன், வில்லன்போல் தோற்றமுடைய நல்லவன் என இரண்டும் வலுவான பாத்திரங்கள். இப்படத்துக்குத் திரைக்கதை – வசனம் எழுதிக் கொண்டிருந்த நண்பர் பஞ்சு அருணாசலத்தைச் சந்தித்து, ''எப்பப் பார்த்தாலும் யோக்கியனா, சாதுவா வேஷம் போடறதைவிட, ஒரு மாற்றத்துக்கு இதுல வர்ற பெண் பித்தன் நாகராஜன் வேஷத்தை நான் ஏற்று நடிக்கிறேன்'' என்றேன். மற்றொரு பாத்திரமான சம்பத் வேடம் ரஜினிக்குத் தரப்பட்டது. எங்கள் இரண்டு பேருடைய தோற்றம், நாவலாசிரியரின் கற்பனைக்கேற்ப இயல்பாய் அமைந்ததுதான் அப்படத்தின் வெற்றிக்கு அடிப்படைக் காரணம். சம்பத் வேடமேற்ற ரஜினிக்கு நல்ல பெயர் கிடைத்தது. புகழ் ஏணியில் மளமள வென்று நாலு படி ஏறிவிட்டார். ''சார்! அநியாயமா ரஜினிகாந்துக்கு அந்த வேஷத்தை விட்டுக்கொடுத்து அவரைத் தூக்கி விட்டுட்டீங்களே'' என்று சில சினிமா உலக நண்பர்களும் ரசிகர்களும் அங்கலாய்த்தனர்.

அவர்களின் அறியாமையை நினைத்து மனத்துக்குள் சிரித்துக்கொண்டேன். ''ஒரு மனிதன் எவ்வளவு உயர வேண்டும்; எப்படி யெல்லாம் அல்லல்பட வேண்டும் என்பது இறைவனால் ஏற்கெனவே தீர்மானிக்கப்

பட்டவை. என்னதான் கடுமையாக உழைத்தாலும், நமக்கு என்ன விதிக்கப்பட்டதோ அதுதான் நடக்கும். ரஜினிகாந்துக்குப் புகழ் கூடியே ஆக வேண்டும் என்று எழுதப்பட்டிருக்கிறபோது யார் தடுத்தாலும், எவர் பொறாமைப்பட்டாலும் அவர் உயர்வைத் தடுக்க முடியாது'' என்றேன்.

அதிர்ஷ்டம் வாயிற்கதவைத் திறந்து, ஆரத்தி எடுத்து அவரை வரவேற்ற காலகட்டம் அது!

இயற்கைக்கு ஒரு வக்கிர குணமுண்டு. காய்ந்தால் நிலமெல்லாம் பாளம் பாளமாக வெடித்து, குடிக்க நீரின்றி ஜீவராசிகள் மடியும் அளவுக்குக் காயும். பெய்தாலோ, மர மட்டைகளும் வீடுகளும் அதில் வாழும் மக்களும் விலங்குகளும் வெள்ளத்தில் மூழ்கிச் சாகும் அளவுக்குப் பெய்யும். இதே வக்கிர குணம் புகழுக்கும் உண்டு.

தாகத்தில் தவிப்பவனை வெள்ளத்தில் தூக்கிப் போட்டுக் கொல்வதைப் போல, அதிகப்படியான புகழும் பணமும் மனிதனின் நிம்மதியைக் குலைக்க வல்லவை. நண்பர் ரஜினி மட்டும் விதிவிலக்காய் இருக்க முடியவில்லை. சிவாஜியின் 200வது படவிழா மதுரையில் நடைபெற்றது. ரஜினி எங்களோடு மதுரை வந்தபோது அவரது உடல் நலமும் மன நலமும் குன்றியது.

விழா முடிந்ததும் சென்னை வந்து, மருத்துவமனையில் ஓய்வெடுக்க நேர்ந்தது. சில மாதங்கள் தனிமையில் ஓய்வெடுத்தால் போதும் என்றார்கள் டாக்டர்கள். உலக பந்தங்களிலிருந்து விடுபட்டு, இறுதி ஊர்வலத்தில் செல்லும்போதுகூடப் பாதி வழியில் நிறுத்தி, 'சார் ஒரு டப்பிங் குரல் கொடுத்துட்டுப் போயிடுங்க' என்று பிணத்தைக்கூட எழுப்பவல்ல பெரியவர்கள் நிறைந்த உலகமாயிற்றே இது!

முழுசாக ஓய்வெடுக்க எங்கே அவரை விட்டார்கள்?

புகழாலும் பொருளாலும் அப்படி ஓர் எல்லையைத் தொட்டபோது, வாழ்க்கை மீதே வெறுப்பு ஏற்பட்டு ரஜினிக்குத் துறவறத்தின் மீது ஈர்ப்பு ஏற்பட்டது.

இந்தச் சிக்கலுக்கெல்லாம் முடிவு காண்கின்ற வகையில், அமைதியும் அடக்கமும் தன்னம்பிக்கையும் உண்மையான அன்பும் கொண்ட துணைவியாக லதா அவரது வாழ்க்கையில் பங்கேற்றார். அதன்பின் நண்பர் ரஜினியின் வாழ்க்கையில் நிம்மதியும் தெளிவும் ஏற்பட்டுச் சுவை கூடியது.

பின்னர், தனிமையை நேசித்தார், தத்துவார்த்த புத்தகங்களைப் படிக்க ஆரம்பித்தார். தன்னைச் சுற்றி உள்ளவர்களின் உண்மைத் தோற்றத்தைக் கண்டறிந்தார். அடுத்தவர் பற்றிப் புறம் பேசாத உயர் பண்புகளைக்

கடைப்பிடித்தார். உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாமல் மனத்தில் பட்டதை மறைக்காமல் எடுத்துச் சொன்னார்.

1982இல் 'அக்னி சாட்சி' படத்துக்காக ரஜினி வீட்டில் ஒரு காட்சியைப் படமாக்கினார் இயக்குநர் கே.பி. அமைதியான சூழலில், பெரும்புள்ளிகள் குடியிருக்கும் பகுதியில் அழகாக, விசாலமாக இருந்தது அவர் வீடு.

படப்பிடிப்பு முடிந்ததும், என்னைத் தனியே அவர் ரூமுக்கு அழைத்துச் சென்றார். ரஜினியின் வளர்ச்சி, வாழ்வு பார்த்துப் பூரித்துப் போயிருந்தேன். இந்தப் புகழுக்கு இந்த மனிதன் எவ்வளவு பெரிய விலை கொடுத்திருக்கிறான் என எண்ணி மலைத்தேன்!

''ரஜினி! இப்படி உங்களைப் பார்க்கறப்போ எனக்கு ரொம்ப சந்தோஷமாக இருக்கு. உங்க வளர்ச்சியைப் பார்த்துப் பெத்தவங்க பூரிச்சுப் போயிருப்பாங்க இல்லையா?''

''என்ன வளர்ச்சியடைஞ்சு, எவ்வளவு பேர் வாங்கி என்ன சார் பிரயோஜனம்?''

''ஏன்! இப்ப உங்களுக்கு என்ன குறை?''

''சின்ன வயசில நான் எவ்வளவு முரடனா இருந்தாலும், எவ்வளவு குறும்பு பண்ணினாலும் என்னைத் தட்டிக் கொடுத்துப் பெருமைப் பட்டவர் எங்க அப்பாதான். நான் அப்பாவோட செல்லம்...!

''ஆடம்பரமான இந்த வீட்டை வாங்கினதும், எங்கப்பா ஞாபகம் வந்திடுச்சு. 'உங்க புள்ளே இப்போ எவ்வளவு பாப்புலர் ஆயிட்டான். எவ்வளவு அழகா வீடு வாங்கியிருக்கான் பாருங்கப்பா'ன்னு அவரைக் கூட்டி வந்து காட்டறத்துக்காகப் பெங்களூர் பறந்தேன்.''

அடுத்து சில நிமிடங்கள் ரஜினி மௌனமாக இருந்தார். ''ஏன் ரஜினி! அப்பாவுக்கு என்ன ஆச்சு?''

''நான் அவரைப் போய்ப் பார்க்கறதுக்குக் கொஞ்ச நாள் முன்னாடி தான் அவர் தன்னோட கண் பார்வையை இழந்திட்டார்...''

கண்கலங்க, துக்கம் தொண்டையை அடைக்க அவர் இதைச் சொன்ன போது, சில நொடிகள் அதிர்ந்து விட்டேன்..

நினைப்பதெல்லாம் நடந்து, நிறைவாக வாழ்ந்து விட்டவர் எவருமே இல்லையோ?

இன்று இமயம்போல் வளர்ந்து பல கோடிகளைப் பார்த்து, கோடிக்கணக்கான ரசிகர்களின் இதயத்திலே குடியிருந்த போதிலும் ரஜினியின் எளிமையும் மனத்தில் பட்டதை மறைக்காமல் சொல்லும் குணமும் எனக்கு ரொம்பவும் பிடித்தவை.

---

56



திருப்பூர் மணியின் – 'வண்டிச்சக்கரம்'

## ஹீரோ ஆனபின்னும்...

இந்தக் கட்டுரைத் தொடரை 'ஜூனியர் விகடன்' – இதழில் எழுதிய போது திரையுலகம் சம்பந்தப்பட்ட பெரியவர்கள் சிலரின் பெயரை நான் தவிர்த்து எழுதி வந்தேன்.

வாசகர்கள் எனக்கு எழுதிய கடிதங்களில், 'உங்கள் மனத்தை நோகச் செய்து, பல பேர் முன்நிலையில் அவமானப்படுத்தியவர்களின் பெயரைப் பகிரங்கமாகக் குறிப்பிட வேண்டாமா?' என்று தங்கள் உணர்ச்சிகளை வெளிப்படுத்தியிருந்தனர்.

நான் பட்ட வேதனைகளை, கடந்து வந்த சோதனைகளை, சந்தித்த மனப்போராட்டங்களை, மற்றவர்களுடன் எனக்கேற்பட்ட துயரம் மற்றும் இனிய அனுபவங்களை, வாசகர்களுடன் பகிர்ந்து கொள்வதுதான் எனது நோக்கம்.

வாழ்க்கைப் பாதையில், நேர்வழியில் முன்னேற முயற்சிக்கும் எந்த இளைஞனுக்கும் ஏற்படும் அனுபவங்கள்தான் இவை.

அந்தப் பெரியவர்கள் திட்டமிட்டு என்னை வேதனைக்கு ஆளாக்கினார்கள் என்று நான் நினைக்கவில்லை. அன்று அவர்களுக்கிருந்த புகழும் செல்வாக்கும் பெற்றுத்தந்த அளவற்ற தன்னம்பிக்கை காரணமாகவும், 'தான்' என்ற உணர்வு மேலோங்கி நின்றதாலும் மற்றவர்களை மட்டம் தட்டுவதில் அலாதி மகிழ்வைக் கண்டனர்.

நொடிப் பொழுதில் உச்சாணிக் கொம்புக்குப்போய், அதே வேகத்தில் மண்ணைக் கவ்வும் ஆபத்துள்ள இத்துறையில், இந்தச் சுகபோக வாழ்வு என்றும் நிரந்தரம் என்று எண்ணி, ஏமாந்து, இன்று தாங்கள் செய்த தவறுக்காக அவர்களே வருந்தும் வேளையில், வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதுபோல் நாமும் அவர்களை அவமானப்படுத்தக்கூடாது.

அவர்கள் தடையாக இருந்ததால்தான் நாம் மேலும் உத்வேகம் பெற்று உயர முடிந்தது என்றுதான் நான் எடுத்துக் கொள்கிறேன். தற்காலிகமாக, எவரும் இடையூறு செய்யலாமேயொழிய, நிரந்தரமாக நம் வளர்ச்சிக்குத் தடையாக இருக்கவே முடியாது.

இந்தக் கட்டுரையிலும் ஒருவருடைய பெயரைக் குறிப்பிடாமல் எழுத நேர்ந்திருக்கிறது. பொறுத்துக் கொள்ளுங்கள்!

1977இல் பிரபலமாகாத ஒரு ஹீரோவுடன் ஒரு படத்தில் நடித்தேன். கதையில் இரண்டு கதாபாத்திரங்களுமே முக்கியமானவையாக இருந்தன. எனக்குப் பிடித்த வேடத்தை ஏற்று நான் நடித்தேன். வியாபார ரீதியில் நல்ல வசூலையும் பெயரையும் பெற்றுத் தந்தது அந்தப் படம்.

இரண்டாவது முறையாக அதே படம் சென்னை தியேட்டர்களில் வெளியிடப்பட்டபோது, எந்தத் தியேட்டர் விளம்பரங்களிலும் என் உருவத்தைக் காணோம். போஸ்டர்களிலும் என் உருவம் தவிர்க்கப் பட்டிருந்தது. அதற்குள் அந்த ஹீரோ பிரபலமானதால், என் படம் விளம்பரத்தில் அவசியமில்லை என்று முடிவு கட்டி விட்டார்கள்

போலும். வியாபாரத்தை மையமாகக் கொண்ட தொழில்தானே இது! யார் தலையை விளம்பரம் செய்தால் கூட்டம் வருமோ அதைச் செய்வதைக் குறை சொல்ல முடியாது.

1983இல் அதன் பிறகு வேறொரு டைரக்டர் என் வீடு தேடி வந்தார். ''சார், நீங்க நடிச்ச 'பட்டிக்காட்டு ராஜா' படத்தை எங்கம்மா மடியிலே உட்கார்ந்து, டெண்ட் கொட்டகையில் பார்த்தவன் நான். உங்களை வெச்சு ஒரு படம் டைரக்ட் பண்ணனும்ங்கறது என்னோட ரொம்ப நாளைய லட்சியம்'' என்று புகழ்ந்து கதையைச் சொன்னார். கதைக் கரு எனது கதாபாத்திரத்தைச் சுற்றி வருவதுபோல அமைக்கப்பட்டிருந்தது.

''இந்தப் படத்துல இன்னொரு ஹீரோ நடிக்கறார் சார்! அவரோடது ரொம்பவும் சின்ன வேஷம்! நாலு ஸீன்கூட வராது. உங்களுக்கு ஒண்ணும் ஆட்சேபணை இல்லியே?'' என்று கேட்டார்.

''என்னோட ரோல் வலுவா இருக்கணும்ங்கறது முக்கியம், மத்ததெல்லாம் உங்க விருப்பப்படியே செய்யுங்கள்'' என்றேன். படத்துக்காக அறுபது நாள்கள் காஷீட் கொடுத்தேன். காலை 9 மணி முதல் இரவு 9 மணிவரை படப்பிடிப்பு...! அல்லது மாலை 6 மணி முதல் விடியற்காலை 6 மணிவரை படப்பிடிப்பு.

பெரும்பாலும் இரவுநேரப் படிப்பிடிப்புகளே இருந்தன. தினமும் விடியற்காலை கிழக்கு வெளுத்து, காகங்கள் கரைந்துகோழி கூவும் போதுதான் படப்பிடிப்பு முடியும், வீதியெங்கும் பெண்கள் வாசலில் சாணம் தெளித்துக் கோலம் போடத் துவங்கி விடுவார்கள். பால்காரர்கள் வைக்கோல் கன்றுக்குட்டி, மாடு சகிதமாக வாடிக்கையாளர்களின் வீடு நோக்கி வந்து கொண்டிருப்பார்கள்.

ஷூட்டிங் முடிந்து வீடு வந்ததும், காலைக் கடன்களை முடித்துக் குளித்துவிட்டு, சுடச்சுட இட்லி சாப்பிட்ட கையோடு முதல் கட்டத் தூக்கத்தைத் துவ்ங்குவேன். 12 மணிக்கு மனைவி எழுப்பிப் பகல் உணவைப் பரிமாறுவாள். மீண்டும் 2 மணி முதல் 5 மணி வரை உறக்கம்.

மாலை 6 மணிக்குப் படப்பிடிப்பு தளத்தில் நான் ஒருவன் மட்டுமே ஃப்ரெஷ்ஷாக இருப்பேன். விடியும்வரை கொட்டாவிகூட விடமாட்டேன்.

இப்படி எத்தனையோ இரவுகள்...! வேலைக்கு வந்து விட்டால் ''எப்போ என்னை அனுப்புவீங்க?'' என்று டைரக்டரிடம் கேட்கவே மாட்டேன்.

''என் வேலை எப்ப முடியும், எப்ப என்னை வீட்டுக்கு அனுப்பு வீங்க?'' என்று படப்பிடிப்புக்கு வந்தவுடனே கேட்டு நச்சரித்த பல பேரை, இந்தத் தொழில் சீக்கிரமே நிரந்தரமாக வீட்டுக்கு அனுப்பி

விட்டதை நேரில் கண்டவன் நான். காத்திருப்பதற்கும் சேர்த்துத்தான் காசு தருகிறார்கள். பொறுமையாக இருப்பதுதான் நமது கடமை.

இந்தப் படம் தயாராகும்போது, இன்னொரு ஹீரோவாக என்னோடு நடித்தவரின் முந்தைய படம், எதிர்பாராத விதமாக வசூலைக் குவிக்கவே, டைரக்டரின் போக்கில் மாற்றம் ஏற்பட்டது, எனக்குத் தெரியாமல் திரைக்கதையை மாற்றி, நாலு ஸீன் வரவேண்டிய அந்த ஹீரோ நாற்பது ஸீன்கள் வருவதுபோல மாற்றினார்!

விளம்பரத்தில் ஆரம்பத்தில் எனக்குக் கொடுத்த முக்கியத்துவம் குறைவது தெரிந்தது. கொஞ்சம் நெருக்கமானவர்களை விசாரித்ததில் எனது காட்சிகள் பல வெட்டப்பட்டு அந்த ஹீரோ வேடம் தூக்கலாக உருவாகியிருப்பது தெரிந்தது.

பட வெளியீட்டையொட்டிப் போடப்பட்ட போஸ்டர் டிஸைனில் என் தலை, துணை நடிகர்கள் உருவங்களுக்கிடையில் பொருத்தப்படுவதாய் லேசாகச் செய்தி எட்டியது.

தயாரிப்பு நிர்வாகியை அழைத்தேன்.

''எட்டு ஆண்டுகள், போஸ்டரின் கீழ்ப்பகுதியில் வரும் சீட்டுக்கட்டு சைஸில்தான் என் உருவத்தை அச்சிட்டு வெளியிட்டார்கள்! எவ்வளவோ சிரமப்பட்டு முன்னேறி, அதிலிருந்து விடுதலை பெற்றேன். திரும்பவும் அதே 'சீட்டுக் கட்டுக்குள்' என்னைச் சிறை வைத்து அவமானப்படுத்தாதீர்கள்.

''உங்கள் விருப்பப்படியே, அந்த ஹீரோவின் தலையைப் போஸ்டர் முழுக்க நவரச **பா**வத்தோடு வெளியிட்டுக் கொள்ளுங்கள். தயவு செய்து என் உருவத்தைப் போடவே வேண்டாம். இது என் படமில்லை என்று எப்போதோ முடிவு கட்டி விட்டேன்'' என்றேன்.

கூச்சமே படவில்லை அந்த இயக்குநர். இதுதான் தருணம் என்று காத்திருந்த அவர், விளம்பரங்களில் தன் ஆசை நாயகனைப் பல்வேறு கோணங்களில் போட்டு, போஸ்டர் அடித்து வெளியிட்டார்!

இதற்காக மற்ற ஹீரோக்களுடன் நடிக்கவே கூடாது, எச்சரிக்கையாக இருக்க வேண்டும் என்று பொருளல்ல.

'ஷோலே' இந்திப் படத்தில் அமிதாப், சஞ்சீவ், தர்மேந்திராவுக்கு அளிக்கப்பட்டதுபோல தராசில் நிறுத்து, ஒரே சீரான வேடங்களைப் பங்கிட்டுத்தர இங்கு யார் இருக்கிறார்கள்?

அப்படியே ஒரு படத்தில் சமமாக வேடம் பங்கிட்டுத் தரப்பட்டுப் படம் வெளியே வந்தால், நம் ஹீரோவின் ரசிகமணிகள் தேவையற்ற

கூச்சல் போட்டு 'அந்த நடிகர் எப்படி எங்க ஹீரோவை வாடா, போடான்னு பேசலாம்?' என்று பாசப் புரட்சி செய்து நரசிம்ம அவதாரம் எடுத்து, தியேட்டர் சோபாக்களிலுள்ள பஞ்சைப் பிய்த்துப் பறக்க விடுகிறார்கள். 'விடுதலை' பட வெளியீட்டின் போதுகூட இப்படி நிகழ்ந்தது.

இதையெல்லாம் கடந்து அந்தப் படம் ஓடிவிட்டது என்று வைத்துக் கொள்வோம். அடுத்த படத்தில் அதே ஹீரோவுடன் நடிக்க நேரும்போது, தன் செல்வாக்கைப் பயன்படுத்தித் தன் வேடத்துக்கு அதிக முக்கியத்துவம் இருக்கும்படி பார்த்துக் கொள்வார்.

அவரை வைத்துத்தான் வியாபாரமே எனும்போது, தயாரிப்பாளரும் டைரக்டரும் அவர் பாத்திரத்தை உயர்த்தி எழுதுவதில் நியாயமும் இருக்கிறது.

இந்த உண்மை புரியாமல் தயாரிப்பாளரிடம் போய், ''என்ன சார்! இந்தப் படத்தில் என் வேஷத்தைக் குறைச்சிட்டீங்களே?'' என்று கேட்டால், முதலில் மழுப்பி விடுவார். ரொம்பவும் நச்சரித்தால், ''என்னங்க இது! உங்களோட பெரிய வம்பாப் போச்சே... அவர்தான் இந்தப் படத்தில் ஹீரோ..., அவரை நம்பித்தான் இவ்வளவு முதல் போட்டுப் படம் எடுக்கறோம். அவரு தகராறு பண்ணினா, எத்தனை லட்சம் எங்களுக்கு நஷ்டமாகும்னு உங்களுக்குத் தெரியுமா?'' என்று பச்சையாகச் சொல்லிவிடுவார்.

அடுத்து, டைட்டிலில் யார் பெயரை முதலில் போடுவது என்ற பிரச்சினை எழுகிறது. அவர் சீனியர் நடிகர். இவரோ, படத்தின் ஹீரோ. சண்டை முற்றினால் டைட்டிலில் இருவர் பெயருமே வராது. நியாயம் என்று பார்த்தால், பிரதான வேடமேற்கும் ஹீரோ பெயர்தான் முதலில் இடம் பெறவேண்டும். எனவே, குணச்சித்திரம் இரண்டாம் இடத்துக்குத் தள்ளப்படுகிறது.

படப்பிடிப்பைக் காண ஒரு கூட்டம் ஸ்டூடியோவுக்குள் வருகிறது. குழந்தை குட்டிகளுடன் வாயைப் பிளந்துகொண்டு நுழையும் கோஷ்டி, ஹீரோவைக் கண்டதும் ஓடிச்சென்று வியர்வைக் கையைக் குலுக்கி, அசட்டுச் சிரிப்புச் சிரித்து, முண்டியடித்து நெருங்கி நின்று, ஹீரோ தோளில் அதிகப்பிரசங்கித் தனமாய்க் கைபோட்டு அணைத்தவாறு புகைப் படம் எடுத்துக் கொள்கிறது.

ஓய்ந்த நேரத்தில் பக்கவாட்டில் திரும்பிப் பார்த்து, ''அடடே! அண்ணாச்சி இங்க இருக்காங்க. இவுக கூடவும் ஒரு படம் எடுத்துக்குவோம்'' என்று வந்து 'ஐயோ, பாவம்' உணர்வோடு படம் எடுத்துக்

கொள்கிறார்கள். இந்தக் கழிவிரக்கத்துக்கு ஆளாவது கொடுமையான விஷயம்.

அடுத்துக் கொஞ்ச நாள், இதே ஜோடி நடித்து மூன்று நான்கு படங்கள் வெற்றி பெற்றபின், ஐந்தாவது படம் படுதோல்வியைத் தழுவுகிறது. உடனே, 'இந்தக் 'காம்பினேஷன்' எடுபடவில்லை. அவரை உங்க படத்துல பயன்படுத்தாதீங்க' என்று விநியோகஸ்தர்களும் நண்பர்களும் எச்சரிக்கிறார்கள்.

ஆக, பிரபல ஹீரோவுடன் இணைந்து நடிக்கும் வாய்ப்பு நழுவி விட்டது. இனி அடுத்த கட்ட நடிகருடன் நடிக்க வேண்டியதுதான்! கொஞ்ச நாள் கழித்து, இன்னும் கீழே இறங்கி, புதுமுகம் ஒன்றுடனும் இரண்டாம் பட்சமாக நடிக்கும் நிலைக்குத் தள்ளப்படுவோம்!

''இன்று உன்னுடையது
நாளை அடுத்தவனுடையதாகிறது
அடுத்த நாள் பிறிதொருவனுடையதாகிறது...!

– கீதை

---



நடிப்புக்கு இலக்கணமும் அகராதியும் சிவாஜி என்றால், ஒரு நடிகனுக்கு இலக்கணமும் அகராதியும் சிவகுமார் என்று சொல்வதிலே இரு கருத்துக்களுக்கு இடமிருக்க முடியாது.

1-1-05, வெளியீட்டு விழாவில், கே. பாலசந்தர்

57



'சபாஷ் மீனா' ஓவியம் 1958

## அந்த மகா கலைஞனுடன்...

**எ**ன்னை முழுவதுமாக ஆட்கொண்ட, நான் நேசித்த தேவகுமாரன் சிவாஜிதான்! அப்போது எங்கள் வீட்டில் சினிமா பார்க்க அனுமதிக்க மாட்டார்கள். வீட்டுக்குத் தெரியாமல் கோவையை அடுத்துள்ள சூலூரில் ஷண்முக தேவி தியேட்டரில் (அண்ணா, கலைஞர், எம்.ஜி.ஆர். என மூன்று முதல்வர்களிடமும் செயலாளராக இருந்த கருப்பண்ணன்

ஐ.ஏ.எஸ். மாமனாருக்குச் சொந்தமானது இந்தத் தியேட்டர். ஷண்முக தேவி எனது கிளாஸ் மேட்) மனோகரா உள்ளிட்ட சிவாஜியின் காவியங்களைப் பார்ப்பேன். படம் பார்த்துவிட்டு, சக மாணவர்களுடன் அங்குள்ள சந்தைக்குப் போவேன். அங்கே பராசக்தி – கதை வசனம் – மு. கருணாநிதி, சேரன் செங்குட்டுவன், சாக்ரடீஸ், அனார்கலி ஓரங்க நாடகம் என்று கதை வசன புத்தகங்கள் விற்கும். அதன் விலை 25 பைசாதான். என்னிடம் பைசா இருக்காது, என் நண்பர்கள் வாங்குவார்கள். அதை ஒரே ஒரு நாள் இரவல் வாங்கிக் கொண்டு, அங்கிருந்து மூன்று கிலோ மீட்டர் தூரத்தில் எங்கள் ஊர் போய்ச் சேரும் வரையும், பிறகு திரும்பி வரும்போதும், நடந்து செல்லும் போதே முழு வசனத்தையும் படித்து மனப்பாடம் செய்து விடுவேன். மறுநாள் அந்தப் புத்தகத்தைத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும்.

அந்தச் சமயத்தில் கம்பீரமாக வசனம் பேசுகிறவன்தான் ஆண்மை யுள்ளவன் என்கிற இமேஜ். அதுவும் எச்சில் விழுங்காமல் பேசுவது சாதனை. இது மஞ்சுவிரட்டு காளை பிடிப்பதற்குச் சமம். சிவாஜியின் அத்தனை வசனங்களையும் ஒரு வார்த்தை பிசகாமல் பேசுவேன். அப்போது எனக்குப் பத்து வயது.

அந்தக் காலக் கட்டத்தில் ஒரு பெரும் சர்ச்சை எழும். 'கருணாநிதி எழுதிய வசனம் உசத்தியா? சிவாஜி பேசிய அழகு உசத்தியா?' என்று இளவட்டங்களுக்குள் பட்டிமன்றமே நடக்கும். 'நல்லா எழுதிக் கொடுத்தா தானே பேச முடியும்' என்று ஒரு கோஷ்டியும், 'என்னதான் எழுதினாலும் அதைப் பேசுகிற முறையில் பேசினால்தானே எடுபடும்!' என்று மற்றொரு கோஷ்டியும் காரசாரமாக விவாதிக்கும். முடிவில் இரண்டுமே உசத்திதான் என்று தீர்ப்பாகும்!

அப்போது, ஒரு முகம் பார்க்கும் கண்ணாடி பிரபலம். முன் பக்கம் கண்ணாடியும் பின் பக்கம் சிவாஜியும், கலைஞரும் ஒருவர் தோள் மீது ஒருவர் கை போட்டுச் சிரித்தபடி நிற்பார்கள். நேர் வகிடு எடுத்த கலைஞர் – புலி நக டாலருடன் செயின் போட்ட சிவாஜி. இந்தக் கண்ணாடியைச் சிறுகச் சிறுக பைசா சேர்த்து வாங்கி, கண்ணாடியைக் கழற்றித் தூரப் போட்டுவிட்டுப் படத்தைமட்டும் என் வீட்டு சுவற்றில் ஒட்டி வைத்துக் கொண்டேன். ஒரு எட்டு வருஷம் இந்தப் படம் என் வீட்டுச் சுவரை மட்டும் அல்ல, கண்களை விட்டும் அகலவில்லை.

முதன் முதலாக எனக்குச் சிவாஜியை நேரில் பார்க்கும் வாய்ப்பு 1958இல் கிடைத்தது. வேட்டைக்காரன் புதூர் ஜமீன் முத்துமாணிக்கம் தம்பி கல்யாணத்துக்கு வந்திருந்தார் சிவாஜி. எனது மாமா ஆறுமுகக் கவுண்டர் ''டேய்... சிவாஜி படம் வரைஞ்சு வை. அவரை நேர்ல

பார்க்கலாம்'' என்றார். ஒரே பேப்பரில் நாலு சிவாஜி – விதவிதமாக வரைந்து எடுத்துக் கொண்டு மாமாவுடன் கிளம்பினேன்.

நாங்கள் போவதற்குள் சிவாஜி கிளம்பிப் போய்விட்டார். வாழ்க்கையில் ஒரு அரிய சந்தர்ப்பம் கை நழுவிப் போன உணர்வு. ஆனால் அந்த ஏமாற்ற உணர்வு சிறிது நேரம்தான் நீடித்தது. சிவாஜிக்கு மிக நெருக்கமான இன்னொருவர் ஒடையகுளம் ஜமீன். இவர் சென்னை செல்வதாகச் சொன்னார். ரயிலில் 'அன் ரிசர்வ்டு'ல நானும் மாமாவும் அவரது மகன் ரத்தினமும் சென்னை வந்தோம். உட்லண்ட்ஸ் ஓட்டலில் ரூம் போட்டோம். மறுநாளே சிவாஜியைப் பார்க்கும் வாய்ப்பு கிடைத்தது.

சென்னை ராயப்பேட்டையில் தாண்டவராய முதலி தெரு. இந்தத் தெருவில்தான் சகஸ்ரநாமம் எம்.என்.ராஜம் எல்லோருடைய வீடும். அதில் உள்ள குறுக்குத் தெரு, ஷண்முக முதலி தெரு. இந்த வீட்டைப் பற்றி ஒரு உருக்கமான விஷயம், கலைவாணர் என்.எஸ். கிருஷ்ணனுக்குச் சொந்தமான வீடு அது. கலையுலகில் கொடி கட்டிப் பறந்த என்.எஸ்.கே. பின்னாளில் பெரும் கடனாளியாக, இந்த வீட்டை விற்க வேண்டிய நெருக்கடி நிலையில் இருந்தார். விலை மதிப்பு மிக்க அந்த வீட்டை ஒரு வடநாட்டு சேட்டு அறுபதாயிரம் ரூபாய்க்குக் கேட்டார். ஆனால் வறுமையிலும் செம்மை என்று வாழ்ந்த கலைவாணர், சேட்டுக்கு வீட்டை விற்க மறுத்து விட்டார். ''என் வீட்டில் எவனோ ஒரு வடநாட்டுக்காரன் இருப்பதைவிட, நம்ம ஆளு, என் ஜாதிக்காரப் பையன் (நடிகர் ஜாதி) அரிதாரம் பூசற ஒருத்தன் இருந்தாத்தான் எனக்குப் பெருமை'' என்று சிவாஜியிடம் நாற்பதாயிரம் ரூபாய்க்கு அந்த வீட்டைக் கொடுத்தார் என்ற செய்தி பின்னாளில் நான் தெரிந்துகொண்டேன்.

இந்த வீட்டில் வைத்துத்தான் சிவாஜியை முதன் முதலாகப் பார்த்தேன். குளித்துவிட்டு வெறும் உள்ளாடையுடன் தலையை டவலால் துவட்டியபடி வந்தார். சிவாஜியைப் பார்த்த அந்த நொடிகளில் அப்படியே உணர்ச்சிக் குவியலாகிப் போனேன்.

அந்த லேசர் கண்கள், சின்ன உதடு, நீண்ட மூக்கு பார்த்துக்கொண்டே இருக்கலாம். சிவாஜி என்னைவிட கலரில் ஒரு புள்ளி கம்மி என்பதில் எனக்கு ஒரு புளகாங்கிதம். சிவாஜியையும் என்னையும் ஒரு முறை மாறி மாறிப் பார்த்து, நிற வித்தியாசத்தை உறுதிப்படுத்திக் கொண்டேன். நான் வரைந்து கொண்டுவந்திருந்த ஓவியத்தைக் காட்டினேன். கையெழுத்துப் போட்டார். ''இப்படி தெறமையை வச்சுக்கிட்டுச் சும்மா இருக்கியா? மோகன் ஆர்ட்ஸ்ல சேர்ந்துக்க'' என்று சிபாரிசு செய்தார். ஒரு வருடம் மோகன் ஆர்ட்ஸில் விளம்பர பேனர்கள் வரைகிற வேலை. இந்த மோகன் அவர்கள்தான் பாசமலர் பட்டத்தை, எடுத்தவர். இவரது தந்தை பிராட்வே பிரபாத் தியேட்டர்களில் மேனேஜர். அப்போது மோகனிடம் மட்டும்தான்

கார் இருக்கும். அவர் சிவாஜியைப் படப்பிடிப்புத் தளத்துக்குக் கொண்டு வந்து இறக்கிவிடுவார்.

மோகன் ஆர்ட்ஸில் ஓராண்டு வேலை செய்துவிட்டு ஓவியக் கல்லூரியில் சேர்ந்தேன். லீவில் கோயமுத்தூர் சென்றேன். கோவைக்கு மேற்கே பத்து மைல் தூரத்திலுள்ள மாதம்பட்டியில் ('தாய்நாடு' படத் தயாரிப்பாளர் சிவகுமாரின் சொந்த ஊர்) 'கல்யாணியின் கணவன்' படப் பிடிப்பு நடப்பதாகக் கேள்விப்பட்டு, சிவாஜியைப் பார்க்கச் சென்றேன். கோவை பட்சி ராஜா ஸ்டுடியோ அதிபர் ஸ்ரீராமுலு நாயுடு தயாரித்து இயக்கிய படம் அது. வேட்டைச்சாமி கோயில் குதிரைகளுக்கு நடுவே ஷூட்டிங். கட்டுக்கடங்காத கூட்டம். முதலில் சிவாஜியைப் பார்க்க விடாமல் மலபார் போலிஸ் என்னைத் தடுத்தது. ஆனாலும் எனது உடையும் தோற்றமும் அந்தக் கூட்டத்துப் பையன் இல்லை என்று தனித்துக் காட்டியது. ரவுண்ட் நெக் சிவப்பு டீ ஷர்ட், வெள்ளை பேண்ட் எனப் பளிச்சென்றிருந்த ஒரே காரணம் மட்டுமே சிவாஜியை அங்கே சந்திக்கும் வாய்ப்பை எனக்குப் பெற்றுத் தந்தது. டைரக்டர் ஸ்ரீராமுலு நாயுடு ''தொந்தரவு பண்ணாம பார்த்துட்டு உடனே போயிடனும்'' என்ற நிபந்தனையுடன் அனுமதித்தார். இது சிவாஜியுடனான எனது இரண்டாவது சந்திப்பு.

மூன்றாவது முறையாக நான் சிவாஜியை சந்தித்தது 1966இல் ஒரு புதுமுக நடிகனாக, ஜெமினி நிறுவனம் தயாரித்த 'மோட்டார் சுந்தரம் பிள்ளை' படப்பிடிப்பில்; எஸ்.எஸ்.வாசன் இயக்குநர். சிவாஜிக்கு நிறைய குழந்தைகள். மூன்று பெண்கள். அதில் மூத்த பெண் காஞ்சனாவின் கணவனாக நடித்தேன். மூன்றாவது பெண் ஜெயலலிதா, அவருக்கு ஜோடி ரவிச்சந்திரன்.

அந்த ஷூட்டிங் ஸ்பாட்டில் சிவாஜியைப் பார்க்கும்போது அசந்து விட்டேன். கால் மேல் கால் போட்டு அவர் அமர்ந்து பேசிய பாவனை! அடடா... ஒரு மனிதன் பிறக்கும்போதே ஸ்டைலாகப் பிறக்க முடியுமா? தாயின் வயிற்றிலிருந்து ஸ்டைலாகவே குதித்து வந்திருப்பாரோ என்று எண்ணத் தோன்றியது.

என்னை சிவாஜியிடம் 'ஸ்போர்ட்ஸ்' பத்திரிகையின் பிரதான நிருபர் ராமச்சந்திரன் அறிமுகம் செய்து வைத்தார்.

''என்னை உங்களுக்கு ஞாபகம் இருக்கா....? நான்தான் சிவகுமார். ஒடையகுளம் கண்ணு மச்சானுடன், உங்களை ராயப்பேட்டை வீட்டுல சந்திச்சிருக்கேன்'' என்றேன்.

''ஓ.. அப்படியா! ஐயாம் ஸாரிப்பா. சரியா ஞாபகமில்ல. எனக்கு புவர் மெமரி'' என்றார். ஒரு மாதிரியாகிவிட்டேன்.

ஒரு நாள் கோயமுத்தூர் ரயில்வே ஸ்டேஷனில் நின்றுகொண்டிருந் தேன். ரயில் வந்துவிட்டது. அப்போது ஒருவர் என்னிடம் வந்தார். ''சார்...

எப்படி இருக்கீங்க..? என்னைத் தெரியுதா?'' என்றார். நானும் சிரித்துச் சமாளித்து 'யார் இவர்...? எங்கே பார்த்தோம்?' என நீண்ட நேரம் நினைவுக்குக் கொண்டுவர முடியாமல் தவித்தேன். மீண்டும் அவர்... ''நல்லா ஞாபகப்படுத்திப் பாருங்க..!'' என்றவர், ''தெரியலியா?'' என்றார்.

''ப்ளீஸ் எனக்குச் சரியா ஞாபகம் வரல. யார்னு சொல்லுங்க சார்'' என்றேன்.

''சார் இருபது வருஷத்துக்கு முன்பு என்.கே.டி. கலா மண்டபத்துல நீங்க நடித்த 'அப்பாவி' நாடகம் பார்த்துட்டு உங்களுக்குக் கை கொடுத்தேனே, மறந்துட்டீங்களா?'' என்றார். எனக்குக் கோபமோ கோபம். 'போலவ் போய்யா...' என்று வந்து விட்டேன்.

இந்தச் சம்பவத்தை வைத்துப் பின்னோக்கி யோசித்துப் பார்த்தேன். ச்சே.! சிவாஜி எவ்வளவு பெரிய நடிகர். ஒரு நாளைக்கு எத்தனை ஆயிரம் பேரைச் சந்திக்கிறார். அவரது கோடிக்கணக்கான ரசிகர்களில் நானும் ஒருத்தன். அவரை ஒரு முறை சந்தித்துவிட்டு 'ஞாபகமிருக்கா?' என்று கேட்டோமே, அது எவ்வளவு பெரிய முட்டாள்தனம் என்று உணர்ந்தேன்.

சிவாஜி மாதிரி ஞாபக சக்தி மிக்க ஒரு கலைஞனைக் காண முடியாது. காட்சி – வசனம் தவிர, தேவையற்ற எதையுமே அவர் ஞாபகம் வைத்துக் கொள்வதில்லை. அதனால்தான் கடைசிவரை அந்த கம்பீரம் குறையாமல் சினிமாவில் சாதனை நாயகனாக வலம்வர முடிந்திருக்கிறது.

எனக்கு சிவாஜியுடன் அதிகம் நெருக்கம் ஏற்பட்டது, 1966இல். 'சரஸ்வதி சபதம்' படத்தின் மூலம் அருட்செல்வர் ஏ.பி. நாகராஜன் அவர்களால் இந்த வாய்ப்பு கிடைத்தது. சிவாஜி இம்பாலா காரில் வருவார். அப்போது நான், 'ராபின்ஹுட்' சைக்கிள் வைத்திருந்தேன். ஒரு தளம் முழுக்க ஆதிசேஷன் பாம்பு செட். மகாவிஷ்ணுவாக நான் பள்ளி கொண்ட மாதிரி இருப்பேன். அவருக்கு நாரதர் வேடம். என்னிடம் இந்த மகா கலைஞன் கூனிக் குறுகி வசனம் பேசுவார்.

நான் (மகாவிஷ்ணு) : நாரதா! ஏதோ திட்டமிட்டு நாடகத்தைத் துவக்கியிருக்கிறாய்! ம்... நடத்து.

சிவாஜி (நாரதர்) : அய்யனே, என்னையா நடத்தச் சொல்கிறீர்கள். நடத்துவதெல்லாம் தாங்கள் அல்லவா? இன்று ஏதோ என்னுள் புகுந்து உத்தரவிட்டிருக்கிறீர்கள். அதை நான் செயல்படுத்துகிறேன். பரமாத்மா..., வெறும் பம்பரம் நான்! அதை ஆட்டுவிக்கும் சாட்டை தாங்கள் தானே! பெருமானே! அனைத்தும் இனிதாக வெற்றிகரமாகத் திகழ தாங்கள் நல்லாசி தந்தருள வேண்டும்.

நான்: அனைத்தும் இனிதாக வெற்றிகரமாகத் திகழ எனது பூரண நல்லாசிகள்.

காட்சி சிறப்பாக வந்ததும், குழுமியிருந்த அனைவரும் கைதட்டி ஆரவாரம் செய்தனர். இனிப்பு வழங்கப்பட்டது. என் வாழ்க்கை அத்தியாத்தில் இன்றும் என்றும் இனிய பதிவுகளாக, அந்த நினைவுகள்!

'சரஸ்வதி சபதம்' படத்தில் நடிக்கும்போது, 'சிவா ஒரு நல்ல ஓவியர்' என்று அறிமுகம் செய்தார் ஏ.பி.என். உடனே சிவாஜி ''எங்க அம்மா படத்தைக் கொஞ்சம் வரைந்து கொடுக்கிறியா'' என்ற கேட்டார். அதற்கப்புறம் அது பற்றி எதுவும் பேசவில்லை. ஒரு ஐந்து வருடம் தள்ளி, திருலோகசந்தர் இயக்கிய 'பாபு' பட ஷூட்டிங்கில் சிவாஜியைப் பார்த்தேன். ''கவுண்டரே! என்னடா இப்படி ஏமாத்திக் கிட்டிருக்கே, அம்மா படத்தை வரைஞ்சு கொடுக்கச் சொன்னேனே... மறந்துட்டியா? அம்மா ரொம்ப நாள் தாங்க மாட்டாங்கடா'' என்றார் உருக்கமாக. கண்களில் நீர்த் திவலைகள். உடனே சிவாஜி வீட்டுக்குப் போய் அம்மாவைப் படமெடுத்துக் கொண்டு வந்து, பத்து நாளில் வரைந்து, ஏ.வி.எம். ஸ்டுடியோவில் கொடுத்தேன். நெகிழ்ந்து போய் என் கைகளை இறுகப் பற்றிக் கொண்டார்.

''கவுண்டா, உன் கையில் வித்தை இருக்கு. பொழச்சுக்குவே'' என்றவர்.

''டேய்... புதுக்கோட்டை மகாராஜா வீட்டுல ஒரு பொண்ணு இருக்கு கட்டிக்கிறியாடா'' என்று கேட்டார்.

நான் மௌனமாக இருந்தேன்.

''ராஜா எனக்கு ரொம்ப வேண்டியவர்டா. என்ன சொல்றே?'' என்று அழுத்தமாகக் கேட்டார்.

அப்போதும் மௌனமாக நின்றேன்.

''என்னடா நான் கேட்கிறேன், ஒண்ணு, கட்டிக்கிறேன் இல்ல மாட்டேன்னு சொல்லு'' குரலில் கண்டிப்பு காட்டினார்.

''ஏன், அரண்மனையில் ஏற்கனவே இருக்கிற டவாலிகள் போதாதா?'' என்றேன்.

''அயோக்கிய வடுவா...! ஒரு நல்ல பையன் இருந்தா சொல்லுங் கன்னு கேட்டாங்க! எனக்கு உன் ஞாபகம் தான் வந்தது.''

''அண்ணே..., 'சிவகுமார் மாமனார் இவரு'ன்னுதான் ஒருத்தன் சொல்லணும். 'இன்னொருத்தர் மருமகன் சிவகுமார்'னு சொல்றதை நான் ஒத்துக்க மாட்டேன்'' என்றேன்.

'சரி போ' என்று விட்டுவிட்டார்.

தனியாக இருக்கும் சமயங்களில் சிவாஜி என் தோள்மீது கைபோட்டுக் கொண்டு ரொம்ப பர்சனலாகப் பேசத் துவங்கிவிடுவார்.

''சிவா..., உனக்குப் பிரச்சினை இல்லடா. ஜனங்களுக்கு உன் மூஞ்சி பழகிடுச்சி. அப்படி இப்படி புத்திசாலித்தனமா நடந்துக்கிட்டா பிக்கப் ஆகிடுவே'' என்றார் ஒரு முறை.

எனக்குக் கல்யாணம் 1974இல். சிவாஜிக்குப் பத்திரிக்கை கொடுத்தேன். 'அண்ணே கல்யாணம் கோயமுத்தூர் பக்கத்துல ஒரு அலாதி காட்டுல நடக்குது. மெட்ராஸ்ல ராஜேஸ்வரி மண்டபத்துல வரவேற்பு, வச்சிருக்கேன். நீங்க...' என இழுத்தேன்.

''ஏண்டா வடுவா! என்னைக் கல்யாணத்துக்கு வரவேணாம்னு சொல்றியா? நான் வருவேன். குமாரபாளையம் ஜே.கே.கே. குரூப் மில்காரங்க கல்யாணம் முடிச்சுப்புட்டு வந்துடறேன். தாலி கட்டும் போது வரமுடியாது. ஆனா ஒரு மணி நேரம் லேட்டாத்தான் வருவேன்.'' என்றவர், அதே மாதிரி தேடி வந்து ஆசீர்வதித்தார்.

1970 முதல் 77 வரை மேஜர் சுந்தர்ராஜனுடன் நாடகங்களில் நடித்து வந்தேன். என்.எஸ்.என். தியேட்டர்ஸ், இதற்கு சாம்பு நடராஜ் அய்யர் முதலாளி. தலைவர் மேஜர். இதன் ஆயிரமாவது நாடகம் 'அப்பாவி', என்.கே.டி. கலா மண்டபத்தில் நடந்தது. சிவாஜி தலைமையேற்றார்.

நாடகத்தைப் பார்த்து விட்டு வந்து, ''டேய் கவுண்டா, இத்தனை நாள் எங்கடா ஒளிச்சி வச்சிருந்த இம்புட்டு திறமையை. கல்யாணம் பண்ணியதும் வீரம் வந்துடுச்சா?'' என்று கேட்டார்.

திருப்பூர் மணி தயாரித்த எனது நூறாவது படம் 'ரோசாப்பூ ரவிக்கைக் காரி'. சிவாஜி நிழலையே பார்த்து, அதன் மூலம் நடிப்பைக் கற்றுக் கொண்ட எனக்கு, நிஜத்திடம் ஆசீர்வாதம் வாங்கத் தோன்றியது. 500 ரூபாய்க்கு ஒரு மாலை வாங்கிக்கொண்டு பிலிம் நியூஸ் ஆனந்தனுடன் அதிகாலை சிவாஜி வீட்டுக்குச் சென்றேன். சாதாரணமாக நான் யார் காலிலும் விழுபவன் அல்ல. அன்று என் நடிப்புக்குக் குருநாதர் சிவாஜி காலில், எண் சாண் உடம்பும் தரையில்பட விழுந்து வணங்கினேன். என்னை அப்படியே அள்ளி நெஞ்சோடு வைத்து அணைத்துக் கொண்டார்.

''எனக்கு ஏண்டா மாலை போடுற, உனக்குத்தான் நான் போடணும்'' என்றார்.

''வரம் கேட்க வரும் பக்தன்தான் கடவுளுக்கு மாலை போடணும். நான் கேட்டு வந்த வரம் ஆசீர்வாதம்!'' என்றதும்.... ''டேய் சிவா..., உன்னை யாரும் வெறுக்க முடியாதுடா...! உனக்கு விரோதியே இருக்க மாட்டான்டா...! நல்லா இரு'' என்றார். நூறாவது படத்தின் நூறாவது நாள் விழாவுக்கும் சிவாஜி வந்து தலைமை ஏற்று ஆசீர்வதித்தார்.

'இனி ஒரு சுதந்திரம்' படம் சிவாஜிக்குப் போட்டுக் காட்டப் பட்டது. படம் பார்த்து முடிந்து வெளியே வந்த சிவாஜி, ''காந்தி தாத்தா ஒரு பைத்தியக்காரன், கத்தி ரத்தம் இல்லாம சுதந்திரம் வாங்கிக் குடுத் துட்டுப் போய்ச் சேர்ந்துட்டான். அதான் அதன் அருமை நமக்குத் தெரியல.

''உன் படம் பார்த்தேன். பிரம்மாதமா பண்ணியிருக்க. 'கப்பலோட்டிய தமிழன்' உயிரைக் குடுத்துச் செய்தேன். தமிழ்நாட்டு ஜனங்க எனக்குப் பட்டை நாமத்தைப் போட்டுட்டாங்க. உனக்குக் குழைச்சிட்டிருக்காங்க'' என்றார். அதே மாதிரி எனக்கும் நாமம் போடப்பட்டது.

'உறுதி மொழி' படப்பிடிப்பு! நானும் பிரபுவும் தேக்கடியில் நடித்துக் கொண்டிருந்தோம். அங்கே ஒரு நாள் சிவாஜி குடும்பத்துடன் வந்திருந்தார். எங்கள் வீட்டிலிருந்து என் மனைவி குழந்தைகள் எல்லாம் வந்திருந்தனர். சேர்ந்து போட்டோ எடுத்துக் கொண்டோம். அப்படியே என் தோள் மீது கைபோட்டபடி தனியே நடந்த சிவாஜி, ''கவுண்டரே! சிவாஜி கணேசன் தேக்கடிக்கு கெஸ்ட்டா வந்திருக்கேண்டா'' என்று குரல் தழுதழுக்கச் சொன்னார்.

''அண்ணே என்ன பேச்சு பேசுறீங்க...! நீங்க சாப்பிட்டு மிச்சமான சோற்றைத்தான் நாங்க சாப்பிடுறோம். நீங்கள் மிதித்த புல்லுலதான் நாங்க விளையாடுகிறோம். எந்தக் கொம்பனும் இந்தத் தமிழ் மண்ணுல உங்க சாதனையை முறியடிச்சிட முடியாது,'' என்றேன்.

''அப்படியா நினைக்கிறே?''

''இது என் தாய்மேல் சத்தியம்! தொழில்மேல் சத்தியம்'' என்றேன்.

''எல்லாரும் அப்படி நினைப்பாங்களா?'' சிவாஜியின் கேள்வி என்னைக் கலங்கச் செய்து விட்டது.

தேக்கடியில் ஓட்டல் முன்பு விளையாடிக் கொண்டிருந்தாள் என் மகள் பிருந்தா. அப்போது அங்கே சிவாஜி வந்தார். ''குட் மார்னிங் அங்கிள்'' என்று சொன்னாள்.

''நான் உனக்கு அங்கிள் இல்லம்மா. னொப்பன் என் தம்பி, நான் உன் பெரியப்பன்'' என்றார். அது முதல் சிவாஜியை பிருந்தா, 'பெரியப்பா' என்றுதான் அன்போடு அழைப்பாள்.

ஐந்தாண்டுகளுக்கு முன்பு; 'சிங்கப்பூர் கலைநிகழ்ச்சியில் சிவாஜி மயங்கி விழுந்துவிட்டார். ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டு உயிர் ஊசலாடுகிறது. ஒரு கட்டத்தில், செத்துவிட்டார் சிவாஜி, உடல் விமானத்தில் வருகிறது' என்பது மாதிரி செய்திகள்! எனக்கு இதயமே ஒரு நொடி நின்றுவிட்டதுபோல் ஆகிவிட்டது. ''பெரியப்பா சாக மாட்டாருப்பா! அவர் கம்பீரமாத் திரும்பி வருவார் பாருங்க'' என்றாள் பிருந்தா.

''மகளே, உன் வாய் முகூர்த்தம் பலிச்சுட்டா, ஒரு பூச்செண்டு தர்றேன், அதை உன் கையாலேயே பெரியப்பாவுக்குக் கொடுத்துடு'' என்றேன்.

அதேபோல் புது ரத்தம், புதுப் பொலிவுடன் ஒரு மாத ஓய்வுக்குப் பின் திரும்பி வந்தார். குடும்பத்துடன் போய்ப் பார்த்தேன். அவர் அருகில் ஒரு நாற்காலி – உட்காரச் சொன்னார். நான் தரையில் அமர்ந்தேன்...!

என் தலையைத் தடவிவிட்டபடி சிவாஜி சொன்னார்:

''நாமெல்லாம் 'ONCE UPON A TIME ACTOR'டா சிவா! எல்லாம் முடிஞ்சுப் போச்சு. நம்மை யாரு ஞாபகம் வச்சிருக்கா? சிங்கப்பூர்ல பாரு, அஞ்சாயிரம் பேர் கூடியிருக்காங்க. இருபது அடிக்கு முப்பது அடி திரையில கட்டபொம்மன் காட்சியைப் போடுறான். அஞ்சாயிரம் பேரும் அடிக்கிறான் விசில்.

''தங்கப்பதுமை... 'ஆரம்பமாவது பெண்ணுக்குள்ளே' போட்டா... அவனவன் சாமி ஆடறான். 'தங்கப்பதக்கம்' அரங்கமே குலுங்குது!

''சிவா! வாட் எ ஃபைன் மூவ்மெண்ட்! உங்க அண்ணன் ஏன்டா அப்ப சாகல? எதுக்காகடா உயிரோட வந்தேன்?''

சிவாஜிக்கும் எனக்கும் கண்களில் நீர் முட்டித் தளும்பியது.

நூறு வயது வாழணும்னு ஆசை இருந்தா கூட, ஒரு கலைஞனுக்கு எப்படி முடிவு வர வேண்டும் என்று அவர் கற்பனை செய்து வைத்திருந்தார்.

''1981இல் முத்துராமன் ஊட்டியில இறந்தபோது அவரது உடலை நானும் திருப்பூர் மணி படக்குழுவும் சென்னைக்கு எடுத்து வந்தோம். அதிகாலை 4 மணி. முத்துராமன் வீட்டு வாசலில் சிவாஜியும் முன்னாள் டி.ஜி.பி. பரமகுருவும் காத்திருந்தார்கள். ''கவுண்டரே, தேவனுக்கு (முத்துராமன்) நல்ல சாவுடா. கொஞ்ச நாளா படமில்லாம வீட்லயே முடங்கிக் கிடந்தான். ஷூட்டிங் போன இடத்துல உடற்பயிற்சிக்காக ஓடிக்கிட்டிருக்கும்போது உயிர் போறது வீர மரணம்.

''உனக்குத் தெரியுமா? நம்ம நடிக ஜாதியில ஒருத்தர், விஸ்வநாததாஸ் மேடையில முருகன் வேஷம் கட்டி மயில்மேல் வள்ளி தெய்வானைக்கு நடுவுல உட்கார்ந்திருக்கும்போது செத்துப்போயிட்டார். எவ்வளவு கொடுத்து வைத்த சாவு.''

''மூணு நாளைக்குமேல படுக்கையில கிடந்தால், முப்பது வருஷம் வாழுற பொண்டாட்டிகூட, மலம் மூத்திரத்தை எடுக்க யோசிப்பா, சாவுன்னா.., அப்படி வரணும்'' என்றார்.

நினைப்பதெல்லாம் நடந்து விட்டால் தெய்வம் ஏதுமில்லை! மனிதர்கள் பிறக்கலாம், இறக்கலாம். ஆனால், மண் உள்ளளவும் தமிழ்மொழி உள்ளளவும் தமிழ் சினிமா உள்ளளவும் அந்த ஒரு உலக மகா கலைஞனின் சாதனையை மட்டும் யாரும் மறந்திடவோ – அழித்திடவோ முடியாது!

---

# 58



## கவியரசு வைரமுத்து

புகழ்மிக்க கர்நாடக சங்கீத வித்வான் கச்சேரி! திருவிழாக் கூட்டம் போல மக்கள் திரண்டு அரங்கை நிரப்பியிருக்கிறார்கள்...! உண்டு உறங்கும் நேரம் தவிர, சதா காலமும் சங்கீத நினைவுடன் வாழும் வித்வான் அவர்...! பக்கவாத்யமாக மிருதங்க குருமூர்த்தி, தம்புரா கஜபதி,

வயலின், கடம், கஞ்சிரா - சகிதம் கம்பீரமாக வந்து மேடையில் அமர்கிறார். கரவொலி அடங்க வெகு நேரமாகிறது...!

தியாகராஜர் கீர்த்தனை ஒன்றைப் பாட ஆரம்பிக்கிறார்...!

மரி மரி நின்னே முறலிட... மரி மரி நின்னே முறலிட....
நீ மனசுன தயராது....
கரிமொறவினி... சரகுணஸனநீகு
காரணமேமி சர்வாந்தர் யாமி...
காரணமேமி சர்வாந்தர் யாமி...
மரி மரி நின்னே முறலிட....

கர்னாடக இசைவல்லுநர்கள், ராகம் தெரிந்த ரசிகர்கள், கைசொடக்கி, தலையை ஆட்டி ரசிக்கிறார்கள்.

கௌரவத்திற்குக் கச்சேரி கேட்க வந்தவர்கள், ஆச்சர்யத்துடனும், கேள்விக்குறியுடனும் கண்களை அகல விரித்து, பக்கத்து சீட்டில் உள்ளோர் ரசனைக்கேற்ப, தலையை ஆட்டுகிறார்கள்.

தன் அலங்காரத்தை அடுத்த பெண் பார்த்து அசரவேண்டும் என்பதற்காக;ஞ் பட்டுப்புடவையும், பவுடருமாய் மினுக்கிக்கொண்டு வந்த ஒரு பெண்மணி, பக்கத்து சீட்டுப் பெண்ணின் கழுத்திலிருந்த நெக்லசைப் பார்த்து, பல்லைக்காட்டி, 'இது என்ன விலை? எந்தக் கடையில் வாங்கியது?' என்று விசாரிக்கிறார்.

மனைவியின் தொல்லை தாங்காமல், கச்சேரிக்கு அழைத்து வந்த கணவன், அவள் பாட்டை ரசிக்க, இவன் குமுதத்தைப் புரட்டுகிறான்.

கோடை வெயிலின் உஷ்ணம் தாங்காமல், குளிரூட்டிய ஹாலுக்குள் வந்த சில பெரிசுகள், குறட்டை விட்டுத் தூங்குகின்றன.

அந்த மாபெரும் கலைஞனின் சாரீரத்தையும் சங்கீதத்தையும் ரசிக்காமல், அரங்கத்தில் நடக்கும் இந்த அலங்கோலக் காட்சியைக் கண்டு வேதனைப்படுகிறாள் ஒரு பெண். அவள்தான் சிந்து!

வித்வான் கீர்த்தனையைப் பாடி முடித்ததும், ஏனோதானோவென்று கைதட்டல்...! அந்தப் பெண் அரங்கிலிருந்து மேடைக்குச் செல்கிறாள்...! புரியாத தெலுங்கு கீர்த்தனையைப் பாடுவதைவிட புரிந்த தமிழ்ப்பாடல் ஏதாவது பாடும்படி கேட்கிறாள்.

வித்வானுக்குத் தன் வித்வத் மீது அளவு கடந்த கர்வம் உண்டு. ''புரியும் படியா பாடணும்னா, நாட்டுப்புறப்பாடல் பாடச் சொல்றியா?'' என்று கிண்டலாகக் கேட்கிறார்.

சுர்ரென்று அந்தப் பெண்ணுக்குக் கோபம் வந்துவிடுகிறது. ''என்ன சார்! நாட்டுப்புறப் பாடல்னா உங்களுக்கு அவ்வளவு கேவலமா தெரியுதா? நாட்டுப்புறப் பாடல்கள்ளே என்ன இல்லை? அன்பு, பாசம், காதல், வீரம், சோகம், நாட்டுப்பற்று, தாலாட்டு, ஒப்பாரி - என அதில் இல்லாத விஷயங்களே இல்லை'' என்கிறாள்.

''இப்ப என்ன சொல்ல வர்றே? நாட்டுப்புறப் பாட்டு ஒசத்திங்கறியா? நாட்டுப்புறப் பாடலைப் பாடி இந்தக் கூட்டத்தில் நீ பேர் வாங்க முடியுமா?'' என்று சவால் விடுகிறார்.

''நீங்க சவால் விட்டா... அதை ஏத்துக்கத் தயார்'' என்கிறாள்.

சபாவில், வித்வானுடன் வாதமிடும் பெண்ணை, ''மேடையை விட்டு இறங்கும்மா'' என்று சிலர் கூச்சலிடுகின்றனர்.

வித்வான் சைகை காட்டி அவர்களை அமைதியாக இருக்கச் சொல்கிறார். இரண்டு வினாடி அரங்கம் அமைதி காக்கிறது.

கண்ணை மூடி உள்மூச்சு வாங்கி, அவள் பாட ஆரம்பிக்கிறாள்...,

''பாடறியேன்... படிப்பறியேன் - பள்ளிக்கூடந் தானறியேன்
ஏடறியேன் - எழுத்தறியேன் - எழுத்துவகை நானறியேன்...

.. .. .. ..

ஏட்டுல எழுதவில்லை எழுதிவச்சுப் பழக்கமில்லை
இலக்கணம் படிக்கவில்லை தலக்கனமும் எனக்கு இல்லை

அர்த்தத்தை விட்டுப்புட்டா, அதுக்கொரு பாவமில்லே
பழகின பாஷையில படிப்பது பாவமில்லே
என்னமோ ராகம், என்னென்னமோ தாளம்
தலையை ஆட்டும் புரியாத கூட்டம்
எல்லாமே சங்கீதந்தான்...!
சத்தத்தில் பொறந்த சங்கதிதான்...
சட்ஜமமென்பதும் தைவதமென்பதும்
பஞ்சப்பரம்பரைக் கப்பறந்தான்...

பாடறியேன் படிப்பறியேன்...

கவலை ஏதுமில்லே ரசிக்கும் மேட்டுக்குடி
சேரிக்கும் சேரவேணும் அதுக்கும் பாட்டுப்படி
எண்ணியே பாரு எத்தனை பேரு
தங்கமே நீயும் தமிழ்ப்பாட்டும் பாடு...
சொன்னது தப்பா... தப்பா....
ராகத்தில் புதுசு என்னதப்பா?

அம்மியரைச்சவ கும்மியடிச்சவ
நாட்டுப்பொறத்தில சொன்னதப்பா...
பாடறியேன் படிப்பறியேன்...''

என்று பாடி, ஸ்வரங்களைச் சொல்லி – 'மரி மரி நின்னே' என்ற தியாகராஜர் கீர்த்தனையின் பல்லவியை, இறுதியாகப்பாடி முடிக்கிறாள்...

கொட்டகையே அதிரும்படி கரவொலி. உணர்ச்சிவசப்பட்ட ரசிகர்கள் எழுந்து ஆனந்தக் கூத்தாடினார்கள்!

வித்வான் தன் வாழ்க்கையில் இப்படி ஒரு ஆக்ரோஷமான வரவேற்பைச் சந்தித்திருப்பாரா? சந்தேகம்தான்.

25 ஆண்டுகளாக மேடையில் ஆட்சிசெய்த வித்வானுக்கு இது பெருத்த அவமானமாகப் படுகிறது. கோபம் தாங்கமுடியவில்லை. சபை நாகரிகம் கருதி, மனதுக்குள் பொருமிக்கொண்டே அரை மனத்துடன் அவரும் கைதட்டுகிறார்.

'சிந்து பைரவி' படத்தில் JKB-யாக நானும் சிந்துவாக சுகாசினியும் மோதிக்கொள்ளும் இந்தக் காட்சியை ரசிக்காத ரசிகனே இருக்க முடியாது!

இயக்குநர் சிகரம் கே.பாலசந்தரின் படைப்புகளில் மிக உன்னதமானது 'சிந்து பைரவி' படம். படைப்பாளி, ஜே.கே.பி. கதாபாத்திரத்தையும் அவரோடு மோதும் சிந்துவையும் எவ்வளவு தீவிரமாக, ஆழமாக யோசித்து வைத்திருந்தாரோ அந்த கனம் சிறிதும் குறையாதபடி, இந்த ஒரு பாடல் மூலம் கவியரசு வைரமுத்து, சிந்துவின் வேடத்தை நம் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தி விடுகிறார்.

என்னுடைய எத்தனையோ படங்களுக்கு அவர் பாடல் எழுதியுள்ள போதிலும், இந்த 'சிந்து பைரவி' படம் மட்டும் மறக்க முடியாத ஒன்று.

அதேபோல படத்தின் பின்பகுதியில், பெற்ற தாயின் வீட்டிலேயே – அவள் கணவன், குழந்தைகள் முன்னிலையிலேயே – தான் 'யார், தன் பிறப்பு வளர்ப்பு எப்படிப்பட்டது என்று விளக்கும் பாடலும் மிகவும் அற்புதமானது.

நானொரு சிந்து... காவடிச் சிந்து
ராகம் புரியவில்லே - உள்ள
சோகம் தெரியவில்லே...
தந்தையிருந்தும் தாயுமிருந்தும்
சொந்தம் எதுவுமில்லே - அதைச்
சொல்லத் தெரியவில்லே...

... ... ...

இல்லாத உறவுக்கு என்னென்ன பேரோ
நாடோடிப் பாட்டுக்குத் தாய்தந்தை யாரோ
விதியோட நானாடும் விளையாட்டுப்பாரு
வெளையாத காட்டுக்கு விதை போட்டதாரு
பாட்டுப்படிச்சா சங்கதி உண்டு - என்
பாட்டுக்குள்ளேயும் சங்கதி உண்டு
கண்டுபிடி.....

(நானொரு சிந்து)

பெண்கன்று பசுதேடிப் பார்க்கின்ற வேளை
அம்மான்னு சொல்லவும் அதிகாரமில்லை
என்விதி அப்போதே தெரிஞ்சிருந்தாலே
கர்ப்பத்தில் நானே கரைஞ்சிருப்பேனே
தலையெழுத்தென்ன, என் முதலெழுத்தென்ன
சொல்லுங்களேன்....

(நானொரு சிந்து)

'இன்று என் அம்மா, யாரோ ஒரு மனிதரை மணந்து, அவருக்கும் குழந்தை பெற்று, ஆடம்பரமாக வாழ்கிறாள். ஆனால் அன்று, எவனுக்கோ, முந்தானை விரித்து, என்னைப் பெற்று அனாதையாகப் போட்டுவிட்டு வந்துவிட்டாள்.

'நாடோடிப் பாட்டு' போன்றவள் நான்.

'என் பேருக்கு முன்பு இன்ஷியல் போட முடியாதவள் நான்' என்று தன் சோகத்தை விளக்கும் இப்பாடலும், கவியரசுவின் சொல்லாளுமைக்கு உதாரணம்.

வைரமுத்து தமிழுக்குப் புதிய சொற்கள் நிறைய உருவாக்கியவர். இந்தச் சொல் அலங்காரம் மற்றவரிடமிருந்து இவரைத் தனித்துக் காட்டு கிறது. மரபுக் கவிதையிலும் புதிய சொற்கள்... புதுக்கவிதையிலும் வீரிய முள்ள வார்த்தைகள்... படிப்போருக்கு ஒரு போதையைத் தருகின்றன...!

அவர் சிந்திய வைரங்கள், முத்துக்களிலிருந்து நான் பொறுக்கி எடுத்தவை...

உன்னோடு நானிருந்த ஒவ்வோர் மணித்துளியும்
மரணப்படுக்கையிலும் மறக்காது கண்மணியே!
பார்வையிலே சில நிமிடம் பயத்தோடு சில நிமிடம்
கட்டி அணைத்தபடி கண்ணீரில் சில நிமிடம்!

தொண்ணூறு நிமிடங்கள் தொட்டணைத்த காலந்தான்
எண்ணூறு ஆண்டுகளாய் இதயத்தில் கனக்குதடி!

கண்டதிருக்கோலம் கனவாக மறைந்தாலும்
கடைசியிலே அழுத கண்ணீர் கையில் இன்னும் ஒட்டுதடி.

... ... ...

★ காதல் இன்றேல் சாதல் என்றே
கவிதை சொன்னதும் ஒருகாலம்
காதல் என்பதும் சந்தர்ப்பம் தான்
கண்டு தெளிந்ததும் ஒருகாலம்...

பூமி தனக்கே சொந்தம் என்று
புலம்பித் தவித்ததும் ஒரு காலம்
பூமிக்கே நீ சொந்தம் என்று
புரிந்து தெளிந்ததும் ஒரு காலம்!... ...

புறம்போக்கு நிலத்தில் குடிசைபோட்ட கிழவி, இடிக்க வரும் அரசு அதிகாரிகளிடம் புலம்புகிறாள்...

''சாமிகளா சாமிகளா - சர்க்காரு சாமிகளா
செலந்திக் கூடழிக்க சீட்டு வாங்கி வந்தீகளா
சித்தெறும்பை நசுக்கத்தான் - சீப்பேறி வந்தீகளா..

... ... ...

கூடு கலைச்சாக்க குருவிக்கு வேறமரம்
வீடு இடிச்சாக்க எங்களுக்கு ஏது இடம்?

எட்டி ஒதைச்சாலே இத்துவிழும் செவுத்துக்கு
கடப்பாறை ஏதுக்கய்யா கவர்மெண்ட்டு ஆளுகளே...

... ... ...

கொல்லையில எம்மவதான் மல்லியப்பூ நட்டிருக்கா
நீர்குடிச்ச செடி இப்போ வேர் புடிச்சு நின்னிருக்கு
ஆசையில வச்சசெடி, அசங்காம இருக்கட்டும்
அவ வெச்ச மல்லிகைதான் எவளுக்கோ பூக்கட்டும் ...

★ 'சுதந்திர வெளிச்சம் சேரியில் படாமல்
மாளிகை நிழல்களே மறைத்துவிட்டன'

★ 'அதெப்படி
எட்டயபுரத்தில் மட்டும்
ஒருத்திக்கு
நெருப்பைச் சுமந்த கருப்பை!!'

★ 'நம்மூர் ஜனங்கள், வாழ்க்கையை வெளியே தொலைத்துவிட்டு சினிமாக் கொட்டகையின் செயற்கை இருட்டில் அதைத் தேடு கிறார்கள்'...

★ 'இந்திய மண்ணில்...
வியாபாரஞ் செய்ய வந்தவர்கள்
அரசியல் நடத்தினார்கள்...

அரசியல் நடத்த வந்தவர்கள்
வியாபாரஞ் செய்கிறார்கள்!

இரண்டிலும்...
நட்டப்பட்டது நாம் மட்டும்தான்
இந்தியனே...'

★ **பார**தி பற்றி–

''அவன்
காணி நிலம் கேட்டு
மாதா பராசக்திக்கு
மனுச் செய்தான்
அவளோ
அவன்
கல்லறைக்குக்கூட
காணிநிலம் தரவில்லை...''

★ ''மதம் பிடித்தலையும் மனிதா!
ஒரு
கிருஸ்தவக்கிளி - இந்துப்புலி
சமணக்கொக்கு - பெளத்தப்பசு
சீக்கிய சிங்கம் - முகமதிய மான்
காட்டுக்குள் உன்னால்
அடையாளம் காட்ட முடியுமா?''

... ... ...

மனிதா! கடவுளர் வாகனம் கவனித்தாயா?
ஒரு கடவுள் - காளை கொண்டான்
ஒரு கடவுள் - மயில் கொண்டான்
ஒரு கடவுள் - எலி கொண்டான்
ஒரு கடவுள் - கருடன் கொண்டான்!

எந்தக் கடவுளையும்
விலங்கு சுமந்ததன்றி
மனிதன் சுமந்ததில்லை

மனிதனைச் சுமக்கச் சொன்னால்
கடத்தி விடுவானென்று
கடவுளுக்குத் தெரியாதா?

மனிதன் கடவுளை நம்புகிறான்
கடவுள் மனிதனை நம்புவதில்லை

... ... ...

தமிழை நேசிப்போரிடமும், சுவாசிப்போரிடமும் - அந்தத் தமிழ் களிநடம் புரியவே செய்கிறது!

'கள்ளிக்காட்டு இதிகாசம்'- அவரது படைப்புகளில் 'மாஸ்டர் பீஸ்'. அதில் வைரமுத்து இல்லை - அவர் பிறந்த மண்ணின் வரலாறு இருக்கிறது...

---



அரக்குவேலியில் படப்பிடிப்பில் இருந்த போது, ராத்திரில அவரோட துணைவியைப் பத்தி எழுதின கட்டுரையைப் படிச்சு அழுதேன்.

பதினாலு வருஷம் கழிச்சு, பொண்டாட்டி பிறந்த நாளைக் கண்டுபிடிச்சு, புடவை வாங்கிக் குடுத்தாரு. இன்னிக்கு பொறந்த நாளு - கட்டிக்கன்னு..

'என் பொறந்த நாளு எனக்கே தெரியாது. ஏன் பொறந்தோம்னு நினைக்கிற நாளைப்பத்தி நான் என்னிக்குமே நினைக்கறதில்லை. இதெல்லாம் கொண்டாடக்கூடிய நாளா?, புடவையெல்லாம் வேண்டாம் என்று மறுத்தார்... இதைப் படித்த போது விக்கி விக்கி அழுதேன்.

1-1-05, வெளியீட்டு விழாவில், **மனோரமா**

59



## நட்புக்கு ஒரு ஜெய்

ஏ.வி.எம் நிறுவனம் உருவாக்கிய 'அன்னை' மிகச் சிறந்த படம். வளர்ப்பு மகன், பெற்ற தாயிடம் போய்விடக்கூடாது, தன்னிடமே இருக்க வேண்டும், தனக்கு மட்டுமே அவன் சொந்தமாக இருக்க வேண்டும் என்று தவிக்கும் அன்னை வேடத்தில், பானுமதி நடிப்பின் எல்லையைத் தொட்ட படம்.

மகனாக அந்தப் படத்தில் 6 அடி உயரத்தில், உருண்டைக் கண்ணும், குழந்தை சுபாவமுமாய் நடித்தவர் நண்பர் ஹரிநாத்...! அந்த வேஷத்தில் முதலில் நடிக்க நண்பர் ஜெய்சங்கரைத்தான் அழைத்தார்களாம். 'மேக்கப் டெஸ்ட்'டில் கண்கள் சிறியதாக இருக்கிறது என்ற காரணத்துக்காக அவரைத் தவிர்த்து விட்டு, ஹரிநாத்தை நடிக்க வைத்தார்கள்..

'இரவும் பகலும்' என்ற பெயரில், அதே ஜெய்சங்கருக்கு இரட்டை வேடம் கொடுத்து, அதிரடியாக அறிமுகம் செய்து தூக்கி நிறுத்தியவர் சிட்டாடல் ஜோசப் தளியத் அவர்கள்.

வெற்றிப்பட நாயகனாகத் தமிழ்த்திரையில் அவர் அறிமுகமான பிறகு, அதே ஏ.வி.எம் நிறுவனம், அதே 'கிருஷ்ணன் – பஞ்சு' இரட்டையர் இயக்கத்தில், ஜெய்சங்கர், ஜமுனா, குட்டி பத்மினி நடித்த 'குழந்தையும் தெய்வமும்' படத்தினைத் தயாரித்து வெற்றிப் படமாக்கியது.

திரையுலகில் ஒருவரால் நிராகரிக்கப்பட்டவர், இன்னொருவரால் அங்கீகரிக்கப்பட்டு, மிகச்சிறப்பாக அறிமுகப்படுத்தப்படுவது வரலாறு.

மிகவும் ஒல்லியாக இருக்கிறார் என்று 'வெண்ணிற ஆடை' படத்தில் நடிக்க – டெஸ்ட் எடுத்துப் பார்த்து, நிராகரிக்கப்பட்ட ஹேமமாலினி தான், பின்னர், வட இந்தியாவின் கனவுக் கன்னியாக வலம் வந்தார்.

ஏ.வி.எம். நிறுவனத்தால், ஏதோ ஒரு காரணத்துக்காக நிராகரிக்கப் பட்ட கே.ஆர். விஜயா, 'கற்பகம்' மூலம் அறிமுகமாகி, நிரந்தரக் கதாநாயகிகளில் ஒருவராக நீண்ட காலம் தமிழ்த் திரை உலகில் கொடி பறக்க விட்டார்.

'ஜெய்' என்றால் 'கலகலப்பு' என்று அர்த்தம் கொள்ளலாம். துறுதுறு என்றிருப்பார். யார் தோள் மீதும் கை போட்டுப் பழகுவார்.

1965இல் திரையில் நான் அறிமுகமான சமயத்தில்; நடிகர் சங்க வளாகம் பெரிய மைதானமாக இருந்தது. வட கோடியில் ஒரு சிமெண்ட் மேடை. அதன் ஓரத்தில் ஒரு சிறு அறை. உள்ளே, மஞ்சள் சில்க் சட்டையில், பாக்கட்டில் ரூபாய் தெரிய, பின் கை கட்டியவாறு புன்னகை பூக்கும் கலைவாணர் ஓவியம் இருக்கும். ஓவிய மேதை கே. மாதவன் வரைந்தது.

திறந்த வெளி நடிகர் சங்க வளாகத்தில், விடுமுறை நாள்களில் நடிகர்கள், கிரிக்கெட், டென்னிஸ் விளையாடுவார்கள்.

ஜெய் காரில் வருவார். நான் சைக்கிளில் செல்வேன். ஏற்ற இறக்க மாக, ஏளனமாக யாரையுமே பார்க்காத ஜெய், என் தோளில் கை போட்டு, ''சிவா! சினிமாவுல நடிகர்களுக்குப் பேரும் புகழும் வர்றது ஓவர் நைட்

சமாச்சாரம். உன் ஸ்டார் ஒர்க் அவுட் ஆனா, நாளைக்கே நீ சூப்பர் ஸ்டார் ஆயிடலாம். என்ன.., அதுக்குத் துணிச்சலான ஒரு டைரக்டரும், நல்ல காரக்டரும் அமையணும். நீ சின்னப் பையன் தானே..! நிறைய டைம் இருக்கு.., தைரியமா இரு'' – என்பார்.

இருவரும் ஒரே ஆண்டில்தான் திரையில் அறிமுகமானோம் என்றாலும், அவர் இரட்டை வேடத்தில் பளீரென்று அறிமுகம் செய்யப்பட்டார். நான் பெரிய நிறுவனப் படத்தில் மிகச் சிறிய வேடத்தில் அறிமுகமானேன்.

ஒளிப்பதிவாளர், இயக்குநர், தயாரிப்பாளர் கர்ணன் அவர்கள் உருவாக்கிய 'எங்க பாட்டன் சொத்து' படத்தில் முதன்முதல் இருவரும் நடித்தோம். அவர் ராபின்ஹூட் பாணி 'வில்லனிக்' ஹீரோ! அவரைத் தேடிக் கைது செய்யும் போலீஸ் இன்ஸ்பெக்டர் நான். இருவரும் இளமைக் காலப் பள்ளித் தோழர்கள் என்பது சுவை கூட்டும் விஷயம்.

அதன்பிறகு ஜீவனாம்சம், சூதாட்டம், கன்னிப் பெண், இன்று நீ நாளை நான் – போன்ற படங்களில் இணைந்து நடித்தோம். 'இன்று நீ நாளை நான்' – படித்தில் ஹீரோ நான் என்ற போதிலும், என் மீது அன்பு செலுத்தும் அண்ணன் வேடம் அவருக்கு. குணச்சித்திர நடிகராக ஜெய் ஏற்று நடித்த வேடங்களில் குறிப்பிடத்தக்க படம் அது.

அசல் வாழ்க்கையில் ஜாலியாக இருப்பது போலவே, நடிப்புத் தொழிலையும் ஜாலியாக அவர் கருதினார். கண்ணீர் சிந்துவது, கனல் தெறிக்க வசனம் பேசுவது என்று ஏதாவது காட்சிகள் இருந்தால், டைரக்டரை அழைத்து ''சார்! இந்த மாதிரி சமாச்சாரத்துக்கெல்லாம் நம்ம சிவா இருக்கான்! அவனை யூஸ் பண்ணிக்குங்க..! நம்ம ஏரியாவே தனி'' என்று விட்டுக் கொடுத்து விடுவார்.'ஜேம்ஸ் பாண்டு 007' ஷான் கானரி நடித்து வெளியாகி உலகையே கலக்கிய நேரம். அந்த ஹீரோவுக்கு அகன்ற மார்பு, கைகளிலும் உடம்பிலும் பெண்களைக் கவரும் கருகருவென்ற முடி. அளவான வசனம், அலட்டாத நடிப்பு. அசத்தும் நடை!

சண்டைப் படங்களில் ஈடுபாடு காட்டத் துவங்கிய ஜெய்க்கு, ஷான் கானரிதான் ரோல் மாடல். 'தென்னாட்டின் ஷான் கானரி' ஜெய் நடிக்கும் படம் என்றெல்லாம் விளம்பரப் படுத்துவார்கள்.

சண்டைப் படங்கள் எடுப்பதில் பெயர்போன, சேலம் மாடர்ன் தியேட்டர்ஸ், டி.ஆர். எஸ். அவர்கள் மறைவுக்குப் பின், திரு.ராமசுந்தரம் இயக்கத்தில் படங்களைத் தயாரித்தது.

ஜாடிக்கு ஏற்ற மூடிபோல ஜெய் அந்தக் காம்பவுண்டில் நுழைந்தார். 'வல்லவன் ஒருவன்', 'வல்லவனுக்கு வல்லவன்', என்று டைட்டிலிலேயே பலத்தைக் காட்டும் பல படங்கள் தொடர்ந்து மாடர்ன் தியேட்டர்ஸ் உருவாக்கியது.

அந்த நாளில் ஸ்டுடியோ முதலாளிகள், புகழ் பெற்ற இயக்குநர்கள் மட்டுமே படம் தயாரிக்க முடியும் என்ற ஒரு நிலை இருந்தது.

அந்தக் கட்டமைப்பை உடைத்து, 'இது ஜனநாயக நாடு. இதில் எல்லோரும் மன்னர்கள்தான். யாரும் படம் எடுக்கலாம்' என்று எண்ணும் வகையில் படத்தின் காஸ்ட்யூமர், மேக்கப் மேன், புரொடக்ஷன் மானேஜர் – எல்லாரையும் தயாரிப்பாளராக்கி உயர்த்தியவர் ஜெய் அவர்கள்.

எண்ணற்ற தயாரிப்பாளர்கள் இவரால் உருவானவர்கள். அதனாலேயே 'ஜெய்' படங்கள் நிறைய தயாராகி, ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் ஒரு புதுப்படம் வெளியாகும் நிலை ஏற்பட்டு, 'FRIDAY HERO' என்று புகழ்ச்சியாகவும், கிண்டலாகவும் பேசப்பட்டார்.

படங்களின் எண்ணிக்கை கூடியதே தவிர, சம்பளம் முழுமையாக வரவில்லை. டைரக்டருக்கு, கதாசிரியருக்கு, ஒளிப்பதிவாளருக்கு, இசை அமைப்பாளருக்கு எல்லாம் பாக்கி இல்லாமல் சம்பளம் கொடுக்கச் சொல்லி விடுவார்.

''எனக்கு என்னய்யா சம்பளம் இதுவரைக்கும் கொடுத்திருக்கே'' என்று கேட்டால், ஒருவர் ஐயாயிரம் மட்டும் கொடுத்திருப்பதாகவும், அடுத்தவர் பத்தாயிரம் கொடுத்திருப்பதாகவும் சொல்வார்கள்.

''கால்வாசி பணம்தான் வந்திருக்கும். பரவால்லே. உன்னை நம்பி உன் குடும்பம் மட்டுமில்லே. சினிமாவுல பல குடும்பம் பொழைக்கணுமில்லையா – அடுத்த படத்துக்குப் பூஜை போடு – கால்ஷீட் தருகிறேன்'' என்பார்.

அந்தப் படத்திற்கும் முழுச் சம்பளம் வராது. அதையெல்லாம் அவர் தட்டிக் கேட்கவும் மாட்டார். அவருக்குத் தொடர்ந்து படப்பிடிப்பு இருந்து கொண்டே இருக்க வேண்டும். அவரால் பத்து பேருக்கு வேலை கிடைத்து, அந்தக் குடும்பங்கள் பிழைக்க வேண்டும். அதுதான் தலையாய நோக்கம்.

இப்படி மேலோட்டமாகச் சிந்தித்துச் செயல்பட்டதில், சொல்லிக் கொள்கிறாற் போல, உடம்பையும் உள்ளத்தையும் கசக்கிப் பிழிந்தாற் போல, வேடங்களை அவர் செய்யவே வாய்ப்பில்லாமல் போய் விட்டது. இயக்குநர்களும் அவரை வெறும் வியாபாரக் கதாநாயகனாகவே உபயோகப்படுத்திவிட்டார்கள். அதில் எனக்கு மட்டுமல்ல, பின்னாளில் ஜெய்க்கும் அந்த வருத்தம் இருந்தது.

படப்பிடிப்பு நடக்குமிடத்திலும் சரி, வீட்டிலும் சரி எந்நேரமும் ஒரு கூட்டம் அவரோடு இருந்துகொண்டே இருக்கும். நண்பர்கள்தான் அவர் பலமும் பலவீனமும். இரவு வெகுநேரம் கண் விழித்து உடம்பு கெட்டுப்போக அந்த நண்பர்களின் சகவாசமும் ஒரு காரணம்.

'மெர்ஸி ஹோம்' என்கிற அனாதை இல்லத்துக்கு நிறைய உதவிகள் செய்தார். நெருங்கிய நண்பர்களையும் உதவச் சொல்வார்.

உதவி கேட்டு வருவோருக்கு இல்லை என்ற வார்த்தையை உபயோகிக்காமல், தன்னால் இயன்றதைச் செய்வார்.

நண்பர் 'வியட்நாம் வீடு' சுந்தரத்தின் மனைவிக்குப் பிரசவ காலம். சுந்தரத்துக்குப் பணத்தட்டுப்பாடு இருந்தது. உடனே ஒரு தயாரிப்பாளருக்குப் போன் செய்து சுந்தரம் கதை வசனம் எழுத வாய்ப்பு பெற்றுத் தந்தார்.

துணைவி பிரசவம் நடந்த மருத்துவ மனைக்கு – சுந்தரத்துக்குத் தகவல் தராமலே – செலவுக்குப் பணம் அனுப்பி வைத்தார்.

இந்த உலகில் எதுமே நிரந்தரமில்லை. கதாநாயகன் வாழ்வு மட்டும் நிரந்தரமாக இருக்க முடியுமா?. ஒரு கால கட்டத்தில் அடுத்த தலைமுறை வந்து அந்த இடத்தைப் பிடித்துக் கொள்ளத்தான் செய்யும். குணச்சித்திர வேடங்களில் நடித்தவர், ஒரு இடைவெளிக்குப்பின் வில்லன் வேடங்களிலும் நடிக்க நேர்ந்தது.

பிரதாப் போத்தன், தோற்றத்தால் பலவீனமான ஒரு நடிகர். அவர் ஹீரோவாக நடித்த ஒரு படத்தில், பிரதாப் போத்தனிடம் ஜெய் அடிவாங்கி விழ்வதுபோல ஒரு காட்சி.

படம் பார்த்த கல்லூரி மாணவர்கள், அப்போது கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த ஜெய் அவர்களின் பிள்ளையிடம், ''ஏண்டா! ஜேம்ஸ்பாண்டா உங்கப்பா நடிச்சு, நூறு பேரைப் புரட்டி எடுத்தவரு! இந்த பிரதாப் போத்தன்கிட்ட அடிவாங்கி விழறாரே'' – என்று கிண்டல் தொனியில் சொல்லியிருக்கிறார்கள்.

பிள்ளைமூலம் இந்தச் செய்தி அறிந்த 'ஜெய்' கொஞ்சம் மன முடைந்து வருத்தப்பட்டாராம்.

கட்டபொம்மனாகவும் கர்ணனாகவும் கர்ஜனை செய்து திரைப்படம் மொத்தத்தையும் ஆக்ரமித்து ஒரு காலத்தில் நடித்த சிவாஜி 'தேவர் மகன்' படத்தில் நடித்தார். யாரோ ஒரு ரசிகர் ''அண்ணே! தேவர் மகன்ல பிச்சு உதறிட்டீங்க'' – என்று சிவாஜியிடம் சொல்ல, சிவாஜி திரும்பி அவரை ஒரு முறை முறைத்தாராம்.

புகழ் என்பதும், பொருள் என்று நாம் நினைப்பதும் நிரந்தரமாக யாரிடமும் நிலைப்பதில்லை.

செல்வமும் புகழும் – சிரித்து மயக்கும் விலை மகளைப் போன்றது. இன்று உன் மடியில் கொஞ்சும். நாளை அடுத்தவன் மடிக்குத் தாவி விடும். இதற்கு யாருமே விதிவிலக்கில்லை.

சிவகுமார் ❑

அமெரிக்க ஜனாதிபதியாக உயர்ந்த பில் கிளிண்டனும், மோனிகா லிவின்ஸ்கியுடனான உறவினால், உலகின் முன், ஒரு நாள் தலை குனிய நேரிட்டது.

பாரதப் பிரதமராக, கம்பீரமாகப் பதவி வகித்த இந்திரா காந்தி கையிலும் ஒரு நாள் விலங்கு மாட்டப்பட்டது.

இந்தியாவின் இடைக்காலப் பிரதமராகும் வாய்ப்பினை இருமுறை பெற்ற குல்சாரிலால் நந்தா வீடும் வாடகை தராததால், பலவந்தமாகக் காலி செய்யப்பட்டுச் சாமான்கள் வீதியிலே எறியும் நிலை ஏற்பட்டது.

சூப்பர் ஸ்டார் என்று அகில இந்திய அளவில் கொண்டாடப்பட்ட அமிதாப்பச்சன் சொத்தும், வீடும் ஒரு நாள் ஏலத்துக்கு வந்தது.

யதார்த்த வாழ்க்கையை நண்பர் ஜெய்யும் புரிந்துகொண்டு இயல் பாக வாழ்ந்தார்.

1999இல் எனது வெள்ளி விழா ஆண்டு, திருமண நாள் என் வீட்டில் எளிமையாக உறவும் நட்பும் புடைசூழக் கொண்டாடப்பட்டது. நண்பர் சுதாங்கன் மூலமாக ஜெய்க்கு எப்படியோ செய்தி எட்டியிருக்கிறது.

''சிவா நம்ப ஆள்டா, அவன் அழைப்பு அனுப்பித்தான் போகணுமா என்ன! வா போகலாம்'' என்று புறப்பட்டு நேரே என் வீடு வந்து என்னையும் துணைவியையும் ஆசிர்வதித்து விட்டு, ''சிவா! இங்க என்னால ஃப்ரீயா சாப்பிட முடியாது. காரியர்ல எனக்கு மறக்காம சாப்பாடு அனுப்பு'' என்று அன்புக் கட்டளையிட்டுச் சென்றார்.

அருமையான குழந்தைகள் மூன்று, அன்பான மனைவி அவருக்கு! விஜய், சங்கீதா இருவரும் டாக்டர்கள். சஞ்சய் எஞ்சினியர் முறையாகப் படிக்க வைத்து மூன்று பேருக்கும் அவர்கள் விருப்பம்போல திரு மணத்தை நடத்தி வைத்தார்.

பேரன் பேத்திகளைக் கொஞ்சிக்கொண்டு, மிச்ச வாழ்க்கையை மகிழ்ச்சியோடு கழிக்க வேண்டியவர், பரபரப்பாக வாழ்ந்தது போலவே அவசரமாகப் போய்விட்டார்.

இன்றும் 'ஹாய்' என்ற குரல் எங்கே யார் மூலம் கேட்டாலும் ஜெய்யின் முகம்தான் முன்னால் தெரிகிறது.

---

## 60



# மண்வாசனைக்கு ஒரு பாரதிராஜா

1977இல் பாரதிராஜா என்ற கலைஞனின் முதல்படமான 'பதினாறு வயதினிலே' சென்னை 'மிட்லண்ட்' தியேட்டரில் ஓடிக்கொண்டிருந்தது. தியேட்டர் வாசலில் கூட்டம் தாள முடியவில்லை. 50 நாள் கழித்தே படத்தைப் பார்க்க முடிந்தது.

கிராமப்புறத்திலேயே கிட்டத்தட்ட முழுப்படமும் கருப்பு வெள்ளையில் எடுக்கப்பட்டு வசூலில் சரித்திரம் படைத்த படம்! இளையராஜா, அறிமுகமான படம் 'அன்னக்கிளி' தேவராஜ் – மோகன் – இயக்குநர்கள்.

ஆனால் 'பதினாறு வயதினிலே', முழுக்க முழுக்க மண் வாசனையோடு செம்புழுதியும் வெங்காடுமாகக் காய்ந்து கிடக்கும் பகுதியில், அந்த மண்ணில் வாழும் மக்களையே, பின்னணியாகப் பயன்படுத்தி எடுக்கப்பட்ட அற்புதப் படைப்பு.

சிக்குப்பிடித்த தலையும், எண்ணெய் வடியும் மூஞ்சியும், மூக்கில் வளையமும், வாயில் வெற்றிலையுமாக, விந்தி விந்தி நடக்கும் சப்பாணியாக – அதுவரை நாம் பார்த்திராத 'அழகு'ப் பையன் கமல்!

'ஆட்டுக்குட்டி முட்டையிட்டு, கோழிக்குட்டி வந்ததின்னு' – கிராமியப் பாடலுக்குக் கமலும் ஸ்ரீதேவியும் வெகு இயற்கையாகப் பாவம் காட்டி நடித்திருப்பார்கள்.

அரச மரத்தடியில், அடியாட்கள் புடைசூழ, ஊர்ப் பொரணி பேசும் பொறுக்கி – பரட்டையாக ரஜினிகாந்த்.

'இது எப்படி இருக்கு' – என்று அவர் பேசும் வார்த்தைக்கு தியேட்டரே அதிரும்படி கைதட்டல் எழுந்தது. பல மாதங்கள் தமிழ் நாட்டு மக்களின் பேச்சிலே அந்த வார்த்தைகள் ஒலித்தன.

மயிலு குளிக்கிறா! மயிலு சோப்பு போடறா! என்று பாவாடைச் சிறுமிகள் மறைப்புத் தட்டி ஓட்டை வழியே, ஹீரோயின் குளிப்பதைப் பார்த்து ஒருவருக்கொருவர் பேசிச் சிரித்துக் கொள்வார்கள்.

'ஆத்தா ஆடுவளத்தா – கோழி வளத்தா – நாயி வளக்கலே – அதான் என்னை வளத்தா' – காந்திமதி பற்றி, கண்ணில் நீர்மல்க அப்பாவி சப்பாணி பேசும் வசனமும், கமலின் நடிப்பும், முத்திரைக் காட்சி.

உச்சகட்டக் காட்சியில், மயிலைத் திருமணம் செய்துகொள்ள சப்பாணி சந்தைக்குப்போய் புடவை, வேஷ்டி, தேங்காய், பழம், வெற்றிலை, தாலிக்கயிறு எல்லாம் வாங்கி வருவான்.

வீட்டிலே – பரட்டை மயிலுவை, பாலியல் பலாத்காரம் செய்து கொண்டிருப்பான். பரிதாபமாக 'டேய், அவளை விடுடா. அவளை விட்டுர்றா! என்று கெஞ்சுவான் சப்பாணி.

பரட்டை பிடியில் மயில் சிக்குண்டு படும் அவஸ்தையைக் காட்டாமல், சப்பாணியின் வேதனைக் குரலைக் கொண்டே பாரதிராஜா அந்தக் காட்சியை அற்புதமாக நமக்கு உணர்த்தியிருப்பார்.

என்ன சொல்லியும் அந்த மிருகம் கேட்காதபோது, கல்லைத் தூக்கி அவன் தலையில் போட்டுக் கொல்வதாக அக்காட்சி முடியும்.

படம் பார்த்து வெளியே வரும் இளைஞர்கள் முகத்தில் என்ன ஒரு குதூகலம்! எவ்வளவு மன நிறைவு...!

அன்றிரவு எனக்குத் தூக்கம் தொலைந்தது. இந்த இளைஞன், ஒரே படத்தில் தன் வித்தைகள் அத்தனையும் காட்டி விட்டானே! அடுத்த படத்துக்குப் பாரதி என்ன செய்யப் போகிறார் என்று பயந்தேன்...!

ஆனால், தன்னுடைய திறமை, அட்சய பாத்திரம் போன்றது. அள்ள அள்ளக் குறையாது என்று நிரூபிப்பதுபோல சிகப்பு ரோஜாக்கள், கிழக்கே போகும் ரயில், புதிய வார்ப்புகள், நிறம் மாறாத பூக்கள், டிக்... டிக்... டிக்... என்று வரிசையாக, வித்தியாசமான கதைக் கரு–காட்சி அமைப்புடன் படங்களைக் கொடுத்தார்.

'புதிய வார்ப்புகள்' வெற்றி விழா உட்லண்ட்ஸ் ஹோட்டலில் நடைபெற்றது. டைரக்டர்கள் புட்டண்ணா கனகல், ரா. சங்கரன் – ஜெகந்நாதன் போன்றோரிடம் உதவியாளராகச் சில நாள்கள் இருந்த பாரதியின் திறமை இமயம்போல் உயர்ந்திருப்பதை எல்லோரும் இதய பூர்வமாகப் பாராட்டிப் பேசினார்கள்.

டைரக்டர் கே. பாலசந்தர் அவர்கள் ஒருபடி மேலேபோய் உணர்ச்சி மேலீட்டால், 'வயசு தடுக்குது – இல்லேன்னா, இவர் திறமைக்கு அவர் காலில் விழுந்திருப்பேன்' என்று பேசினார்.

டைரக்டர் ஸ்ரீதருக்குப் பிறகு பாரதிராஜாதான் நிறைய இயக்குநர் களையும் கதாநாயகிகளையும், கதாநாயகர்களையும் தமிழ்த்திரைக்கு அறிமுகப்படுத்தினார்.

'பாரதிராஜாவின் பள்ளியில் பயின்றவன் நான்' என்று நெஞ்சை நிமிர்த்திக் கொண்டு – ஒரே படத்தில் பாரதியுடன் பணிபுரிந்தவரெல்லாம் – டைரக்‌ஷன் வாய்ப்புக் கேட்டுத் தயாரிப்பாளர் அலுவலகக் கதவுகளைத் தட்டினார்கள்... 1980களின் துவக்கத்தில்.

'வேதம் புதிது' – அவர் படைப்புகளில் ஒரு மைல் கல்! நாத்திகரான தேவரிடம், ஆத்திகச் சிறுவன் 'நான் கரையேறிட்டேன்.. நீ இன்னும் கரையேறலே' என்று சொல்லும் காட்சியில் 'உங்க பேரு என்ன' என்று சிறுவன் கேட்க, 'பாலுத்தேவர்' என்பார் சத்தியராஜ். 'பாலு உங்க பேரு! தேவர்ங்கறது என்ன, நீங்க வாங்கின பட்டமா?' என்று கேட்பான்..

கதாசிரியன் நிமிர்ந்து நின்ற காட்சி அது.

'முதல் மரியாதை' படத்தில் பாரதியுடன் சிவாஜி இணைந்து பணியாற்றினார். சிவாஜி காலத்தில், ஒரு வருஷம் கதை விவாதம் முடிந்து திரைக்கதை எழுதி வசனம் டைப் செய்யப்பட்டு அதன் பிறகே படப்பிடிப்பைத் துவங்குவார்கள்.

கதையை முன்பே நடிகர்களிடம் சொல்லி, காட்சிக்கான வசனத்தை முந்தைய இரவே, சம்பந்தப்பட்ட நடிக நடிகையருக்கு அனுப்பி வைப்பார்கள்.

வசனங்கள் நீளமாகவும் அடுக்கடுக்காகவும் பேசுவதற்குச் சுகமாக வும் இருக்கும். பெரும்பாலும் அவை 'பேசும்' படங்கள்.

பாரதிராஜா – காட்சிகளை மூளைக்குள் பதிவு செய்து வைத்திருப் பவர். வசனமும் அளவாக ஓரிரு வார்த்தைகளில் சொல்கிறாற்போல இருக்கும். நடிப்பும் பேச்சும் இயல்பாக இருக்கும்.

பார்வையிலும் அங்க அசைவிலும் நிறைய விஷயத்தைச் சொல்லக் கூடியவர்.

ஒரு நாள் சிவாஜி சொன்னார்.

''இந்த, பாரதிராஜா வித்யாசமானவன்பா...! கையை வீசி நடங்கறான். வெறுங்கால்ல வேட்டியை மடிச்சுக் கட்டிட்டு போங்கறான்! என்ன பேசன்னு கேட்டா – எதுவுமே பேச வேண்டாங்கறான். என்னடா பண்றான் இவன்னு குழம்பிப்போய் படம் பாத்தா, மெரட்டிருக்காம்பா'' – என்றார்.

சிவாஜி படத்தைச் சின்ன வயசில் பார்த்து, உணர்ச்சி வசப்பட்டு, நகங்கடித்து, கைதட்டி, கண்ணீர் விட்டு ரசித்த ஒரு பையன் – ஆளாகி, அதே சிங்கத்திற்கு, சிகரத்திற்கு, நடிப்புச் சொல்லிக் கொடுக்கிறான்...! அவரையே – சிங்கத்தை மிரட்டும் சர்க்கஸ் ரிங் மாஸ்டர் மாதிரி – ஆட்டி வைக்கிறான் என்பது பெரிய சாதனையல்லவா?

பாடல் காட்சியைப் படமாக்குவதென்றால் ஆயிரம் பறவைகள் சிறகடித்துப் பறப்பதுபோல, அவர் கற்பனைக் குதிரை காற்றிலே பறக்கும். காமிரா ஒரு விநாடிகூட நிற்காது. ஒன்று ஹீரோ ஹீரோயி னிடம் வேகமாக அருகே வரும். அல்லது அந்த ஜோடியை காமிரா தட்டா மாலை சுற்றுவதுபோல சுற்றும். இல்லையென்றால், மேலேயிருந்து கிரேனில் கீழ் நோக்கிப் பாயும்.

மலர்களையும், வண்ண வண்ண மங்கைகளையும் பாடல்களில் அதிகமாகப் பயன்படுத்துவார்.

பாரதிராஜா - இளையராஜா - வைரமுத்து கூட்டணி தமிழ்ச் சினிமாவைப் பத்து ஆண்டுகள் புரட்டிப் போட்டது.

சுருட்டை முடி, முரட்டு முகம், கட்டைத் தொண்டை, கருத்த உருவம் என்று தோன்றினாலும், ரொம்பவும் 'சென்சிடிவ்' ஆன மனிதர்.

தொட்டால் சுருங்கிச் செடிபோல, லேசாக அருகே நெருங்கினால் அந்தச் செடியிலுள்ள இலைகள் குவிந்து விடுவதுபோல - எளிதில் உணர்ச்சி வசப்படக் கூடியவர்.

அவருடைய எந்தக் கதாநாயகியும் 'எமோஷனல்' காட்சிகளில் அவரைப்போல நடிக்க முடியாது! அவர் சொல்லித் தருவதில் பாதி செய்தாலே 'ஓகோ' வென்று பெயர்வாங்கி விடலாம்...!

'பசும்பொன்' என்கிற ஒரே படத்தில் அவரோடு நான் இதுவரை பணியாற்றியுள்ளேன். செதுக்கிச் செதுக்கி, இழைத்து இழைத்து, காட்சிகளைப் படமாக்கினார். ராதிகாவின் கதாபாத்திரம் 'மாஸ்டர் பீஸ்'. வயதுக்கு மீறிய கதாபாத்திரத்தில் வாழ்ந்து காட்டினார் ராதிகா. அவர் மகனுக்காக ஏங்கி, கொஞ்சம் கொஞ்சமாக உயிர் விடும் காட்சி படத்தின் 'ஹைலைட்'.

எப்படியோ, எங்கோ தவறு நடந்து ரசிகர்களை ஈர்க்கத் தவறி விட்டது படம்.

இன்றும் அவர் பெருமையாகச் சொல்லிக் கொள்ளும் படங்களில் அதுவும் ஒன்று.

கிராமியப் பாத்திரங்களுக்குக் கவித்துவ அழகு கொடுத்த முதல் படைப்பாளி பாரதிராஜா.

---

61



# சின்னத்திரை நோக்கி

ஓவியக்கலைஞனாக வாழ்க்கையைத் தொடர நினைத்த என்னை, சிவகுமார்ராக்கி, உலகளாவிய தமிழ் மக்கள் அறிந்திடச் செய்தது திரையுலகம்தான். இன்றைய புகழ், பொருள், வாழ்வு எல்லாம் திரையுலகம் இட்ட பிச்சை.



உயர்ந்த கலாரசிகரும் கலைகுருமான டத்தோ ஸ்ரீ சாமிவேலு, சின்னத்திரையிலும் முன்னோடியான கே.பி.யுடன்

ஆயிரம் ரூபாய் சம்பளத்தில் நடிக்கத் துவங்கி, நூற்றி இருபது படங்களை முடிக்கும் காலங்கள் வரைகூட நான் லட்ச ரூபாய் சம்பளத்தை எட்டவில்லை. வற்புறுத்தி என் தயாரிப்பாளர்களிடம் அதிகம் கேட்டதில்லை.

காரணம், திரையுலகம் என்னைக் கைவிடாது என்ற அசாத்திய நம்பிக்கை. நடிப்பைப் பொறுத்தவரை நான் பூஜ்ஜியத்திலிருந்து புறப் பட்டவன்.

நான்கைந்து உப்புச்சப்பில்லாத காட்சிகளில் துவங்கி, இரண்டாம் கதாநாயகன் வேடம்! பின்னர், பாடல்களுடன் நடிக்கும் வாய்ப்பு! அடுத்து இரண்டு கதாநாயகர் படம்! புராண, சரித்திர, சமூகப்படங்களில் பெரிய கதாநாயகர்களுடன் நடிக்கும் வாய்ப்பு! இறுதியாக முழுமையாக ஹீரோ! இப்படி எட்டு ஆண்டுகள், முப்பத்தி எட்டுப் படங்களில் நடித்தபின்பே என்னை முழு கதாநாயகனாக, நான் மனத்தளவில் ஏற்றுக்கொண்டேன்.

திரையுலகில் எனது வளர்ச்சி மெதுவானது. தெளிவானது. 200 படங்கள்..., அதில் 175 படங்களில் எனக்குக் கதாநாயகனுக்குரிய அர்த்த முள்ள வேடங்கள் அமைந்தன.

ஒரு நூறாண்டு வரலாறு படைத்த திரையுலகில், எண்ணற்ற மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன...!

பேசாத படங்கள் வெளிவந்த ஆரம்பக்கட்டத்தில், மக்களுக்குத் தெரிந்த புராணக் கதைகள் படமாயின. பின்னர் குடும்பக் கதைகள் – காதல் கதைகள், கிராமிய மண்ணின் பெருமை சொல்லும் கதைகள் திரை வடிவம் பெற்றன.

சமீபமாக, இசைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்துப் பாடல், ஆடல்களைப் படமாக்க கோடிக்கணக்கில் செலவு செய்து 'செட்' போட்டுப் படங்களை உருவாக்குகிறார்கள்.

பெரும்பாலும், இன்றைய சினிமா – ஒரு கதாநாயகன், அவன் தோள் பலத்தைப் பறைசாற்ற ஒரு வலிமையான வில்லன், அணைத்து முத்தமிட ஒரு நாயகி, அர்த்தமற்ற காட்சிகளுடன் கிச்சு கிச்சு மூட்ட ஒரு நகைச் சுவை நடிகன் – என்று மிகச் சிறிய வட்டமாகச் சுருங்கிவிட்டது.

புதுமுகநாயகன் படமென்றால், மேற்கத்திய இசையின் சாயலில் பாடல்! அதற்கு ஐம்பது, அறுபது துணைப்பெண்கள், சீருடை அணிந்து உடற்பயிற்சி செய்வதுபோல கையையும் காலையும் உதறி, எகிறிக் குதிக்கும் ஆட்டம்! பறந்தடிக்கும் நான்கு சண்டைக் காட்சிகள்! இவற்றை ஒட்ட, மெலிதான நூலிழையில் ஒரு கதை!

அத்தி பூத்தாற்போல அவ்வப்போது 'ரோஜா', 'அமைதிப்படை', 'மகாநதி', 'காதல்கோட்டை', 'பூவே உனக்காக', 'இந்தியன்', 'கல்கி', 'அவ்வை சண்முகி', 'சேது', 'காக்க காக்க' போன்ற படங்கள் ஆறுதல் அளிக்கின்றன.

கோடிகளைத் தொட்டுக் கொண்டிருக்கும் கதாநாயகர்களோடும் நான் போட்டி போட முடியாது. கொடூர வில்லன் வேடமும் ஏற்க முடியாது.

அடுத்து குணச்சித்திர வேடம், கதாநாயகனுக்கு அப்பா! அல்லது நாயகிக்கு அப்பா...! நாயகிக்கு அப்பா என்றால், இரண்டு நிலைகள் உள்ளன. ஏழை அப்பா – பணக்கார அப்பா.

''உனக்கு ஊருக்குள்ளே ஆயிரம் பொண்ணுங்க கிடைப்பாங்க எம்பொண்ணை விட்டுடுப்பா'', என்று பணக்கார ஹீரோவிடம் பரிதாபமாகக் கெஞ்சும் ஏழைத் தகப்பன்.

''வேலை வெட்டியில்லாத தெருப்பொறுக்கி நீ! எம்பொண்ணை லவ் பண்ண உனக்கு என்ன யோக்யதை இருக்கு?'' – என்று கொக்கரித்து, கடைசியில் கதாநாயகனிடம் சரணடையும் கோடீஸ்வர அப்பா.

இந்த இரண்டு வேடங்கள் தவிர இப்போது தமிழில் வரும் ரெடிமேட் கதைகளில் என் போன்றோருக்கு என்ன நல்ல வேடம் கிடைக்கும்?

இப்படி யோசித்த வேளையில் சின்னத்திரை சிகப்புக்கம்பளம் விரித்து என்னை அழைத்தது.

'நீதிமான்' என்ற பெயரில் பி.ஆர். சோமு உருவாக்கிய 13 வாரத் தொடர், திரைப்படமாக வந்திருக்க வேண்டிய அற்புதமான கதை. முதலில் ஒளிபரப்பாகி இவ்வாண்டு மறு ஒளிபரப்பாயிற்று.

'மீண்டும் மீண்டும் நான்' முழுக்க இலங்கையில் உருவானது. மறுபிறவியை அடிப்படையாக வைத்து மனோபாலா உருவாக்கிய சுவையான தொடர்.

'புனித பூமி' சுதந்திரப் போராட்ட காலத்தில் துவங்கி, மூன்று தலைமுறையாக ஜாதி, மத பேதமின்றி, நட்புக்கு உயிர்கொடுக்கும் இந்து, முஸ்லீம் நண்பர்கள் பற்றிய தொடர்.

இவை ஒளிபரப்பாகி விட்டன.

திரைப்படத்தின் வீரியமும், சின்னத்திரையின் பலவீனமும் இந்த இடைவெளியில் தெளிவாகத் தெரிந்தது.

சினிமா ஸ்கோப்பில்; அகண்டதிரையில், பிரம்மாண்டமாகக் காட்சிகள் கண்முன்னே விரிய, தியேட்டருக்குள் அடைபட்ட 150 நிமிடங்களும், உடலாலும் மனத்தாலும் ரசிகன் சிறை வைக்கப்படுகிறான்.

ஒருமித்த சிந்தனையுடன் திரைப்படத்தோடு எளிதாக ஒன்றி விடுகிறான். ஆழ்மனதில் பதியும் பாடல்களும் காட்சிகளும் எத்தனை ஆண்டுகளானாலும் பசுமரத்தாணியாய் அவன் நினைவை விட்டு அகலுவதில்லை.

இன்று எப்படியும் இந்தப் படத்தைப் பார்த்தே ஆகவேண்டும் என்ற வெறியில் தியேட்டருக்குள் நுழைந்து நூறு, இருநூறு போனாலும் பரவாயில்லை என்று கள்ள மார்க்கட்டில் டிக்கெட் வாங்கி, தியேட்டரில் நுழையும் ரசிகனுக்கு, சினிமாமீது தானாகவே ஒரு மரியாதை வந்து விடுகிறது.

பல லட்சம்பேர் பார்ப்பதாகப் புள்ளி விபரம் சொன்னாலும், சின்னத் திரையில் வரும் சினிமாவும் சரி, தொடர்களும் சரி அழையாமல் வரும் விருந்தாளிபோல்தான்.

ஸ்விட்ச் போட்டால் விளக்கு எரிவதுபோல, வேண்டுமென்றால் டி.வி. ஆன் செய்யலாம். வேண்டாமென்றால் அணைத்துவிடலாம்.

எட்டுத் திரைப்படங்களை வீடியோவில் பதிவு செய்து 24 மணி நேரமும் இடைவிடாமல் ஒளிபரப்புகிறார்கள். அதிகாலை 6 மணிக்கு யதேச்சையாக டி.வி.யை ஆன் செய்தால் 'ஏணிப்படிகள்' உச்சகட்டக் காட்சி போய்க் கொண்டிருக்கிறது!

சென்னை தொலைக்காட்சியில் ஞாயிற்றுக்கிழமை மட்டும் திரைப் படங்கள் ஒளிபரப்பியபோது, ஆர்வத்தோடு மக்கள் அந்த மாலை வேளைக்குக் காத்திருந்தார்கள்.

இப்போது சாடிலைட் டி.வி.யில் எப்போது வேண்டுமானாலும் படம் பார்க்கலாம். ஏதாவது ஒரு திரைப்படத்தை அவர்கள் காட்டிக் கொண்டே இருப்பார்கள் என்கிறபோது, படம் பார்க்கின்ற ஆர்வம் குறைந்து விடுகிறது.

அத்துடன் டி.வி.யில் ஒரு நிகழ்ச்சியைப் பார்க்க அமர்ந்தால் எத்தனை விதமான இடையூறுகள்! வேண்டாத போன்கால்கள், விடாக்கண்டர்களாக வந்தமரும் விருந்தினர்கள், குழந்தைகளின் ஹூட்டி, கார்களின் இரைச்சல் – இவ்வளவையும் தாண்டிப் படம் எப்படி மனத்தில் பதியும்?

ஒரு தொடர் ஒளிபரப்பாகும் நேரம் பிற்பகல் 2 மணி, இரவு 8 மணி என்றால் வேலைக்குச் செல்பவர்கள் வீடு வந்து சேர்ந்து பார்க்க முடியாது.

இரவு 9 மணி முதல் 9.30 மணிவரை ஒளிபரப்பாகும் 50 வார தொடரை ஒரு நாள்கூட தவறாமல் முழுசாகப் பார்ப்பவர்கள் நூற்றுக்குப் பத்துபேர் இருந்தால் பெரிய விஷயம்.

30 நிமிடத் தொடரில், இடையிடையே விளம்பரம், முன் கதைச் சுருக்கம் என்று பல நிமிடங்கள் கழிந்ததுபோக 14, 18 நிமிடங்கள் மட்டுமே புதிய காட்சிகள் வருகின்றன.

ஒருவார இடைவெளியில் ஒவ்வொரு மனிதன் வாழ்க்கையிலும் எவ்வளவோ நிகழ்வுகள். அதையெல்லாம் தாண்டிச் சென்ற வாரக் காட்சியை, கதையை, நினைவில் வைத்துக்கொள்ள எவ்வளவு பேரால் முடியும்?

இரண்டரை மணி நேர சினிமா ஏற்படுத்துகிற தாக்கத்தை, 25 வார தொடரில்கூட ஏற்படுத்த முடியாது. காரணம் தொடர்ச்சி விட்டுப் போவதுதான்.

இவ்வளவு மைனஸ் பாயிண்ட்டுகள் இருந்தாலும், படைப்பாளி திறமைசாலியாகவும், இந்த மீடியத்தைத் திறம்படக் கையாளத் தெரிந்தவ ராகவும் இருந்தால், பெயர் பெறமுடியும் என்பதற்கு, கே. பாலசந்தர் அவர்கள் உருவாக்கிய 'ரயில் சிநேகம்', 'கையளவு மனசு', 'காதல் பகடை' தொடர்கள் சாட்சி.

UTV என்ற பம்பாய் நிறுவனம் 'பரமபதம்' என்ற பெயரில் பட்டுக் கோட்டை பிரபாகர் எழுதித்தந்த கதையை, 260 வாரத் தொடராகப் படமாக்கினார்கள். அரசியல், சினிமா, சமூக விரோத கும்பல் மூன்றையும் களமாக எடுத்துக்கொண்டு விரிவாக, சுவையாகப் படமான தொடரில், முன்னாள் வெற்றிப் படத்தயாரிப்பாளர் – இந்நாள் ஏற்றுமதி நிறுவனத் தின் உரிமையாளர் – கலையுணர்வு மிக்கவராக தொடர் நெடுகிலும் வரும் ஆணிவேரான பாத்திரம் எனக்கு.

மூன்று காமிராக்கள் ஒரே நேரத்தில் இயங்கி – Close up shotகள், Long shot என framing செய்து, ஒரு காட்சியை நடிகர்கள் சேர்ந்தாற் போல், நாடகம் மாதிரி நடித்து முடிக்கும் நேரத்தில், எடிட்டிங் வேலைகளையும் முடித்து விடுகின்றனர்.

நடிக்கும்போது பேசுவது நேரடியாக ஒலிப்பதிவாவதால் திரும்பவும் குரல் பதிவு செய்ய வேண்டிய சிரமமும் இல்லை.

பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள் நாடக மேடையில் பெற்ற அனுபவம், பக்கம் பக்கமாக வசனங்கள் கொடுத்த போதிலும், அவற்றை எளிதில் மனப்பாடம் செய்து இயல்பாகப் பேசி நடிக்கத் துணை நிற்கின்றது.

செவன்த் சானல் நாராயணன் அவர்கள் உருவாக்கிய 'எத்தனை மனிதர்கள்' 100 வாரத் தொடருக்கு, ரமணீயன், கண்மணி சுப்பு கதை, திரைக்கதை, வசனங்களுக்குப் பொறுப்பேற்றிருந்தனர்.

ஒரு பத்திரிகை ஆசிரியர் வாழ்க்கையை விவரிக்கும் கதை! கல்லூரி நாள்களில் காதல், வீட்டைவிட்டு வெளியேறுதல், பின்னர் பத்திரிகை பொறுப்பு, எடிட்டோரியல் டிபார்ட்மெண்டில் ஏற்படும் அபிப்பிராய பேதங்கள், ஊழியர் வேலை நிறுத்தம், உறவுகள் தரும் உபத்திரவம் என்று ஒரு வாழ்க்கையே தொடராயிற்று.

1990களில் 'நீதிமான்' தொடர் படப்பிடிப்புச் சமயம். துணை நடிகர்கள் என்னைப் பார்த்து 'என்ன சார் இத்தனை வருஷமா சினிமாவுல ஹீரோவா: நடிச்சிட்டு, TVக்கு வந்திட்டீங்களே – என்று கேட்டபோது, நான் சொல்லும் சமாதானம் அவர்களைத் திருப்திப் படுத்தாது என்று உணர்ந்து மௌனப் புன்னகை செய்தேன்.

1999இல் 'சித்தி' தொடர் உருவாக ஆரம்பித்ததும் நிலைமை தலைகீழாகிவிட்டது. தமிழகத்தில் மட்டும் சுமார் 4½ கோடி பேர் 'சித்தி' தொடரைப் பார்த்ததாகப் புள்ளிவிவரங்கள் கூறின.

திருமணங்களுக்குச் சென்றால், என்னைப் பற்றித் தனிப்பட்ட முறையில் எதையும் விசாரிக்காமல், 'பாவம் சார், அந்தப் பொண்ணு! செங்கோட்டை ஜமீன்னு பொய்சொல்லி, அவளை நம்பவச்சு, அந்தச் சேரிப்பய, அவளை கல்யாணம் பண்ணிக்கிட்டான். ஆயிரம் இருந்தாலும் உங்க குழந்தை அவ. மன்னிச்சு அவளை ஏத்துக்குங்க...! சேரில அந்தப் பெண் கஷ்டப்படறது மனசுக்கு ரொம்ப கஷ்டமா இருக்கு'' என்று 'சித்தி'யில் வரும் கதாபாத்திரத்திற்காகக் கல்யாண மண்டபத்தில் பல பெரியவர்கள் என்னிடம் மன்றாடுவார்கள்.

25 வயதைக் கடந்த இளைஞர்கள், குடும்பப் பெண்கள், 80 வயதைக் கடந்த பெரியவர்கள் என்று சுமார் 70% தமிழ் மக்களைக் கட்டிப்போட்ட மெகா தொடர் 'சித்தி'.!

'அண்ணாமலை' இன்று உலகின் பெரிய நாடுகளிலெல்லாம் ஒளிபரப்பப்படுகிறது. ABT மகாலிங்கம் அவர்கள் குடும்பம், 3 தலைமுறையாக வசதிமிக்க பெரிய குடும்பம். மகாலிங்கம் அவர்களின் துணைவியார், 'அண்ணாமலை' தொடரில், வீட்டோடு கோபித்துக் கொண்டு, புள்ளைத்தாச்சி மனைவியை அழைத்துக்கொண்டு நான் ஊரை விட்டு வெளியேறும் காட்சியைப் பார்த்திருக்கிறார்.

அரண்மனை போன்ற வீட்டு வாசலில் வந்து நின்று மஞ்சள் பையும் தகரப்பெட்டியுமாக மனைவியுடன் அந்த வீட்டை ஒருமுறை பார்த்து, ''நான் பொறந்த வீடே! இந்த வீட்டில் வாழ்ந்த மூதாதையர்களே! போயிட்டு வர்றேன்'' என்று கூறித் தரையில் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கி எழுந்திருக்கும் காட்சி, நெஞ்சை அடைத்தது என்று, போன் மூலம் எனக்குத் தகவல் அனுப்பினார்.

கிட்டத்தட்ட 200 படங்களில் – பெரும்பாலும் கதாநாயகனாகவே நான் நடித்திருக்கிறேன். என்னுடைய திரைப்படங்கள் பார்த்து அவர் போன் செய்ததே இல்லை.

'அண்ணாமலை' தொடர், தினந்தோறும் பார்க்கும் காட்சிகள், சம்பவங்கள், அன்றாட வாழ்க்கையோடு இரண்டறக் கலந்து விடுகின்ற அதிசயத்தைப் பார்க்கிறேன்.

சித்தி, அண்ணாமலை எல்லாமே, திரையுலகின் மாற்றத்தை எதிர் நோக்கித்தான்.

நான் ஒரு தீவிரமான 'ஆப்டிமிஸ்ட்'! 'நடப்பவை யாவும் நல்லவையே! அனைத்தும் நன்மைக்கே' என்று நினைப்பவன்.

நூறு வயதைத் தொட்ட மொரார்ஜிதேசாயிடம், ''இந்த உலகில் நிரந்தரமானது, சாசுவதமானது எது'' என்று ஒரு பத்திரிக்கையாளர் கேட்டார்.

அதற்கு அவர், ''உலகில் நிலையானது மாறுதல்கள். ஆம். மாறுதல்கள் தான் என்றும் நிலையானவை.

''இன்றுள்ள வன்முறைக் கலாச்சாரம், மதிப்பீடுகள் மீதான எதிர்ப்புணர்வு, வெறுப்பு, துவேஷம், பழிவாங்கும் குணம், பொறாமை இவை அனைத்தும் மாறும்.

''மீண்டும் அஹிம்சை மதிப்புப் பெறும் அன்பும் அறமும் தழைத் தோங்கும். பண்பும் பாசமும், போற்றப்படும்'' என்றார்.

அந்த மாறுதல்கள் திரையுலகிலும் நிகழும். கதாசிரியன் சிம்மாசனத் தில் அமர்த்தப்பட்டு, பேனாமுனை மதிப்புப் பெறும் காலம் விரைவில் வரும்!

அப்போது அர்த்தமுள்ள கதைகள், ஆழமான கருத்துக்கள் மீண்டும் திரை மூலம் உயிர் பெறும். அதுவரை சின்னத்திரையில் தற்காலிகமாக பவனி வருவேன்.

---

62



# துரோணர் சிவாஜி

'அழகான ஆண், அழகான பெண்' என்று நாம் முடிவு எடுக்கும் பெரும்பாலானவர்களை உற்றுநோக்கினால், ஒரு பொதுவான இலக்கணத்துக்குள், அவர்கள் வருவார்கள்...!

அழகான கண்கள், நீரோட்டமுள்ள பெரிய கண்கள் அமைந்திருக்க வேண்டும். இரண்டு கண்களுக்கு இடையேயுள்ள இடைவெளி ஒரு கண் அளவே இருக்க வேண்டும்.

கூர்மையான எடுப்பான மூக்கு அமைந்திருக்க வேண்டும். நேராக நிற்கும்போது நாசித்துவாரம் தெரியாமல் மூக்கின் நுனி சற்றே கவிழ்ந் திருக்க வேண்டும்.

புருவத்திலிருந்து மூக்கின் நீளம் எந்த அளவுக்கு இருக்கிறதோ, அதே அளவு, புருவத்தின் மேல் நெற்றியின் அளவும், மூக்கின் கீழே தாடை வரை உள்ள அளவும் இருக்க வேண்டும்.

வலது பக்கமாக மென்று சாப்பிடும் பழக்கமுள்ளவர்களுக்கு வலது தாடை பெரியதாக இருக்கும். இடதுபக்கம் பயன் படுத்துவோருக்கு இடது தாடை பெரியதாக இருக்கும்.

தலைக்கும் மார்புக்கும் இடையே உள்ள கழுத்துப் பகுதியின் நீளம் கோடு விழாத கழுத்துச் சதை முக்கியம்.

ராமர், லட்சுமணர் ஓவியங்களில் இருப்பதுபோல அளவான மார்பும், திரண்ட புஜங்களும், குறுகிய வயிறும் இருத்தல் வேண்டும்.

கைவிரல்கள், ஓவியர் எஸ். ராஜம் படைப்புகளில் உள்ளதுபோல கூராக இருந்திட வேண்டும்.

ஒட்டுமொத்தமாக 75% ஆண்மையும் 25% பெண்மையும் கலந்து இருக்கின்ற ஆண்மகனே, அதிக மக்களைக் கவர்வான் என்பது இலக் கணம். விதிவிலக்கை விட்டுவிடலாம்.

மேலே சொன்ன தகுதிகளைப் பெரும்பாலும் சிவாஜியின் ஆரம்பப் படங்களில் நாம் காணமுடியும்.

சிவாஜியின் மிகப்பெரிய சொத்து அவருடைய ஒளிமிக்க, உயிர்ப் புள்ள கண்கள்தான். அந்தக் கண்களை வைத்துத்தான் பரிவை, பாசத்தை, பயத்தை, கோபத்தை, அழுகையை, ஆச்சர்யத்தை, அப்பாவித்தனத்தை, ஏக்கத்தை, ஏமாற்றத்தை, வீரத்தை, விவேகத்தை – அவர் அதிகமாக வெளிப்படுத்தினார்.

'பாச மலர்' படத்தில் 'மலர்களைப்போல் தங்கை உறங்குகிறாள்' என்ற பாடல் வரிகள் துவங்குமுன், பால் தம்ளர் கையில் ஏந்தி வந்தவர், கண்ணுறங்கும் தங்கையைப் பார்த்து, வட்டக் கருவிழியின் அடியில் இலேசாக, நீர் தேக்கி, பாசத்தை வெளிப்படுத்துவார்.

'சாம்ராட் அசோகன்' நாடகத்தில் மனத்தளவில் திருந்திய அசோக மன்னன் உணர்வுகளை, பொங்கியெழும் கோப விழிகள், தூக்கிய

புருவங்கள் – கொஞ்சம் கொஞ்சமாகமாறி, கண்களில் இலேசாக நீர் கட்டி, புருவங்கள் இறங்கி, படிப்படியாகச் சாந்த நிலை அடைவதை – அற்புதமாக வெளிப்படுத்தியிருப்பார்.

'உடல் ஊனம் ஊனமல்ல, உன்னைத்தான் நான் மணந்து கொள்வேன்' என்று 'பாகப் பிரிவினை'யில் சரோஜாதேவி சொல்ல, வாதம் வந்த கையை ஒருமுறை பார்த்துவிட்டு, 'இந்தப் பரிதாபத்துக்குரியவன் மேலா ஆசைப்படுகிறாய்' என்று பரிதாபம், அடி மனத்தில் ஆனந்தம், அவளுக்கு நன்றி கூறுதல் அனைத்தையும் சில நொடி கண்ணசைவில் காட்டுவார்.

'பாவ மன்னிப்பு' படத்தில், எம்.வி. ராஜம்மாதான் தன்னைப் பெற்ற அன்னை என்று அறியாத சிவாஜி, ஒரு காட்சியில் நன்றிப் பெருக்கால் 'அம்மா... அம்மா... அம்மா' என்று பாசத்தை, நன்றியை, கண்களில் தேக்கி அழுதுகொண்டே சிரிப்பார்...!

புத்தரின் சாந்தத்தையும் அந்தக் கண்கள் வெளிப்படுத்தும், போதை யுடன் தள்ளாடும் குடிகாரனையும் அந்தக் கண்கள் வெளிப்படுத்தும்! அப்படி ஓர் ஆற்றல் மிக்க விழிகள் அவை!



'பராசக்தி'

அழகான சிறிய உதடுகள் அவருக்கு. சிரித்தால் கன்னங்களில் எலுமிச்சம் பழம்போல, கன்னக் கதுப்புகள், சிரிப்புக்கு அழகூட்டும்.

இடதுபக்கமுள்ள சிங்கப்பல், கவர்ச்சியைக் கூட்டும்.

தமிழை அவரைப்போல் உச்சரித்த நடிகர்கள் இதுவரை பிறக்க வில்லை.

''அய்யோ ஏமாந்தேன்! எத்தனையோ கஷ்டப்பட்டு, கடல் கடந்து வந்தேன்! கல்யாணி! காலையிலே உன்னைக் காணலாம், அத்தானைக் காணலாம், அப்பாவைக் காணலாம் என்று ஆசை அலைமோதிக் கிடந்தேனே! நெஞ்சிலே நஞ்சை அள்ளிக் கொட்டிவிட்டாள். கொஞ்சிக் குலவிக் கொடுமை செய்து விட்டாள். வஞ்சகி!'' என்று 'பராசக்தி'யில் ஆட்டக்காரியிடம் உடைமைகளை இழந்த அப்பாவியாகப் பேசுவது...

''அனார்! காதலுக்கு ஓர் எடுத்துக்காட்டே! கவிஞர்களும் தொடுத்திட இயலாக் கற்பனை ஆரமே! சிரித்துச் செழித்த உன் சிங்கார முகத்தை எரித்துக் கெடுக்க வேண்டாமென்று கல்கொட்டி மூடினரோ கல்லினும் வலிய மனமுடையோர்!'' என்று 'இல்லறஜோதி'யில் காதலி அனார்கலி யைப் பறிகொடுத்த சலீமின் க்தறல்!...

''நீலவானிலே செந்நிறப் பிழம்பு, அந்த வட்ட ஒளியின் பெயர் சூரியன். சுட்டெரிக்கும் செஞ்சுடர் அது. அதுதான் நீரின் நெற்றியிலே இட்ட, இந்த வட்டமான ரத்த நிறப்பொட்டு'' என்று 'கட்டபொம்மனில்' மனைவியிடம் போர் முழக்கமிடுவது ...

''கைவீசம்மா கைவீசு! கடைக்குப் போகலாம் கைவீசு!'' என்று நொறுங்கிய இதயத்துடன், உடைந்த குரலில் 'பாச மலர்' கடைசிக் காட்சியில் நடிப்பது ...

''கலைவாணி! கருணாகரி! கல்விக்கரசி! சொல்லின் செல்வி! கற்றவர் போற்றும் கலாதேவி! வித்தை படித்தோர் வணங்கும் வேதவல்லி! காவிய நாயகர்கள் போற்றும் கலையுலகின் நாயகியே!'' என்று பெருமையுடன் சரஸ்வதியைப் போற்றித் துதிப்பது...

*''கொங்குதேர் வாழ்க்கை*
*அஞ்சிறைத் தும்பீ!*
*காமம் செப்பாது கண்டது மொழிமோ!*
*பயிலியது கெழீஇய நட்பின் மயிலியற்*
*செறியெயிற் றரிவை கூந்தலின்*
*நறியவும் உளவோ நீ அறியும் பூவே!''*

– என்ற பல்லை உடைக்கும் சங்க இலக்கியப் பாடலைத் 'திருவிளையாடல்' சிவன் வேடத்தில் உச்சரிப்பது – இப்படித் தமிழ்

மொழியில், அவரளவுக்கு அதிகப்படியான எண்ணிக்கையில் தமிழ் வார்த்தைகளைப் பேசி நடித்த நடிகர் வேறு யாருமே இருக்க முடியாது.

ஒரு நடிகன், வேஷம் கட்டுவதிலேயே 50% மார்க் வாங்கிவிட வேண்டும் என்று சொல்வார். விதவிதமான வேடம் அணிந்து பார்ப்பதில் அவருக்கு அடங்காத வெறி உண்டு. சரித்திர நாயகர்களாக இருந்தாலும் சரி, புராண வேடங்களாக இருந்தாலும் சரி, சமூகத்தில் காணும் வித்தியாச மான மனிதரின் வேடமாக இருந்தாலும் சரி அவற்றை ஆதாரபூர்வமாகச் செய்து பார்க்கப் பெரிதும் முயற்சி எடுத்துக்கொள்வார்.

கட்டபொம்மன், கர்ணன், ராஜராஜ சோழன், அரிச்சந்திரன், ஜகாங்கீர் என ராஜா வேடம் போடும்போது – உடைகள், கிரீடம், முகத்தின் தோற்றம், தாடி, மீசை, புருவம் இவற்றிலும், தலை முடியிலும் மாற்றங் களைத் தெளிவாகச் செய்வார்.

அதே போல ராமன், இராவணன், கிருஷ்ணன், நாரதர் என்று புராண வேடங்கள் ஏற்கும்போதும், தேர்ந்த நாடகத் துறை உடையலங்கார நிபுணர்களை வைத்துக்கொண்டு, காதில் அணியும் தோடு, ராமர், பரசுராமர், அர்ஜுனன் – கையில் உள்ள ஆயுதங்களை எல்லாம் சரி பார்ப்பார்.

'பாடி லேங்வேஜ்' என்று சொல்கிற உடல் மொழி அவருக்கு முதல் படத்திலேயே சரளமாக வந்த விட்டதை 'கல்லைத்தான், மண்ணைத்தான், காச்சித்தான், குடிக்கத்தான், கற்பித்தானா!' என்று நடிக்கும் ஒரே காட்சியை 'பராசக்தி' படத்தில் பார்த்தாலே புரிந்துவிடும்.

சிவாஜி வேடத்தில் அவர் நடித்ததை நாம் பார்த்திருக்கிறோம். அந்தத் தலைப்பாகை, தாடையிலிருந்து நீண்ட தாடி, சிக்கென்ற ராஜ உடை, நீண்டவாள். இவற்றுடன் நீண்ட வசனத்தை அங்க அசைவுகளோடு பேசி, சிங்கநடையோடு அவர் நடித்ததை இன்னொருவர் முயன்று பார்க்கட்டும்...

சங்கிலியால் கட்டிச் சபையில் இழுத்துவர, புலிபோல் ஒரு நடை நடந்து வருவார் – மனோகரா – படத்தில்.

மரமேறும் சாமுண்டி கிராமணியாய் 'காவல் தெய்வத்தில்' கைதட்டல் பெறவே ஒரு நடை நடப்பார்.

'போனால் போகட்டும் போடா' பாடலில் இசைக்கேற்ப, தாளத்துக் கேற்ப ஒரு நடை நடப்பார்.

'சட்டி சுட்டதடா, கைவிட்டதடா' பாடலுக்கு ஒரு வித்தியாசமான 'வாக்கிங் ஸ்டிக்' ஊன்றிய நடை.

அப்பர் சுவாமிகளாக 'திருவருட் செல்வரில்' முதிர்ந்த பெரியவர் நடை.

''வெற்றிவேல்! வீரவேல்! சுற்றிவந்த பகைவர் தம்மை தோள் நடுங்க வைத்த எங்கள் சக்திவேல்!'' என்ற 'கந்தன் கருணை' பாடலில் முழங்கும் போர் முரசுக்கு இசைவாக ஒரு கம்பீர நடை!

கவிதைகளில் ஒரு தாளம், ரிதம் இருப்பதுபோல, பேசும் வசனங்களில் ஒரு ரிதம், நடக்கும் நடையில் ஒரு தாளம் இருக்கிறது என்பதை அடிக்கடி சொல்வார்.

அவருடைய நினைவாற்றல், கிரஹிக்கும் சக்தி அபாரமானது! காட்சிக்கான வசனங்களை, மற்றவர்களைப் படிக்கச் சொல்லிக் கேட்டு மனப்பாடம் செய்துகொண்டு நடிப்பதில் அவரைவிட வேறு யார் செய்ய முடியும்?

நடிக்கின்ற எந்தக் காட்சியிலும் உணர்ச்சியின் உச்சத்தைத் தொடும் சிவாஜி, அடிக்கிற காட்சிகளில் பாசாங்கு செய்யமாட்டார். பட்டையைக் கழற்றி விடுவார்.

'உயர்ந்த மனிதன்' உச்சகட்டக் காட்சியில், திருட்டுப் பழி சுமத்தப் பட்ட என்னை, பிரம்பால் அடிக்கும் காட்சியில் பிரம்பு நாலாய்த் தெறிக்கும் அளவுக்கு விளாசித் தள்ளி விட்டார்!

அவரைக் கட்டுப்படுத்த சௌகார் ஜானகியும் பாரதியும் எவ்வளவோ முயன்று சட்டையை எல்லாம் கிழித்துக் கூச்சல் போட்டனர்.

இன்றும் அந்தக் காட்சியைப் பார்த்துக் கலங்காதவர் இருக்க முடியாது.

ஜெமினியின் 'விளையாட்டுப் பிள்ளை' படத்தில் ஒரு காட்சியில் பத்மினி கன்னத்தில் ஓர் அறை விட்டார். கர்து தோடு கழன்று ஓடி, அடுத்த படப்பிடிப்புத் தளத்தில் விழுந்துவிட்டது.

'ஷாட்' முடிந்ததும், பத்மினி ஐந்து நிமிடம் அனுமதி பெற்று வெளியே போனார்.

போனவர் சிறிது நேரம் உள்ளே வரவில்லை. என்ன நடந்தது என்று பார்க்க உதவி இயக்குநர் சென்றார். அந்தப் படப்பிடிப்புத் தளத்துக்குள் நாற்காலியில் உட்கார்ந்து, முகம் சிவக்க, உதடுகள் துடிக்க, கண்களில் நீர் பெருக்கியவாறு இருந்தவரைப் பார்த்துப் பதறிப்போய் 'என்னம்மா' என்று கேட்டார்.

''ஒன்றுமில்லை. வலி தாங்க முடியவில்லை. முழுசா அழுதிட்டு வந்திடறேன். ஐந்து நிமிடம் பொறுத்துக்குங்க!'' என்றாராம் பத்மினி!

படப்பிடிப்புக்கு உரிய நேரத்தில் வருவதில் அவர்தான் எங்களுக்கு முன்னுதாரணம். 'திருவருட்செல்வர்' படத்தில் அதிகாலை சூரியன் உதிக்கையில் அப்பரும், திருஞானசம்பந்தரும் பாடும் காட்சியைப்

படமாக்க, இரவு 12 மணிக்கு, அப்பரின் வயதான தோற்றத்திற்கு ஒப்பனை செய்ய ஆரம்பித்து, மூன்று மணிக்கு முடித்து, அதிகாலை நான்கு மணிக்குக் கோவளம் கடற்கரைக்கு நேரே போய்விட்டார்!

'ராஜராஜசோழன்' படப்பிடிப்பு. வாசு ஸ்டுடியோவில் தஞ்சை பெரிய கோயிலின் ஒரிஜினல் அளவில் 'செட்' போட்டிருந்தார்கள்.

அதிகாலை ஏழு மணிக்குப் படப்பிடிப்பு. சிவாஜி, ஒரு அடி உயரமுள்ள அலங்காரக் கொண்டையுடன், திருப்பாச்சி அரிவாள் மீசையுடன், ஆடை அலங்காரங்களுடன் படப்பிடிப்பு நடந்த இடத்துக்கு 6.50க்குக் கம்பீரமாக நடந்து வந்தார்.

நான், அவருக்கு அரை மணி நேரம் முன்னதாக 'ஸ்பாட்டு'க்குப் போயிருந்தேன். எனக்கு 'ஷாட்' வைத்து எடுத்துக் கொண்டிருந்தார்கள்.

சிவாஜிக்குக் கோபம், ஆத்திரம். ''என்னடா! நான் ரயில்ல வந்தா. நீ பிளேன்ல வர்றியா?'' என்று என்னைப் பார்த்துக் கேட்டார்.

''நடிப்பிலதான் கிட்டயே நெருங்க முடியல! இந்த மாதிரி விஷயங்கள்லயாவது உங்களோட போட்டிப் போடலாம்னுதான்'' என்றேன்.

உடனே கோபம் மறைந்து, ஹ... ஹ... ஹ... என்று சிரித்தவாறு, ''வா... வா, நல்லா முன்னுக்கு வா'' என்றார்.

உண்மையில் அவர் சாப்பாட்டுப் பிரியர். அசைவம் – காடை, கவுதாரி, புறா, சிக்கன் விரும்பிச் சாப்பிடுவார். ஒருநாள் என்னைப் பார்த்து, ''என்னடா சிவா! சைவமாயிட்டியாமே! எப்போதிலிருந்து?'' என்று கேட்டார்.

''1988 ஜனவரி 1ஆம் தேதியிலிருந்து என்று சொன்னேன்.'' எப்படிடா உன்னால முடியுது? நான் அசைவம் இல்லேன்னா செத்துப் போயிடுவேன்'' என்றார்.

அப்படிப்பட்டவருக்கு, கடைசி நாள்களில், உடல்நலம் கருதி, வெறும் கஞ்சி மட்டுமே தரப்பட்டது.

''சிறு வயசில, நல்லா பசிச்சுது. ஆனா சாப்பிட முடியலே! காரணம் வறுமை. நல்லா சம்பாதிச்சப்பவும் திருப்தியா சாப்பிட முடியலை! ஹீரோ உடம்பைக் காப்பாத்தணுமே, அதனால!''

''இன்னிக்குத் தேவையான பணமும் இருக்கு. ஓய்வும் இருக்கு. ஆனாலும் சாப்பிட முடியலை. டாக்டர்கள் சாப்பிடக்கூடாதுன்னு சொல்லிட்டாங்க! என் நிலைமையைப் பார்த்தியா?'' என்று சோகமாகச் சொன்னாராம்... இன்றைக்கு அந்தக் கலைச் சூரியன் அஸ்தமனமாகிவிட்டான்.

உலகில் எந்த ஒரு நடிகனும், ஒரே நாளில் மூன்று வித வேடங்கள் ஏற்று நடித்ததில்லை. டென்கமாண்ட்மெண்ட்ஸ், பென்ஹர், லாரன்ஸ் ஆஃப் அரேபியா, ஓமர்முக்தார், காந்தி, போன்ற எந்தப் படத்து ஹீரோவும் மூன்று ஆண்டுகள், ஐந்து ஆண்டுகள் ஒப்பந்த அடிப்படையில் ஒரு படத்தில் நடிக்க ஒப்புக்கொண்டு, அந்தப் படம் முடிந்த பின்னரே அடுத்த படம், வேடம் பற்றிச் சிந்திப்பார்கள். ஆனால் சிவாஜி, காலையில் ரிக்ஷாக்காரன் வேடம் போட்டு நரைத்த தாடியும் பரட்டைத் தலையும் கிழிந்த கோட்டுமாய் கை ரிக்ஷா இழுத்து நடிப்பார். பிற்பகல் மகாவிஷ்ணு வேடம் போட்டு, பாடல் காட்சியில் நடிப்பார். இரவு அந்த வேடத்தைக் கலைத்துவிட்டு, பளபளப்பாக மின்னும் கோட்டும் சூட்டுமாக, 'சொர்க்கம்' படத்தில் நடிப்பார்...! ஹாலிவுட்டில் எந்த நடிகரும் இப்படிச் செய்திருக்க வாய்ப்பு இல்லை.

பேராசை பிடித்த அந்தக் கலைஞன், சிங்கமாய்க் கலையுலகில் உலவியவன்! lions share என்று சொல்வதுபோல இரையின் பெரும் பங்கை எடுத்துக்கொண்டு, எல்லா விதமான வேடங்களையும் தானே போட்டு நடித்து விட்டான்! அடுத்த தலைமுறைகளுக்குக் குறிப்பிட்டுச் சொல்ல எந்த வேடத்தையும் அவர் விட்டு வைக்கவில்லை.

நாங்கள் எந்த வேடம் போட்டு நடித்தாலும், அவர் நடித்த, அந்த வேடங்களைத் தாங்கிய படங்களை முன்மாதிரியாக ஒருமுறை பார்த்துக் கொள்கிறோம்.

அந்த யுகக் கலைஞன் ஹாலிவுட்டில் பிறக்காதது அவரது துரதிர்ஷ்டம்! தமிழ்நாட்டில் பிறந்தது நம் அதிர்ஷ்டம்!

---

63



சகோதரி ராதிகா

## ராதிகாவும் ராடான் நிறுவனமும்

1978இல் வெளி வந்த பாரதிராஜாவின் 'கிழக்கே போகும் ரயில்' படத்தை இப்போது பார்த்தால் ராதிகாவின் தோற்றமும் நடிப்பும் வேடிக்கையாக இருக்கும்.

கருத்த மேனியில், வெள்ளை வேளேர் என்று மேக்-அப்பைப் பூசிக் கொண்டு, டைரக்டர் என்ன சொன்னாரோ அதைக்கேட்டு, கிளிப்பிள்ளை மாதிரி அப்படியே செய்திருப்பார்.

திரைப்படத்தில் நடிக்க வேண்டுமென்ற விருப்பமோ, பெரிய ஸ்டார் ஆக வெண்டுமென்ற லட்சியக் கனவோ, அப்போது அவருக்குச் சுத்தமாக இல்லை. நடிப்புத் துறையில் பயிற்சியோ, நடனப் பயிற்சியோ சிறிதுமில்லாதவர்! டைரக்டருடைய கடும் முயற்சியால் ஒரு வெற்றிப் படத்தின் கதாநாயகியாக அறிமுகப்படுத்தப்பட்டிருப்பார்...!

அவரது வசன உச்சரிப்பும், நடன அசைவுகளும் அவர் இந்தத் துறைக்கு எவ்வளவு புதியவர் என்பதை நமக்குப் புலப்படுத்தும்.

பதினைந்து ஆண்டுகள் கழித்து, 'பசும்பொன்' படத்தைப் பாரதிராஜா உருவாக்கியபோது, நடிப்பில் பழுத்த பழமாக ராதிகா நடித்திருந்தார். கே.பி. சுந்தராம்பாள் அம்மையாரைப் போன்ற வயதானவர்கள் செய்ய வேண்டிய வேடத்தை, முப்பது வயதை முழுமையாக எட்டாத அவர், அவ்வளவு யதார்த்தமாக உருக்கமாக நடித்திருந்தார். நடிகவேள் எம்.ஆர். ராதாவின் ரத்தத்தில் பிறந்தவராதலால், எந்த வேடத்தையும் அநாயாசமாகச் செய்யும் அனுபவத்தைப் பெற்ற திறமைசாலியாகிவிட்டார்.

அப்படத்தில் உச்சக் கட்டக் காட்சியில், தாயின் உயிர் பிரியும் முன், மகன் பிரபு வந்து ஒரு சொட்டுப் பால் வாயில்விட, அந்த ஆத்மா துடிப்பதை உயிரோட்டமாகப் படம் பிடித்தார் பாரதிராஜா.

நடிப்பைப் பொறுத்த மட்டில் 'பசும்பொன்' ராதிகா வாழ்க்கையில் ஒரு மைல் கல். அதில் சந்தேகமில்லை.

1983இல் 'உறங்காத நினைவுகள்' படத்திற்கு ஷண்முகப்ரியன் கதை வசனம் எழுத, பாலுமகேந்திரா அவர்கள் ஒளிப்பதிவும் டைரக்ஷன் மேற் பார்வையும் செய்தார்.

அதில், உட்கார்ந்த இடத்திலிருந்தே, உலக நடவடிக்கைகளை முன் கூட்டியே கணித்துச் சொல்லும் ஒரு ஜீனியஸ் வேடம் எனக்கு. சக்கர நாற்காலியில் அமர்ந்தவாறு, சுற்றி இருப்போரைச் செயல்பட வைக்கும் ரிஷி வேடம். ராதிகா ஒரு பெரிய நிறுவனத்தின் முதலாளி.

'உலகமே பார்த்து வியக்கும் அந்தப் பெண்ணுக்கு வாழ்க்கையில் நிம்மதி இராது. தனிமை அவளைக் கொல்லும். இரவெல்லாம் தூக்கம் வராமல் படுக்கையில் புரளும் பரிதாபத்துக்குரியவள் அவள்' என்று ஜீனியஸ் ரிஷி கணித்துச் சொல்வார். விடியற்காலை 4 மணிக்கு அவளுக்குப் போன் செய்தால், முதல் பெல் அடித்ததும் போனை எடுப்பாள். காரணம் அவள் தூங்குவதில்லை.

இப்படி மாறுபட்ட வேடங்களில் ராதிகாவும் நானும் நடித்த அந்தப் படத்தில் இருவரும் சந்தித்துக் கொள்ளவே மாட்டோம். கதை அப்படி அமைக்கப்பட்டிருந்தது.

1983களில், கண்டமேனிக்குப் படங்களைத் தமிழிலும் தெலுங்கிலும் ஒப்புக்கொண்டு, ஓய்வே இல்லாமல் இரவு பகலாக ராதிகா படப் பிடிப்பில் கலந்துகொண்டார்.

ஒரு நாள் இரவு 10 மணி. மந்திரித்துவிட்ட கோழி மாதிரி – சுயநினைவு இல்லாமல், தூக்கமும் அசதியுமாக கே.ஆர்.விஜயா கார்டனுக்கு எங்கள் படப்பிடிப்புக்கு வந்தார். பார்க்கப் பரிதாபமாக இருந்தது. என் பியட் கார் உள்ளே படுக்கச் சொல்லிவிட்டு, இரவு 2 மணிக்கு அவர் தேவைப்பட்டபோது போய் எழுப்பினோம்.

அன்றைய கே.ஆர். விஜயா கார்டனில் சுற்றிலும் மாந்தோப்பு. அதைச் சுற்றித் தென்னை மரங்கள். அருகில் ஒரு தடாகம். கொசுக்களுக்குச் சொல்லவே வேண்டாம். அசந்து தூங்கும் ராதிகாவை இந்தக் கொசுப் பட்டாளம் மூர்க்கமாக முற்றுகையிட்டது. அதெல்லாம் அவருக்குத் தெரியாது. அப்படியொரு களைப்பு, தூக்கம்!

அவர் விழித்து எழுந்தபோது, குளவி கடித்து வீங்குவதுபோல, முகத்தில் ஆங்காங்கே, கொசுக்கடியால் திட்டுத்திட்டாக தடிப்பு ஏற்பட்டு 'க்ளோசப் ஷாட்' எடுக்க முடியாத அளவுக்குக் கோரமாக இருந்தது!

ராதிகா அப்போதெல்லாம் யாரோடும் பேசமாட்டார். பேசுவதற்கு உடம்பில் தெம்பு இருக்காது. வந்ததும் எங்காவது ஒரு மூலையில் சுருண்டு படுத்து விடுவார். உடம்பும் மனசும் கசக்கிப் பிழியப்பட்ட நாள்கள்.

அதன்பிறகு நாங்கள் ஒரு டஜனுக்கு மேற்பட்ட படங்களில் ஜோடியாக நடித்தோம். 1961இல் பாசமலர் படம் வெளியாயிற்று. சிவாஜியும் சாவித்திரியும் அண்ணன் தங்கையாக அதில் நடித்து அகிலமே பாராட்டியது. அந்தப் படம் வெளியான இரண்டு மாத இடைவெளியில், அதே சிவாஜி சாவித்திரி, கணவன் மனைவியாக நடித்த 'எல்லாம் உனக்காக' படம் வெளியிடப்பட்டது.

அண்ணன் தங்கையாக சிவாஜியையும் சாவித்திரியையும் பார்த்து நெகிழ்ந்த ரசிகர்கள், 'எல்லாம் உனக்காக'வில் கணவன் மனைவியாக நடித்ததை ஏற்கவில்லை. படம் தோல்வி அடைந்ததற்கு அந்த உணர்வும் ஒரு காரணம்.

1988இல் 'பாசப் பறவைகள்' படத்தில் நானும் ராதிகாவும் அண்ணன் தங்கையாக நடித்தோம். தன் கணவனைக் கொன்ற துரோகி

இந்த அண்ணன் என்று, தங்கை, அவனைக் குற்றவாளிக் கூண்டில் நிறுத்துவாள். படத்தின் முடிவில் அண்ணனின் தியாகம் தங்கைக்குத் தெரியவர, கண்ணீரில் கரைந்து மன்னிப்புக் கேட்பாள்.

இந்தப் படம் கணிசமான வெற்றி பெற்று ஐந்தாறு நகரங்களில் 100 நாள் கொண்டாடியது.

அதே ஆண்டு 'பாடாத தேனீக்கள்' என்ற படத்தில், கணவனும் மனைவியுமாக நானும் ராதிகாவும் நடித்தோம். சிறு வயதில் பிளேபாயாக இருந்து திருந்திய நான், ராதிகாவை மணந்தபின், செய்யாத தவறுக்கு – விபச்சாரத்தில் ஈடுபட்டதாகச் குற்றம் சாட்டப்பட்டு – சிறையிலடைக்கப் படுவேன்.

தனக்குச் செய்து கொடுத்த சத்தியத்தை மீறி, விலைமகளிடம் கணவன் சென்றுவிட்டான் என்று முடிவுகட்டிய ராதிகா, விவாகரத்து பெற்று விடுவார். எங்கள் குழந்தை தாயிடம் 4 நாட்களும் தந்தையிடம் 3 நாட்களுமாக வாழ்க்கை நடத்தும். முடிவில் நான் நிரபராதி என்று தெரியவரும். இந்தப் படமும் பெரிய வெற்றி பெற்றது, 100 நாள் கொண்டாடியது.

இந்த இரண்டு படங்களையும் கலைஞர் மு. கருணாநிதி அவர்களின் குடும்ப நிறுவனமான பூம்புகார் புரொடக்ஷன்ஸ் தயாரித்தது. கலைஞர் கதை, வசனம் எழுதி, இயக்கியவர் மலையாள டைரக்டர் வி.எம்.சி. ஹனீபா.

கேரளாவில் சிவாஜிக்கு முதல் முதல் ரசிகர் மன்றம் அமைத்து 25 ஆண்டுகளுக்கும் மேலாக நடத்தியவர். சிவாஜியின் வெறியர். என்னென்ன படங்களில் சிவாஜி என்ன பாட்டுப் பாடுவார், சிகரெட்டைப் பற்ற வைத்து எப்படி ஸ்டைலாகப் புகை விடுவார், ஒவ்வொரு படத்திலும் எப்படி 'விக்' மாற்றி உடைமாற்றி, நடைமாற்றி நடிப்பார் என்பதை என்னிடம் பலமுறை கூறி, சிவாஜி ரசிகனான என்னையே மிரட்டுவார்.

கால மாற்றத்தில் கதாநாயகன் நிலையிலிருந்து நானும், கிளாமர் கதாநாயகி நிலையிலிருந்து ராதிகாவும், குணச்சித்திர வேடங்களுக்குத் தள்ளப்பட்டோம்.

அது ஒரு வேதனையான அனுபவம். 25 ஆண்டுகள் ராஜா – ராணியாகச் சிம்மாசனத்தில் அமர்ந்து கோலோச்சியவர்களை, திடீரென்று பதவி இறக்கம் செய்து, மந்திரிகள் வரிசையில் அமரச் செய்வது போன்று மனத்தளவில் ரொம்பவும் பாதிப்பை ஏற்படுத்தும் விஷயம்.

'சக்தி', 'கும்மிப்பாட்டு' போன்ற படங்களில் கதாநாயகனுக்கு அப்பா, அம்மாவாக நாங்கள் நடித்தபோது தீவிரமாக யோசித்தோம்.

நடிப்புத் துறையில் ராதிகாவைவிட 13 ஆண்டுகள் நான் சீனியர். அவர் ரொம்பவும் இளையவர். என்னைவிட அவர் நிலைமைதான் பரிதாபம்...

விரைந்து தொழிலாற்றும் அறிவும், ஆற்றலும், கட்டுக் குலையாத இளமைத் தோற்றமும் இருக்கும்போது, கட்டாய ஓய்வு கொடுத்ததுபோல உணர்ந்தோம்.

சிவாஜி, ஜெமினி காலகட்டத்தில் குணச்சித்திர வேடங்கள் படத்தில் அதிமுக்கியத்துவம் பெற்றதாகவும், சில சமயங்களில் கதாநாயகனுக்குச் சவால் விடுவதாகவும் இருக்கும்.

பராசக்தி, குலதெய்வம், மனோகரா, பாகப்பிரிவினை, படிக்காத மேதை, பாவமன்னிப்பு, உயர்ந்த மனிதன், கௌரவம், போலீஸ்காரன் மகள் – படங்களை உதாரணமாகச் சொல்லாம்.

இன்றைய திரைப்படங்களில் குடும்ப உறவுகள் அலசப்படுவதில்லை. அவர்களையும் நாம் குறை சொல்ல முடியாது. 50 வருடத்துக்கும் மேலாக மேல்மட்டக் குடும்பம், நடுத்தரக் குடும்பம், அடிமட்டக் குடும்பம் – என்று எல்லா வகைக் குடும்ப உறவுகளும் அலசப்பட்டுவிட்டன.

தீவிரமாக யோசித்த பின்னர், சின்னத்திரையில் நாங்கள் கவனத்தைத் திருப்பினோம். ராதிகா, தன்னுடைய ஆளுமை, நிர்வாகத் திறமை, சம்பாதித்த சொத்து – இவைகளை மூலதனமாக வைத்து ராடான் நிறுவனத்தைத் துவக்கினார்.

கணவர் தொழில் நடத்தி ஏற்பட்ட கோடிக்கணக்கான நஷ்டத்தை சின்னத்திரைத் தொடர்களின் வெற்றியைக் கொண்டு அடைத்தார்.

'மீண்டும் மீண்டும் நான்' என்ற பெயரில், மறுபிறவி பற்றிய கதை எழுதி, மனோபாலா இயக்கத்தில், இலங்கையில் 17 நாள்களில் படமாக்கி முடித்தார். நானும் ராதிகாவும், சௌகார் ஜானகியும், நீனாவும் முக்கிய வேடங்கள் ஏற்று நடித்த அந்தத் தொடர் 13 வாரங்கள் சன் TV–யில் ஒளி பரப்பாயிற்று.

அடுத்து 'சித்தி' மெகா தொடர். 'LAND MARK ON SMALL SCREEN'. 485 எபிசோட். ராடான் நிறுவனம், சின்னத் திரை தயாரிப்பாளர்கள் வரிசையில், முதலிடத்தைப் பிடிக்கக் காரணமான தொடர்!

ராதிகாவின் பன்மொழி அறிவு, நிர்வாக ஆற்றல், துணிவுடன் விரைவில் முடிவெடுக்கும் திறமை, ஐந்து நிமிடப் பேச்சில் ஒரு ஆளை எடை போடும் ஆற்றல் – இவைகளின் கலவையாக 'சித்தி' வேடம் சித்தரிக்கப்பட்டது.

பலவீனமுள்ள, அதே சமயம் நேர்மையான கணவன் ராமு. பெண்களுக்கு நம்பிக்கையூட்டும் 'சித்தி' ராதிகா.

இரவு 9.30 மணிக்கு, வேலை முடித்து வீட்டுக்குக் கணவன் வந்தால் 'சித்தி' தொடர் முடியும் வரை – அதாவது 10 மணி வரை – பெண்கள் கணவனுக்குச் சோறு போடுவதில்லை!

சன் டி.வி. நிறுவனரே, ஒரு நீதிபதியைப் பார்க்க இரவு 9 மணிக்குப் போனபோது, 'சித்தி' தொடர் முடிந்தபின் பார்க்கலாம் என்ற திருப்பி அனுப்பப்பட்டாராம்!

எழுத்தாளர் கல்கியின் 'பொன்னியின் செல்வன்', 'பார்த்திபன் கனவு' நாவல்கள் 'கல்கி' – இதழில் தொடராக வெளிவந்த நாள்களில் வாராவாரம் கல்கி எப்போது வரும் என்று ஆவலாகக் காத்திருப்பார்களாம். அதுபோல ஒவ்வொரு நாளும் இரவு 9.30 மணி எப்போது வரும் என்று குடும்பப் பெண்கள் 'சித்தி'க்காகக் காத்திருந்தனர். 4½ கோடி மக்கள் 'சித்தி' பார்த்திருக்கிறார்கள்.

'சித்தி' தொடருக்குக் கதை எழுதி இயக்கிய டைரக்டர் சி.ஜே. பாஸ்கரை விசேஷமாகக் குறிப்பிட வேண்டும்...! அவர் ஒரு கடுமையான உழைப்பாளி. படுக்கையில் எப்போதும், நூறு அல்லது நூற்றைம்பது எபிசோடுக்கான திரைக்கதை 'பைல்' இருந்து கொண்டே இருக்கும். தூங்கும்போது ஏதாவது புது ஐடியா தோன்றினால் உடனே குறித்து வைத்துக் கொள்வார்.

இயக்குநர் சிகரம் கே. பாலசந்தரின் சின்னத்திரை வாரிசு இவர் என்று தாராளமாகச் சொல்லாம். ஒரு நான்கு ஆண்டு கே.பி. அவர்களிடம் உதவியாளராகப் பணிபுரிந்து, அவரது சிந்தனை, செயல்பாடு, சுறுசுறுப்பு அத்தனையையும் உள்வாங்கிக் கொண்ட உண்மையான சீடர்.

கே.பி. போலவே இவர் உருவாக்கும் பாத்திரங்களில் அறிவு ஜீவித்தனமும், சின்னச் சின்னக் குறும்பும் இருக்கும். நாலு காட்சிகளில் வரும் சின்ன காரக்டரில்கூட உயிர்ப்பான குணாதிசயங்கள் இருக்கும்.

கண்ணை மூடிய வேகத்தில், அருள் வாக்குப்போல, அந்தந்த கதாபாத்திரங்கள் பேச வேண்டிய வசனங்களைச் சொல்லிக்கொண்டே வருவார். அவர் உதவியாளர் அருள் – பாஸ்கர் சொல்லும் வேகத்திற்குக் குறிப்பெடுக்க முடியாமல் திணறுவார் – சட்டென்று கே.பி. அவர்கள் உணர்ச்சிவசப்படுவது முதற்கொண்டு, அவருடைய திறமை, குணாதிசயம் அனைத்தையும் சுவீகரித்துக் கொண்டுள்ளார். 'சித்தி'யின் வெற்றியில் பாஸ்கரின் பங்கு கணிசமானது.

அவரது கற்பனைக்குச் சின்னத்திரையில் ஒளி வடிவம் கொடுப்பதில் சூரர் சக்திசரவணன். படுநிதானமான ஆசாமி. லேசில் உணர்ச்சிவசப்பட மாட்டார். டைரக்டர் சொல்லும் காட்சியை மனத்தில் வாங்கிக்கொண்டு, ஒவ்வொரு நடிகரும், எங்கிருந்து, எப்படி நடந்து வந்து பேச வேண்டும் என்பதைத் தெளிவாக விளக்கிச் சொல்வார்.

இந்த இரட்டையரின் திறமை 'அண்ணாமலை' தொடரிலும் தனியாகத் தெரிந்தது. 'சித்தி' தொடருக்கு முற்றிலும் மாறுபட்ட சூழலில் கிராமியப் பின்னணியில் கதைக் களம் அமைக்கப்பட்டது.

திருநெல்வேலியை அடுத்த அம்பாசமுத்திரம், கல்லிடைக் குறிச்சி, பிரம்மதேசம், பாபநாசம் போன்ற ஊர்களில், இயற்கை எழில் கொஞ்சும் மலைகளும், பசும்புல் வெளிகளுமுள்ள பகுதியிலும், சிவகங்கையை அடுத்த கீழப்பூங்குடி அரண்மனையிலும் முதல் 200 எபிசோடை படமாக்கினோம்.

நடித்தோம் என்பதைவிட ஒரு ஏழெட்டு மாதங்கள் அந்தக் கதா பாத்திரமாகவே அந்தப் பகுதியில் வாழ்ந்தோம் என்பதே சரி. திரைப் படங்கள்கூட அப்படி ரசித்துப் படமாக்கப்படுவதில்லை. அப்படி ரசித்து ஒவ்வொரு காட்சியையும் படமாக்கினார்கள் பாஸ்கரும் சக்தி சரவணனும்.

இந்தியாவில் மட்டுமல்ல, இந்த 'அண்ணாமலை' தொடர் மலேசியா, சிங்கப்பூர், பாரிஸ், லண்டன், துபாய், அமெரிக்கா என்று உலகின் பல நாடுகளிலும் வரவேற்பைப் பெற்றுள்ளது.

காலத்தின் கட்டாயம். 500 எபிசோடுக்குப் பிறகு பாஸ்கர் மாற்றப் பட்டு, சுந்தர். கே.விஜயன் 'அண்ணாமலை' தொடரைப் படமாக்குகிறார்.

டைரக்டர் சுந்தர். கே.விஜயன், 25 ஆண்டுகளுக்கு முன்னர், வண்டிச் சக்கரம், ஆணிவேர், பிரேமபாசம் உள்பட என்னுடைய படங்களை அவர் தந்தை டைரக்டர் கே.விஜயன் இயக்கியபோது, அவரது உதவியாளராக என்னோடு பணியாற்றியவர்.

சுந்தருடைய அசாத்திய பலம், எந்தச் சூழ்நிலையிலும் உணர்ச்சி வசப்படாமல் நிதானமாகச் செயல்படுவது...! கிரியேடிவ் டைரக்டர்களுக்கு இந்தச் சுபாவம் பெரும்பாலும் சாத்தியமில்லை.

அந்நாளில் டைரக்டர்கள் டி.ஆர். ராமண்ணா, ஏ.பீம்சிங், ஏ.பி.நாக ராஜன், ஏ.சி. திருலோகசந்தர் போன்ற வெகுசிலரே, எப்போதும் நிதானத்துடன், சிரித்த முகத்துடன், படப்பிடிப்பை நடத்துவார்கள்.

அந்த வரிசையில் டைரக்டர் கே. விஜயன் அவர்கள் படுநிதான மானவர். இடிவிழுந்து, காதோரம் முடி பொசுங்கிப் போனால்கூட,

லேசாக, தேய்ந்துபோன முடியைக் கையில் அகற்றிவிட்டு, அடுத்த வேலையைக் கவனிப்பார்.

தந்தையிடம் டைரக்ஷனைக் கற்றுக்கொண்ட சுந்தருக்கு, 'போனஸ்' ஆக அவரது நிதானமும் கைவரப் பெற்றிருப்பது வாழ்நாள் முழுவதும் அவர் பெருமைப்பட்டுக் கொள்ளக்கூடிய விஷயம்.

காட்சி, வசனங்களை ராஜ்பிரபு எழுதிக் கொடுத்தாலும் 'அண்ணா மலை' தொடர் கதாபாத்திரங்களின் இயல்பில் மாற்றம் ஏற்படாதபடி இவர் வசனங்களை வளைத்து, காமிரா கோணங்களை இவரே தீர்மானித்துப் படமாக்குகிறார்.

பாஸ்கரின் ஆற்றல் படமாக்கும் பாணி வேறு. சுந்தர்.கே.விஜயனின் பாணி வேறு. முற்றிலும் மாறுபட்ட இரண்டு இயக்குநர்கள் உருவாக்கும் 'அண்ணாமலை' மக்கள் மனத்தில், பளிச்சென்ற வேறுபாடு தெரியாமல் ரசிக்கப்படுவது வித்யாசமான அனுபவம்.

பாஸ்கரும் சக்தி சரவணனும் கதாபாத்திரங்களின் குணாதிசயம் சிறிதும் மாறாமல் பார்த்துக் கொள்வதுபோல, அவர்கள் வாழும் வீடு, வேலைபார்க்கும் அலுவலகம், கும்பிடும் கோயில் – இவற்றில் அநாவசிய மாறுதல் செய்ய அனுமதிக்க மாட்டார்கள். PERFECT PROFESSIONALS கடைப்பிடிக்கும் பாணி அது.

ஆனால் சுந்தர், மக்களின் ரசனையைக் கூர்ந்து கவனித்து – ஒரு நெடுந்தொடரில், தவசி, அண்ணாமலை, சாந்தி, நம்பி, பட்டாளத்தார், மந்திரமூர்த்தி, விநாயகம், சுப்பு, ஜீவா, ஜோதி, துளசி – இந்தக் கதாபாத்திரங்களின் நடிப்பையும் வசனங்களையும்தான் உன்னிப்பாக மக்கள் கவனிக்கிறார்களே தவிர, பின்னணியில் வரும் வீடு, தோட்டம், அலுவலகம் மாறாமலிருக்கிறதா என்று யாரும் கவலைப்படுவதில்லை என்பதைத் தெரிந்து கொண்டிருக்கிறார்.

எனவே, தவசி வாழும் வீடு – மந்திரமூர்த்தியார் வீடு என்று இதுவரை ஐந்தாறு வீடுகளில் படப்பிடிப்பை நடத்தியிருக்கிறார். ஏன் வீடு மாறுகிறது என்று எவரும் கேட்கவில்லை.

மாறாக, தினந்தோறும் பார்க்கும் தொடரில் முகங்கள்தான் மாறக் கூடாதே தவிர, வீடுகளின் வித்யாசமான பின்னணி ரசிக்கும் படியாகவே இருக்கும் என்பதை நிரூபித்திருக்கிறார்.

படங்களுக்கு இந்த ஐடியா ஒத்துவராது. தொடர்களில் மட்டுமே இம்முறையைக் கையாளலாம்.

சுந்தரின் ஒளிப்பதிவாளர் பொன். சந்திராபோல இவ்வளவு விரைவாகச் சின்னத்திரையில் ஒளிப்பதிவு செய்தவரை நான் பார்த்ததில்லை.

சுந்தர் ஒரு 'ஷாட்' முடிந்ததும், அடுத்த ஷாட்டுக்கு லைட்டிங் செய்ய நேரம் தரமாட்டார். ரெடி ரெடி என்று சொல்லிக் கொண்டே இருப்பார்.

அதற்குள் ஒளிப்பதிவாளர் கண் இமைக்கும் நேரத்தில் ஒளியமைப்பைச் சரி செய்து 'ரெடி சார்' என்பார்.

காமிராவை ஒரே இடத்தில் நிறுத்தி 'ஸ்டெடி ஷாட்' எடுப்பது சுலபம். டிராலியில் காமிரா ஓடிக்கொண்டே இருக்கும்போது focus - செய்வது பெரும் பிரச்சனை...!

அதில் 'பொன்ஸ்' சூரர். எவ்வளவு வேகமாக டிராலி ஓடினாலும், FOCUS குறைபாடு வரவே வராது. அத்துடன், ஒரு காட்சியை வெயிலில் படமாக்கும்போது, சூரிய ஒளி, இடையில் அதிகமானாலும் குறைந்தாலும் மற்ற ஒளிப்பதிவாளர் 'கட்' செய்து விடுவார்.

ஆனால் 'பொன்ஸ்' காமிரா ஓடிக் கொண்டிருக்கும்போதே - டிராலியில் போய்க் கொண்டே - சூரிய ஒளி மாறுவதற்கேற்ப 'அப்ரெச்சரை' கூட்டி குறைத்து ஓ.கே. செய்து விடுவார்.

மூன்று மணி நேர சினிமாவில், இடைவேளைக்குப் பிறகு படம் 'போர்', உட்கார முடியவில்லை என்று சலித்துக் கொள்கிறார்கள்.

மூன்று நான்கு வருடம் ஒரு தொடரை மக்கள் விடாது பார்க்கும்படி, கதையையும் காட்சியையும் நீட்டிச் சுவையாகச் சொல்வது அசுர சாதனை தான்...! அதில் சி.ஜே. பாஸ்கரும், சுந்தர். கே. விஜயனும் அவரவர் பாணியில் வெற்றிகரமாகச் சாதனை புரிந்து வருகிறார்கள்.

'சித்தி' தொடரில் 2 ஆண்டுகள் கணவன், மனைவியாக நானும் ராதிகாவும் நடித்தோம். உடனே 'அண்ணாமலை' தொடங்கி 3 ஆண்டுகள் அண்ணன் தங்கையாக நடிக்கிறோம். இதையும் மக்கள் ஏற்றுக் கொள்கிறார்கள் என்பதில் எங்களுக்கு அளவு கடந்த சந்தோஷம்.

---

# 64



## உலகத் தரத்தை நோக்கி மணிரத்னம்

1990 ஜூலை 20ஆம் தேதி ஈரோடு அபிராமி தியேட்டரில், நண்பர் 'சுமங்கலி' சந்திரசேகருடன் 'அஞ்சலி' படம் பார்த்தேன்.

'மேட்டுப்பட்டி மிராசு' படப்பிடிப்பு பவானி, மேட்டூர் சாலையிலுள்ள அம்மாப்பேட்டை சொக்கநாதர் ஆலயத்தில் துவங்கி நடைபெற்ற சமயம்.

அரங்கு நிறைந்த காட்சிகளாக 'அஞ்சலி' தமிழகமெங்கும் ஓடிக் கொண்டிருந்தது. மாட்னி காட்சிக்கு டிக்கட் ரிசர்வ் செய்து பார்த்தோம்.

பிரம்மாண்டமான சினிமாஸ்கோப் திரையில், ஒரு பிஞ்சுக்கை மேலே வந்து ஐந்து விரல்களையும் பூப்போல விரித்தது. தியேட்டரில், காது கிழியும் அளவுக்கு விசில் சத்தமும் கைதட்டலும் ஐந்து நிமிடம் ஓயாது கேட்டது.

மங்கலான ஒளிப்பதிவில், சிக்கு விழுந்த தலையும் தூக்கிய பல்லும் மருண்ட பார்வையுமாய், பேபி ஷாம்லி காட்டப்பட்டபோது படம் பார்த்தோர் நெஞ்சம் கனத்தது.

இன்னொரு காட்சி..., குழந்தைகளெல்லாம் கும்மாளமிட்டு விளையாடிக் கொண்டிருக்க, நீண்ட பெஞ்சின் மீது அஞ்சலி பாப்பா, குத்துக் காலிட்டு தனியே உட்கார்ந்தவாறு, ஒரு பழுப்பு இலையைக் கையில் வைத்து லேசாகச் சுற்றியது. மீண்டும் விசில் சத்தம்....!

★ ★ ★

கணவர் ரகுவரன், கள்ளத் தொடர்பு வைத்திருக்கிறான் என்று சந்தேகப்பட்ட ரேவதி! ரகுவரன் சட்டையைப் பிடித்து உலுக்க ''நம்ம அஞ்சலி பாப்பா சாகவில்லை! உயிரோடுதானிருக்கிறாள்'' என்று அவர் உண்மையைப் போட்டு உடைக்க, உறைந்து போகிறார் ரேவதி.

அந்தக் குழந்தையின் அன்பைப் பெற, தாய் மண்டியிட்டு அதனிடம் நெருங்க, நெற்றியிலிருந்து தன் விரலால் கோடு கிழித்தவாறு, மூக்கு, உதடு, தாடை என்று வந்த குழந்தை, 'பட்' டென்று அவள் கன்னத்தில் அறைந்து விட்டு, கை கொட்டிச் சிரிக்கும். நம் கன்னத்தில் அறை விழுந்த வலி!

''இந்தப் பாப்பா எனக்கு வேண்டாம். இவளை எனக்குப் பிடிக்கலே! எங்கயாவது கொண்டு போய் விட்டுட்டு வந்திருங்கப்பா'' என்று கத்திய சிறுமி, கடைசியில் ''கடவுளே! என் தங்கச்சிப் பாப்பாவை எப்படியாவது காப்பாத்து'' என்று வேண்டினாள். நாமும் வேண்டினோம்...!

டான்ஸ் மாஸ்டர் சுந்தரம், வாண்டுகளுக்குப் பயிற்சி கொடுத்து, 'அஞ்சலி – அஞ்சலி – அஞ்சலி' பாடலுக்கு அவர்களை ஆட வைத்த அழகு. மது அம்பாட்டின் அற்புத ஒளிப்பதிவு, இளையராஜாவின் தேனினும் இனிய இசை, குழந்தைகளோடு மனத்தளவில் நாமும் சேர்ந்து ஆடினோம்.

அஞ்சலி கவுனில் தகர டப்பாக்களைக் கோர்த்துக் கட்டிவிட்டு, அவளைக் குரங்காய் ஆட்டி வைத்த சிறுவர்களை, அண்ணன் தருண் வந்து புரட்டி எடுக்கிறான். அடிபட்ட குழந்தைகளின் தாய்மார்கள் ரேவதியிடம்

வந்து முறையிடுகிறார்கள். கோபம் கொண்ட ரேவதி, அவன் முதுகில் நாலு அடி வைக்கிறாள்..

கண்களில் நீர் முட்ட, ''தங்கச்சிப் பாப்பாவைக் கிண்டல் பண்ணி னாங்கம்மா – அது தான் அடிச்சேன்'' என்கிறான். அந்தச் சிறுவனை, மனத்துக்குள் நாம் தட்டிக் கொடுக்கிறோம்.

மணிரத்னம் படைப்புக்கள் ஒவ்வொன்றும் வித்யாசமான கதைக் களத்துடன், உருவாக்கப்பட்டிருக்கும். படத்துக்குப் படம் பி.சி.ஸ்ரீராம், சந்தோஷ் சிவன், மதுஅம்பாட் என்று ஒளிப்பதிவாளரை மாற்றுவதால், வேறு வேறு SHADEஇல் ரசிக்கும்படி அவை அமைகின்றன.

இளையராஜா, ரகுமான் – யார் இசையமைத்தாலும் மணிரத்னம் அவர்களின் ரசனைக்கேற்ப உயர்தரமாக, அத்தனை பாடல்களும் ஒன்றுக் கொன்று வேறுபட்டதாக நம் காதுகளைக் குளிரவைக்கும்.

'அஞ்சலி' படம் அணு அணுவாக நான் ரசித்த படம்...!

**'ரோஜா'**

ஆட்டு மந்தைகளுக்கு நடுவில் காரிலிருந்து அரவிந்த்சாமி இறங்கி, வெளியே தலைகாட்டுகிறார். பாறைமீது பதுங்கியவாறு, செடிகளுக் கிடையே மதுபாலா கண்கள் அவரைப் படம் பிடிக்கின்றன.

ஆண்களே காதலிக்க ஆசைப்படும் அழகன் அரவிந்த்சாமியை, ஓடிப் போய்க் கட்டிப் பிடித்து முத்தம் கொடுக்கத் தோன்றும்...!

'சின்னச்சின்ன ஆசை சிறகடிக்கும் ஆசை'. பாடல் நம்மைக் கிறங்கடிக்கிறது என்றால், அடடா... அந்த லொகேஷன்கள்! பார்வை படுமிடமெல்லாம் பச்சைப் பசேல் என்ற வயல்வெளிகள்! அவற்றிற்கு அழகு சேர்க்கும் மலைகள்...! செந்நிறப் பிழம்பாய்த் தகதகக்கும் அஸ்த மனச் சூரியன்! வானத்துப் பறவைகள், வாத்துக்கூட்டங்கள், கால்வாய்கள், நீர் வீழ்ச்சிகள்...! உடம்பைச் சிலிர்க்க வைக்கும் மழைத்துளிகள்...!

ஏசி தியேட்டரில் படம் பார்க்கும்போது நம்மீதும் துளிகள் விழுந்த சிலிர்ப்பு!

இயற்கை இவ்வளவு அழகானதா? அதுவும், நம் தமிழ் நாட்டில், என்ற ஆச்சர்யம் நமக்கு ஏற்படும்...!

புலிவேட்டை, யானை வேட்டைக்குச் செல்பவர்கள் எப்படி இராப் பகலாக வெறியோடு அலைவார்களோ அதுபோல, காமிராவைத் தூக்கிக் கொண்டு காடு மலைகள், ஆறு குளங்கள் என்று ஒரு நாள், இரு நாளல்ல மாதக் கணக்கில், பித்துப் பிடித்தவர்கள்போல அலைந்தாலொழிய, இவ்வளவு அழகையும் அள்ளி வந்து, நமக்குக் காட்ட முடியாது...



'நேருக்கு நேர்' - படம் பார்க்க வந்த கலைஞர் தம்பதியர்கள்

பெண்பார்க்க வரும் பட்டணத்து இளைஞனை, வழியிலேயே மடக்கி, பாட்டிமார்கள் குசலம் விசாரிக்கிறார்கள்.

வீட்டின் ஒவ்வொரு மூலையிலும், ஒவ்வொரு குழுவாகப் பெண்கள் அமர்ந்து, மாப்பிள்ளையை நோட்டமிடுகிறார்கள். மணப்பெண் வைஷ்ணவி, காபி டம்ளரை நழுவ விட்டு, எடுக்கிற சாக்கில், தான் வேறொருவரைக் காதலிப்பதை மாப்பிள்ளைக்குக் கிசுகிசுக்கிறார்.

அக்காளைப் பெண்பார்க்க வந்த அரவிந்த்சாமி, தங்கையை மணக்க விருப்பம் தெரிவிக்கிறார். ஊரே அதிர்கிறது. மாப்பிள்ளை முன் அடங்காமல், குறுக்கும் நெடுக்கும் ஓடின, மதுபாலாவை அப்பா, அம்மா, பாட்டி எல்லோரும் திட்டுகின்றனர்...! படத்தில் வசனமே அதிகம் இருக்காது. அதிகமாய்ப் போனால் நாலே வார்த்தைகள்.

1950களிலிருந்து 80 வரையிலும் பேசும் படமாய், அத்தனை உணர்ச்சிகளையும், பக்கம் பக்கமாய்ப் பேசியே, விளக்கி வந்த தமிழ் சினிமாவில், 'இந்த மீடியம், பார்த்து ரசிப்பதற்கான மீடியம். பாவங்களில், காட்சிகளில் விளக்கமுடியாத இடத்தில் மட்டும் வார்த்தைகளைப் பயன்படுத்தினால் போதும்' என்ற 'தியரி'யைத் தன் படங்களின் மூலம் ரசிகனுக்கு விளங்க வைத்தவர்களில், மணிரத்னம் குறிப்பிட்டுப் பாராட்ட வேண்டியவர்.

**'நா**யகன்' கதை ஒரு நெகடிவ் ஹீரோவின் கதை! ஆனால் படம் பார்க்கும்போது அவன் மரணத்துக்கு நாம் மரியாதை செய்யும்படி, அவன் செயல்களில் மனிதாபிமானம் இருந்தது. அடக்கப்பட்ட, ஒடுக்கப் பட்ட மக்களின் கண்கண்ட தெய்வமாக அவன் சித்திரிக்கப்பட்டிருந்தான்.

**'அ**க்னி நட்சத்திரம்' ரெண்டு பெண்டாட்டிக் கதை. கதாநாயகன் இரண்டு மனைவிகளுக்கிடையில் போராடுவது நிறையப் படங்களில் வந்திருக்கிறது. நானே பல படங்களில் செய்திருக்கிறேன்.

இந்தப் படம் ரெண்டு பெண்டாட்டிக்கார அப்பா கதை. இரண்டு மனைவிகள் உள்ளவரின் வாரிசுகள் பெரியவர்களாகும்போது உளவியல் ரீதியாக அந்த இளைஞர்கள் எப்படிப் பாதிக்கப்படுகிறார்கள், நடந்து கொள்கிறார்கள் என்பதைச் சொல்லும் படம். பாடல்கள், காதல் காட்சிகள் படமாக்கப் பட்ட விதம்..., செல்லுலாய்டு கவிதைகள். வேறு என்ன சொல்ல?

**'மௌன**ராகம்', 'அந்த ஏழு நாட்கள்' இரண்டு படங்களும் ஒருவனைக் காதலித்து, வேறொருவனுக்கு வாழ்க்கைப்பட்ட பெண்களின் மனநிலையை வெளிப்படுத்தும் படங்கள் தான். ஆனால், திரைக்கதை –

படமாக்கப்பட்ட விதத்தில், இரண்டும் முற்றிலும் வேறான படங்கள். கார்த்திக் – வேடம் சில காட்சிகளே வந்தாலும், மின்னல்போலத் தோன்றி மறைந்தாலும், ரேவதியால் மட்டுமல்ல நம்மாலும் மறக்கமுடியாத பாத்திரம்.

மகாபாரதக் கர்ணனையும், குந்திதேவி – பாண்டவர்களையும் மனத்தில் கொண்டு அவர் உருவாக்கிய 'தளபதி' இன்னொரு அருமையான படம்.

அனுபவம் மிக்க, புகழ்வாய்ந்த எந்த ஒரு டைரக்டரிடமும் சொற்ப காலம்கூட பயிற்சி எடுத்துக்கொள்ளாமல், வெள்ளிவிழா ஆண்டுக்கு மேல் சாதனை புரிந்த டைரக்டர்கள் யாருடைய படத்தின் சாயலும் இல்லாமல், தனக்கென் ஒரு தனி பாணியில் எந்த விதமான அலட்டலும் இல்லாமல், மிக அமைதியாக, சாதனை புரிந்து வருபவர் மணிரத்னம்.

வெளியாரிடம் அவர் பேசுவதே குறள் போலத்தான். அவர் பேட்டிகள் பெரும்பாலும் கொடுப்பதில்லை. ''நான் சொல்ல நினைப் பதை என் படத்தில் சொல்லிவிடுகிறேன். பிறகு தனியாக? பேட்டி எதற்கு'' என்கிறார். வித்யாசமான படைப்பாளி.

* * *

என் மகன் 'சூர்யா' நடிகனான அதிர்ச்சி இன்னும் என்னுள் இருக்கிறது! காலையில் கல்லூரி சென்றால் மாலைவரை அவன் வகுப்பில் நாலு வார்த்தை பேசினால் பெரிய விஷயம்! மௌனமாக எல்லாவற்றை யும் உள்வாங்கிக்கொண்டு அமைதியாக இருக்கும் சுபாவமுள்ளவனை, டைரக்டர் வசந்தும் மணிரத்னமும் திரையுலகுக்குத் தேர்ந்தெடுத்தது ஒரு இனிய விபத்து!

சென்னையில் பிறந்து 22 வருடம் வளர்ந்த ஒரு நடிகனின் மகன், இங்குள்ள எந்த ஸ்டுடியோவிலும் அப்பாவின் ஷூட்டிங்கை பார்த்ததே இல்லை! விளையாட்டாகக்கூட அவனை ஒரு சினிமா ஹீரோவாக நாங்கள் கற்பனை செய்து பார்த்ததில்லை!

அவனுக்கு 'வீடியோ டெஸ்ட்' என்று அழைத்துப் போனார்கள். நான் திரு. மணிரத்னத்திற்குப் போன் செய்தேன், ''சார், அவனுக்குச் சினிமா சம்பந்தமாக எதுவும் தெரியாது. அப்படி அவனை நாங்கள் வளர்க்க வில்லை. பெரிதாக எதிர்பார்த்து நீங்கள் 'டெஸ்ட்' செய்து ஏமாந்து விடக்கூடாது.

'BNT என்கிற 'கார்மென்ட் எக்ஸ்போர்ட்' கம்பெனியில் இப்போது பயிற்சி பெறுகிறான். நாளைக்குச் சொந்தமாக அவன் தொழில் ஆரம்பிக்க

லாம். அல்லது எங்காவது வேலை பார்த்து மாதம் பத்தாயிரமோ, பதினைந்தாயிரமோ சம்பாதித்து நிம்மதியாக வாழலாம்.

''நீங்கள் 'டெஸ்ட்' செய்து ஒதுக்கிவிட்டால், அது அவன் எதிர்கால வாழ்க்கையை ரொம்பவும் பாதிக்கும். இப்போதுகூட 'லேட்' இல்லை. அவனை அனுப்பிவிடுங்கள்'' என்றேன்.

''I HAVE 200% CONFIDENCE IN HIM.

DON'T WORRY! I WILL TAKE CARE OF HIM'' என்றார்.

டைரக்டர் வசந்தும் மணிரத்னம் அவர்களும் நம்பிக்கை நட்சத்திர மாக 'நேருக்கு நேர்' படத்தில் – சூர்யா – என்று பெயரிட்டு அவனை அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள். அந்தக் கலைஞர்களுக்கு நெஞ்சார நன்றி கூறுகிறேன்.

அமெரிக்காவில் 3 ஆண்டு இன்டஸ்ட்ரியல் எஞ்சினீரிங் படித்து எம்.எஸ்.பட்டம் பெற்று இந்தியா வந்த என் இளைய மகன் கார்த்திக், ஓராண்டுக்கும் மேலாக மணிரத்னத்திடம் உதவி இயக்குநராகப் பயிற்சி பெறுகிறான்.

''அமெரிக்காவில் ஒரு புரொபசரிடம் கற்றுக் கொள்ளும்போது, எவ்வளவு மகிழ்ச்சியும் தோழமையும் எனக்குக் கிடைத்ததோ, அதே சந்தோஷத்தை மணிசாரிடம் நான் அனுபவித்து வருகிறேன்'' என்கிறான் கார்த்திக்.

'திரைப்படத்துறைக்குப் படித்தவர்களும் உலக சினிமாவை அறிந்த இளைஞர்களும் நிறைய வரவேண்டும். தமிழ்ச் சினிமாவை உலகத் தரத்துக்கு உயர்த்த வேண்டும்' என்பது மணிரத்னம் அவர்களின் கனவு.

நியாயமான அந்தக் கனவு விரைவில் நனவாக வேண்டும் என்று நானும் வேண்டுகிறேன்.

---

# 65



## டைரக்டர் பாலா

1993 டிசம்பர் மாதம் 15ஆம் தேதி டைரக்டர் பாலா, திரையுலகில் கால் பதிக்கத் தன்னுடைய முதல் படத்திற்குப் பூஜை போட்டார். ஏ.வி.எம். ஸ்டுடியோ விநாயகர் சிலை முன்பு பூஜை நடைபெற்றது. பாலுமகேந்திரா முன்னிலையில் இளையராஜா குத்துவிளக்கேற்றி வைத்து ஆசீர்வதித்தார்.

அப்போது படத்திற்குச் சூட்டிய பெயர் 'அகிலன்'. பெயர் சூட்டு வதற்கு முன்னர் எழுத்தாளர், அமரர் அகிலன் குடும்பத்தோடு தொடர்பு கொண்டு, படத்திற்கு இந்தப் பெயரைச் சூட்டுவதில் அவர்களுக்கு ஏதும் ஆட்சேபணை இல்லையே என்று என்னைக் கேட்கச் சொன்னார். பாலா, அகிலனின் புதல்வர் கண்ணனைக் கேட்டு, பின்னர் பெயர் சூட்டப்பட்டது.

பூஜை முடிந்து, பெரியவர்கள் எல்லோரும் வாழ்த்திவிட்டுச் சென்றார்கள். பாலுமகேந்திரா தன்னுடைய கலையுலக வாரிசுக்கு செல்லப்பிள்ளைக்கு, இத்தனை காலமும் தான் பயன்படுத்தி வந்த VIEW FINDER கருவியைப் பரிசளித்துச் சென்றார். 'க்ளோசப் – மிட்ஷாட் – லாங்க் ஷாட்' என்று வைக்கும்போது, VIEW FINDER வழியாகப் பார்த்து, ஷாட்டை முடிவு செய்வார்கள்.

கூட்டம் கலைந்தபின் இறுகிய முகத்துடன் பாலா என்னிடம் வந்து, படம் நின்று விட்ட அதிர்ச்சியை மெதுவாய்ச் சொன்னார்.

பூஜை போடுவதற்கு முதல் நாள் இரவே, தயாரிப்பாளர் – பைனான் சியரிடையே கருத்து வேற்றுமை ஏற்பட்டு, இந்தப் படத்தை அவர்கள் கைவிட்டு விட்டார்கள்!

எத்தனையோ அதிர்ச்சிகளைத் திரையுலகில் தாங்கியவன் நான். மெலிதாக அவரை அணைத்து, ''விரைவில் விடியலைச் சந்திப்பீர்கள்'' என்று ஆறுதல் கூறி வந்தேன்..

அடுத்து $3\frac{1}{2}$ ஆண்டுகள் அவர் எப்படித் தவித்தார். யார் யாரைச் சந்தித்தார், இறைவனை எப்படி நிந்தித்தார் என்பதையெல்லாம் 'இவன் தான் பாலா' புத்தகத்தில் எழுதிவிட்டார்.

1997 ஜூன் 9 ஆம் தேதி திங்கள் கிழமை, 'சேது' படத்துக்குப் பூஜை போடப்பட்டது. விக்ரம் – கீர்த்திரெட்டி நடிப்பதாக ஆரம்பத்தில் பேசப்பட்டு, கீர்த்தி ரெட்டி பின்னர் நடிக்கவில்லை. திரு. கந்தசாமி, பாலா திறமை மீது நம்பிக்கை வைத்து, தயாரிப்பு வேலைகளைத் துவக்கினார்.

விக்ரம் அர்ப்பணிப்பு மிகுந்த கலைஞரென்றாலும் அதிர்ஷ்டத்துக்காக அவர் காத்திருந்த நேரம்! இன்றுபோல அவர் பெயர் சொன்னதும் உடனே வியாபாரமாகும் நிலை அப்போது அவருக்கில்லை.

இருப்பினும் ஹாலிவுட் தரத்துக்குப் படத்தின் காட்சிகளைப் பட மாக்குவது என்று முடிவுகட்டி, ஒவ்வொரு பிரேமாக ரத்தினவேலு ஒளிப் பதிவில் இழைத்து இழைத்துப் படமாக்கினார் பாலா. தயாரிப்புச் செலவு கட்டுக்குள் நிற்கவில்லை.

கான்ட்ராக்டரான திரு. கந்தசாமி முடிந்த அளவு பொறுமை காத்தார்.

படம் முடிவடைவதில், வியாபாரமாவதில் காலதாமதமாயிற்று. அந்த மனிதரும் பாவம் விரக்தியடைந்து விட்டார்.

ஒரு வழியாகப் படம் முடிந்தது. முதல் பிரதி எடுத்து, விநியோகஸ்தர்கள், திரையுலகின் முக்கியப் புள்ளிகள், நடிகர்களுக்கெல்லாம் போட்டுக் காட்டினார்கள். ''படம் பிரமாதம். ஆனால் வசூல் பண்ணுமா'' என்றுதான் சொல்ல முடியவில்லை என்றார்கள்.

6 மாதம் ச்லியாது திரையிட்டுக்காட்டி, 'பிரிண்டே' கிழிந்து விட்டது. எந்தச் சோதனைக்கும் ஒரு எல்லையுண்டல்லவா?

1999 டிசம்பர் 10ஆம் தேதி 'சேது' உலகெங்கிலும் வெளியாயிற்று. முதல் வாரம், இரண்டாவது வாரம் முடிய மக்கள் அமைதியாய் ரசித்தார்கள். அதன்பிறகு, ஒவ்வொரு காட்சி முடிந்ததும், ரசிகர்கள் அத்தனை பேரும் தியேட்டரில் எழுந்து நின்று, மரியாதை செய்யும் விதத்தில், ஒன்றுபோல கைதட்டி, தங்கள் மனநிறைவை வெளிப்படுத்திவிட்டுச் சென்றனர்.

தமிழ் நாட்டில் என்று இல்லை, மலேசியா, சிங்கப்பூர், அமெரிக்கா என வெளியான எல்லாத் தியேட்டர்களிலும் சொல்லி வைத்தாற்போல ஆவேசமான கைதட்டல் படத்தின் முடிவில் கிடைத்தது.

ஒரே படத்தில் உலகப் புகழ்பெற, அந்த இளைஞன் பட்ட நரக வேதனைகளை வார்த்தையில் வடிக்க முடியாது!

'நந்தா' படமே கிட்டத்தட்ட அவர் வாழ்க்கையின் பிரதிபலிப்புத் தான். மிகச்சிறு பிராயத்திலேயே அவருக்குள் தாழ்வு மனப்பான்மை தோன்றிவிட்டிருக்கிறது. 'தான் இந்த உலகத்துக்கு வேண்டாதவன். தன் மீது பாசம் காட்டி அரவணைக்க யாரும் விரும்பவில்லை' என்ற எண்ணம் மேலோங்கி இருந்திருக்கிறது.

சிறுவயதிலேயே தன்னை அத்தைக்குத் தத்துக் கொடுத்தது மனத்தில் ஒரு வலியை ஏற்படுத்தியுள்ளது. தாய்ப்பாசத்திற்காக ஏங்கியது இன்னும் அவர் கண்களில் தெரிகிறது.

'நந்தா' படத்தில் சிறுவனாகச் சிறைக்குச் சென்றவன் இளைஞனாகத் திரும்பி வருவான். இடைப்பட்ட காலத்தில் சிறைக்கு யாரும் வந்து அவனைப் பார்க்கவில்லை.

கோயிலுள் அம்மாவைப் பார்க்கிறான் நந்தா. 'தன் மகன் – இவன் தான்' என்ற நினைவு வந்த நொடிப்பொழுதில், அவன் மீது வெறுப்பை உமிழ்ந்து வெளியேறுகிறாள் தாய்.

மகன் வீட்டுக்குள் வரக்கூடாது என்று வாசல்கதவைத் தாளிட்டு விடுகிறாள்...! காய்ந்து போன, அடிவயிற்றிலிருந்து குரலெடுத்து ''அம்மா!

அம்மா கதவைத் திறம்மா'' – என்று கத்துகிறான். அந்தச் செவிட்டுத் தாய் காதில் அது விழாது. ஏமாற்றமும் ஏக்கமுமாய் அந்த இடத்தை விட்டு வெளியேறுவான்.

இன்னொரு காட்சியில், வீட்டிற்குள் தாயைச் சந்திக்கிறான். அழுகை பொங்கிக்கொண்டு வருகிறது. ''ஏம்மா! என்னைப் பாக்க ஒரு தடவை கூட வரல்லே...?'''

அம்மாவிடமிருந்து எந்தப் பதிலுமில்லை.

''பசிக்குது சோறு போடும்மா'' – மன்றாடுகிறான்! சிலையாக அவள் உட்கார்ந்திருக்கிறாள்.

உள்ளே சென்று அலுமினியத் தட்டில் சாதம் போட்டுக் குழம்பு ஊற்றி எடுத்து வந்து அவள் முன் வைத்து, தன் கையால் அதைப் பிசைந்து, ஒரு உருண்டை எடுத்து அம்மா கையில் வைத்து அவள் ஊட்டி விடுவது போல் நினைத்துச் சாதத்தை வாயில் கவ்விச் சாப்பிடுகிறான்.

''இது தான்... இது தான் கேட்டேன் சொல்லு அந்தச் செவிடிகிட்ட'' என்று அவளைப் பிடித்துத் தள்ளிவிட்டு, கிடைக்காத தாய்ப் பாசத்திற் காக, தான் ஏங்கியதை, அழுகையும், வெறுப்பும் ஆத்திரமும், கோபமு மாய் – அவன் வெளிப்படுத்தும் காட்சி! – தமிழ் சினிமாவில், 40 ஆண்டுகளில் அவ்வளவு, அழுத்தமாக இயல்பாக யாரும் சொன்னது இல்லை.

'' 'நந்தா'.என்ன கதை பாலா'' என்று ஒரு நாள் கேட்டேன். சும்மா? இரண்டு வரி ஹை கூ கவிதை என்றார்.

''அம்மா கையால்

சாப்பிட ஆசைப்பட்டான்

கொடுத்தாள் – விஷம்!'' என்றார்.

க்ளைமாக்ஸில், ஆசைப்பட்ட மகனுக்கு, அந்தத் தாய் கொண்டுவந்து கொடுத்த சாதத்தை ரெண்டு வாய் அள்ளிப் போட்ட போதே அவனுக்குத் தெரிந்து விட்டது. அதைப் பார்வையால் மெலிதாக உணர்த்திவிட்டு, மேலும் இரண்டு வாய் சாப்பிடும்போது ரத்தம் ஈறுகளின் வழியே எட்டிப் பார்க்கிறது!

ரத்தக் கண்ணீர், அந்தக் கண்களில் விளிம்புகட்டி நிற்க, ''எனக்குத் தெரியும்மா...'' என்பான். அதற்குமேல் விளக்கத் தேவையில்லை.

நெஞ்சை அடைத்தது படம் பார்த்தோருக்கு...! என்ன இது..., நிஜம் தானா? இது தான் முடிவா...? ஏன், ஏன் இந்த முடிவு..? திகைப்பு!

எதுவும் சொல்ல முடியாத மௌனத்தில் மக்கள் தியேட்டரை விட்டு வெளியேறினார்கள்.

'**பி**தாமகன்' படத்திலும் சித்தன் விக்ரமுக்குள், பாலா ஒளிந்து கொண்டிருக்கிறார். பேச முடிந்தும், பேசாது வாழ்ந்த சித்தன் போல, எத்தனையோ விதமான உணர்வுகளை, வலிகளைத் தாங்கிக்கொண்டு, மௌன சாமியாராகப் பாலா நம்மிடையே நடமாடுகிறார்.

'சிறுவனாய் இருந்தபோது பேசினானே – பாடினானே சித்தன்! இப்போது ஏன் ஊமையாய், மூர்க்கத்தனமாய் எல்லோரையும் தாக்கிவிட்டு பிடிவாதமாய்ப் பேசாமலிருக்கிறான்' என்பது பலரது கேள்வி.

வாழும் சுடுகாடும், எரியும் பிணங்களும், அது கக்கும் குரூர வாடையும், மக்களின் தீண்டாமை உணர்வும் – தனிமையில் வாழ்ந்த அவனுக்குள் வெறுப்புணர்வை வளர்த்திருக்க வேண்டும்.

அதனால் அவன் மௌனமாகி விட்டான். ஏன் பேச வேண்டும். பேசிப் புரிய வைக்க வேண்டியதைக் கண்களிலும், விரலசைவிலும் செய்கையிலும் அவன் காட்டுகிறானே! பேசாமல் நடித்ததுதானே வித்தியாசம்?

சிறுத்தை ஓட்டம், புலியின் உறுமல், குரங்கின் சேட்டை, குழந்தை மனது, மிருகபலம் – விக்ரம் திரையுலக வாழ்க்கையில் இது ஒரு மாஸ்டர் பீஸ் பர்ஃபாமென்ஸ்!

அதேபோல, சூர்யாவை மாறுபட்ட 'லங்கர் கட்டை' உருட்டும் சக்திவேலாக நடிக்க வைப்பதற்குமுன், மதுரை, திண்டுக்கல் பகுதிகளில், லங்கர் கட்டை உருட்டும் ஒரிஜினல் ஆட்களைப் பிடித்து, கூட்டத்தின் முன் அவர்களைப் பேசவிட்டு, ஒலிப்பதிவும், வீடியோவில் பதிவும் செய்து, சரளமாக அந்த பாஷையைச் சூர்யா பேச பயிற்சியளித்துப் படமாக்கினார்...

சமுதாயத்தால் கைவிடப்பட்ட, அலட்சியப்படுத்தப்பட்ட சித்தன் – சக்திவேலு காரக்டர்களின் நடவடிக்கைகள், உணர்வுகள்தான் 'பிதாமகன்' படம். கதை சொல்ல வேண்டும். அதில் ஒரு தொடக்கம், முடிவு இருக்க வேண்டும். படத்தில் நீதி சொல்ல வேண்டும் என்றெல்லாம் அவர் கவலைப்படுவதில்லை.

படப்பிடிப்பு லொகேஷனுக்கு வரும்வரை, ஏன் வந்த பின்பும்கூட, மூளைக்குள் அந்தக் காட்சி ஓடிக் கொண்டிருக்கும். ஸ்பாட்டில் தன்னந் தனியாக உட்கார்ந்து ஏதோ ஒரு இடத்தைப் பார்த்தவாறு யோசனையில் ஆழ்ந்திருப்பார்.

திடீரென்று காமிராவை இங்கு வை. இந்த மாதிரி பேசி இங்கு வந்து குத்துக்காலிட்டு உட்கார். கண்ணைச் சிமிட்டாமல், இந்த இடத்தையே உற்றுப் பார்த்து அந்த வசனத்தைப் பேசு என்பார். வசனம் அதிகமாக இருக்காது. உச்சரிப்பில் ஏற்ற இரக்கங்களுடன் 'மாடுலேட்' செய்து பேசுவது அவருக்கப் பிடிக்காது. அசல் வாழ்க்கையில் பேசுவதுபோல 'FLAT' ஆகப் பேசச் சொல்வார். நினைத்ததுபோல் படமாக்காமல் விடமாட்டார்.

★ ★ ★

**வீ**டியோக்கள் பார்த்தோ, நாவல் படித்தோ அந்தத் தாக்கத்தில் கதை எழுதமாட்டார். வாழ்க்கையிலிருந்துதான் காரக்டர்கள் பிடிப்பார்.

தன் சொந்த வாழ்க்கையில் இருண்ட பகுதிகள், அழுத்தி வைக்கப் பட்ட சோகங்கள், சுய வெறுப்புக்கள் - எல்லாம் அந்தப் பாத்திரங்களி னூடே வெளிப்படும்.

திருமணம் செய்து கொள்ளாமலிருந்தார். 'எதையாவது சாதிக்காமல், நாட்டின் மக்கள் தொகையை நாமும் அதிகரிக்கச் செய்யக்கூடாது' என்ற எண்ணம் அவருக்கிருந்தது.

''எப்போ சார் கல்யாணம்?'' என்று கேட்டால்,

'அது ரொம்ப அவசியமா? வாஜ்பாயும் அப்துல் கலாமும் கல்யாணம் பண்ணிக்கிட்டாங்களா? ஏன் அதைப்பத்தியே கேக்கறீங்க'' என்று எரிந்து விழுவார்.

ஒரு நாள் போனில், என் வாழ்க்கை பற்றியும் திருமணம் தேவை யில்லை என்று வாழ்ந்த நான், 'முழுமையான வாழ்க்கை வாழத் திருமணம் அவசியமான பந்தம்' என்று உணர்ந்ததையும் அவருக்கு விளக்கினேன்.

''உங்கள் வாழ்க்கையில் பிரமச்சாரியாக இடைவேளைவரை வாழ்ந்துவிட்டீர்கள்...

''திருமணமாகி, நம்மைக் கவனிக்கவும் ஒருத்தி வந்து, நமக்காகவே வீட்டில் ஒருத்தி சாப்பிடாமல் காத்திருப்பாள் என்ற எண்ணம் ஏற்பட்டு, இரவு 12 மணி ஆனாலும் வீடு வந்து அவள் கையால் சாப்பிடுவது சொல்லிப் புரியவைக்க முடியாத சுகம்...

''இளம் வயது முதல் நாம் செய்த குறும்புகளை, நமது கோப தாபங்களை, நம் திறமைகளை, நம்முடைய மழலைகள் சுவீகரித்து, திரும்ப வெளிப்படுத்தும்போது அதைப் பார்க்கும் சுகம், அனுபவித்தா லொழிய புரியாது'' என்றேன்.

மதுரை திருமண மேடை ஒன்றில் ஒரு நாள் பாலாவைச் சந்தித்தேன். ''சார்! நீங்கள் நினைத்தால் என் திருமணம் சீக்கிரம் முடியும். பெண் பார்த்துவிட்டேன். அவள் தகப்பனாரிடம் நீங்கள்தான் பேசி சம்மதம் வாங்க வேண்டும்'' என்றார். இன்ப அதிர்ச்சியாக இருந்தது.

பெண்ணின் தகப்பனார், அடுத்த நாளே பிசினஸ் விஷயமாகச் சென்னை வருவதாகச் சொன்னார். பகல் விருந்துக்கு எங்கள் இல்லம் அழைத்து வரச் சொன்னேன்.

''பாலாவைப் பற்றி நான் சொல்ல அவர் மிச்சம் ஏதும் வைக்கவில்லை. அவர் வாழ்க்கை, திறந்த புத்தகமாகி 'விகடன்' – இதழில் வெளிவந்து விட்டது.

''கூடாத சகவாசத்தில், வீணாகப் போயிருக்க வேண்டியவர், ஏதோ ஒரு கட்டத்தில் சுதாரித்து, சினிமா பக்கம் தன் சிந்தனையையும் உழைப்பையும் திருப்பி, இரவு பகலாக கடுமையாக உழைத்து, பாலு மகேந்திரா என்ற மேதையிடம் தொழில் பயின்று, மூன்றே படங்கள் மூலம், அத்தனை மக்களின் பார்வையையும் தன் பக்கம் திருப்பியவர்.

''தனக்கும் ஒரு வாழ்க்கை வேண்டும் என்று ஆசைப்படுகிறார். நீங்கள் மனது வைத்தால் அந்த ஒளிமயமான வாழ்க்கை அவருக்குக் கிடைக்கும்'' என்றேன், அந்தப் பெரியவரிடம்.

ஏற்கெனவே, பாலா என்ற கலைஞன் மீது மதிப்பும் மரியாதையும் வைத்திருந்த பெரியவர், என் பேச்சுக்கு மதிப்பளித்தார்.

இன்று அவரது மகள் முத்துமலர், பாலாவின் கரங்களில்.

திருமணத்திற்குக் குடும்பத்தோடு மதுரை போயிருந்தோம். மணப்பெண்ணை அறிமுகப்படுத்தினார்கள். ''மாமா உனக்கு என்ன பரிசு கொடுத்தார்?'' என்று என் துணைவி கேட்டார்.

''அவரே ஒரு பரிசு! வேறு பரிசு எதற்கு அம்மா?'' என்றாள் பெண். வாயடைத்துப் போனார் என் மனைவி,

மலர், முத்துப் போல, செல்வங்கள் பெற்று பாலா வாழ்வில் வளம் சேர்க்க வாழ்த்திவிட்டு வந்தோம்.

---

## 66



# 'சைலண்ட்' சகலகலா வல்லவர்

சிவகுமார் பற்றி – கே.பி

**எ**னது 'அக்னி சாட்சி' படத்தில் ஒரு காட்சி! அரவிந்தன் என்கிற அந்த நாட்டியக் கலைஞனைப் பாராட்ட வரும் நடிகர் கமல்ஹாசன் ''நாங்கள்ளாம் தான் 'சகல கலா வல்லவர்கள்'னு நினைச்சுட்டிருக்கோம். ஆனால் இவர் ஒரு 'சைலண்ட் சகல கலா வல்லவர்' என்று குறிப்பிடுவார்.

இந்த 'சைலண்ட் சகல கலா வல்லவர்' என்பது அந்த அரவிந்தனுக்கு மட்டுமல்ல, அந்தப் பாத்திரத்தை ஏற்று நடித்த சிவகுமாருக்கும் நூறு சதவிகிதம் பொருந்தும் என்பதாலேயே அந்தக் காட்சியில் இந்த வசனத்தைக் கமல் மூலம் பேசவைத்திருந்தேன்.

நிலைத்து நிற்க வேண்டுமென்று எண்ணுகின்ற நடிகர்கள், தொழில் ரீதியாகத் தங்களை எப்படிப் படிப்படியாக வளர்த்துக்கொள்ள வேண்டும், வளர்ந்துவிட்ட பிறகு எப்படியெல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்பதையெல்லாம் யோசித்துப் பார்க்கும்போது 'பளிச்' சென்று என் கவனத்திற்கு வருகின்றவர் நண்பர் சிவகுமார் அவர்கள்தாம்.

சிவகுமாரைப் பற்றி இன்னமும் ஒரே வாக்கியத்தில் சொன்னால், 'every inch a gentleman' என்று சொல்வது மாதிரி, சிவகுமார் **'every inch a perfect professional'.**

Michelangelo சொன்னது மாதிரி அப்படிப்பட்ட ஒரு Perfection-ஐ அடைவது எளிதான காரியமல்ல!

இதை விளக்கிக் கூற வேண்டுமெனில், 'எடுத்துக்கொண்ட தமது தொழிலை அவர் தெய்வமாக மதிப்பவர்' என்று சொன்னால் அது சாதாரணம்.

'தாம் செய்யும் தொழிலை மாதா, பிதா, குரு, தெய்வமாகக் கொண்டவர் அவர்' என்றுதான் சொல்ல வேண்டும்.

தொழில் சம்பந்தப்பட்ட எந்தக் காரியத்தையும் நேர்மையாக, நேர்த்தியாக, அழகாக, செம்மையாக, துப்புரவாக, விரைவாகச் செய்து முடிப்பதில் மிகுந்த அக்கறை செலுத்துபவர்.

காட்சிகளில் பேசவேண்டிய வசனங்களிலிருந்து, காட்சிக்குத் தகுந்த மாதிரி அணிய வேண்டிய உடை விஷயங்கள் வரை அவர் எடுத்துக் கொள்கின்ற பிரத்தியேகக் கவனம், இயக்குனருக்கு உதவியாக மற்ற எல்லா விஷயங்களிலும் அவர் செலுத்துகின்ற தன்னலமற்ற அக்கறை, குறித்த நேரத்தில் படப்பிடிப்புக்கு வருவது – இவைகளனைத்தும் அவரை மற்றவர்களிடமிருந்து தனித்து நிற்கச் செய்கின்றன.

Hundred percent perfectionist.

ஆகவே, ஒரு நடிகர் எப்படி இருக்கவேண்டுமென்று, மற்றவர்களுக்கு முன்னுதாரணமாகத் திகழத் தேவைப்படுகின்ற அத்தனை குணாதிசயங்

களும் நிரம்பப் பெற்றவர் என்கிற அர்த்தத்தில்தான் சிவகுமாரை perfect professional என்று சொன்னேன்.

இந்த விஷயத்தில் கமல்கூட நூறு சதவிகிதம் perfect professional என்று சொல்ல மாட்டேன். நடிப்பிலே கமல் ஒரு சிகரம் என்றாலும் நடிப்பைத் தவிர மற்ற ஓரிரு விஷயங்களில் கமல் சற்று மாற்றுக் குறைவுதான் என்று நான் சொன்னால் அதைக் கமல்கூட நிச்சயம் ஒப்புக் கொள்வார்.

''நடிகனாக வேண்டுமென்று கனவு காண்பவர்களும், நடிகனாக நிலைக்க வேண்டுமென்று விரும்புபவர்களும், நடிப்பு கற்றுக் கொள்ளப் பிரியப்படுபவர்களும், நடிப்புக் கல்லூரியைத் தேடிப்போக வேண்டிய அவசியம்கூட இல்லை! தமது தொழிலில் தீவிரமாகத் தம்மை ஈடுபடுத்திக் கொள்கிற சிவகுமாரை ஒருமாத காலம் அவருடன் கூடவே இருந்து கவனித்தாலே போதும்'' என்று ஒரு முறை மேடையிலே அவரைப் பற்றிப் பேசியிருக்கிறேன்.

அவரைப் பார்த்துக் கற்றுக்கொள்ளும்போது அவர் என்னென்ன செய்கிறார் என்பதை மட்டுமல்ல, என்னவெல்லாம் அவர் செய்வதில்லை என்பதையும் அவரிடமிருந்து கற்றுக்கொள்ள முடியும். இப்படித் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக் கொள்கின்ற ஒரு கலைஞனாக இருப்பதால்தான் சிவகுமார் திரையுலகில் ஆணிவேரிட்டுக் கடந்த 40 ஆண்டு காலமாக இன்னும் பவனி வந்துகொண்டிருக்கிறார்.

ஒன்பது மணிவரை நடைபெறும் படப்பிடிப்பில் அவருடைய வேலை ஏழுமணிக்கே முடிந்து விடுகிறதென்று வைத்துக்கொள்வோம். 'நீங்கள் வீட்டிற்குப் போகலாம்' என்று சொன்னாலும் அவர் வீட்டிற்குச் செல்லமாட்டார். ''ஒன்பது மணிக்கு முன்னால் போனால் வீட்டில் என் மனைவி சோறுபோட மாட்டாள்'' என்று விளையாட்டாகச் சொல்வார்.

தமது 'மேக்கப்'பைக் கலைத்துவிட்டுப் படப்பிடிப்பு முடிகிறவரை, அங்கேயே இருந்து சக நடிக நடிகையருக்கு என்னென்ன 'ஷாட்'டுகள் எடுக்கப்படுகின்றன என்பதையெல்லாம் தள்ளி நின்று ஒரு மாணவனைப் போல் கூர்ந்து கவனிப்பதைப் பல நேரங்களிலே நான் பார்த்திருக்கிறேன்.

இன்னமும் அவர் தம்மை ஒரு மாணவனாகவே கருதுகிறார் என்பதுதான் அவருடைய strong point.

சினிமா என்பது மிகப்பெரிய சாதனம். யாருமே அதைக் கரைத்துக் குடித்துவிட்டதாகவோ, அதில் கரைகண்டுவிட்டதாகவோ நினைத்துக் கொள்ள முடியாது. இதை அவர் நன்கு புரிந்து வைத்திருக்கிறார்.

குறிப்பிட்ட நேரத்தில் படப்பிடிப்பிற்கு வருவதில் சிவாஜி அவர்களுக்கு அடுத்தபடியாக, சிவகுமாரைத்தான் சொல்லவேண்டும்.

ஒன்பது மணி படப்பிடிப்புக்கு, நான் எட்டு ஐம்பதுக்குப் போனால்கூட சிவகுமார் எட்டே முக்காலுக்கே அங்கே வந்திருப்பார். மறுநாள் நான் எட்டு நாற்பதுக்கே சென்றடைந்தால், அவர் எட்டு முப்பதுக்கே 'மேக்கப்'புடன் வந்துவிட்டார் என்கிற செய்தி கிடைக்கும்.

அவருடன் நான் பணிபுரிந்த அத்தனை படங்களிலும், ஒருநாள்கூட என்னால் அவரை ஜெயிக்க முடியவில்லை என்பதில் எனக்குச் சந்தோஷமே!

சில நேரங்களில் அவர் மேடையில் பேசும்போது 'என்னய்யா ஞாபகச் சக்தி இந்த ஆளுக்கு' என்று நான் ஆச்சரியப்பட்டுப் போவேன்!

23 ஆண்டுகளுக்கு முன்பு வந்த எனது அரங்கேற்றம் திரைப் படத்தில் அவர் நடித்தபோது சொன்ன வசனங்களை, அவர் சொன்ன வசனங்கள் மட்டுமல்ல – பிரமீளா பேசும் வசனங்களையும் சேர்த்துத்தான் – அதே ஏற்ற இறக்கத்தோடு அப்படியே அந்தத் திரைப்படக் காட்சியை மனக்கண்முன் கொண்டுவந்து நிறுத்துவதில் மாமன்னன்.

நான்கூடச் சொல்வேன்: ''உங்கள் டீ.வி. பேட்டிகளில் film clippings கூட போட வேண்டாம். நீங்கள் அவற்றைப் பற்றி விளக்கும்போதே முழுக் காட்சியையும் மனத்திரையில் ஓடச்செய்து விடுவீர்கள்'' என்று.

'நடிப்பிற்கு இலக்கணமும் அகராதியும் சிவாஜி என்றால், ஒரு நடிகனுக்கு இலக்கணமும் அகராதியும் சிவகுமார்' என்று சொல்வதில் இரு கருத்துக்களுக்கிடமில்லை.

நீங்கள் பார்த்திருக்கலாம். அவரைப் பற்றி ஒரு கிசுகிசுகூட எந்தப் பத்திரிகையிலும் வந்திருப்பதாகவோ, பேசப்பட்டதாகவோ சரித்திரமே இல்லை.

'கிசுகிசு'க்களுக்கு ஒரு பாரம்பரியம் உண்டு. அவற்றில் 100 க்கு 95 சதவிகித விஷயங்களில் உண்மை இருப்பதில்லை. ஆனால் அந்த மீதி 5 சதவிகித விஷயங்கள் உண்மையாக நிகழ்ந்து விடுவதனால் பத்திரிகை

கிசுகிசுக்களுக்குச் சில சமயங்களில் ஒட்டு மொத்தமாக நம்பகத்தன்மை ஏற்பட்டு விடுகிறது. வாசகர்களும் அப்படியே நம்பி விடுகிறார்கள்.

Some people believe in anything, if it is whispered to them.

'எப்படி நீங்கள் உடலை எப்பொழுதும் trim ஆக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்?' என்று சிவகுமாரைச் சமீபத்தில் நான் கேட்டேன்.

"Take breakfast like a king;
Lunch like a prince;
Supper like a pauper."

மேற்சொன்ன quotation-ஐத்தான் அவர் சொன்ன பதிலும் எதிரொலித்தது.

---



சிவகுமாருக்கும் எனக்கும் உள்ள ஒரே ஒற்றுமை அவரும் ஓவியக் கல்லூரியில் படிச்சாரு. அதே கல்லூரியில் அவருக்கு முன்னாடி நான் படிச்சேன்.

வேற்றுமை, எனக்கு மன்மத லீலை புடிக்கும். அவருக்கு அது பிடிக்காது.

1-1-05, வெளியீட்டு விழாவில், கவிஞர் வாலி

67

# 'THE HINDU'

20.1.2004 SANKARADOSS SWAMIGAL ENDOWMENT LECTURE.

KAMARAJ UNIVERSITY - MADURAI

HE HAS lived in abject penury, has started from the scratch and seen the hardest of days as a child. Cries and laughter come to him easily and perhaps naturally too, so much so that he has captivated audiences with convincing performances on the silver screen for decades. He is none other than the veteran Sivakumar for whom acting in films has been a life-saver.

"But for my acting, I would have been nothing but what I was portrayed in one of my films 'Rosappu Ravikkaikari'," he said, as a matter of fact, during a freewheeling conversation after delivering a lecture at the Madurai Kamaraj University here recently.

Given his position today, it is strange to believe that he was considered an "unlucky child" in his place of birth - Kasigoundan Puthur - a village 20-km away from Coimbatore. He had the fire in him from childhood to prove himself to others one day.

He remembers his mother with great reverence. "My father expired early in my life. Just imagine how difficult it would have been for a widow to raise her children in that obscure place with no one offering any help. But my mother stoically withstood the circumstances and all pressures and even managed to send me to school," even today he recollects with moist eyes.

In a way, the sufferings only hardened him and made him wiser to take on challenging situations. "Each time I encounter any difficulty, I am reminded of my mother's will power and commitment

and the very thought rejuvenates me and shows me the way to go ahead."

A strict disciplinarian to the core, Sivakumar is wary of the negative impact of glamour industry. "The temptation and the tendency to err are strong. One has to have a strong character or else the image gets tainted very easily" he cautions.

Sivakumar is respected for his modesty and discipline by his colleagues and junior artistes in the industry." I am a teetotaller. I gave up even coffee and tea in 1958. I practice yoga and do other physical exercises to maintain my health" he shares the secret of his appearance. Not many in this world are able to practise what they preach. But Sivakumar is an exception. He advocates self-restraint and adheres to it himself.

Like his acting, Sivakumar is equally known for his brilliant paintings.

Painting has become an inseparable passion.

"There is a saying in Tamil that 'chithiramum (drawing) kai palakkam' but it stands good only for those with an aptitude for drawing and not for all" he says.

After finishing his studies, Sivakumar entered the College of Arts & Crafts in Madras. After six years of learning the nuances, he struck a perfect chord with his works.

He sat for hours at a stretch forgetting the world around to complete a painting.

He rates his paintings of crying baby and a girl with a flower basket as the best ones for his detailed efforts.

"It took months to complete those paintings because I was driven by a passion to bring out the finest emotional details."

Sivakumar is also known for his paintings of the Brahadeeswarar Temple, Meenakshi Sundareswarar Temple, Thirumalai Naick Mahal. The grandeur of these paintings has earned him rich encomlums from the critics. But what he finds as most impressive is a portrait of Mahatma Gandhi.

Coming to his entry into tinsel town, Sivakumar says he always preferred acting to direction. "I feel I can emote the feelings as stated in a script very well" he says, adding that he is happy with "what I am and where I am."

A little known fact about Sivakumar is that he is endowed with a superb memory power and is a voracious reader.

"Things just get imprinted in my mind whenever I come across interesting lines. I do not consciously memorise them but I am able to retain them well" he says, sharing his ability to recite the verses of Bharathiar and poems of Sangam Literature with flair and ease.

It is equally surprising to discover that the veteran actor is also a good writer.

"Writing is not easy. You must have the ability to express what you feel. My work 'Idhu Rajapattai Alla' is widely acknowledged and even included in the 91–92 curriculum of Loyola College" he says.

After a long lecture – lasting over three hours – Sivakumar shows no sign of fatigue.

His enthusiasm bubbles up when asked about his sons.

"They are my alter egos. They follow all my principles and abide by my advice" is the father's proud comment. His on–screen effervescence always regaled the audiences and those who were listening to his lecture that evening were no exception either.

***T. SARAVANAN***

---

# 68



ஆறுமுகக் கவுண்டர்

## சமர்ப்பணம்!

1958ஆம் ஆண்டு, 'தமிழகத்தின் தலைநகரான சென்னைக்குச் செல்லப் போகிறோம்! சிறந்த ஓவியனாக வாழ்வைத் தொடரப் போகிறோம்!' என்று அந்த இளைஞன் கனவு கண்டு கொண்டிருந்த

நேரம்...! திரைப்படங்கள் சிலவற்றில்தான் சென்னை ரயில் நிலையத்தையே அவன் பார்த்திருந்தான். அந்தச் சிறு கிராமமான காசிகவுண்டன் புதூரை விட்டு, வெளியூர்களில் ஓர் இரவுகூடத் தங்கிப் பழக்கப்பட்டிராத அந்த இளைஞன் கற்பனையில் மிதந்தான்.

சென்னைக்குப் புறப்பட இன்னும் சில மாதங்களே இருந்தன. அவனது சொந்த நிலத்தை, விமான நிலையத்தின் உபயோகத்துக்கு வேண்டும் என்று வெள்ளைக்காரன் எடுத்துக்கொண்டதற்கு விலையாகத் தரவேண்டிய பணம், மைனராக இருக்கும் அவன் மேஜரானதும் (18 வயது) கிடைக்கும் என்று சொன்னார்கள். அதை எப்படிப் பெறுவது என்று விசாரித்துத் தெரிந்துவர, கலங்கல் கிராமம் நாயுடுவிடம் சென்றிருந்த தன் தாயாரின் வரவை எதிர்நோக்கி அவன் காத்திருந்தான்.

அந்தி சாயும் நேரம், தண்ணீர்க் குடத்துடன் அங்கிருந்து வந்த தாய், ''நமக்கு நல்ல காலம் பொறந்திடுச்சு. நம்மளோட கஷ்டமெல்லாம் தீரப் போகுது. கண்காணாத சீமைக்குப் போயி, கண்ட கண்ட பொம்பளைங்க கண்ணடிபட்டு அவஸ்தைப் படறதைவிட, கண்ணு முன்னாலேயே சூலூருக்குப் பக்கத்தில இருக்கிற மில்லுல உனக்கு மானேஜர் வேலை. எடுத்த எடுப்பிலேயே ஆயிரம் ரூபாய் சம்பளம். மோட்டார் சைக்கிள் ஒண்ணு வாங்கிக் குடுத்திடறேன். காலாகாலத்தில் ஒரு கண்ணாலத்தையும் பண்ணி வெச்சிட்டா, என் கடமை முடிஞ்சுடும். மில்லு மொதலாளிகிட்ட உன் மாமனும் நாய்க்கரும் முன்னாலயே பேசி வெச்சிருக்காங்களாம்...'' என்று ஒரே மூச்சாக உற்சாகம் பெருக்கெடுத்தோட சொல்லி முடித்தார்.

பூகம்பம் வெடித்து, பிரளயம் ஏற்பட்டு, சூறைக்காற்றிலும் வெள்ளப் பெருக்கிலும் அவனது 'மனக்கோட்டை' இடிந்து நொறுங்கியடித்துச் செல்லப்பட்டது. தூணில் சாய்ந்து நின்றவன், சரிந்து தரையிலே விழுந் தான். அதிர்ச்சியிலிருந்து மீளச் சில நொடிகளாயின!

ஏமாற்றத்தைத் தாங்கிக்கொள்ளும் வயதில்லை அவனுக்கு. வீட்டுக்கு அருகாமையில் பரமசிவன் கோயில் இருந்தது. பல ஆண்டுகள் பாழடைந்து கிடந்த அந்தக் கோயில் புதுப்பிக்கப்பட்டு செண்டை, நகாரி, கொம்பு போன்ற வாத்தியங்கள் எல்லாம் வாசித்து அமர்க்களமாக பூஜை நடக்கும். செண்டை வாசிப்பதில் அவனுக்கு இயல்பாகத் திறமை இருந்தது. திங்கள் வெள்ளி நாள்களில் இருட்டிவிட்டால் போதும், கோயிலுக்குச் செல்ல அவன் கால்கள் பரபரக்கும்.

எப்போதுமே குளிர்காற்று வீசும் அந்தக் கிராமத்தில் எல்லோரும், எல்லா நேரமும் போர்வை போர்த்துக் கொண்டிருப்பார்கள். அவனும் போர்வை போர்த்தியவாறுதான் செண்டை வாசிக்கத் துவங்குவான். பத்துப்

பதினைந்து நிமிடம் துரிதகதியில் வாசிக்கும்போது, உடம்பில் உஷ்ணம் பரவி வியர்க்க ஆரம்பித்துவிடும். போர்வையை உருவி வீசிவிட்டுத் தொடருவான். ஒரு மணி நேரம் விடாமல் வாசிக்கும்போது, வியர்வை பெருகி உச்சந்தலை முடிகளை நனைத்து, காது வழியே இறங்கி, பின் கழுத்து வழியாய் ஓடி, மார்பின் நடுவே தடம்பிடித்துத் தரையை நோக்கிப் பாயும்.

பூஜை துவங்கிவிட்டால் அவன் வேலை முடிந்து விடும். ஒழுகும் வியர்வையைத் துடைத்து, கூதல் காற்றில் உடம்பைக் காட்டிப் புத்துணர்வு பெற்றபின், நிறைந்த நெஞ்சோடு படுக்கையில் சாய்வான். இப்படி எத்தனையோ இரவுகள்!

இப்போது அந்தக் கோயில் சென்றான். ''எத்தனை நாள் உனக்குப் பணி செஞ்சேன். எல்லா சாமியும் மொத்தமா கைவிட்டுட்டீங்களே'' என்று குமுறினான்.

இரவு மணி ஒன்பதைத் தாண்டியிருக்கும். நீதி மன்றத்தில் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்ட அந்த விநாடியின்போது, அதிர்ந்து அரற்றும் கைதி, நாள்பட நாள்பட அது பற்றியே சிந்தித்து, வெறுத்து, மரத்துப் போய், நடப்பது நடக்கட்டும் என்ற விரக்தி நிலையை அடைந்து விடுவான். அதுபோல அவனும், ''நம் வாழ்க்கை இவ்வளவுதான்! இனிமேல் போராடிப் பயனில்லை. நம் தலையில் 'மில் வேலைதான் உனக்கு' என்று எழுதியிருந்தால், அதை மாற்ற யாரால் முடியும்'' என்று முடிவுகட்டி, சோர்ந்தபடியே உறங்கி விட்டான்.

மறுநாள் காலை ஆரம்பப் பள்ளியின் மணி அடித்தது. வழக்கமாக நண்பர் ஆசிரியர் குமாரசாமியிடம் ஓவியங்களைச் சரிபார்க்க எடுத்துச் செல்வான். அன்று வெறுங்கையோடு சென்றான்.

நடந்தவற்றைக் குமாரசாமி பொறுமையோடு கேட்டார். அவனைவிட ஆறு வயது பெரியவரான அவர், பதற்றப்படாமல் யோசனை செய்தார்.

''அம்மாவோட ஏற்பாட்டின்படி நீ மில்லுக்குப் போறதைப் பத்தி நான் ஒண்ணும் சொல்லலே. ஆனா, நல்லா யோசிச்சுப் பாத்துக்கோ...! வாழ்க்கையில் எவ்வளவோ உயரணும்னு கனவுகண்டு, அதுக்காக திட்டங்களைப் போட்டு, மெட்ராஸிலே எப்படிக் கட்டுப்பாடா இருந்து படிக்கணும்னு தீர்மானம் பண்ணி..., இப்ப அவசரப்பட்டு அம்மா சொல்றாங்கன்னு மில்லுல போய்ச் சேர்ந்தேன்னா, அங்கே முழு ஈடுபாட்டோட உன்னால வேலை செய்ய முடியாது. உன் எதிர்காலத்தை நீயே குழி தோண்டிப் பொதைச்ச மாதிரி ஆயிடும்...! பொறுமையா சிந்தனை பண்ணி முடிவெடு'' என்றார்.

மீண்டும் மனப்போராட்டம்! நாள் முழுக்க யோசித்தான். ஏதோ பிறந்தோம், இருந்தோம், இறந்தோம் என்று அர்த்தமற்ற வாழ்க்கை வாழக்கூடாது. சராசரி மனித வாழ்க்கையிலிருந்து உயர்ந்து, இந்த உலகத்தில் நாம பிறந்ததுக்கு அடையாளமா ஏதாவது ஒரு துறையில நல்ல பேர் எடுக்கணும். அதுதான் சரி என்று அவனுக்குத் தோன்றியது.

அது சரி! பள்ளியில் கட்டவேண்டிய சம்பளத்துக்கே சிரமப்படும் அவனுக்கு, வருகிற பண்டிகைகளுக்கெல்லாம் புதுத்துணிகூடத் தைக்க முடியாத நிலை. மானத்தை மறைக்கத் துணி இருந்தால் அதுவே போதும் என்று பிஞ்சு மனத்திலேயே போதிக்கப்பட்ட அவனுக்கு, முந்நூறு மைலுக்கு அப்பாலுள்ள சென்னைப் பட்டினத்தில் போய்ப் படிக்க யார் உதவி செய்யப் போகிறார்கள்?

தன் படிப்புக்கு உதவக் கூடியவர் இந்த உலகில் யார் இருந்தாலும், ஆயுள் முழுக்க அவருக்கு அடிமை என்று ரத்தக் கையெழுத்துப் போட்டுக் கொடுத்துவிடலாம். அப்படிப்பட்ட பெரிய மனம் படைத்தவர் யார் இருக்கிறார்கள் என்று யோசித்தான்!

பத்து மாதக் குழந்தையாக இருந்தபோதே தந்தையைப் பறிகொடுத்த அவனுக்கு, தந்தை பற்றிய நினைவு, அப்போதுதான் முதன்முதலாக வந்தது. ஒருவேளை, அவர் உயிரோடு இருந்திருந்தால் ஏதாவது ஏற்பாடு செய்து பட்டணத்துக்கு அனுப்பியிருப்பாரோ!

பலவாறு யோசித்தான். அவன் அறிவுக்கெட்டியவரை, அவனுக்கு உதவக்கூடிய வசதியில் இருந்த ஒரே மனிதர், அவனது ஒன்றுவிட்ட மாமா ஆறுமுகக் கவுண்டர்தான். பொள்ளாச்சியில் பிரபல அசைவ உணவு விடுதி ஒன்று நடத்தி வந்தார். சிறுபிராயந்தொட்டே அவன் மீது மாமாவுக்கு ஒரு பரிவு இருந்தது. எப்போது கிராமத்துக்கு வந்தாலும், ''தண்டபாணி! (இது குழந்தையில் அவனுக்கு இட்ட பெயர்) நல்லா படிடா, உன்னை மேலே படிக்க வைக்கிறேன்'' என்பார். இப்போது அவரே, மில் வேலைக்கு அனுப்ப முடிவு செய்தபின், அவனுக்கு வேறு யார் இருக்கிறார்கள்...?

மாமாவுக்கு நீண்ட கடிதம் ஒன்று எழுதினான். 'தவழும் பிராயத்தில் தந்தையைப் பறிகொடுத்தது! விவரம் தெரிகிற நாலு வயதாகும்போது, கல்லூரி சென்ற அண்ணனை 'பிளேக்' நோய்க்குப் பலிகொடுத்தது! பஞ்சம் தலைவிரித்தாடியபோது ஊரே அரோரூட் மாவும், கற்றாழங் கிழங்கையும் தின்று ஜீவித்தது! படிக்க வசதி இல்லாமல் சகோதரி மூன்றாம் வகுப்போடு பள்ளிக்கு விடை கொடுத்தது! பண்டிகைகளைப் புறக்கணித்தது' – அனைத்தையும் விரிவாக எழுதி, இந்த வேதனைகளையெல்லாம் மிஞ்சக்கூடியது – அவனது லட்சியப் பயணத்தைத் தடைசெய்து, மில்

வேலைக்கு அனுப்புவதுதான்! 'எனக்கு உதவாவிட்டாலும் பரவாயில்லை, உபத்திரவம் தராமல் இருந்தால்போதும்' என்று கடுமையான வாசகங் களைப் பிரயோகித்துக் கடிதத்தை முடித்து, கூடுதலாக எட்டணாவுக்கு ஸ்டாம்ப் ஒட்டி, தபாலில் சேர்த்து விட்டு வந்தான்.

இந்தப் போராட்டத்தில் கடந்த மூன்று நாளாக அவன் எதுவும் சாப்பிடவில்லை. கவலையும் பசியும் இணைந்த அசதியில் திண்ணையில் சாய்ந்தவனுக்கு, மாமா கிராமத்துக்கு வந்திருப்பதாகத் தகவல் வந்தது. மின்சாரத்தால் தாக்குண்டவன்போல எழுந்து உட்கார்ந்தான். மாமாவின் பெயரைக் கேட்டாலே குழந்தைகள் முதல் பெரியவர்கள்வரை நடுங்கி ஓடுவார்கள். ஆஜானுபாகுவான ஆறடி தாண்டிய உயரம், முறுக்கு மீசை, கரகரப்பான பேச்சு, பணக்காரருக்குள்ள மிடுக்கு, லண்டன் நேவிகட் சிகரெட்டுடன் வெள்ளை வெளேர் உடையில் நடந்து வந்தால், யாருமே எழுந்து நின்று மரியாதை செய்வார்கள். பத்துப் பக்கம் எழுதிப் போட்ட கடித விஷயத்தை, பயப்படாமல், தட்டுத் தடுமாறாமல், அவரிடம் எப்படிச் சொல்லுவது...? தவித்தான்.

மாமாவைப் பார்க்கத் தாயார் அழைத்தபோது, ''மில் வேலைக் கெல்லாம் போக முடியாதுன்னு உன் தம்பிகிட்டே போய்ச் சொல்லு'' என்றான். இந்த வார்த்தையைத் தாயார் சற்றும் எதிர்பார்க்கவில்லை! ''என் வார்த்தைக்கு மறுவார்த்தை பேசாத புள்ளையை, யாரோ ஏதோ சொல்லிக் குடுத்துக் கெடுத்துட்டாங்க. இத்தனை வருஷமா வாயைக் கட்டி, வயித்தைக் கட்டி வளர்த்ததெல்லாம் வீணாப் போச்சு! விதவை வளர்த்த பிள்ளை உருப்படாதுன்னு ஊர் சொல்றது சரியாப்போச்சு! இனிமே கிணறோ, குட்டையோ பாத்து என் கதையை முடிச்சுக்க வேண்டியதுதான்'' என்று பிலாக்கணம் பாட ஆரம்பித்தவர், ''சரிடா! நடக்கறபடி நடக் கட்டும், மில்லு வேலை புடிக்கலேன்னு உன் மாமன்கிட்ட நீயே போய்ச் சொல்லிக்கோ'' என்றார்.

தன் எதிர்காலத்தையே குழிதோண்டிப் புதைக்கத் திட்டம் போட்டவ ரிடம், இனி எதற்காகப் பயப்பட வேண்டும் என்று துணிந்து புறப்பட்டுச் சென்றான்.

மூளையே காய்ந்துவிடும் கோடைக்காலக் கொடிய வெயிலில் காலில் செருப்புக்கூட இன்றி, சுடும் மணலில் கால் பதித்துப் பயணத்தைத் தொடர்ந்தான். கலங்கலில் நாயுடு வீட்டை அடைந்தபோது, அவன் மாமா தன் நண்பர் நாயுடுவுடன் வாதிட்டுக் கொண்டிருந்தார். ''நீங்க ஆயிரம்தான் சொல்லுங்க. பட்டணத்துக்குப் படிக்கப்போற எல்லாப் பசங்களும் கெட்டுப் போறதில்லே. அங்கேயும் பொறுப்பா இருந்து படிக்கற பசங்க

இருப்பாங்க. நம்ம பசங்க மேலேகூட உங்களுக்கு அப்படிச் சந்தேகம் இருக்கலாம். ஆனா, தயவுசெய்து இவனை அப்படி நினைக்காதீங்க. புள்ளைங்களுக்கு எந்த லைன்ல படிக்க இஷ்டமோ, அதிலதான் அனுப்பிப் படிக்க வைக்கணும். நாம கட்டாயப்படுத்தி வேற எதிலயாவது சேர்த்துட்டா, ஒழுங்கா படிக்க மாட்டானுங்க! இவனை மேல படிக்க வைக்கறேன்னு சின்ன வயசிலேருந்து சொல்லிட்டு வந்திருக்கேன். அதில எந்த மாத்தமும் இல்லே...''

மாமாவின் வாதத்தைக் கேட்டு, இன்ப அதிர்ச்சியில் ஒரு கணம் உறைந்து போய் விட்டான். 'இந்தத் தெய்வத்தையா திட்டிக் கடிதம் எழுதினோம். எவ்வளவு பெரிய முட்டாள் தனம்' பூட்டிக் கிடந்த மனக் கதவு திறக்க, ஆயிரம் பறவைகள் குபீரென்று ஓசையிட்டுப் பறந்து சென்று வானத்தை நிரப்பிய மகிழ்ச்சி அவன் நெஞ்சை நிறைத்தது!

இப்போது புதிதான ஒரு பிரச்சினை முளைத்தது. 'தபாலில் சேர்த்து விட்ட கடிதத்தை உடனே எடுத்தாக வேண்டும். அது பொள்ளாச்சிக்குப் போய், நாளை இவர் கையில் கிடைத்தால் நம்மீது அவர் வைத்திருக்கும் நல்ல அபிப்பிராயம் தவிடு பொடியாகிவிடுமே...'

கலங்கல் தபால் நிலையத்துக்கு ஓடினான். கடிதங்கள் சூலூர் தலைமைத் தபால் நிலையத்துக்குச் சென்று விட்டதை அறிந்து சைக்கிளில் பறந்தான்.

'கடிதம் எழுதுபவரின் உரிமை, தபால் பெட்டிக்குள் போடும் வரைதான். திரும்ப அதைப் பெற வேண்டுமானால், யார் விலாசத்துக்கு எழுதப்பட்டதோ, அங்கு போய்த்தான் வாங்கிக்கொள்ள வேண்டும்' என்ற சட்ட விதியை விளக்கினார் தபால் அதிகாரி. எப்படியாவது அந்தக் கடிதத்தைப் பெற்றுவிடத் துடித்தான்.

ஓய்வு நேரங்களில் நடிக – நடிகையருக்கு, அவர்களது உருவத்தை வரைந்து சென்னைக்குப் பல முறை தபாலில் அனுப்பியிருந்தான். தபால் அதிகாரிக்கு, கிராமப்புறத்தைச் சேர்ந்த அந்த இளம் ஓவியரைப் பார்க்க நீண்டநாளாக ஆசை இருந்தது. 'அவன் வேறு யாருமில்லை. நான்தான்' என்று கூறி, அந்த வாய்ப்பைப் பயன்படுத்தி விசேஷ அனுமதியுடன் கடிதத்தை மீட்டு, குளத்தங்கரையோரம் சென்று சுக்குநூறாகக் கிழித்துக் காற்றில் பறக்கவிட்டு நிம்மதிப் பெருமூச்சுவிட்டான்.

சென்னை புறப்படும் நாள் வந்தது! என்றும் அவனுக்கு வலது கரமாக இருந்துவரும் ஒன்றுவிட்ட சகோதரன் குமரேசன், அவன் பயணத்துக்கு வேண்டிய துணிமணிகளைத் துவைத்துப் பெட்டியில் அடுக்கி, ரயில் நிலையம்வரை வந்து அவனை வழியனுப்பி வைத்தார்.

பாவம்! மாமாவுக்குச் சர்க்கரை வியாதி. அவசரமாகப் புறப்பட்டதில் ரயிலில் டிக்கெட் ரிசர்வ் செய்ய அவகாசமில்லை. மூணாம் கிளாஸ் கம்பார்ட்மெண்டில், பாத்ரூம் செல்லும் வழியில் தனது ஆறடி உருவத்தை ஈரடியாக மடித்துப் போட்டு சித்ரவதைப்பட்டு, தூங்காமல் விடியும்வரை பயணம் செய்து, சென்னைக்கு அவனை அழைத்து வந்தார்.

தன் குழந்தைகளுக்கு மேலாக அவன்மீது நம்பிக்கை வைத்து, அவனது இன்றைய ஒளிமிகு கலைவாழ்வுக்கு விளக்கேற்றி வைத்த அந்தப் பெரியவர், இன்று உயிருடன் இல்லை. அந்த மாமனிதருக்கு இந்த எளிய நூலைச் சமர்ப்பிக்க, அவன் மனம் நெகிழ்ந்து போகிறான்...! கடவுள் இப்படி மனித வடிவில் தோன்றித்தான் அல்லல் படுவோருக்கு உதவி வருகின்றானோ...!

– சிவகுமார்

